உ
கணபதி துணை.

இளங்கோவடிகளருளிச்செய்த

# சிலப்பதிகார மூலமும்

## அரும்பதவுரையும் அடியார்க்குநல்லாருரையும்.

---

இவை
உத்தமதானபுரம்
மஹாமஹோபாத்தியாய
வே. சாமிநாதையரால்
பலபிரதிரூபங்களைக்கொண்டு
பரிசோதித்து,
பலவகை ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன்
திருக்கைலாயபரம்பரைத்

திருவாவடுதுறையாதீனகர்த்தரவர்களாகிய
ஸ்ரீலஸ்ரீ,

# சுப்பிரமணிய
# தேசிகரவர்களுடைய

உதவியைக்கொண்டு

சென்னை:
கமர்ஷியல் அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பெற்றது.

---

ரௌத்திரி ௵
1920.

இரண்டாம்பதிப்பு.] [இதன்விலை ரூபா.
8-12-0.



## இப்புத்தகத்தில் அடங்கியவை.

## ௨. மதுரைக்காண்டம்.

## ௩. வஞ்சிக்காண்டம்.

## இப்பதிப்பில் எடுத்துக்காட்டிய நூற்பெயர்கள் முதலியவற்றின் முதற்குறிப்பகராதி.

---

அக்க - அக்ககுமாரன்வதைப்படலம்.
அகத் - அகத்திணையியல்.
அகநா - அகநானூறு.
அடியார் - அடியார்க்குநல்லாருரை.
அறநெறி - அறநெறிச்சாரம்.
ஆசார - ஆசாரக்கோவை.
ஆசீவக - ஆசீவகவாதச்சருக்கம்.
ஆத்திரையன் - ஆத்திரையன்பேரா
ஆற்று - ஆற்றுப்படலம். [சிரியன்.
இ. கொ - இலக்கணக்கொத்து.
இரணிய - இரணியவதைப்படலம்.
இராச - இராசபாரம்பரியம்.
இராசராச - இராசராசசோழனுலா.
இ. வி - இலக்கண விளக்கம்.
இளம்-இளம்பூரணருரை.
இறை - இறையனாரகப்பொருளுரை.
இன்னா - இன்னாநாற்பது.
உத்தர - உத்தரகாண்டம்.
உயிர்மயக்கு - உயிர்மயங்கியல்.
உரிச் - உரிச்சொல்லியல்.
எச், எச்ச - எச்சவியல்.
எழுச்சி - எழுச்சிப்படலம்.
ஐங்குறு - ஐங்குறுநூறு.
ஒழிபு - ஒழிபியல்.
கடவுள் - கடவுள்வாழ்த்து.
கடை - கடைதிறப்பு.
கந்த - கந்தபுராணம்.
கம்ப - கம்பராமாயணம்.
கருத்தமன் - கருத்தமன் மணம்புண
ர்க்க கபிலன் [illegible]

காமதகன - காமதகனப்படலம்.
கிளவி - கிளவியாக்கம்.
கும்பகருணன்வதை - கும்பகருணன்
வதைப்படலம். [லம்.
குலமுறை - குலமுறைகிளத்துபட
குலோத்துங்க - குலோத்துங்கசோழ
னுலா. [காப்புணரியல்.
குற்றியல, குற்றியலுகர - குற்றியலு
குறள், திருக் - திருக்குறள்.
குறிஞ்சி - குறிஞ்சிப்பாட்டு.
குறுந் - குறுந்தொகை.
கூர்ம - கூர்மபுராணம்.
கோயில் - கோயில்பாடியது.
கோலங்காண் - கோலங்காண்படலம்.
சதகம் - திருச்சதகம்.
சிலப் - சிலப்பதிகாரம்.
சிறுபஞ்ச - சிறுபஞ்சமூலம்.
சிறுபாண் - சிறுபாணாற்றுப்படை.
சீபரி - சீபரிபூரணப்படலம்.
சீய - சீயவதைச்சருக்கம்.
சீவக - சீவகசிந்தாமணி.
சுயம் - சுயம்வரச்சருக்கம்.
சுவேதவராக - சுவேதவராக கற்ப
முறைத்தவத்தியாயம்.
சூ - சூத்திரம்.
சூளா - சூளாமணி.
செய் - செய்யுள், செய்யுளியல்.
சே - சேனாவரையருரை.
சேது - சேதுபுராணம்.
[illegible]

கல் - கல்லாடம்.
கல்யாண - கல்யாணச்சருக்கம்.
கலிங்க, கலிங்கத்து - கலிங்கத்துப்பரணி.
கலி, கலித் - கலித்தொகை.
களம் - களம்பாடியது.
களவு - களவியல்.

அஃபிணிலயுரைத்தவத்தியாயம்.
தக்க - தக்கயாகப்பரணி.
தணிகை - திருத்தணிகைப்புராணம்.
தரும - தருமவாதச் சருக்கம்.
திக் - திக்குவிசயப்படலம்.
திணைமா - திணைமாலைநூற்றைம்பது.

# 6 நூற்பெயர்கள் முதலியவற்றின் முதற்குறிப்பகராதி.

திருக்குறிப்பு - திருக்குறிப்புத் தொண்டநாயனார் புராணம்.
திருச்சிற், திருச்சிற்றம் - திருச்சிற்றம்பலக்கோவையார்.
திருவம்பல - திருவம்பலச்சருக்கம்.
திருவவதார - திருவவதாரப்படலம்.
திருவா - திருவாசகம். [ணம்.
திருவாதவூரர் - திருவாதவூரர்புரா
திருவாரூர் - திருவாரூர்ச்சிறப்பு.
திருவால - திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம்.
திருவிளை - திருவிளையாடற்புராணம்.
திவ் - திவ்யப்பிரபந்தம்.
தும்பை - தும்பைப்படலம்.
தூது - தூதச்சருக்கம்.
தே - தேவாரம்.
தேவிபுர - தேவிபுரச்சருக்கம்.
தொகை - தொகைமரபு.
தொல் - தொல்காப்பியம்.
ந - நச்சினார்க்கினியருரை.
நகர - நகரப்படலம்.
நம்பி, நாற்கவி - நாற்கவிராசநம்பி யகப்பொருள்விளக்கம்.
ந. வி, நன். விருத்தி - நன்னூல்
நற் - நற்றிணை. [விருத்தியுரை.
நன் - நன்னூல்.
நா - திருநாவுக்கரசுநாயனார்.
நாடு - நாட்டுப்படலம்.
நாலடி - நாலடியார்
நான்மணி - நான்மணிக்கடிகை.
நீல, நீலகேசி - நீலகேசித்திரட்டு.

பா - பாடபேதம்.
பாகவத - பாகவதபுராணம்.
பாடாண் - பாடாண்படலம்.
பி. ம் - பிரதிபேதம்.
பிர, பிரயோக - பிரயோகவிவேகம்.
பிறப்பு - பிறப்பியல்.
பு.வெ-புறப்பொருள்வெண்பாமாலை.
புள்ளி - புள்ளிமயங்கியல்.
புறத், புறத்திணை - புறத்திணையியல்.
புறநா - புறநானூறு.
பெயர் - பெயரியல்.
பெரிய - பெரியதிருமொழி, பெரிய
பெருங் - பெருங்கதை. [புராணம்.
பெரும்பாண் - பெரும்பாணாற்றுப்
பேர் - பேராசிரியருரை. [படை.
பொருந - பொருநராற்றுப்படை.
மணி - மணிமேகலை.
மதுரை - மதுரைக்காஞ்சி.
மந்திர, மந்திரசாலை - மந்திரசாலைச் சருக்கம்.
மயிலேறும்பெருமாள் - மயிலேறும் பெருமாள்பிள்ளையுரை.
மயிலை - மயிலைநாதருரை.
மரபு - மரபியல்.
மலைபடு - மலைபடுகடாம்.
மனையறம் - மனையறம்படுத்தகாதை.
முதற்போர் - முதற்போர்ச்சருக்கம்.
முருகு - திருமுருகாற்றுப்படை.
முல்லை - முல்லைப்பாட்டு.
மெய் - மெய்ப்பாட்டியல்.
மேற் - மேற்கோள்.

நெடுநல் - நெடுநல்வாடை.
ப, பக் - பக்கம்.
பட், பட்டினப் - பட்டினப்பாலை.
பத், பத்து - பத்துப்பாட்டு.
பதி - பதிகம்.
பதிற் - பதிற்றுப்பத்து.
பரி - பரிபாடல்.
பரி, பரிமேல் - பரிமேலழகருரை.
பழ - பழமொழி.
யா, கா - யாப்பருங்கலக்காரிகை.
யா, வி - யாப்பருங்கலவிருத்தி.
வாகை - வாகைப்படலம்.
வாசுதேவனை - வாசுதேவனைப்படை
த்துணையழைத்த சருக்கம்.
விக்கிரம - விக்கிரமசோழனுலா.
வி. பாரதம் - வில்லிபுத்தூராழ்வார்
[பாரதம்.
விளி - விளிமரபு.
வெட்சி - வெட்சிப்படலம்.

---

உ
கணபதி துணை.

# முகவுரை.

"சந்தனப் பொதியத் தடவரைச் செந்தமிழ்ப்
பரமா சாரியன் பதங்கள்
சிரமேற் கொள்ளுதுஞ் சிகழ்தரற் பொருட்டே."

தமிழ்ப்பாஷையிலுள்ள பழையகாப்பியங்களைந்தனுள் ஒன்றாகிய சிலப்பதிகாரமென்பது சேரமுனியாகிய இளங்கோவடிகளால் இயற் றப்பெற்றது; பழைய உரையாசிரியர்களால் எடுத்துக்காட்டப்படும்

பிரமாண நூல்களுளொன்று; சொற்சுவை பொருட்சுவைகளிற் சிறந்து விளங்குவது; எவ்வெப்பொருளைச் சொல்லினும் அவ்வப்பொருளை நேரிற்கண்டாற்போல மனத்திற்குத் தோற்றும் வண்ணம் நன்குபுலப்படுத்தும் தெள்ளிய இனிய நன்னடையையுடையது; காவிரிப்பூம்பட்டினத்திலிருந்த பெருங்குடிவாணிகர் மரபினராகிய கற்பிற்சிறந்த கண்ணகி அவள்கணவன்கோவலன் என்பவருடைய சரித்திரத்தை விரித்துக்கூறுவது; தமிழ்நாட்டரசர் மூவருடைய இராசதானிகளாகிய புகார் (காவிரிப்பூம்பட்டினம்), மதுரை, வஞ்சி யென்னும் மூன்றன்பெருமைகளையும்விளக்குவது; பண்டைக்காலத்திருந்த பலவகை மாக்தருடைய ஒழுக்கம்முதலியவற்றை இக்காலத்தார் எளிதில் தெரிந்துகொள்ளுதற்குச் சிறந்த கருவியாகவுள்ளது; அரசர் நீதியிற் சிறிது பிழைப்பினும் அவரை அறக்கடவுள் கூற்றாய்நின்று கொல்லுமென்பதும், கற்புடைமகளிரை மக்களேயன்றித் தேவரும் முனிவரும் துதித்தல் இயல்பென்பதும், இருவினையும் செய்தமுறையே செய்தோனை நாடிவந்து தம் பயனை நுகர்விக்குமென்பதுமாகிய இம்மூன்றினையும் முக்கியப்பொருளாகக்கொண்டு இளங்கோவடிகளாற் செய்யப்பட்டது ; இவற்றைச் சிலப்புகாரணமாகத் தெரிவித்தலின் இந்நூல் சிலப்பதிகாரமென்னும் பெயர் பெற்றது.

இன்னும் முத்தமிழும் விரவப்பெற்றதாதலின், இந்நூல் இயலிசை நாடகப்பொருட்டொடர்நிலைச்செய்யுளென்றும், நாடகவுறுப்புக்களை உடைத்தாதலின் நாடகக்காப்பியமென்றும், உரைப் பாட்டும் இசைப்பாட்டும் இடையிடையே விரவப்பெற்றதாதலின் உரையிடையிட்டபாட்டுடைச் செய்யுளென்றும் பெயர்பெறும். தொல்காப்பியம் செய்யுளியல்,கஎ௩-ஆம் சூத்திரவுரையில் நச்சினார்க் கினியர், "பாட்டிடைவைத்த குறிப்பினானுமென்பது ஒரு பாட்டினை இடையிடைக்கொண்டு நிற்குங் கருத்தினான் வருவனவும் எ - று; அவை தகடூர் யாத்திரையும் சிலப்பதிகாரமும் போல்வன " என் றும், "தொன்மைதானே, உரையொடு புணர்ந்த பழமை மேற்றே" (ஷை. சூ-உ௩எ) என்பதனுரையில் "அவை பெருந்தேவனார்செய்த பாரதமும் தகடூர் யாத்திரையும் போல்வன ; சிலப்பதகாரமும் அதன்பாற்படும்" என்றும் எ ழுதியிருத்தல் இங்கே அ றியத்தக்கது.

"சிந்தா மணியாஞ் சிலப்பதிகா ரம்படைத்தான்" (தணிகை

யுலா, ௫௨௬। எனச் சிலேடையில்
திருத்தலும், வஞ்சினமாலையில்

இந்நற்பெயர் அழகுற அமைந்
௫-ஆம் அடி முதலியவற்றிற்
கூறப்பெற்றுள்ள கற்புடைமாதர்கள்,
பட்டினத்துப்பிள்ளையார் புராணத்துப் பூம்புகார்ச் சருக்கத்தும்
"பழிமான முர்தம் மனையறங் காத்தலும் பார்த்திபரைத்,
தொழுமா தரவும் பெறுங்கற்பி னூற்று நித் தோர்க்குச்
செம்பொன், பொழிமான திங்கள் குலோத்துங்க சோழன்
புகார்ப்பிறந்தா, ரொழுமாத ரோடிவ ளெண்மாத ராவள்"
என்னும் குலோத்துங்கசோழன்கோவை ௪௨௬-ஆம்
பாடலிலும் பாராட்டப்பெற்றிருத்தலும் அறிந்து
இன்புறற்பாலன.

ஊர்காண்காதை ௧௮௦-ஆம் அடிமுதலியவற்றிலும் அவற்றின் உரைகளிலும் காணப்படும் நவமணியிலக்கணங்கள் திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணத்தில், மாணிக்கம் விளையாடலிலும் காணப்படுகின்றன.

விற்ற திரு

இக்கதை நடந்தகாலமும் இளங்கோவடிகள் காலமும் ஒன்றெ ன்றும் இது முதலில் தமிழிலேயே அவ்வாறு செய்யப்பட்டதென் றும் இந்நூற் பதிகச்செய்யுளாலும், வரந்தருகாதையாலும் விளங்கு



கின்றமையின், இச்சரித்திரம் வேறுபாஷையிலிருந்துவந்ததென்று சொல்வதற்கிடமில்லை. இதனாலேயே இதன் பல பகுதிகள் காதை யென்று பெயர் பெற்றனபோலும்.

இச்சிலப்பதிகாரம், இளங்கோவடிகளாலேயே
செய்யப்பட்ட
தற்குக் காரணமும் கதைச்சுருக்கமும் அமைந்துள்ள பதிகச்செய் யுளை முதலிற்பெற்று, மங்கலவாழ்த்துப்பாடல் முதலிய பத்துறுப் புக்களையுடைய புகார்க்காண்டமும், காடுகாண்காதைமுதலிய பதின் மூன்று உறுப்புக்களையுடைய மதுரைக்காண்டமும், குன்றக் குரவை முதலிய ஏழுறுப்புக்களையுடைய வஞ்சிக்காண்டமுமாகப் பகுக்கப்பெற்றுள்ளது. இதில் இயற்றமிழின் பாகுபாடான வெண்பா, அகவற்பா, கலிப்பா என்பவைகளும், இசைத்தமிழின் பாகுபாடான ஆற்றுவரி, ஊசல்வரி, கந்துகவரி முதலியபாக்களும், நாடகத் தமிழின் பாகுபாடான உரைப்பாட்டுக்களும் வந்துள்ளன. இவற் றுள் மிகுதியாகவுள்ளவை அகவற்பாக்களே. இவை, தொல்காப் பியம் செய்யுளியல், கருஎ-ஆம் சூத்திரவுரையில் இளம்பூரணரால் பெரியபாட்டுக்கு உதாரணமாகக் காட்டப்பெற்றுள்ளன.

இந்நூற்கு அரும்பதவுரையென்றும், அடியார்க்குநல்லாருரையென்றும் இரண்டுரைகளுண்டு. இந்திரவிழவூரெடுத்தகாதையில், "ஐம்பெருங் குழுவு மெண்பே ராயமும்" [ப. கசுஎ] என்பதன் விசேடவுரையில், 'இனி...எனக்காட்டுவர் அரும்பதவுரையாசிரியர்' என்று அடியார்க்குநல்லார் எழுதியிருத்தலால், இவ்விரண்டுரையுள், அரும்பதவுரையே முந்தியதென்று தெரிகிறது. இப்படியே அரும் பதவுரையிலுள்ள சிலகுறிப்புக்களால் அவ்வுரைக்குமுன்பும் இந் நூற்கு வேறு பழையவுரையொன்றிருந்திருக்கலாமென்றும் தோற்றுகிறது. அவ்வுரை இக்காலத்து அகப்படவில்லை. இந்நூலிற் சில சில இடங்களில் அரும்பதவுரையாசிரியர் கொண்டபாடம் வேறாகவும், அடியார்க்குநல்லார்கொண்டபாடம் வேறாகவுமுள்ளன. அடியார்க்குநல்லார் உரையுள்ள பகுதிவரையில் அவர் கொண்ட மூல பாடமே இப்புத்தகத்திற் பதிப்பிக்கப்பெற்றிருக்கிறது. அரும்பத வுரையாசிரியர் கொண்டபாடம் வேறுள்ள இடங்களில் அப்பாடத்தைப்புலப்படுத்தற்கு ஆங்காங்கு அவ்வுரையின்முன், 'பா' (பாட பேதம்) என்னும் குறிப்பு அமைக்கப்பட்டுள்ளது.

2

அரும்பதவுரை, ஆங்காங்குள்ள திரிசொற்களின் பொருளை மட்டுமே ஒருவாறுபுலப்படுத்திச் சிற்சிலவிடத்து மேற்கோள்களை உடையதாய் மிகச் சுருக்கமாக இந்நூல் முழுமைக்கும் அமைந்துள்ளது. அவ்வுரையாசிரியர் பெயரும் அவர் இருந்தவிடமும் அவர்காலம் முதலியனவும் ஒருவாற்றானும் தெரிந்துகொள்ளக்கூட வில்லை.

பல வருடங்களுக்குமுன்பு மிகவும் பழையதாகிய இந்த அரும்
பதவுரைப்பிரதியொன்று எனது நண்பர் தோழூர் ஸ்ரீ சக்கரவர்த்தி இராஜகோபாலாசாரியாவர்களிடமிருந்து கிடைத்தது. அது மிகவும் பழுதுபட்டு ஏடுகள் குறைந்தும் உள்ள ஏடுகள் தேய்ந்தும் முன்னுள்ளவைகள் பின்னும் பின்னுள்ளவைகள்முன்னுமாக மாறி எழுதப்பட்டும் அதிகமாகப் பிழைகள் விரவியும் இருந்தது. அதனோடு ஒப்புநோக்கிப் பொருளை ஒழுங்குபடுத்துவதற்கு இன்னும் கையெழுத்துப் பிரதிகள் கிடைத்தால் அனுகூலமாகவிருக்குமென்று பலவிடங்களிலே தேடிப்பார்த்தும் வேறுபிரதி அகப்படவில்லை. அந்த ஒரு பிரதியைமட்டும் சோதித்துப் பதிப்பித்தற்கு எனக்குச் சிறிதும் மனமில்லையாயினும், இவ்வொருபிரதியும் சில நாளில் இறந்துவிடின் அதனோடு இவ்வுரை இறந்தேவிடுமாகையால் இதனைச் சோதித்துப் பதிப்பிக்கவேண்டுமென்று சில

அன்பர்கள் தூண்டினமையால், துணிந்து பரிசோதித்து 1892-ஆம் வருஷத்தில் வெளிப்படுத்தலானேன். அப்பதிப்பில் அரும்பதவுரை இறுதியில் தனிப்பகுதியாகப் பதிப்பிக்கப்பெற்றிருந்தது; இந்தப் பதிப்பிற் சிலகாரணங்களால் மூலமுள்ள பக்கங்களிலேயே கீழே அஃது உரை பதிப்பிக்கப்பெற்றிருக்கின்றது. இதிலுள்ள மேற்கோள்களுள், அடியார்க்குநல்லார் உரையால் விளங்குவனவற்றின் முதல் இறுதிகளையிட்டும் விளக்கி அவற்றின் இடையில்(......)இவ்வொற்றைப் புள்ளிநிரைகள் போடுவித்தும், அவ்வுரையிற்காணப்படாத மேற்கோள்களை முற்றுங்காட்டியும், ஏடுகளிற் பழுதுபட்டுப்போன இடங்களைப் புலப்படுத்துவதற்கு அவ்வவ்விடங்களில் மேற்கூறிய ஒற்றைப்புள்ளிநிரையை அமைத்தும், விளங்காதபாகத்தின் முதல் இறுதிகளில் [ ] இவ்விருதலைப்பகரஞ்சேர்த்தும், படிப்பவர்களுக்குப் பொருள்புலப்படுதற்கு மூலத்தின் வரியெண்களையேனும் முதலையேனும் அவ்வவ்விடங்களில் அமைத்தும் பதிப்பித்திருக்கிறேன்,



அடியார்க்குநல்லாருரை முதலிலிருந்து வழக்குரைகாதை வரையுமேயுள்ளது. மேற்கூறிய அரும்பதவுரையை அது பெரும்பாலுந்தழுவியும், சிறுபான்மைமறுத்தும், சிலவிடத்துப் பதவுரையாயும் சிலவிடத்துப் பொழிப்புரையாயும் எழுதப்பட்டு, சொன்

லயம் · பொருணயங்களே இனிது புலப்படுத்தி, உரியவிடங்களில் இயற்றமிழ்ப்பகுதியாகிய ஐந்திலக்கணங்களே யும், இசைத்தமிழ் நாடகத்தமிழின் ப கு தி க ளே யு ம் பலநூன்மேற்கோள்முகமாக நன்கு விளக்கும் விசேடவுரையோடு கூடி மிகவிரிவாக அமைந் துள்ளது. இவ்வுரையில், இக்காலத்தில் விசேடித்து வழங்காத இசைத்தமிழ் நாடகத்தமிழிலக்கணங்களும் திரங்களும், பரிபாஷைகளும், இன்னும்

அவற்றிற்குரிய சூத் திருக்கின்றனவாதலால், வேறு பலவும் நிறைந் மிகவும் பயன்படும்.

இது நூலாராய்ச்சி செய் வோ ரு க் கு இவ்வுரையாசிரியர்க்கு நிரம்பையர்காவல

ரென்று ஒரு பெயருண்டென்பதும், போப்பண்ணகாங்கேயர்கோன் என்ற

இவ்வுரை அக்காலத்திருந்த ஒரு பிரபுவாற் செய்விக்கப் பட்டதென்பதும் கக-ஆம்பக்கத்துள்ள உரைச்சிறப்புப்பாயிரச்செய் யுட்களால் தெரிகின்றன.

இந்நூலை அடியார்க்குநல்லாருரையுடன் பலபிரதிருபங்களைக் கொண்டு பரிசோதித்து எழுதுவோரால்நேர்ந்தவழுக்களை இயன்ற வரையில் மாற்றி யாவருக்கும் பயன்படும்படி அச்சிடவேண்டுமென்று நெடுநாளைக்குமுன்பே உண்டானவிருப்பம் நாள்தோறும் பெருகி என்மனத்தைக்கவர்ந்துகொண்டமையால், சீவகசிந்தாமணியை முதலில் அச்சிட்டகாலந்தொடங்கிப் பல கையெழுத்துப்பிரதிகளைத்தேடி அவற்றின்உதவியால் பரிசோதித்துவந்தேன்; அவற்றுள் ஒருபிரதியிலேனும் ஏழாவது கானல்வரிக்கும், இருபதாவது வழக்குரைகாதைமுதலிய பிற்பாகத்திற்கும்உரை காணப்படவில்லை. சில இடத்துள்ளவிசேடவுரைக்குறிப்பாற் கானல்வரிக்கு அடியார்க்குநல்லார் உரையெழுதியிருந்தாரென்றும், பின்னுள்ளவற்றிற்கும் எழுத ஆயத்தமாகவிருந்தாரென்றும் தெரிந்தமையால், அவைகளிருந்தால் எப்படியும்பெறலாமென்றெண்ணித் திருவாவடுதுறையாதீனம் தருமபுரவாதீனம் திருவண்ணாமலையாதீனம் செங்கோல்மடம் முதலிய ஆதீனமடங்களிலும், சென்னையிலும் தஞ்சையிலுமுள்ள பழைய கையெழுத்துப்புத்தகசாலைகளிலும், ஆழ்வார்திருநகரி ஸ்ரீவைகுண்

டம் வெள்ளூர் திருச்செந்தூர் ஆழுமுகமங்கலம் ஊர்க்காடு ஊற்றுமலை கடையநல்லூர் கிருஷ்ணபுரம் பூழியன்குடி கல்லிடைக்குறிச்சி விக்கிரமசிங்கபுரம் களக்காடு மேலகரம் செங்கோட்டை தென்காசி திருநெல்வேலி வண்ணார்பேட்டை பாளையங்கோட்டை கும்பகோணம் கொட்டையூர் சீகாழி சிதம்பரம் சேலம் பாகற்பட்டி தஞ்சை திரிசிரபுரம் திருப்பாதிரிப்புலியூர் தழாலூர் மதுரை மிதிலைப்பட்டி செவ்லூர் சென்னபட்டணம் திருமயிலை முதலிய பற்பலவூர்களிலுள்ள பரம்பரைத்தமிழ்வித்துவான்கள் வீடுகளிலும் சென்றுதேடியும் இத்தமிழ்நாட்டில் நான் செல்லக்கூடாத இடங்களிலும் * இங்கிலாந்து பாரிஸ்நகரம் இவற்றிலிருக்கும் கையெழுத்துப் புத்தகசாலைகளிலும் ஆங்காங்குள்ள அன்பர்களைக்கொண்டு தேடுவித்தும் பார்த்தேன். அங்ஙனம்செய்தும் அவற்றின் உரைப்பகுதி கிடைக்கவில்லை. ஆதலால், தேடுவதிற் பயனில்லையென்றெண்ணிக் கிடைத்தவுரையையும் மூலமுழுவதையும் மேற்கூறிய 1892-ஆம்வருஷத்தில் முதன்முறை அச்சிட்டுமுடித்தேன்; அடியார்க்குநல்லாருரையில்லாத பகுதிகள் அரும்பதவுரையின் பேருதவியைக்கொண்டே ஒருவாறு பரிசோதிக்கப் பெற்றன.

இவற்றிலுள்ள இசைநாடகப்பகுதிகள், எனக்குக் கிடைத்த சச்சபுடவெண்பா, தாளசமுத்திரம், †சுத்தானந்தப்பிரகாசமுதலிய பழைய தமிழ்நூல்களைக்கொண்டும் இசையிலும் பரதத்திலும் வல்லோரை வினவியும் ஒருவாறு ஆராய்ச்சிசெய்யப்பெற்றன. அங்ஙனம் செய்யப்பட்டும் சிலபாகமட்டும் சற்றே விளங்கின. இசை நாடகங்களுக்குரிய பரிபாஷைகளிற் பெரும்பாலன வடமொழியிலும் தென்மொழியிலும் வேறுவேறு உருவங்களோடு கூடியிருத்தலால் இவற்றிலுள்ள சொற்கள்பல வடநூல்களினால் தெரிந்துகொள்ளக்

---

* இங்கிலாந்திலுள்ள கையெழுத்துப்புத்தகசாலைகளில்தேடிப்பார்த்த கனவான் கொழும்பு நகரத்துப் பிரபு சிகாமணியாக விளங்கிய ஸ்ரீ பொ. குமாரசாமி முதலியாரவர்கள்; பாரிஸ்நகரத்துள்ள கையெழுத்துப் புத்தகசாலையில் தேடிப்பார்த்து உதவிசெய்தவர், புரொபெஸர், ஜூலியன் வின்ஸன் என்பவர்.

† இந்நூல் தில்லையம்பூர் ஸோமயாஜி ஸ்ரீவேங்கடராமஐயங்காரவர்களாற்கிடைத்தது.



கூடவில்லை. அன்றியும் ஊர்காண்காதையிலுள்ள நவமணியிலக்கணமும் வேறுசிலவும் விசாரித்ததில் இப்பொழுதுள்ள வடநூல்களிற் கூறிய இலக்கணத்தோடு சிற்சில மாறுபாடுள்ளனவாகத் தெரிந்தன. இந்நூலில் அடியார்க்குநல்லார் ஒவ்வொன்றையும் பழைய தமிழ்நூல் மேற்கோள்களைக்கொண்டு நன்குபுலப்படுத்தியிருந்தும்

அப்பழைய நூல்களும் அவற்றின்கருத்தை ஒருவாறு எடுத்துச் சொல்வோரும் இக்காலத்தில்லாமையால்அவை அறிதற்கரியனவாயி ருக்கின்றன. அன்றியும் இவற்றில்வந்திருக்கிற இயற்றமிழ்ச் சொற் களுட்சில இக்காலத்து வழங்காதொழிந்தமையால் அவற்றிற்குப் பொருள் ஒருதலையாகப் புலப்படவில்லை; அவற்றினுருவமும்விளங்க வில்லை ஆயினும் இப்படியே முன்பு விளங்காதிருந்தவைகள்பல பின்பு இந்நூலாலும் இவ்வுரையாலும் ஒருவாறுவிளங்கிவருத லால் இதுபோலப் பழையநூல்களையும் உரைகளையும் ஒழுங்காக ஆராய்ச்சி செய்யச்செய்ய அவைகளும் விளங்குமென்பது என் துணிபாதலின் உலகவழக்கு, செய்யுள்வழக்கு என்னும் இரண் டையும் கருவியாகக்கொண்டு பலமுறை ஆராய்ச்சிசெய்து பிரதி களில் இருந்தவாறே பதிப்பித்தேன்.

மேற்கூறிய பழைய பிரதிகளுட்பல, இனி வழுப்படவேண்டு மென்பதற்கிடமில்லாமற் பிழைபொதிந்து, அநேகவருடங்களாகத் தம்மைப்படிப்போரும் படிப்பிப்போருமில்லையென்பதையும் நூல் களைப் பெயர்த்தெழுதித் தொகுத்து வைத்தலையே விரதமாகக் கொண்ட சிலபுண்ணியசாலிகளாலேயே தாம் உருக்கொண்டிருந் தலையும் நன்கு புலப்படுத்தின. ஒன்றோடொன்று ஒவ்வாது பிறழ்ந்து குறைவுற்றுப்

பழுதுபட்டுப் பொருட்டொடர்பின்றிக்கிடந்த இப்பிரதிகளைப் பரிசோதித்த துன்பத்தை உன்னுங்கால் உள்ளம் உருகும்.

இதன் முதற்பதிப்பு வெளியாகி ஏறக்குறைய முப்பது வருஷங்களாகியும் முன் அகப்படாத பகுதிகளின் உரையுள்ள பிரதி இது வரை கிடைக்கவில்லை. இனி எப்பொழுதுகிடைப்பினும் அதனைப் பரிசோதித்து வெளிப்படுத்தலாமென்பது எனது கருத்தாதலின் அதனைவைத்திருப்போர் தயைசெய்து அனுப்புவார்களாயின் உடனே அவர்களுக்கு இயன்ற உதவிபுரிந்து அதனை அச்சிட்டு அவர் பெயருடன் வெளிப்படுத்தச் சித்தனாக இருக்கிறேன்.



இந்நூலைக்கொண்டு வேறு நூல்களையும், அவற்றைக்கொண்டு இதனையும் ஆராய்ந்து உண்மைகாண்டற்குக்கருவியாக மூலத்திலும் உரையிலும் காணப்பட்ட பலவிஷயங்களும் தொகைபொதிமுதலியனவாக முதற்பதிப்பில் அதன் முகவுரையின் பின்னர்ப் பதிப்பிக்கப் பெற்றிருந்தன. இப்பதிப்பில் அவைகளையும், மூலத்திலும் இருவகை உரைகளிலும் காணப்பட்டு முன்பு பதிப்பிக்கப்பெறாமலிருந்த அரும்பதங்களையும், அருந்தொடர்களையும், சில உவமான உவமேயங்களையும், பழையசெய்திகளையும், வழக்கங்களையும் ஒருங்குசேர்த்து ஒரே அகராதியாக நூலின்பின் ‘ அரும்பதமுதலிய

வற்றின் அகராதி' என்னும் பெயருடன் பதிப்பிக்கலானேன். இவ் வகராதியில் சில அரும்பதங்களுக்கு உரையும் எழுதப் பெற்றிருக்கி றது. இந்நூற் பகுதிகளை ஒத்த பிறநூற்பகுதிகளும், இந்நூற்பகுதி கள் மேற்கோளாக வந்துள்ள இடங்களும் மூலமுள்ள பக்கத்தில் அரும்பதவுரைக்குக் கீழே குறிக்கப்பெற்றுள்ளன. முதற்பதிப்பில் 'என' என்று கொண்ட ஆசிரியப்பாக்களின் இறுதியசை இந்தப் பதிப்பில் 'என்' என்று கொள்ளப்பட்டது.

முதற்பதிப்பின் பரிசோதனைக்குக்கிடைத்த கையெழுத்துப் பிரதிகளின் விவரம் :—

அடியார்க்குநல்லாருரையோடுகூடியவை:

திருவாவடுதுறையாதீனத்துப்

பிரதி க

ஷை ஆதீனத்து மஹாவித்துவான்

ஸ்ரீ வ். மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்கள்

திரிசிரபுரம் ,, சி. தியாகராசசெட்டியாரவர்கள்

திருநெல்வேலி ,, சாலிவாடீசுவர ஓதுவாரவர்கள்

,, க

,, க சேலம் ,, இராமசாமி முதலியாரவர்கள்

,, க சிதம்பரம் ,, சாமி ஐயங்காரவர்கள்

,, க

,, க
சென்னை ,, தொ. வேலாயுதமுதலியாரவர்கள் ,, க
,, ,, சு. அப்பன்செட்டியாரவர்கள் ,, க
,, ,, குருசாமி ஐயாவர்கள் ,, க
திருமயிலை ,, அண்ணுசாமி உபாத்தியாயரவர்கள் ,, க
யாழ்ப்பாணம் ,, சி. வை. தாமோதரம்பிள்ளையவர்கள் ,, க
,, ,, தீ. குமாரசாமிச் செட்டியாரவர்கள் ,, உ
,, ,, வி. கனகசபைப்பிள்ளையவர்கள் ,, க

ஆக உரைப்பிரதி கச



## மூலப்பிரதிகள்.

ஸ்ரீ வி. மீனுட்சிசுந்தரம்பிள்ளையவர்கள்
பிரதி க
மிதிலைப்பட்டி ,, அழகியசிற்றம்பலக்கவிராயரவர்கள் ,,
க திருநெல்வேலி ,, சாலிவாடீசுவர ஓதுவாரவர்கள்
,, க ஆறுமுகமங்கலம் ,, குமாரசாமி பிள்ளையவர்கள்
,, க
திரிசிரபுரம் ,, அண்ணுசாமி பிள்ளையவர்கள் ,,
க திருமயிலை ,, அண்ணுசாமி உபாத்தியாயரவர்கள்
,, க யாழ்ப்பாணம் ,, தீ. குமாரசாமிச்செட்டியாரவர்கள்
,, க
,, ,, வி. கனகசபைப்பிள்ளையவர்கள்

,, க

—— ஆக மூலப்பிரதி ௪

இந்தப்பதிப்பின் பரிசோதனைக்குக்கிடைத்த பிரதிகள்.

கையெழுத்துப் கொழும்புத்துறை ஸ்ரீ குமாரசாமிச் செட்டியாரவர்கள் தந்த பிரதி க
ஆழ்வார்திருநகரி ம-ா-ா-ஸ்ரீ பெரியதிருவடிக்கவிராயரவர்கள் தேடித்தந்த ,, க
திருத்தணிகைச்சரவணப்பெருமாளையர்போராகிய குருசாமி ஐயர் தந்த* ,, க

இந்தக்கையெழுத்துப் பிரதிகளையுதவியவர்கள்பால் மிக்க பாராட்டுகிறேன்.

நன்றி

இவற்றின் பரிசோதனையாலும் வேறுவகையான ஆராய்ச்சியாலும் இந்நூல் மூலமும் இருவகையுரைகளும் இப்போது அடைந்த திருத்தங்கள் சில.

இதனைப்பதிப்பிக்குங்காலத்து எனக்குச் சிறிதும் கவலையுண்டாகாதபடி, சென்னை

இராசதானிக்கலாசாலைத்தமிழ்ப்பண்டிதர் ம-ா-ா-ஸ்ரீ இ. வை. அனந்தராமையரவர்களும், மயிலாப்பூர் பி. எஸ். ஹைஸ்கூல் முதல் தமிழ்ப்பண்டிதர் சிரஞ்சீவி, ம வே. துரைசாமி ஐயரும், முதற்பதிப்பிற்கு உடனிருந்து உதவிய திருமா

னூர் ஸ்ரீ கிருஷ்ணையரவர்கள் குமாரர் சிரஞ்சீவி, கே. அருணாசலஐயரும், சென்னை இராசதானிக் கையெழுத்துப் புத்தகசாலைத் தமிழ்ப்பண்டிதர் சிரஞ்சீவி, ஜி. சேஷாத்திரிஐயரும் ஆராய்தல் ஒப்புநோக்குதல் முதலிய பேருதவிகளை உள்ளன்புடன் செய்து வந்தார்கள்.

* இப்பிரதியில் அரும்பதவுரையின் சில ஏடுகள் இருந்தன.



உபகாரச்சம்பளம் பெற்றமையை அறிந்து எனக்கு ஒருவிதத்திலும் கவலையுண்டாகாதபடி ஆதரித்து நூற்பரிசோதனை விஷயத்தில் ஊக்கமளித்துவரும் திருக்கைலாயபரம்பரைத் திருவாவடுதுறையாதீனகர்த்தரவர்களாகிய ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரவர்களையும், நூற்பரிசோதனைக்கு உடனிருந்து உதவி புரிபவர்கள்

விஷயத்தில் நான் கவலையுறுவண்ணம் அவர்களுக்குப் பல வருடங்களாக மாதவேதனமளித்து ஆதரித்துவரும் ஸ்ரீசேது ஸம்ஸ்தானாதிபதிகளும், மதுரைத்தமிழ்ச் சங்கத்தலைவர்களும், சென்னைச் சட்டநிருபணசபை அங்கத்தினர்களுமான கௌரவம்பொருந்திய மகாராஜராஜஸ்ரீ பா. இராஜராஜேசுவர சேதுபதி மகாராஜா அவர்களையும் ஒருபொழுதும் மறவேன்.

இந்நூல் மூலமும் உரைகளும் கணேச அச்சுக்கூடத்திற் பதிப் பிக்கப்பெற்றன ; அதற்குவேண்டிய அநுகூலங்களைச் செய்துகொடுத்த ம-ா-ா-ஸ்ரீ முருகேச முதலியாரவர்கள்பால் நன்றியறிவுடையேன்.

தொழிலாளிகளுடைய முட்டுப்பாடு மிகுதியாயுள்ள இக்காலத் தில் இப்புத்தகத்தின் ஏனைப்பகுதிகளைத் திருத்தமாக மிக்க விரை வில் நிறைவேறும்படி செய்வித்து உதவிய கமர்ஷியல் அச்சுக்கூடத் தாருடைய அன்புடைமை மிகவும் பாராட்டத்தக்கது.

இப்பதிப்பிற் கா ணும் பிழைகளைப் பொறுத்துக்கொள்ளும்படி விவேகிகளைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இம்முயற்சியிற் புகுத்தி நடத்தி ஊக்கமளித்து என்னைப் பாது காக்கும் தமிழ்த் தெய்வத்தை அனவரதமும் வந்திக்கின்றேன்.

"தியாகராஜவிலாஸம்"
திருவேட்டீசுவரன் பேட்டை,
6—12—1920.
இங்ஙனம்:

வே. சாமிநாதையன்

உ

## இந்நூலாசிரியராகிய இளங்கோவடிகள் வரலாறு.

இந்நூலாசிரியராகிய இளங்கோவடிகள் சேரநாட்டில் வஞ்சிநகரத்திருந்து அரசுசெய்த சேரலாதனென்னும் அரசனுடைய புத்திரர்; சேரன் செங்குட்டுவனுடையதம்பி; இதனால் இவர் முதலில் இளங்கோவென்று சொல்லப்பட்டுப் பின்பு துறவுபூண்டமையால் இளங்கோவடிகளென்று பெயர் பெற்றார்; இவர் துறவுபூண்டதற்குக்காரணம் இப்புத்தகத்தின் ௧௨-ஆம் பக்கம் முதலியவற்றாலும், இந்நூல் செய்ததற்குக்காரணம் இதன் பதிகத்து முதற்பாகத்தாலும் அதன் உரைகளாலும் விளங்கும்; துறவுபூண்ட பின்பே இந்நூல் இவராற் செய்யப்பட்டது. பத்தினியைத் துதித்தலையும் சில தருமங்களை உலகத்தார்க்குத் தெரிவிக்கவேண்டுமென்பதையும் எண்ணி இவர் இந்நூலைச் செய்தனர்; தமது மரபினுள்ளாருடைய உயர்ச்சியைக் கூறுதல் போலவே ஏனைச் சோழ பாண்டியர்களுடைய உயர்வுகளையும் சிறிதும் வேறுபாடின்றி இவர் நன்றாகச்சொல்லியிருத்தலால், இவரது மனத்தூய்மை நன்கு புலப்படுகின்றது. இந்நூலினிடையிடையே சொல்லப்படுபவர்களுடைய சரித்திரநிகழ்ச்சியாற் போந்த நற்பயனையும் தீப்பயனையும் ஆங்காங்கு உலகத்தாரைநோக்கிச்சொல்லிப்போதல் இவர்க்கு இயல்பு. பின்னும் யாரேனும் மிக்க துன்பமனுபவித்ததாகச் சொல்லுங்கால் அத்துன்பத்திற்குக் காரணமாக முற்பிறப்பில் அவர்கள் தீவினை செய்ததைக்குறித்து இவர்மனம் இரங்கிற்றென்பதை ஆங்காங்குள்ள பாடற்பகுதிகள் நன்கு புலப்படுத்தும். இவர் மலைநாட்டினராதலால் இந்நூலில் அந்நாட்டுச்சொற்கள்பல அவ்வவ்விடத்து வந்துள்ளன.

இவர் இக்கதை நிகழ்ந்தகாலத்திருந்தவராதலாற் காவிரிப்பூம்பட்டினத்திலும் மதுரையிலும் நடந்த சரித்திரங்களை அறிந்தோர்வாய்க்கேட்டும் மலைநாட்டில் நிகழ்ந்தவற்றைக்கேட்டதோடு தாமே நேரிற்கண்டும் இந்நூலைச் செய்தனர். இங்ஙனம் செய்தாரென்பதை இந்நூற்பதிகமும், ௨௯-ஆவது ௩0-ஆவது காதைகளும் விளக்கும்.

இக்கதையோடு தொடர்புள்ளதாகிய மணிமேகலையின் கதையையும் இந்நூலினிறுதியிற்சேர்த்துப் பாடக்கருதியிருந்த இவர், 'இக்கதையைமணிமேகலையென்றபெயரால் ஒரு காப்பியமாக யான் செய்துமுடித்தேன்' என்று மதுரைத்தமிழாசிரியர் கூலவாணிகன்சாத்தனார் சொல்லக்கேட்டு அவ்வாறு செய்யாது விடுத்தனர்.

**சமயம்.**—கால்கோட்காதையிற் செங்குட்டுவன் இமயஞ் செல்லப் புறப்பட்டபொழுது, "நிலவுக்கதிர் முடித்த நீளிருஞ் சென்னி, புலகுபொதி புருவத் துயர்ந்தோன் சேவடி, மறஞ்சேர் வஞ்சி மாலை யொடுபுனைந், திறைஞ் சாச் சென்னி யிறைஞ்சி வலங்கொண்டு" [அடி, ௫௬-௭] எனவும், "ஆடக





மாடத் தறிதுயி லமர்ந்தோன், சேடங் கொண்டு சிலர்நின் றேத்தத், தெண்ணீர் கரந்த செஞ்சடைக் கடவுள், வண்ணச் சேவடி மணிமுடி வைத்தலி, னாங்கது வாங்கி யணிமணிப் புயத்துத், தாங்கினனாகி" [அடி, ௬௨-௭] எனவும், செங்குட்டுவனை நோக்கி இமயத்தினின்றும் வந்தமுனிவர்கள் கூறியதாக, "செஞ்சடை வானவ னருளினில் விளங்க, வஞ்சித் தோன்றிய வானவ கேளாய்" [அடி, ௯௮-௯] எனவும், வரந்தருகாதையில் மாடலன் கூறியதாக "ஆனே றூர்ந்தோ னருளினிற் றோன்றி, மாநிலம் விளக்கிய மன்னவ னாதலின்" [அடி, ௧௪௧-௨] எனவும் இவரே கூறியிருத்தலாலும், இவர் அவனுடைய தம்பியாதலாலும் இவரது சமயம் சைவமென்று தோற்றுகின்றது. இவருக்கு அடிகளென்று பெயர் வந்திருத்தலையும், பதிகத்தில், "குணவாயிற் கோட்டத்து" என்பதிற் கோட்டமென்றதற்கு 'அருகன்கோயில்' என்று அடியார்க்கு நல்லார் பொருள் செய்திருத்தலையும், இந்நூலிற் சிலவிடத்துச் சைனமதக்கொள்கையை இவர் மிகுத்துக்கூறியிருத்தலையும் கொண்டு இவரது சமயம் சைனமென்று ஐயுறுதற்கும் இடம் உண்டு.

காலம்.— "உரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யு, ளுரைசா லடிக ளருள மதுரைக், கூல வாணிகன் சாத்தன் கேட்டனன்" என இந்நூற் பதிகத்திறுதியிலும், "இளங்கோ வேந்த னருளிக் கேட்ப, வளங்கெழு கூல வாணிகன் சாத்தன், மாவண் டமிழ்த்திற மணிமே கலைதுற, வாரைம் பாட்டினு ளறியவைத் தனனென்" என மணி மேகலையின் பதிகத்திறுதியிலும் கூறியிருத்தலால், இளங்கோவடிகளும் சாத்தனும் ஒருவர்முன்னிலையில ஒருவர் முறையே சிலப்பதிகாரத் தையும் மணிமேகலையையும் அரங்கேற்றினரென்று போதருதலானும், தொல் காப்பியச்செய்யுளியலில், "ஞகாரை முதலா" என்னும் (உ௪0) சூத்திரத் தின் விசேடவுரையில், 'சீத்தலைச்சாத்தனாராற்செய்யப்பட்ட மணிமே கலை' எனப்பேராசிரியரெழுதியிருத்தலால் மேற்கூறியசாத்தனார் கடைச் சங்கப்புலவருளொருவராகிய சீத்தலைச்சாத்தனரென்று தெரிதலானும், இளங் கோவடிகள் காலம் கடைச்சங்கப்புலவர் காலமென்று நிச்சயிக்கப்படுகிறது.

இளங்கோவடிகளுக்குத் தமையனாகிய செங்குட்டுவன் பத்தினிக்கடவு ளாகிய கண்ணகியார்க்குக் கோயிலமைத்து விழாக்கொண்டாடியகாலத்து இலங்கையரசனாகிய கயவாகுவென்பவன் உடனிருந்தானென்று வரந்தரு காதையாலும், அக்கயவாகுவும் இலங்கையிற் கண்ணகியார்க்குக் கோயில் கட்டுவித்து விழாக்கொண்டாடினனென்று இந்நூற்பதிகத்தைச்சார்ந்த உரைபெறுகட்டுரையாலுந் தெரிகின்றன. இற்றைக்குச் சற்றேறக்குறைய ௧௮00-வருடங்களுக்கு முன்பு கயவாகுவென்னுமரசனொருவன் இருந்தா னென்று இலங்கைச்சரித்திரமாகிய மகாவம்சத்தாற் புலப்படுகின்றது. பின் னும் சற்றேறக்குறைய ௮00-வருடங்களுக்குமுன்பு கயவாகுவென்னும் மற்றோரரசனிருந்ததாகவும் அச்சரித்திரத்தால் தெரியவருகின்றது. ஆயினும், இந்நூலிற் கூறிய வேறு சில அரசர்களுடைய காலத்தை ஆராயும்போது இந்நூலாசிரியர்காலம் முதற்கயவாகுவின் காலமென்றே துணியப்படுகிறது.

---

# அரும்பதவுரையாசிரியர்

## வரலாறு.

இவருடைய பெயர்முதலியவற்றுள் யாதொன்றும் தெரியவில்லை. இவ்வரும்பதவுரையையே பெருங்கருவியாகக்கொண்டு இந்நூலுக்கு அடியார்க்குநல்லார் உரைசெய்தனரென்பது இவ்விரண்டுரைகளையும் வைத்து ஒப்பு நோக்கின் நன்கு விளங்கும்; ஆயினும் இந்நூலில் இவ்விரண்டு உரையாசிரியர்களுங்கொண்ட பாடம் சிலசிலவிடத்து வேறுபட்டுள்ளன; அவ்வேறுபாடுகள் அவ்வவ்விடத்துள்ள உரைநடைகளால் நன்கு புலப்படும். அடியார்க்குநல்லாருரையிற் காணப்படாத பல மேற்கோள்களும் சிலநூற் பெயர்களும் இவ்வுரையிற் காணப்படுகின்றன. வாக்கியங்களின் முதலிறுதிகளையேனும், முதலைமட்டுமேனும், சொற்களையேனும் எழுதிப்பொருள் எழுதுவதும், ஒன்றையுமெழுதாது பொருளைமட்டும் எழுதிக்கொண்டு போவதும் இவ்வுரையாசிரியருடைய கொள்கையாக இருக்கின்றன. இதிற்சங்கச்செய்யுட்களுடைய கருத்துமுதலியவற்றை இவர் ஆங்காங்கு விளக்கியிருப்பதுடன் சிலசிலவிடத்து மிகச் செவ்விதாகப் பதசாரமும் எழுதியிருக்கின்றார். அடியார்க்குநல்லாருரையாற் புலப்படாத சிலவிஷயங்கள் இவ்வரும்பதவுரையால் விளங்குகின்றன. இவ்வுரையிற் பல விடங்களில் வாக்கியங்கள்பூர்ணமாக எழுதப்படவில்லை. சில பாகங்களுக்கு ஒருவகையாக உரையெழுதிப் பின்புவேறு உரையெழுதும்பொழுது அதனைப்புலப்படுத்தற்குரிய உம்மை முதலியன கிடையா. இவ்வுரையிலுள்ள முடிவுகளும் பொருளும் இல்லையாயின், அடியார்க்கு நல்லாருடைய உரைகிடையாத பாகங்களுக்குப் பொருள்காண்பது அரிது.

---

## அடியார்க்குநல்லார்வரலாறு.

இவருடைய வருணம் சமயம் ஊர் காலம் ஆகிய இவற்றுள் ஒன்றும் புலப்படவில்லை; ஆனாலும் நச்சினார்க்கினியரால் மறுக்கப்படுவனவற்றுட் சில இவருடைய கொள்கையாக இருத்தல்பற்றி இவரதுகாலம் நச்சினார்க்கினியருடைய காலத்திற்கு முந்தியதாயிருக்கலாமென்று ஊகிக்கப்படுகின்றது. இவர், மற்றையுரையாசிரியர்கள்போலன்றித் தாம் எடுத்துக்காட்டும் மேற்கோள்கள் இன்ன இன்ன நூல்களின்கண் உள்ளனவென்று பெரும்பாலும் புலப்படுத்தியிருக்கின்றார். சிலசிலவிடத்துப் பதப்பிரயோசனமும் அலங்காரமும் மெய்ப்பாடுகளும் வேறு சிலகுறிப்புக்களும் இவராலெழுதப்பட்டுள்ளன.

ஐந்திணைக்குமுரிய முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருளாகியஇவற்றுள் ஒவ்வொன்றின்வகை பலவற்றிற்கும் இந்நூலிலிருந்தே உதாரணங்காட்டி விளக்கியிருக்கின்றனர். இந்நூல் செய்யப்படும்பொழுதிருந்த இசைத்தமிழ் நாடகத்தமிழ் நூல்கள் பலவும் இவர்காலத்து இறந்துபோனமையால், இவர் அவ்விசைநாடகப்பகுதிகட்குஇசைநுணுக்கம்,இந்திரகாளியம்,பஞ்சமரபு, பரதசேனாபதீயம், மதிவாணர்நாடகத்தமிழ்நூல் என்னும் இந்நூல்களை



யுமே மேற்கோளாகக்கொண்டனர். இந்நூலுள் இந்திரவிழவூரெடுத்தகாதையில், "சித்திரைச் சித்திரைத் திங்கள் சேர்ந்தென" (அடி,௬௪) என்றும், கட்டுரைகாதையில் "ஆடித் திங்கட் பேரிருட் பக்கத்,தழல்சேர் குட்டத் தட்டமி ஞான்று, வெள்ளி வாரத்து" (அடி, ௧௩௩-௫) என்றும் சொல்லப்பட்டுள்ள காலவரையறையைக் கொண்டும், அவ்வவ்விடத்து நிகழ்ந்தவற்றைக்கொண்டும் ஊகித்துக் கோவலன் கண்ணகி இருவரும் இன்னகாலத்துக் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து புறப்பட்டார்களென்றும், இன்ன இன்னகாலத்து இன்னது இன்னது செய்தார்களென்றும் எழுதிக்கொண்டு போகின்றார்; (பக்கம். ௨௩௭, ௨௬௬, ௩௪௫-௬, ௩௭௬-௭, ௩௬௦) இதனால் இவருடைய கணிதநூற்பயிற்சி விளங்குகின்றது.

இவருடைய உரைநடை சிற்சிலவிடத்து எதுகை மோனை முதலியவற்றோடு கூடி இனியசுவைபயந்து செய்யுணடையாக அமைந்துள்ளது. ஒவ்வொரு பகுதியையும் தனித்தனியே படிப்போர்க்கு அவ்வப்பகுதி ஆங்காங்குள்ள உரையாலேயே புலப்படவேண்டுமென்பது இவருடைய கருத்தாதலால் முன்னெழுதியவற்றையே பின்னுமெழுதுவர். இவர் கருத்துஇன்னதாதலை இப்புத்தகத்தின் ௩௮௩-ஆம் பக்கம் முதலியவற்றிற்காண்க. மூலத்தில் எவ்விடத்தேனும் இசைச்சொற்கள் வந்திருப்பின் அவற்றைத் தனித்தனியே எடுத்துக்காட்டி இன்னசொல் இன்னநாட்டுவழக்கென்றும், முற்காலத்து வழங்கிய பழமொழிகளின்கருத்து எவ்விடத்தேனும் வந்திருக்குமாயின் அவற்றைத் தனித்தனியே எடுத்துக்காட்டி இன்னது இன்ன பழமொழியென்றும் புலப்படுத்துவர். ஒருதலையாகப்பொருள்கொள்ளாது பலரும் தத்தமக்குத் தோற்றியவாறே பொருள் கொள்ளக்கிடந்த போற்றியென்பதை இவர் இகரவீற்றுவியங்கோளாகக்கொண்டு போற்றுவாயாகவென்று பொருள் செய்திருக்கிறார்; (பக்.௩௪௮) நச்சினார்க்கினியரும் காட்டியென்பதை இகரவீற்றுவியங்கோளாகக்கொண்டார் (சீவகசிந்தாமணி, ௪௯௯.) இவர், 'கானல்வரியில் விரியக்கூறுதும்' (பக்.௮௮,௧௦௦.) என்றும், 'முன்னர் ஆணி என்பதனுட் கூறினும்' (பக்.௨௩௩.) என்றும் எழுதியிருத்தலால், இவர் கானல்வரிக்கு உரை செய்திருந்தனரென்பதும், 'அழற்படுகாதைக்கண்ணே விரித்துக்கூறுதும்' (பக்.௧௧௯.) என்றும், 'கட்டுரைகாதையுள் விரியக்கூறுவாம்' (பக்.௨௩௭.) என்றும் எழுதியிருத்தலால், அழற்படுகாதைமுதலியவற்றிற்கும் உரைசெய்யவெண்ணியிருந்தாரென்பதும் வெளியாகின்றன.

## இந்த நூலாலும் உரைகளாலும் தெரிந்த அரசர் பெயர் முதலியன:—

(க) அரசர் :—அநாகுலன், அவந்திநாட்டரசன், அழும்பில்வேள், இளஞ்செழியன், உத்தரகௌத்தன், உத்தரன், உருத்திரன், கங்கர், கட்டியர், கடுங்கோன், கயவாகு, கரிகால்வளவன், கருநாடர், கலிங்கர், கன்னர், கனகன், காய்சினவழுதி, கொங்கணர், கொங்கர், கோசர், சிங்கன், சித்திரன், சிவேதன், சேரலாதன், தனுத்தரன், தொண்டியோர், பழையன், பெருநற்கிள்ளி, பைரவன், மகதநாட்டரசன், மாகீர்த்தியாகியநிலந்தருதிருவிற்பாண்டியன், மாந்தரஞ்சேரலிரும்பொறை, மாளுவவேந்தர், மூசுகுந்தன், யவனர், வச்சிரநாட்டரசன், வசு, விசயன், விசித்திரன், வெற்றிவேற்செழியன்.



(உ) நாடுகள் :—கலிங்கம், குடகம், குண்டூர்க்கூற்றம், குணகாரைநாடு, குமரிநாடு, குறும்பனைநாடு, குன்றநாடு, கொங்கு, கொல்லம், சோணாடு, தெங்கநாடு, தென்பாலி, நாகநாடு, பாண்டியநாடு, பின்பாலைநாடு, மகதநாடு, மத்திமதேசம், மதுரைநாடு, முத்தூர்க்கூற்றம், முன்பாலைநாடு, வச்சிரநாடு.

(ங) ஊர்கள் :—அவந்தி, இடும்பில், இரவிபுரம், இலங்கை, உஞ்சை, உறந்தை, கச்சி, கபாடபுரம், கபிலபுரம், காப்பியக்குடி, குணவாயில், கொடுங்கோளூர், கொடும்பாளூர், கொற்கை, சிங்கபுரம், செந்தில், சேடி, சோ, தங்கால், தலைச்செங்காடு, திருவனந்தபுரம், திருவரங்கம், தொண்டி, நெடுங்குளம், நேரிவாயில், பழையூர், புகார், மதுரை, மாங்காடு, வஞ்சி, வயலூர், வாரணவாசி, வியலூர்.

(ச) மலைகள்:—அழகர்மலை, இமயம், ஏரகம், குடமலை, குமரிக்கோடு, கொல்லி, சிறுமலை, செங்குன்று, திருச்செங்கோடு, நீலகிரி, பெருமலை, பொதியில், மேரு, வெண்குன்று, வெள்ளியம்பெருமலை, வேங்கடம்.

(ரு) ஆறுகள்:—அயிரை, கங்கை, காவிரி, குமரி, சிலம்பாறு, சோணை, தொழுனை, பஃறுளி, பேராறு, பொருநை, வையை.

(சா) பொய்கைகள்:—இட்டசித்தி, சூரியகுண்டம், பவகாரணி, புண்ணியசரவணம்.

சோமகுண்டம்,

(எ) கோயில்கொண்ட தெய்வங்கள்:—அருகன், அறுமுகன், இந்திரன், ஐயை, ஐராவதம், கண்ணகி, கற்பகம், காமன், கைலாயம், சந்திரன், சாத்தன், சாதவாகனன், சிவபெருமான், சூரியன், திருமால், பலதேவன், புத்தன், மங்கலாதேவி, வச்சிரம், வேல்.

(அ) புலவர்:—அகத்தியனார், அறிவனார், ஆதிவாயிலார், இருங்குன்றைப் பூர்க்கருங்கோழிமோசியார், இறையனார், சேந்தையார், சிகண்டியார், சிறுபாண்டரங்கனார், செயிற்றியனார், தவளைக்கோமான், தொல்காப்பியனார், நாரதனார், நிதியின்கிழவன், பாதசேனபதியார், பாண்டியன்மதிவாணனார், மதுரைக்கூலவாணிகன்சாத்தனார், மதுரையாசிரியன்மாறனார், முருஞ்சியூர்முடிநாகராயர், யாமளேந்திரர், வெள்ளூர்க்காப்பியனார்.



# சிலப்பதிகாரக் கதைச்சுருக்கம்.

---

## [௧.—புகார்க்காண்டம்.]

சோழவளநாட்டிற் காவிரிநதி கடலோடுகலக்குஞ்சங்கமுகமென்னுந் துறையையுடையதும் சோழர்களுடைய பழைய இராசதானியாகவுள்ளதும் பெரியோர்களாற் சிறப்பித்துப் பாராட்டி மிகப் புகழப்படுவதுமாகிய காவிரிப்பூம்பட்டினத்தில் சோழன்கரிகாலன் அரசாட்சிசெய்துவருகையில், இப்பர் கவிப்பர் பெருங்குடியரென்னும் மூவகைவணிகருட் பெருங்குடியர் குலத்திலுதித்தோனாகிய மாசாத்துவானென்பான், தன்மகன் கோவலனுக்கு அந்நகரில் அம்மரபிலுதித்த மாநாய்கன் மகள் கண்ணகியை மிக்கசிறப்புடன் மணம்புரிவிக்க, கோவலன் கண்ணகிபால் மிகவும் அன்புவைத்து நலம்பாராட்டி இன்புற்றுத் தருக்கி மகிழ்ந்து நடக்கும் நாட்களில் ஒருநாள், அக்கோவலன்தாயாகிய பெருமனைக்கிழத்தியென்பவள், கோவலனும் கண்ணகியும் இல்வாழ்க்கையைச் செவ்விதாகநடத்திக் கைதேர்ந்து உயர்ச்சி பெற்று விளங்குதலைக் காணவேண்டி வேறொரு மாளிகையில் இல்லறம்நடத்துவதற்கு வேண்டும் பொருள்களை நிரப்பி வேலைசெய்பவர்களையும் நியோகித்து அவ்விருவரையும் அதிலிருத்த, அவர்கள் மனவொருமையோடு அதிலிருந்து அறவோர்க்களித்தல் அந்தணரோம்பல் துறவோர்க்கெதிர்தல் முதலியவற்றைச்செய்து இல்லறத்தை ஒழுங்காக நடத்திவருவாராயினர்.

இப்படியிருக்கையில், கோவலன், மிக்க அழகுடையவளும் ஆடல் பாடல் முதலியவற்றில் மிகத்தேர்ச்சிபெற்றவளுமாகிய மாதவியென்னும் நாடகக்கணிகையை விரும்பித் தன்பாலுள்ள பலவகைப்பொருள்களையும் நாள்தோறுங்கொடுத்து அவளோடும் இடைவிடாது மருவி மகிழ்வானாயினன். கண்ணகி பிரிவாற்றாது வருந்தி அவ்வருத்தத்தைச் சற்றும் வெளிப்படுத்தாமல் அவன்பாற் சிறிதேனும் வெறுப்பின்றி இல்லறவொழுக்கத்தை வழுவாது நடத்திவந்தாள்; அக்காலத்து வழக்கப்படி அந்நகரத்தில் இந்திரனுக்குத் திருவிழா நடத்தப்பட்டது. அதன்முடிவில் அந்நகரத்தார் தத்தம் பரிவாரங்களோடு கடலாடுதற்குச் சென்றார்கள்; கோவலனும் மாதவியுடன் கடற்கரையையடைந்து ஓரிடத்திருந்து அவள்கையிலிருந்த வீணையைவாங்கிப் பலவகைப்பட்ட வரிப்பாட்டுக்களைப் பாடிக்கொண்டு அவ்வீணையைவாசித்தான்; அவன்பாடியபாட்டுக்கள் பலவகைப்பட்ட அகப்பொருட்சுவையைத் தழுவியிருந்தமையின் மாதவி, 'இவன் வேறுமகளிர்பால் விருப்புடையன்' என்றெண்ணிப் புலந்து அவன்கையிலுள்ள வீணையைவாங்கித் தான்வேறு குறிப்பில்லாதவளாகஇருப்பினும் அவன் வேறுகுறிப்புள்ளவனாகத் தனக்குத் தோற்றினமையின், தானும் வேறுகுறிப்புடையாள்போலவே அகப்பொருட்சுவையைத்தழுவிய பலவகைப்பட்ட வரிப்பாட்டுக்களைப் பாடிக்கொண்டு அவ்வீணையை வாசித்தாள்; அதனைக்கேட்ட கோவலன், வேறொருவர்மேல் மனம்வைத்து அவள் பாடினாளென்றெண்ணி ஊழ்வினையின் முயற்சியால் வெறுப்புற்று அவளோடு அளவளாவாமல் தன்வீட்டையடைந்து, தேவந்தி

யென்னும் பார்ப்பனத்தோழியோடு சல்லாபஞ் செய்துகொண்டிருந்த கண்ணகியைக்கண்டு, அவளுடன் பள்ளியறையிற்புகுந்து அவள்மேனிவாட்டத்தையும் மனவருத்தத்தையுந்தெரிந்து, 'பொய்யை மெய்யாகக் காட்டியொழுகும் பரத்தையோடுமருவி ஒழுகியகாரணத்தால் முன்னோர்தேடிவைத்த பொருட்குவியல்களையெல்லாம் தொலைத்து வறுமையடைந்தேன்; அஃது எனக்கு மிக்க நாணத்தைத்தருகின்றது' என்றுசொன்னான். அதனைக்கேட்டகண்ணகி, மாதவிக்குக்கொடுத்தற்குப் பொருளில்லாமையால் அவன் தளர்ந்துசொன்னானென்றுகருதி, 'அடியேனிடத்து இரண்டு சிலம்புகள் உள்ளன; அவற்றைக் கைக்கொண்டருள்க' என்று சொன்னாள்; அவன், 'மதுரையையடைந்து இச்சிலம்பை வாணிகமுதலாகக்கொண்டு வியாபாரஞ் செய்துமிக்கபொருள்தேடுதற்கெண்ணினேன்; நீயும்உடன்வரவேண்டும்' என்றான்; அவளும் உடன்பட, கோவலன் அன்றிரவின்கடையாமத்திற் கண்ணகியை அழைத்துக்கொண்டு ஒருவருமறியாதபடி புறப்பட்டுக் காவிரியின் வடகரைவழியாக மேற்கேசென்று ஒருபூஞ்சோலையையடைந்து அதில் தவஞ் செய்துகொண்டிருந்த ஆருகதசமயத் தவமுதியோளாகிய கவுந்தியைக்கண்டு வணங்கி, 'மதுரையிலுள்ள பெரியோர்கள்பால் அறநூற்கேள்விகளைக் கேட்டற்கும் அறிவனைத் தொழுதற்குமாக உடன்வருவேன்' என்றுசொல்லியஅவளோடும்வழிக்கொண்டு அரங்கமடைந்து அங்குவந்த சாரணர்களைத்தரிசித்து ஓடமேறிக் காவிரியின் தென்கரைசேர்ந்து ஒருபொழிலிலிருந்தான்; அப்பொழுது அங்குவந்து கண்ணகியையும் கோவலனையும் அவமதித்துப் பேசிய ஒருபரத்தையையும் ஒருதூர்த்தனையும் கவுந்தி நரிவடிவங்கொள்ளும்படி சபித்து, அவர்கள் அவ்வாறானமையறிந்து இரங்கிய கோவலன் கண்ணகியிவர்கள் வேண்டுகோளால் அவர்களுக்கு அவ்வடிவு ஒருவருடத்தில் நீங்கும்படி சாபவிடைசெய்தாள். பின்புமூவரும் உறையூரையடைந்தார்கள்.

## [௨.—மதுரைக்காண்டம்.]

அடைந்தவர்கள் அன்று அந்நகரிற்றங்கி மறுநாட்காலையிற் புறப்பட்டுச் சிறிதுதூரஞ்சென்று ஓரிடத்திருந்து இளைப்பாறி அங்குவந்த ஓரந்தணனால் வழிதெரிந்துகொண்டு அப்பாற்சென்றார்கள். செல்லும்பொழுது ஒரு நாட்காலையிற்கோவலன், கவுந்தியையும்கண்ணகியையும் ஓரிடத்தில் வைத்துவிட்டுக் காலைக்கடன் கழித்தற்பொருட்டு ஒரு பொய்கையையடைந்து நிற்கையில், தன் பிரிவாற்றாது வருந்திய மாதவியாலனுப்பப்பட்டு அவளோலையுடன் காவிரிப்பூம்பட்டினத்தினின்றும் அங்குவந்த கௌசிகனென்னும் அந்தணனைக்கண்டு தன்பிரிவால் தன் தாய் தந்தை முதலியோரும் மாதவியும் படுகிறவருத்தங்களை அவனால் தெரிந்து மிகவருத்தமுற்றுத் தான்புறப்பட்டதற்குக்காரணங்களையும்தன்வணக்கத்தையும் தன்னுடைய தாய்தந்தைக்குச் சொல்லிப் பாதுகாத்துவரும்படி அவனையனுப்பிவிட்டுக் கவுந்தியையும் கண்ணகியையுமடைந்து அவர்களுடன் புறப்பட்டு இடையிற் சந்தித்த பாணர்களுடன் அளவளாவி அவர்களால் வழியின் அளவு தெரிந்துகொண்டு போய் வையையாற்றையடைந்து அதனைத் தொழுது புணையேறி அக்கரை சென்று மதுரையின் மதிற்புறத்ததாகிய முனிவர் இருக்கையில் தங்கினான்.

மற்றைநாட்காலையிலெழுந்து கவுந்தியை வணங்கித் தங்களுக்கு முன்பு நேர்ந்த துன்பங்களைச் சொல்லி வருந்திப் பின்பு அவள் தேற்றத்தேறிக் கண்ணகியை அவள்பால் வைத்துவிட்டுத் தான் வாணிகஞ்செய்தற்குரிய

இடமறிதற்பொருட்டு மதுராநகரத்தின் உள்ளேசென்று அதன்வளங்களையெல்லாங்கண்டு மீண்டு கவுந்தியையடைந்து அந்நகர்ச்சிறப்புமுதலியவற்றைச் சொல்லி அப்பால் அங்கேவந்த தனது நட்பாளனாகிய மாடலனென்னு மந்தணனோடு சல்லாபஞ்செய்துகொண்டிருந்தான். அப்பொழுது கவுந்தி, அங்குவந்த இடைச்சியர் தலைவியாகிய மாதரியைக்கண்டு அவளது நல்லொழுக்கத்தைநோக்கி, 'இவளிடத்திற் கண்ணகியை அடைக்கலமாகக் கொடுக்கலாம்' என்று நிச்சயித்து அவளையழைத்துக் கண்ணகியின்கற்புமேம்பாட்டையும் அவள்மென்மைத்தன்மையையும் உயர்ந்தோர்களாற் கொடுக்கப்படும் அடைக்கலப்பொருளைப்பாதுகாத்தோர்அடையும்பயனையும்அவட்கு விளங்கச் சொல்லிக் கண்ணகியை அவளிடம் ஒப்புவிக்க, அவள்மகிழ்ச்சியுடன்ஏற்று விடைபெற்றுக் கண்ணகியைக் கோவலனுடனழைத்துக்கொண்டு ஆயர்பாடியிலிருக்கும் தன்வீட்டையடைந்து அவ்விருவரையும்புதியமனையொன்றிலடைவித்து மிகவுபசரித்துத் தன்மகள் ஐயையென்பவளைக் கண்ணகிக்குத் துணையாகவைத்துச் சமைத்தற்குரிய பொருள்கள் பலவற்றையும் கொணர்ந்து கொடுப்பக் கண்ணகி அவற்றைச் செவ்விதாகச்சமைத்து முறைப்படியுண்பிக்கக் கோவலன் இனிதாகவுண்டு கண்ணகியை அருகழைத்து அணைத்து, 'நீ இத்தப்பாலைவழியில் வந்ததை எண்ணி நம் தாய்தந்தையர் என்ன துன்பமுற்றார்களோ! மிக்க இன்பத்தை அனுபவித்துவந்த நாம் இந்தக் கொடியதுன்பத்தையனுபவித்தது கனவோ? கனவாயின், இதற்குக்காரணமாக முன்புசெய்த தீவினையாதோ? யான் ஒன்றுமறிந்திலேன்; வீணரோடும் விடரோடுங்கூடிப் பிறரைப் புறங்கூறுங் கூட்டத்திற்புகுந்து நல்லொழுக்கத்தைத்துறந்த மகாபாவியாகிய எனக்கு இனித் தீக்கதியன்றி நற்கதியுண்டாமோ? இருமுதுகுரவர்க்கும்ஏவல்செய்தலையொழிந்தேன்; உனக்கும் துன்பஞ்செய்தேன்; இக் கூடாவொழுக்கம் தீதென்று சிறிதுமெண்ணிலேன்' என்று பலவாறிரங்கி, 'சுற்றமுதலியவற்றைநீங்கி நாணமுதலியவற்றையும் கற்பையும் பெருந்துணையாகக்கொண்டு என்னோடு வந்து எனது தனிமையைத்தீர்த்த பொன்னே கொடியே புனைபூங் கோதாய், நாணின் பாவாய் நீணில விளக்கே, கற்பின் கொழுந்தே பொற்பின் செல்வீ! இனி, உன்னுடைய சிலம்புகளுள் ஒன்றைக்கொண்டுபோய் விரைவில் விற்றுவருவேன்; வருமளவும் தனிமையால் வருந்துதலையொழிவாயாக' என்றுசொல்லி, ஒருசிலம்பைவாங்கிக்கொண்டு அவள் தனியேயிருத்தலைக் கண்டு மனம்வெதும்புதலாலே பெருகிய தன்கண்ணீரை அவள்கண்டால் வருந்துவாளென்று மறைத்தவனாகி அவ்விடத்தைநீங்கிப் பிரி[illegible]

லாத மனமுடையவனாய்ச் சென்று எதிர்ப்பட்ட துர்நிமித்தங்களை அறியாமற் கடைத்தெருவிற்புகுந்து எதிரே நூறு பொற்கொல்லர் பின்னேவர முன்வந்த ஒருபொற்கொல்லனைக்கண்டு 'இவன் அரசனாற்பெயர்பெற்றோன்' என்றெண்ணி அவனருகிற்சென்று, 'அரசன்தேவியணிதற்குத் தகுதியான சிலம்பினை விலைமதிக்கும் வன்மையுடையாயோ?' என்று வினவி, அவன் மிக்கபணிவுடன் தான் வல்லனாதலைக் குறிப்பிக்கக் கோவலன் தான்கொணர்ந்த சிலம்பைக் காட்டினன். அவன்பார்த்து, 'இதனை அரசனுக்கு யான்தெரிவித்துவருமளவும் என்வீட்டிற்கு அயலதாகிய இவ்விடத்தே நீர் இரும்' என்று ஓரிடத்தைக் காட்டிச் செல்ல, கோவலன் அவ்விடத்தேயிருந்தான். சென்றபொற்கொல்லன் முன்பு அரசன்மனைவியின் சிலம்புகளுள் ஒன்றை வஞ்சித்துத் திருடிக் கொண்டவனாதலால், 'யான் முன்பு வஞ்சித்துக்கவர்ந்துகொண்ட சிலம்பு

என்னிடத்தேயுள்ளதென்று இராசாவுக்கு வெளிப்படுவதற்கு முன்னமே அதனோடு ஒத்த சிலம்பைக்கொணர்ந்த இப்புதியவனால் என்மீதுண்டாகும் ஐயத்தைப் போக்கலாம்' என்று தன்னுள்ளே நிச்சயித்து, தன் மனைவியின் ஊடல்தீர்த்தற்பொருட்டுத் தன்கோயிலைநீங்கி அவள்கோயிலைநோக்கிக் காமபரவசனாய்ச்செல்லும் பாண்டியன்நெடுஞ்செழியனைக்கண்டு வணங்கித்துதித்து, 'கன்னக்கோல் முதலியன இல்லாமலே கோயிற்கண் இருந்த சிலம்பைத் திருடியவன் அடியேனுடைய சிறியகுடிலின்புறத்தே அச்சிலம்போடு வந்திருக்கிறான்' என்றுசொல்லப் பாண்டியன் உடனே காவலாளர்களையழைத்து, 'என்மனைவியின்சிலம்பு இவன் கூறிய கள்வன்கையிடத்ததாயிருப்பின், அவனைக்கொல்லுதற்கு அச்சிலம்போடு கொண்டுவருக' என்றுசொல்லக்கருதியவன், வினைபலிக்குங்காலமாதலால் மயங்கி,'அவனைக்கொன்று அச்சிலம்பைக் கொண்டுவாரும்' என்று கட்டளையிட்டான். பொற்கொல்லன் தன்னெண்ணம் பலித்ததென்று மகிழ்ந்து அக்காவலாளருடன் சென்று கோவலனையடைந்து அவனை நோக்கி, 'இவர்கள் அரசன்கட்டளையாற் சிலம்புகாணவந்தவர்கள்' என்றுசொல்லிக் கோவலனுடைய முகக்குறி முதலியவற்றைக்கண்டு அவன் கள்வனல்லனென்றுசொல்லும் காவலாளர்களையிகழ்ந்துரைத்து அவனைக் கள்வனென்று வற்புறுத்துதற்குக் களவுநூல்களிலுள்ள ஏதுக்களையெல்லாம் அவர்களுக்கு எடுத்துக்காட்டினன்; அப்பொழுது அவர்களுள் கொலையஞ்சானொருவன் விரைந்துசென்று அறிவின்மையினாற் கோவலனைத் தன் கைவாளால் வெட்டிவீழ்த்தினன்.

இப்பால் கண்ணகியிருந்த இடைச்சேரியில் பலவகையான உற்பாதங்கள் உண்டாயின; அதுகண்ட மாதரிமுதலியோரால் உற்பாதசாந்தியாகத் திருமாலைக்குறித்துக் குரவைக்கூத்து ஆடப்பட்டது; அதன்முடிவில் மாதரி நீராடுதற்பொருட்டு வையையாற்றிற்குச் சென்றாள்; அப்பொழுது, சிலம்புதிருடியவனென்று துணிந்து கோவலனை அரசனேவலாளர் கொன்ற செய்தியை மதுரையிலிருந்துவந்த ஒருத்திசொல்லக்கேட்டுக் கண்ணகி பதைபதைத்து மூர்ச்சித்துப் பலவாறுபுலம்பித் தானும் அவனுடன்இறத்தற்குத் துணிந்து இடைச்சியர்மத்தியில்நின்று சூரியனை நோக்கி, 'கதிர்ச்செல்வனே ! நீயறிய என்கணவன் கள்வனோ?' என்றாள்; அவன், 'நின்கணவன் கள்வனல்லன்; அவனைக் கள்வனென்ற இவ்வூரை விரைவில் தீயுண்ணும்' என்று அசரீரியாகக் கூறினன். அதனைக்கேட்ட கண்ணகி மிகுந்த கோபத்தோடு தன்னிடமிருந்த மற்றொரு சிலம்புடனே புறப்பட்டுக் கண்டார்நடுங்கும்படி வீதிவழியே சென்று ஆங்குள்ள மகளிரைநோக்கிப் பலவாறுபுலம்பி, 'என்கணவனை முன்போலக்கண்டு அவன்சொல்லும் நல்லுரையைக் கேட்பேன்; அங்ஙனங்கேளேனாயின், என்னை இகழுமின்' என்று சபதஞ்செய்துகொண்டுசென்று வெட்டுண்டுகிடந்த கோவலனைச் சிலர்காட்டக்கண்டு அளவில்லாத துயரத்தை அடைந்து அவனை முன்னிலைப்படுத்திப்பலவிதமாகப் பிரலாபித்து அவனுடம்பைத் தழுவிக்கொள்ள அவ்வளவில் அவன் உயிர்பெற்றெழுந்து நின்று மதிபோன்றமுகம் வாடியதேயென்றுசொல்லிக் கையாலே அவள்கண்ணீரை மாற்ற, அவள் அவனுடைய பாதங்களை இரண்டுகைகளாலும் பூண்டு பணிந்தாள்; உடனே அவன், 'நீ இங்கிருக்க' என்றுசொல்லி அவ்வுடம்பையொழித்துவிட்டுச் சுவர்க்கம்புகுதற்குத் தேவர்களோடுகூடிச் சென்றான்.

இங்கே இப்படியிருக்கப் பாண்டியன்நெடுஞ்செழியன்மனைவி, தீக்கனாக்கள்பலவற்றைக்கண்டு அவற்றைத் தன்கணவனோடு சொல்லிக்கொண்டிருந்தாள்; அப்பொழுது, கண்ணகி கோபந்தணியாதவளாய் அரண்மனைவாயிலை

அடைந்து வாயிலோனால் தன்வரவை அரசனுக்கு அறிவித்து; அவன் அனுமதிப்படி அவன்முன்சென்று, அவன்கேட்பத் தன் ஊர் பேர்முதலியவற்றையும், ஆராயாது கோவலனைக் கொல்வித்த கொடுங்கோன்மையையும் மிக்கதுணிவாகச் சொல்லிக் கோவலன் கள்வனல்லனென்றுதெளிவித்தற்பொருட்டு, தன் சிலம்பினுள்ளேயுள்ள பரல் மாணிக்கமென்றாள்; அவன், தன்தேவிசிலம்பின் பரல்முத்தென்று சொல்லி,கொல்லப்பட்ட கோவலனிடமிருந்துகிடைத்தசிலம்பை வருவித்துவைப்ப, கண்ணகி அதனையுடைத்தாள்;உடைக்கவே அதனின்றும்மாணிக்கப்பரல்தெறித்தது;அதுகண்டு அரசன்நடுநடுங்கி,'இழிந்த பொற்கொல்லன் சொல்லைக்கேட்ட கொடுங்கோன்மையையுடைய நானோ அரசன்! நானோ அரசன்!! ஐயோ! மிகப்புகழ்பெற்ற இந்த அருமந்தகுலம் என்னாற் பழியடைந்ததே! என் ஆயுள்இன்றே அழியக்கடவது' என்றுசொல்லி மிகவுந் துக்கித்துமயங்கித் தானிருந்த ஆசனத்தில்வீழ்ந்துஇறந்தான்; அதனையறியாத அவன்மனைவி பாதுகாத்தருள வேண்டுமென்று கண்ணகியின் பாதத்தில்வீழ்ந்தாள்; வீழவே கண்ணகி, 'நான் பத்தினியாயிருத்தல் உண்மையாயின், இவ்வூரை அழித்துவிடுவேன்பார்' என்று சபதம்செய்து தனது இடக்கொங்கையை வலக்கையால் திருகியெடுத்து அதனை அந்நகரத்தின்மீதுஎறிந்தாள்; எறியவே அக்கினிதேவன் பார்ப்பனக்கோலத்தோடுவந்து,'மகாபத்தினி! உனக்குப்பிழைசெய்தநாளில் இவ்வூரை எரித்துவிடும்படி முன்னமே ஓரேவல் பெற்றுளேன்; இப்பொழுது யாரையழித்தல்வேண்டும்?' என்றுகேட்ப, அவள், "பார்ப்பாரறவோர் பசுப்பத் தினிப்பெண்டிர், மூத்தோர் குழவி யெனுமிவரைக் கைவிட்டுத், தீத்திறத்தார் பக்கமே சேர்க" என்று சொல்ல, அப்பொழுதே அந்நகரில் அவள் சொல்லியவண்ணம் தீப்பற்றிக்கொண்டது. உடனே அந்நகரைக்காக்கும் வருணப்பூதங்கள்நான்கும் பெயர்ந்துசென்றன; அந்நகரத்துள்ள இடங்கள்பலவும்எரியத்தொடங்கவே அவ்வெம்மையை ஆற்றாதவளாகிமதுரையின் அதிதேவதை கண்ணகிபால்வந்து நின்று அவளைநோக்கி, "யான் இந்நகரின் தெய்வம்;உனக்குச் சிலவற்றைச்சொல்லவந்தேன்;அவற்றை நீகேட்பாயாக; இந்நகரத்து முன்பிருந்தபாண்டியர்களுள் ஒருவரேனும் சிறிதும் கொடுங்கோன்மையுடையாரல்லர்;இந்நெடுஞ்செழியனும் அத்தன்மையனே; ஆயினும் இதுவந்தவரலாற்றைச் சொல்லுவேன்:முன்பு கலிங்கநாட்டிலுள்ளசிங்கபுரத்தரசனாகிய வசுவென்பவனும் கபிலபுரத்தரசனாகிய குமரனென்பவனும் தம்முட் பகை கொண்டு ஒருவரையொருவர் வெல்லக்கருதியிருந்தார்; அப்பொழுது சிங்கபுரத்துக் கடைவீதியிற்சென்று இயல்பாகப் பண்டம்விற்றுக் கொண்டிருந்த சங்கமனென்னும் வணிகனை அந்நகரத்தரசனிடம் தொழில் செய்துகொண்டிருக்கும் பரதனென்பவன் இவன்

[illegible] பலகையுடைய ஒற்றனென்று பிடித்து அரசனுக்குக்காட்டிக் கொலைசெய்துவிட்டான்; அப்பொழுது அந்தச்சங்கமன்மனைவியாகிய நீலியென்பவள் மிகுந்த துயரமுற்றுப் பதினான்குநாள் பலவிடத்தும் அலைந்து பின்பு ஒருமலையின்மேல் ஏறிக் கணவனைச் சேர்தற்பொருட்டுத் தன்னுடைய உயிரை விடுதற்கு நினைந்தவள், 'எமக்குத்துன்பஞ்செய்தோர் மறுபிறப்பில் இத்துன்பத்தையே அடைவார்களாக' என்று சாபமிட்டிறந்தாள்; அப்பரதன் இக்கோவலனாகப் பிறந்தான்; ஆதலால் நீங்கள் இத்துன்பமடைந்தீர்கள்! நீ இற்றைக்குப் பதினான்காவதுதினத்தின் பகல்சென்றபின்பு உன்னுடையகணவனைக்கண்டுசேர்வை" என்றுசொல்லி அவளைத்தேற்றிச்செல்ல, கண்ணகி மதுரையை நீங்கி வையைக்கரைவழியே மேற்றிசை நோக்கிச்சென்று மலைநாடடைந்து அதிலுள்ள திருச்செங்குன்றென்னும் மலைமேலேறி ஒரு வேங்கைமரத்து நிழலினின்று பதினான்காவதுதினத்தின்பகல்சென்றபின்பு அங்கே தெய்வவடி

## சிலப்பதிகாரக் கதைச்சுருக்கம்.

27

வந்தோவேந்த கோவலனைக் கண்டுகளித்து அவனுடன் ஏறித் தேவர்கள் போற்றும்படி சுவர்க்கமடைந்தாள்.

விமானத்தின்மேல்

[௩.—வஞ்சிக்காண்டம்.]

கண்ணகி, இவ்வாறு கணவனோடு விமானமேறிச் சுவர்க்கம் போகக் கண்ட வேட்டுவமகளிரும் வேடர்களும் மிகுந்த ஆச்சரியமடைந்து தமது குறிச்சியிற் கண்ணகி பொருட்டு ஒருகுரவைக்கூத்து நடப்பித்தார்கள்; பின்பு அவ்வேடர்கள், அந்த அதிசயத்தைத் தம்நாட்டு அரசனாகிய செங்குட்டுவனுக்குத்தெரிவிக்க வேண்டுமென்றெண்ணிப் பலவகையான காணிக்கைப்பொருள்களையும் கைக்கொண்டு சென்று, மலைவளங்காண்டற்குத் தனதுதேவிவேண்மாளோடும் தம்பி இளங்கோவடிகளோடும் புறப்பட்டு நால்வகைத்தானையும் சூழவந்து பேராற்றங்கரையிலுள்ள மணற்குவியலிலிருக்கும் சேரன்செங்குட்டுவனைக்கண்டுவணங்கிச் சொன்னார்கள்; அதுகேட்டு அவ்வரசன் அதிசயிக்க, அங்குவந்திருந்த மதுரைத்தமிழாசிரியராகிய சாத்தனார், மதுரையிற் கோவலன் கொலையுண்டதையும் அங்கே கண்ணகியால்நடந்தவற்றையும்மதுராநகர்த்தெய்வம் முன்வந்து சொல்லியதையும் அவர்களுக்கு விரித்துச்சொன்னார்; செங்குட்டுவன், பாண்டியன் இறந்ததற்கு இரங்கித் தன்தேவியின் வேண்டுகோளால் கண்ணகியாகிய பத்தினிக்கடவுளைப் பிரதிஷ்டித்து வழிபடுதற்கு எண்ணி, அவளுருவஞ்செய்தற்குச் சிலைகொணர்தற்பொருட்டு மந்திரிகளோடும் ஆலோசித்து, முன்னம் இமயமலையினின்றும்வந்த முனிவர்கள் 'ஆரியமன்னராகிய கனகனும் விசயனும் தமிழ்நாட்டரசரையிகழ்ந்தார்' என்று சொல்லக்கேட்டவனாதலால், அவ்வரசர்களைவென்று அவர்கள்முடியில் ஆச்சிலையையேற்றிக் கொணர்வேனென்று சபதம்செய்து, உடனே சேனைகளுடன் புறப்பட்டு நீலகிரியையடைந்து அங்குத்தங்கி இமயமலையினின்றும் வந்த முனிவர்கள்கூறிய ஆசியைப்பெற்று அப்பாற்சென்று கங்காநதியையடைந்து தனது நட்பரசராகிய கன்னர்கள் கொணர்ந்துவைத்திருந்த ஓடமேறி அக்கரைசென்று அவ்விடத்திற்றங்கி அங்கே போர்செய்தற்குவந்த கனகவிசயரையும் அவருக்குத்துணையாகவந்த உத்தரன் முதலியஅரசரையும் வென்று தாபதவேடமுதலியவற்றைக் கொண்டோடிய அவ்வரசர்களைப் பிடித்துஅகப்படுத்திக்கொண்டு தன்மந்திரியாகிய வில்லவன்கோதையையும் சேனையையும் அனுப்பி இமயமலையினின்றும் சிலைவருவித்து அதனைக் கனகவிசயர் முடியிலேற்றி விதிப்படி கங்கையில் நீர்ப்படை செய்து அதன் தென்கரை சேர்ந்து சேனையோடுந்தங்கி அங்குக்கங்கையாடிவந்தமாடலனாற் கோவலன்வரலாறுமுதலியவற்றையும் நெடுஞ்செழியனுக்குப்பின்பு இளங்கோவேந்தன் அரசாட்சிசெய்துவருதலையுமறிந்து அம்மாடலனுக்குத் தன் நிறையாகிய ஐம்பதுதுலாம்பொன் தானஞ்செய்து தன்னால்வெல்லப்பட்ட கனகவிசயரைச்

சோழனுக்கும் பாண்டியனுக்கும் காட்டிவரும்படி நீலன்முதலிய ஒற்றர்களையனுப்பிவிட்டுச் சேனையுடன் புறப்பட்டு இடையிலுள்ள வளங்களையெல்லாம் பார்த்துக்கொண்டு வஞ்சிநகரமடைந்து ஆங்குள்ளவர்களோடும் அளவளாவி மகிழ்வுற்றிருந்தான்; அப்படியிருக்கையில், ஒருநாள், முன்பு அனுப்பப்பட்ட நீலன்முதலிய ஒற்றர்கள் வந்து, 'தோல்வியடைந்து மாறுவேடம் பூண்டுசென்ற கனகவிசயர்முதலியோரைப் பிடித்துகொண்டு வந்ததைச் சோழனும் பாண்டியனும் இகழ்ந்துசொன்னார்கள்' என்றுசொல்லக்கேட்டு மிகுந்தகோபங்கொண்டு, அருகுவந்திருந்த மாடலன், 'நீ கோபந்தணிக; இளமை யாக்கை செல்வமுதலியவை நிலையா; நல்லபதத்தையடைவிக்கும் யாகத்தை இனிச்செய்தல்வேண்டும்' என்று பல ஏதுக்கள்முகமாக



எடுத்துச் சொல்லக்கேட்டு அக்கோபந்தணிந்து, அம்மாடலன்

சொல்லிய வண்ணம் யாகத்திற்குரியவற்றை அமைக்கும்படி சிலரையனுப்பி, ஆரியவரசர் முதலியோரைச் சிறையினின்று நீக்கி அவர்களுக்குவேண்டியவற்றை உபகரிக்கும்படி வில்லவன்கோதைக்குச்சொல்லி ஆன்றோர்பலருடன்சென்று சிறந்த கம்மியர்களாற்செய்யப்பட்ட ஓராலயத்தில் இமயச்சிலையாலியற்றப்பட்டுள்ள வடிவத்திற் பத்தினிக்கடவுளாகிய கண்ணகியைப் பிரதிஷ்டை பண்ணி விதிப்படி நித்தியபூசைமுதலியவற்றை நடத்தும்படி கட்டளையிட்டு அங்கேயிருந்தான். அப்படியிருக்கும்பொழுது, முன்னம், கோவலன் கொலையுண்டது முதலியவற்றை மாடலனாற்கேட்ட தேவந்தியும் கண்ணகியின் செவிலித்தாயும் அவளடித்தோழியும் காவிரிப்பூம்பட்டினத்தினின்று நீங்கி மதுரையையடைந்து அங்கே கண்ணகியைக் காணாமல் மாதரிமகள் ஐயையைக் கண்டு அவளையழைத்துக்கொண்டு வையைக்கரைவழியே சென்று மலைநாடுபுகுந்து கண்ணகி கோயிலையடைந்து அங்கிருந்த செங்குட்டுவனைக்கண்டு தங்களை இன்னரென்று அறிவித்துக் கண்ணகியின் பிரிவாற்றாமையால் வருந்திப் புலம்பினார்கள்; அப்பொழுது கண்ணகி தெய்வவடிவத்தோடு வெளிப்பட்டுச் செங்குட்டுவனுக்குக்காட்சிகொடுத்து வாழ்த்தினாள்; பின்பு மாதவிமகளாகிய மணிமேகலையின் துறவைத்தேவந்தி சொல்லக் கேட்ட செங்குட்டுவன், அவள்மேல்ஆவேசித்த சாத்தனென்னுந்தெய்வத்தின் கட்டளையால் மாடலன் தன்கையிலுள்ள கமண்டலநீரை அங்கு வந்திருந்த மூன்று இளம்பெண்கள்மீதும் தெளிப்ப உடனே கண்ணகியைக்குறித்துப் புலம்பிய அம்மூவரையும் கண்ணகிதாய் கோவலன்தாய் மாதரி என்னும் மூவருடைய பிறப்பினராக அறிந்து, அவர்கள் அவ்வாறு பிறந்ததற்குக் காரணத்தை மாடலன் சொல்லக்கேட்டுப் பத்தினிக்கடவுளுக்கு நித்தியபூசை செய்யும்படி தேவந்திக்குச்சொல்லித் தான் அக்கடவுளை மூன்றுமுறை வலம் வந்து வணங்கி நின்றான்; அப்பொழுது ஆரியமன்னரும் மாளவவேந்தரும் இலங்காபுரத்தரசனாகிய கயவாகுவும் அங்குவந்து அக்கடவுளைநோக்கி, 'இச் செங்குட்டுவனைப்போல எங்களுடையநாட்டில் யாங்கள் உனக்குச்செய்யும் பூசையில் நீஎழுந்தருளி எங்களுக்கு அருள் செய்யவேண்டும்' என்றுபிரார்த்திப்ப, 'நீங்கள்விரும்பியபடியே வரந்தந்தேன்'என்று அப்பொழுது ஒருகுரல் உண்டாயிற்று. அதனைக்கேட்ட செங்குட்டுவனும் மற்றையரசர்களும் மிக்கசந்தோஷமடைந்தார்கள். பின்பு, செங்குட்டுவன் மாடலனோடு யாகசாலைக்குச் சென்றான். அப்பால், இளங்கோவடிகள் பத்தினிக்கடவுள் கோயிலுக்குச்சென்றார்; அவருக்குமுன்பு பத்தினிக்கடவுள் தேவந்திமேற்றோன்றி அவருடைய வரலாறுகளைச் சொல்லி உவப்பித்தாள்.

கோவலன் வெட்டுண்டுவிழுந்தகாலந்தொடங்கிப் பாண்டி நாட்டில் மழை இல்லாதுபோயிற்று; வறுமையும் நோயும் அதிகரித்தன; அதுதெரிந்து கொற்கை நகரத்திருந்த அரசனாகிய இளஞ்செழியன் பத்தினிக்கடவுளுக்கு ஆயிரம்பொற்கொல்லரைப் பலியிட்டுக் களவேள்வியாற்சாந்திசெய்து விழா வெடுத்தலால், அந்நாட்டில் மிகவும் மழைபெய்தது. முற்கூறிய வறுமையும் நோயும் நீங்கின. அதனைக்கேள்வியுற்றுக் கொங்குமண்டிலத்தரசரும், இலங்காபுரத்தரசனாகிய கயவாகுவும், சோழநாட்டில் உறையூரிலிருந்த அரசனாகிய பெருநற்கிள்ளியும் கண்ணகிக்குக் கோயில்கட்டுவித்து நித்தியபூசை விழாமுதலியவற்றைச்செய்துவழிபட அவர் நாடுகள் மிகுந்த வளமுற்றன.

---

உ

கணபதிதுணை.

# சிலப்பதிகார மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்குநல்லாருரையும்.

## பதிகம்.

[1] குணவாயிற் கோட்டத் தரசு துறந் திருந்த
குடக்கோச் சேர லிளங்கோ வடிகட்குக்
குன்றக் குறவ ரொருங்குடன் கூடிப்
[2] பொலம்பூ வேங்கை நலங்கிளர் கொழுநிழ
லொருமுலை யிழந்தாளோர் திருமா பத்தினிக்
கமரர்க் கரசன் றமர்வந் தீண்டியவள்
காதற் கொழுநனைக் காட்டி யவளொடெங்

---

## அரும்பதவுரை.

### காப்பு.

*கரும்பு மிளநீருங் கட்டிக் கனியும்*
*விரும்பும் விநாயகனை வேண்டி—யரும்பவிழ்தார்ச்*
**சேரமான்** * *செய்த* **சிலப்பதிகா ரக்கதையைச்**
*சாரமாய் நாவே தரி.*



க. குணவாயிற் கோட்டம் - திருக்குணவாயிற் கோயில்.

உ. சேரலென்றது செங்குட்டுவனை. சேரற்கு இளங்கோவாகிய அடிகளென்க. இளங்கோவடிகள் தாம் துறந்திருந்து இக்காவியஞ் செய்தார்.

ச. கொழுநிழற்கண் நின்று (என) காட்டி.

---

[1] இப்பெயர், மென்றொடர்க்குற்றியலுகரம் இயல்புகணத்துக்கண் திரிந்துவரு மென்பதற்கு மேற்கோள்; (தொல்காப்பியம், குற்றியல், சூ. க - ரு.)

[2] இந்நூலுட் சிலசிலவிடங்களில் அரும்பதவுரையாசிரியர்கொண்ட பாடம் வேறாகவும் அடியார்க்குநல்லார்கொண்ட பாடம் வேறாகவுமுள்ளன; பதிப்பிக்கப்பெற் றன்ன தனிமூலப்பிரதிகள் அடியார்க்குநல்லார்கொண்ட பாடத்திற்கு ஏற்றவை.

* 'பொலம்பூ...............தீயென' —இந்தப்பகுதி புதுமையென்னும் டிற்கு மேற்கோள்; (தொல். மெய். சூ. எ - இளம்.)

மெய்ப்பாட்

(பிறிதேறும்.) * 'சொன்ன சிலப்பதிகா ரக்கவிலை.'



# சிலப்பதிகாரம்

கட்புலங் காண விட்புலம் போய
திறும்பூது * போலுமஃ தறிந்தரு ளீயென
வவனுழை யிருந்த தண்டமிழ்ச் சாத்தன்
† யானறி குவனது பட்டதென் றுரைப்போ
னாரங் கண்ணிச் சோழன் மூதூர்ப்
பேராச் சிறப்பிற் புகார்நக ரத்துக்
கோவல னென்பானோர் வாணிக னவ்வூர்
நாடக மேத்து நாடகக் கணிகையொ
டாடிய கொள்கையி னரும்பொரு ளேடுறக்
கண்ணகி யென்பான் மனைவி யவள்காற்
பண்ணமை ‡ சிலம்பு பகர்தல் வேண்டிப்
பாடல்சால் சிறப்பிற் பாண்டியன் பெருஞ்சீர்
மாட மதுரை புகுந்தன னதுகொண்டு
மன்பெரும் பீடிகை மறுகிற் செல்வோன்
பொன்செய் கொல்லன் றன்கைக் காட்டக்
கோப்பெருந் தேவிக் கல்லதை யிச்சிலம்
பியாப்புற வில்லையீங் கிருக்கென் றேகிப்

பண்டுதான் கொண்ட சில்லரிச் சிலம்பினைக்
கண்டனன் பிறனோர் கள்வன் கையென
வினைவிளை கால மாதலின் யாவதுஞ்
சினையலர் வேம்பன் றேரா னாகிக்
கன்றிய காவலர்க் கூஉய்க் கள்வனைக்
கொன்றச் சிலம்பு கொணர்க ஈங்கெனக்
கொலைக்களப் பட்ட கோவலன் மனைவி
நிலைக்களங் காணா ணெடுங்கண் § நீருகுத்துப்

அ. கட்புலம் - கண்ணென்கின்ற புலம். விட்புலம் - விண்ணென்கின்ற [இடம்.

கரு. பேராச்சிறப்பு - நீங்காதபெருமை.

கசா. நாடகமேத்துநாடகக்கணிகை - நாடகத்தை ஆடிச் சிறப்பிக்குங் [கணிகை.

கஎ. ஆடிய கொள்கையின் - இவன் ஆடிய கோட்பாட்டால்.

உ0. புகுந்தனன் - புகுந்தனனாய். உக. பீடிகை - வணிகர்தெரு.

உச. யாப்புறவில்லை - பொருத்தமில்லை.

உரு. பண்டுதான் கொண்ட - முன்புதான் அணிந்துகொண்ட.

உகூ. கன்றிய காவலர் - காவலில் தழும்பியவர்.

ஙஉ. நிலைக்களம் - நிலையிடம். நெடுங்கணீருகுத்து - நெடுங்கண்ணாள் [நீருகுத்து.

---

(பி - ம்.) * 'போதுமதித்தருள்.' † 'மானமிருவனிந்.' ‡ 'பொற்சிலம்பு.' § 'உகுபட்ட.'

பதிகம்.

பத்தினி யாகலிற் பாண்டியன் கேடுற
முத்தார மார்பின் முலைமுகந் திருகி
நிலைகெழு கூட லீளெரி யூட்டிய
பலர்புகழ் பத்தினி யாகு மிவளென
வினைவிளை கால மென்றீ ரியாதவர்
வினைவிளை வென்ன விறலோய் கேட்டி
அதிராச் சிறப்பின் மதுரை மூதூர்க்
கொன்றையஞ் சடைமுடி மன்றப் பொதியிலில்
வெள்ளியம் பலத்து நள்ளிருட் கிடந்தேன்
ஆரஞ ருற்ற வீரபத் தினிமுன்
மதுராபதி தெய்வம் வந்து தோன்றிக்
கொதியழற் சீற்றங் கொங்கையின் விளைத்தோய்
முதிர்வினை நுங்கட்கு முடிந்த தாகலின்
முந்தைப் பிறப்பிற் பைந்தொடி கணவனொடு
சிங்கா வண்புகழ்ச் சிங்க புரத்தினுட்
சங்கம னென்னும் வாணிகன் மனைவி
யிட்ட சாபங் கட்டிய தாகலின்
வாரொலி கூந்தனின் மணமகன் றன்னை
யீரேழ் நாளகத் தெல்லை நீங்கி
வானோர் தங்கள் வடிவி னல்லதை
யீனோர் வடிவிற் காண்ட லில்லெனக்

௩௩. பத்தினியாகலின் - ஆக்கலும் அழித்தலும் வல்லளாதலின்.
௩௪. முலைமுகம் - முலையிடம்.

நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுளென
முடிகெழு வேந்தர் மூவர்க்கு முரிய
தடிக ணீரே யருளுகென் றாற்கவர்
மங்கல வாழ்த்துப் பாடலுங் குரவர்
மனையறம் படுத்த காதையு நடநவின்
மங்கை மாதவி * யரங்கேற்று காதையு
மந்தி மாலைச் சிறப்புச்செய் காதையு
மிந்திர விழவூ ரெடுத்த காதையுங்
+ கடலாடு காதையும்
மடலவிழ், கானல் வரியும் வேனில்வந் திறுத்தென
மாதவி யிரங்கிய காதையுந் தீதுடைக்
கனாத்திற முரைத்த காதையும் வினாத்திறத்து
நாடுகாண் காதையுங் காடுகாண் காதையும்
வேட்டுவ வரியுந் தோட்டலர் கோதையொடு
புறஞ்சேரி யிறுத்த காதையுங் கறங்கிசை
யூர்காண் காதையுஞ் சீர்சா னங்கை
யடைக்கலக் காதையுங் கொலைக்களக் காதையு

---

௩௧. உரை சால் பத்தினிக்கு - புகழமைந்த பத்தினியை.
[பட்டுவந்து.
௩௭. ஊழ் வினை - முறைமையாகிய பழவினை. உருத்துவந்து - வெளிப்
௩௮. சூழ்வினை - சூழ்ந்த சிற்பத்தொழில்.

கo. பாட்டுடைச் செய்யுள் - உருவாகிய பாட்டுக்களையுடைய காவியம்.

கக. முடிகெழு வேந்தர் மூவர்க்குமுரியது - புகாரினும் மதுரையினும் வஞ்சியினும் நிகழ்தலான் மூவர்க்குமுரியது.

[ளுக அவனுக்கு.

கஉ.

கரு.

அடிகளென் றது இளங்கோவடிகளை. என்றூற்கு - என்று சொன்ன மங்கலவாழ்த்து - கலியாணவாழ்த்து. கக. மடல் - பூ.

எக. விளுத் திறத்து - கவுந்தியடிகள் விளுவிய திறத்தையுடைய.

எரு. தோடு அலர்.

---

[1] 'துளிப்பிறு மூழ்கிலை பூட்டாது கழியாது' (இறை. சூ. உ - உரை) என்பது இவ்வடியுடன் ஒப்புநோக்கற்பாலது.

(பி - ம்.) * 'அரங்கேற்றுக்காதை.' † 'கடலாட்டுக்காதை.'

## பதிகம்.



மாய்ச்சியர் குரவையுந் தீத்திறங் கேட்ட
துன்ப மாலையு * நண்பக னடுங்கிய
வூர்சூழ் வரியுஞ் சீர்சால் வேந்தனொடு
அ0 வழக்குரை காதையும் வஞ்சின மாலையு
மழற்படு காதையு மருந்தெய்வந் தோன்றிக்
கட்டுரை காதையு மட்டலர் கோதையர்
குன்றக் குரவையு மென் றிவை யனைத்துடன்
காட்சி கால்கோ ணீர்ப்படை நடுகல்

ஆறு வாழ்த்து வாய்ந்த காதையொ
டிவ்வா றைந்து
முறையிடை யிட்ட பாட்டுடைச் செய்யு
ளுரைசா லடிக ளருள மதுரைக்
கூல வாணிகன் சாத்தன் கேட்டனன்
இது, பால்வகை தெரிந்த பதிகத்தின் மரபென்.

---

எஅ. கண்பகல் நடுங்கிய - கண்ணிமை கண்பகற்கண்ணே நடுங்கிய.
அ௨ . கட்டுரை - விளங்கச் சொல்லுதல்.

[வை.
அ௨ - ௬. மட்டலர் கோதையர் குன்றக்குரவை
அஎ. பாட்டிடை உரையும் கலந்துவந்த காவியம்.

குறத்தியராடியகுர

¹ வஞ்சிமூதூர் மணிமண்டபத்திடைத் தந்தைபோயொழிந்தபின் அரசு வீற்றிருக்குந் திருப்பொறியுண்டென்று ஒரு நிமித்திகன் சொல்ல, முன்னோனாகிய செங்குட்டுவனிருப்ப இவ்வாறு முறைபிறழக் கூறியது பொறாது குணவாயிற் கோட்டத்துக் கடவுளர் முன்னர்த் துறந்திருந்த இளங்கோவடிகளுக்குக் கண்ணகி வானவர்போற்றத் தன் கணவனொடுகூடியதுகண்டு செங்குட்டுவனுக்குரைத்த குறவர்வந்து, 'எல்லாமறிந்தோய்! இதனை அறிந்தருள்' என்று கூறிப்போக, பின்பு செங்குட்டுவனைக்கண்டு போந்த அடிகளுழை வந்த சாத்தன் அதுபட்டவாறெல்லாங் கூற, அதுகேட்டு, அரசியல் பிழைத்தோர்க்கு அறங்கூற்றென்பதூஉம், பத்தினிமகளிர் ² பெய்யெனப்பெய்யுமழை யென்பதூஉம், ஊழ்வினை உருத்துவந்து ஊட்டுமென்பதூஉம் இக்கதையகத்து உண்மையின், அதனை யாம் ஒருசெய்யுளாகச் செய்வோமென்று இளங்கோவடிகள் கூற, மூவேந்தர்நாட்டிலும் நிகழ்ந்த*கதையாகலான் இதனை இருவேந்தரியல்பும் வேத்தியலும் பொதுவியலும் 'எல்லாமுணர்ந்த நீரே அருளவேண்டும்' என்று சாத்தன்சொல்ல, இம்முப்பதுவகைத்தாகிய செய்யுளை இளங்கோவடிகளருளக் கூலவாணிகன் சாத்தன் கேட்டனனென்க.

¹ சிலப்பதிகாரம், ௩௦ - ஆம் காதை, ௭௧ - ௯. ஆம் அடிகள் முதலியவற்றைப் பார்க்க.

² "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை."—(திருக்குறள், ௫௫.)

(பி - ம்.) * 'தன்பால்'

---

# சிலப்பதிகாரம்
# அடியார்க்குநல்லாருரை.

## உரைப்பாயிரம்.

குணவாயில்.............¹ வாழ்வீர்கேள.

இவ்வியலிசைநாடகப் பொருட்டொடர்நிலைச்செய்யுளை அடிகள் செய்கின்ற காலத்து இயற்றமிழ் நூல் தொல்காப்பியமாதலானும், பிறர் கூறிய நூல்கள் நிரம்பா இலக்கணத்தனவாதலானும் அந் நூலின் முடிபே இதற்கு முடிபென்றுண ர்க. அந் நூலிற் செய்யுளியலின்

கண்ணே ஆசிரிய ர் பாவும் இனமுமென * நான்கினீக்கியபாவினைத் தொகைவரையறையான் இரண்டென அடக்கியும், விரிவரையறை யான் ஆறெனவிரித்தும், அவற்றை அறம்பொருளின்பத்தாற்கூறுக

வென்றுங்கூறிப் பின்பு அம்மைமுதலிய + எட்டுவனப்புந்தொடர்நிலைச் செய்யுட்கு இலக்கணமென்றுகூறியவர், [2] "இழுமென் மொழியான் விழுமியது நுவலினும், பரந்த மொழியா னடிநிமிர்ந் தொழுகினும்" என்பதனுல், குவிந்து மெல்லென்றசொல்லானும் பரந்து வல்லென்ற சொல்லானும் அறம்பொருளின்பப்பபபப வீடென்னும் விழுமிய பொருள்பயப்ப ஒருகதை மேற் கொச்சகத்தானும் ஆசிரியத்தானும் வெண்பா வெண்கலிப்பாவானும் மற்றும் இன்னோரன்ன செய்யுட்களானும் கூறுகவென்றமையான், இத்தொடர்நிலைச்செய்யுள் அங்ஙனங் கூறிய [3] தொடர்நிலையென வுணர்க.

முந்துநூல்களிற் காப்பியமென்னும் வடமொழிப்பெயரின்றே னும் ஆசிரியர், [4] "வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ, யெழுத் தொடு புணர்ந்த சொல்லா கும்மே" என்றார், 'ஆகும்மே' என்ற இலேசினன் உய்த்துணரற்பாலதனை மாணாக்கன் ஐயந்தீர்தற்கன்றே பின்னும் [5] "சிதைந்தன வரினு மியைந்தன வரையார்" என்றாரெனக் கொள்க. அன்றியும் பெரியதனைப் பெருங்காப்பியமென்றேகூறி

[1] "வாழ்வீரிங்கென" என்பது இந்நூலின் இறுதிக்கண்ணது.

[2] தொல்காப்பியம், செய்யுளியல், சூ. உகக.

[3] நச்சினார்க்கினியர் இந்நூலைத் தொன்மையென்பர்; (தொல். செய். சூ. உகஎ.)

[4] தொல்காப்பியம், எச்சவியல், சூ. ௫.

[6] " " " ௬.

(பி - ம்.) * 'தான்கிளிக்கெட்பாலினே.' † 'எட்டுத்தொடர்.'



மறுக்கவேண்டுதலானும், சான்றோர் செய்யுட்களினும், [1] "கூத்திய ரிருக்கையுஞ் சுற்றிய தாகக், காப்பிய வரசனைக் கலந்தவை சொல்லி" என இரண்டாம் ஊழியதாகிய [2] கபாடபுரத்தின் [3] இடைச்சங்கத்துத்

[1] உதையனன்கதை, ச - வத்தவகாண்டம், ரு - யாழ்பெற்றது, சக - உ.

"ததோ ஹேமமயம் திவ்யம் முக்தாமணிவிபூஷிதம்
யுக்தம் கவாடம் பாண்ட்யானாம் கதா த்ரக்ஷ்யத வானரா:"

என்னும் ஸ்ரீ வான்மீகிமுனிவர் திருவாக்கு இங்கே அறிதற்பாலது; (கிஷ்கிந்தாகாண்டம், ௪௧ - ஆம் ஸர்க்கம், ௧௯ - ஆம் ஸ்லோகம்.)

இடைச்சங்கமும் மற்றை இரண்டுசங்கங்களுமிருந்த இடமுதலியவற்றைப் பின்வரும் ஆசிரியப்பாவாலுமுணர்க:—"வேங்கடங் குமரி தீம்புனற் பௌவத், தின்நான் கெல்லையி னிருந்தமிழ் பயின்ற, செந்நாப் புலவர் செய்திசின் வரைப்பி, னேடகக் குடுமி மாடக் கூடலின், முன்னர்ச் சங்கக் கன்மாப் பலகையிற், றிரிபுர மெரித்த விரிசடைக் கடவுண், மன்றன் மராத்தார்க் குன்றெறி யிளஞ்சேய், தீண்டிறற் புலமைக் குண்டிகைக் குறுமுனி, புவிபுகழ் மருதங் கவினிய முரஞ்சிப், பதுமுடி நாக னிதியின் கிழவ, னினையர்நா னாற்பு நாற்பத்தொன் பதின்ம, ரனையர் நானூன் காயிர நாற்பெருமு, நாற் பத்தொன் பதின்மர் பார்க்கிற்செந் தமிழோர், புரிந்தன செய்யுட் பெரும்பரி பாடலு, முதுமை யமைத்த நாரையுங் குருகுங், கதியுறச் செய்த களரியா விரையு, மாங்கவ ரிருந் தது மத்தொகை யாகு, மீங்கிவர் தம்மை யிரீஇயபாண் டியர்கள், காய்சின வழுதிமுதற் கடுங்கோ னீறு, வேசி லாவகை யெண்பத்தொன் பதின்மர், கவியரங் கேறினு ரெழுவ ராகு, மகத்துவ முடைய வகத்திய மிலக்கணம், வடுவறு காட்சி நடுவட் சங்கத், தகத் தியர் தொல்காப் பியத்தமிழ் முனிவ, ரிருந்தை யூரிற் கருங்கோழி மோசியா, ரெள்ளாப் புலமை வெள்ளூர்க் காப்பிய, னிறவா விசையிற் சிறுபாண் டரங்கன், றேசிக மதுரை யாசிரியன் மாறன், றவரொப் பாய துவரைக் கோமான், றெருங் கவிபுனை கீரந்தை யாரிவ, ரொன்றோ டமைத்த வைம்பதின்ம ராகுந், தவலருங் கேள்வித் தன்மைய ருள்ளிட், டிவர்மூ வாயிரத் தெழுநாற் றுவரே, வையகம் பரவச் செய்த செய்யுளு, மிருங்கவி கடிந்த பெருங்கவித் தொகையொடு, குருகுவெண் டாளி தெருள்வியாழ மாலை, யந்நா விலக்கண மகத்திய மதனொடு, பின்னுட் செய்த பிறங்குதொல் காப்பிய, மதிநலங் கவின்ற மாபு ராணம், புதுநலங் கனிந்த பூத புராணம், வல்விதி னுணர்ந்த நல்லிசை நுணுக்கந், தாவாக் காலந் தமிழ்பயின் றதுவு, மூவா யிரத்தோ டெழுநாற் றியாண்டு, பரீஇய சங்க மிரீஇயபாண் டியர்கள், வெண்டேர்ச் செழியன் முதலா விறல்கெழு, திண்டேர்க் கொற்ற முடத்திரு மாறன், முரசுடைத் தானை மூவா வந்த, மரசுநிலை யிட்டோ ரைம்பத்தொன் பதின்ம, ரிவ்வகை யரசரிற் கவியரங் கேறின, ரைவகை யரச

ராயிடைச் சங்கம், விண்ணகம் பரவு மேதகு கீர்த்திக், கண்ணகன் பரப்பிற் கபாடபுர மென்ப, வருங்கடைச் சங்க மிருந்தோர் யாரெனிற், சிறுமே தாவியார் சேந்தம் பூதனு, ரறிவுடை யரனார் பெருங்குன் றூர்கிழார், பாடல் சான்ற விளந்திரு மாறன், கூடலா சிரியர் நல்லந் துவனார், பரவுதமிழ் மதுரை மருதனிள நாக, ரவிர்கணக் காயர் நவினக் கீரர், கீரங் கொற்றர் கிளர்தே னூர்கிழா, ரோருங் கலைமண லூரா சிரியர், நல்லூர்ப் புளியங் காய்ப்பெருஞ் சேந்தர், செல்லூ ராசிரியர் முண்டம் பெருங்குமரர், முசிறியா சிரியர் நீல கண்டனு, ரசைவிரி குன்றத் தாசிரிய ரன்றி, நாத்தலங் கனிக்குஞ் சீத்தலைச் சாத்தர், மூப்பா லுணரு முப்பூரி குடிகிழா, ருருத்திர சன்மர் மருத்துவ ராகிய, நாம நாதனைத் தாமோ தரனார், மாதவள னுரோ டோதுமிள நாகர், கடியுங் காமப் படியங் கொற்றனு, ரருஞ்செய லூர்வாழ் பெருஞ்சுவ னுருடன், புவிபுகழ் புலமைக் கபிலர் பரண, ரின்னுந் தடிந்த நன்னுக ரன்றியு, மொல்காப் பெருமைத் தொல்காப் பியத்துக், குறைபிடை விட்ட விரகர்கல் லாடர், பேர்மூல முணரு மாமூலர் தம்மொடு, விச்சை கற்றிடு நச்செள்ளை யார்முதற், றேனூற் றெழுட்டச் செந்தமிழ் பகர்ந்தோர், நானூற்

அ

# சிலப்பதிகாரம்

தொல்காப்பியம் புலப்படுத்திய மாகீர்த்தியாகிய நிலந்தருதிருவிற்பாண்டியனவைக்களத்து அகத்தியனாரும், தொல்காப்பியனாரும், இருந்தை யூர்க்கருங்கோழிமோசியாரும், வெள்ளூர்க்காப்பியனாரும், சிறுபாண்டரங்கனாரும், மதுரையாசிரியன்மாறனாரும், துவரைக்கோமகனும், கீரந்தையாருமென்றித் † தொடக்கத்தார் ஐம்பத்தொன்பதின்மருள்ளிட்ட மூவாயிரத்து எழுநூற்றுவர் தம்மாற்பாடப்பட்ட கலியும் குருகும் வெண்டாளியுமுதலிய ‡ செய்யுளிலக்கியம் ஆராய்ந்துசெய்த உதயணன்கதையுள்ளும், [1] "கருதுவ தங்கோன் றுண்டோ காப்பி யக் கவிகள் காம, வெரியெழ விகற்பித் திட்டார்" எனச சிந்தாமணி யுள்ளும், [2] "நாடகக் காப்பிய நன்னூ லுனிப்போர்"

என **மணிமேகலை**
யுள்ளும் பிறவற்றுள்ளுங் கூறினமையானும், **சொற்றொடர்நிலை பொருட் டொடர்நிலை**யென்னுந் தொடர்நிலைசெய்யுட்கும் **காப்பிய**மென்று பெயர்கூறுதலும ஆசிரியர் கருத்தெனவுணர்க.

இதனுள் முற்கூறிய வனப்பென்பது § பெரும்பான்மையும் பல வுறுப்புந் திரண்டவழிப்பெறுவதோர் அழகாதலிற் பலசெய்யுளும் உறுப்பாய்த் திரண்டுபெருகிப தொடர்நிலைச்செய்யுட்கு இவ்வெட்டும் அலங்காரமாயின; ஆகவே இக்காப்பியத்திற்கும் தொலென்பதூஉரு **சொல்லலங்காரமாக**வேயுணர்க.

இனி, இதன்செய்யுள் காதையென்று வழங்குதலிற் கதையை யுடையது காதையாமாகலின், ஆசிரியம வெண்பா வெண்கலிப்பா

கொண்டான்'' என்றமை யானும், வழக்கினுள்ளும் இஃது ஒருகதையென்பவாகலானும், "நாடகக்காப்பியம்" என்றலானும் கதையென்பதல்லது. இனி, அது நல்ல புலவராற் பொருளொடுபுணராப் பொய்ம்மொழியால் நாட்டப்பட்டுவருவதாகலின், இஃது அவ்வாறன்றி

யோனியென்னும்
நாடகவுறுப்பும்
பொருண்மேற்

நாடகமுந்தழுவி, உள்ளோன் தலைவனாக உள்ளதொரு சித்திரிக்கப்படாது பட்டாங்கு கிளந்து பலவினப் பாட்டான் வருதலின், ஈது அன்னதன்றென்பார்க்குக் காப்பியமென் றலுமாம்.

இனி, இசைத்தமிழ் நூலாகிய பெருநாரை பெருங்குருகும் பிறவும் தேவவிருடி நாரதன்செய்த பஞ்சபாரதீயமுதலாவுள்ள தொன்னூல்க ளிறந்தன. நாடகத்தமிழ் நூலாகிய பரதம் அகத்தியமுதலாவுள்ள தொன் னூல்களுமிறந்தன. பின்னும் முறுவல் சயந்தம் குணநூல் செயிற்றிய மென்பனவற்றுள்ளும் ஒருசார் சூத்திரங்கள்கடக்கின்ற அத்துணை யல்லது முதல் நடு இறுதி காணாமையின், அவையும் இறந்தன போலும். இறக்கவே வரும், * பெருங்கலமுதலிய பிறவுமாம். இவற் றுட் + பெருங்கலமாவது பேரியாழ்; அது கோட்டினதளவு பன்னிரு

சாலும், வணரளவு சாலும், பத்தரளவு பன்னிருசாலும், இப் பெற்றிக்கேற்ற ஆணிகளும், திவவும், உந்தியும்பெற்று ஆயிரங்கோல் தொடுத்தியல்வது ; என்னை ? [3] "ஆயிர நரம்பிற் றாதியா ழாகு, மேனை யுறுப்பு மொப்பன கொளலே, பத்தர தளவுங் கோட்டின தளவு, மொத்த வென்ப விருமூன் றிரட்டி, வணர்சா ணொழித்தென வைத்த னர் புலவர்" என நூலுள்ளும், [4] "தலமுத லூழியிற் றானவர் தருக் கறப், புலமக ளாளர் புரிநரப் பாயிரம், வலிபெறத் தொடுத்த வாக் கமைபேரியாழ்ச், செலவு முறை யெல்லாஞ் செய்கையிற் றெரிந்து, மற்றையாழுங் கற்றுமுறை பிழையான்" எனக் கதையினுள்ளுங் கூறினாராகலாற் பேரியாழ் முதலிய எனவும் இறந்தனவெனக்கொள்க.

---

[1] சிலசிந்தாமணி, உகசச. [2] மணிமேகலை, கக - ஆம் காதை, ௬௦.
[3] "ஆயிர நரம்பிற் றாதியா ழாகும்" என்பதுமட்டும் பிங்கலந்தில் ஒரு சூத்திர மாகக் காணப்படுகின்றது. [4] பெருங்கதை, யாழ்பெற்றது, ௬௨ - ௯.
(பி - ம்.) * 'அறுங்கலம்.' † 'பெருங்காப்பியம்.'
உ



இனித் தேவவிருடியாகிய குறுமுனிபாற் கேட்ட மாணுக்கர் பன் னிருவருட் சிகண்டியென்னும் அருந்தவமுனி, இடைச்சங்கத்து அனாகுலனென்னும் தெய்வப்பாண்டியன் தேரோடு விசும்புசெல் வோன் திலோத்தமையென்னுந் தெய்வமகளைக்கண்டு தேரிற் கூடின விடத்துச் சனித்தானைத் தேவரும் முனிவரும் * சரியாதிற்கத் தோன் றினமையிற்

சாரகுமாரனேன அப்பெயர்பெற்றகுமரன் இசையறிதற்குச்செய்த இசைநுணுக்கமும்,[1] பாரசவமுனிவரில் + யாமளேந்திரர் செய்த இந்திரகாளியமும், அறிவனார்செய்த பஞ்சமரபும், ஆதிவாயிலார் செய்த பரதசேனாபதீயமும், கடைச்சங்கமிரீஇய பாண்டியருட் கவி யரங்கேறிய பாண்டியன்மதிவாணனார்செய்த முதனூல்களினுள்ள வகைக்கூத்திற்கு மறுதலையாகிய புகழ்க்கூத்தியன்ற மதிவாணர் நாடகத்தமிழ்நூலுமென இவ்வைந்தும் இந்நாடகக்காப்பியக் கருத் தறிந்த நூல்களன்றேனும் ஒருபுடை யொப்புமைகொண்டு முடித் தலைக்கருதிற்று இவ்வுரையெனக்கொள்க.

உலகத்துக் காப்பியஞ்செய்வோன் அறனும் பொருளும் இன்பமும் வீடுங் கூறல்வேண்டுமன்றே ; இந்நாடகக்காப்பியத்தினுள் அறனும் பொருளும் இன்ப மூங்கூறிச் சிறிதாயினும் வீடுகூறிற்றிலர்; என்னையெனின், [2] "யானறிகுவன தபட்டதென்று" உரைத்தசாத்தனார் நாற்பொருளும் பயப்பப் பெருங்காப்பிய மாகச் செய்யக்கருதியிருக்கின்றார்க்கு, அடிகள், [3] "நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள்" என உளப்பாட்டுத்தன்மையாற்கூறச் ; சாத்தனார் இவர் ஏனையிருவேந்தரையும் புகழ்ந்துரையாரென்பதுகருதி மூவேந்தர்க்கும் உரியதாகலின் [4] "நீரே யருளுக" என்று ஏகாரவினைப்பொருண்மையான் அவர் கருத்துநிகழ்ச்சி விளங்குவான்கூற, அவர் அதனையே துணிந்து தமது முத்தமிழ்க்கல்வியும் வித்தகக்கவியும் காட்டுதற்குத் தாம்வகுத்துகொண்ட மூவகை உள்ளுறையின் விளைவுதோன்ற, மங்கலவாழ்த்துப்பாடல்முதல் வரந்தருகாதை யிறுதி முப்பதுவகைத்தாக வரையறுத்து, அதனை அதிகாரமாகப்பொதிந்து

முன்வைத்துப் பின்னர், அறனும் பொருளும் இன்பமுங்கூறி அடைக்கலக் காதையிறுதிக்கண், [3] "போதி யறவோன் றன்முன், மணிமே கலையை மாதவி யளிப்பவும்" எனக் கோவலன் முன்கண்டகனவின்கண் நிகழ்ந்ததை எதிர்கால நிமித்தமாக மாடலற்குக் கூறுதலானும், நீர்ப்படையுள், [6] "மாதவி......... மணிமே கலையை வான்றுய ருறுக்கும், கணிகையர் கோலங் காணு தொழி யெனக், கோதைத் தாமங் குழலொடு களைந்து, போதித் தானம் புரிந்தறங் கொள்

---

[1] பாரசவர் - ஒருவகைச்சாதியார். [4] சிலப். பதிகம், ௬௨.
[2] சிலப். பதிகம், கக. [5] " அடைக்கலக்காதை, ௯௦௧ - ௪.
[3] " " ௬௦. [6] " நீர்ப்படைக்காதை, ௯௦௧-அ.
(பி-ம்.) * 'சரிபதிக்கத்தோன்றினமையிற் சயந்தகுமாரனெனப் பெயர்பெற்ற.'
† 'உபலேந்திராசெல்து டஞ்சமரடும் ஆதிவாயிலார்.' ‡ 'சாத்தர்.'

# உரைச்சிறப்புப்பாயிரம்.

ளவும்" என்றலானும், வாழ்த்தின்கண் [1] "மாதவி தன் துறவுங் கேட்டாயோ தோழீ, மணிமேகலை துறவுங் கேட்டாயோ தோழீ" எனத் தேவந்திகூறுதலானும், வரந்தருகாதையில், [2] மணிமேகலையார், யாதவ முறத்தற் கேதுவீங்குரை" என [3] "மைமீ ரோதி" முதல் [4] "போதித் தானம் புரிந்தறம் படுத்தனள்" என்பதீருகப் பக்குவஞ்சொல்லி, [5] "பருவ மன்றியும் மைபர்தொடி நங்கை, திருவிழை கோல நீங்கினள்" என்றமையானும் மணிமேகலை துறந்தாளென்பதுணர்ந்து அத்துறவினைப் பின்வைத்து அதனோடு நாற்பொருளும் பூரித்துப் பெருங்காப்பியமாக முடித்தலைக்கருதி அடிகள் சாத்தனார்க்கு இவ்வுரையையுரைத்துழி, அவர் மணிமேகலைபெயரான் அவள்துறவே துறவாக

அறனும்வீடும்பயப்ப ஒரு காப்பியஞ் செய்தமைத்தனமெனக்கேட்டு, அவ்வடிகள் விரும்பி இவ்விரண்டினையும் ஒருகாப்பியமாக்கி உலகின்கண் நடாத்துவான் வேண்டவும் இருவர்செய்தலின், இரண்டாகி நடந்தனவென்க.

எழுத்தின் றிறனறிந்தோ சொற் பொருளி
னழுத்தந் தனிலோன் றறிந்தோ—முழுத்தும்
பழுதற்ற முத்தமிழின் பாடந் துறையின்
றெழுதத் துணிவதே யான்.

உரைப்பாயிரமுற்றிற்று.

## அடியார்க்குநல்லாருரைச்சிறப்புப்பாயிரம்.



க [6] பருந்து நிழலுமெனப் பாவு முரையும்
பொருந்துநெறி யெல்லாப் பொருளுந்—தெரிந்திப்
படியார்க்கு நல்லமிர்தம் பாலித்தா னன்று
லடியார்க்கு நல்லானென் பான்.

௨ ஒருந் தமிழொரு மூன்று முலகின் புறவகுத்துச்
* சேரன் றெரித்த சிலப்பதி காரத்திற் சேர்ந்தபொரு
ளாருந் † தெரிய விரித்துரைத் தானடி யார்க்கு நல்லான்
காருந் தருவு மனையா னிரம்பையர் காவலனே.

௫

காற்றைப் பிடித்துக் கடத்தி லடைத்துக் கடியபெருங்
காற்றைக் குரம்பைசெய் வார்செய்கை போலுமக் காலமெனுங்
கூற்றைத்
தோற்றுச்
தவிர்த்தருள் பொப்பண்ண காங்கேயர் கோனளித்த
செருக்கல்ல வோதமிழ் மூன்றுரை சொல்வித்ததே.

---

[1] சிலப், வாழ்த்து, அடித்தோழியரற்று.
[2] ,, வரந்தருகாதை, ௪ - ௫.
[3] ,, ,, ௯௦.
[4] ,, ,, ௨-௮.
[5] சிலப். வரந்தருகாதை, ௧௯ - ௧.
[6] இம்மூன்றும் பண்டைக்காலத்தனவே; இயற்றியவர்பெயர் தெரியவில்லை. இவை ஒவ்வோருறுப்பின் உரைபிரதியிலும் இருந்தன.

(பி - ம்.) * 'சேரன் செருத்த.' † 'தெரிய.'

# பதிகம்.

## அடியார்க்குநல்லாருரை.

௧ - ௨. குணவாயில்........................அடிகட்கு

அடிகளென்றது, துறத்தலான். * அத்துறவின் வரலாறு யாதோவெனின்,—குமரியொடு வடவிமயத் தொருமொழி வைத் துலகாண்ட சேரலாதற் குத் திகழொளி ஞாயிற் றேழ்பரி நெடுந்தேர்ச் சோழன் றன்மக ணற்சோணை யீன்ற மக்க ளிருவருண் முன்னோன் றன்னைப் பின்ன ரியற்றிப் பின்னோன் றன்னையும் † பெருநம்பியாகென அன்னவர் தம்மொடு தென்னர் செம்பியர் தன்னடி போற்றத் தமனிய மண்டபத்துச் சிங்கஞ் சுமந்த பொங்கணை மீமிசை யுவரித் திரையிற் கவரி யிரட்ட வேந்த னிருந்துழிச் சார்ந்த நிமித்திகன் அடி முதன் முடிவரை நெடிதுநோக்கி யின்றோள் கழியப் பொன்றிக ழுலகஞ் சேர்தி நீயெனச் சேரலற் குரைத்தவன் மைந்தரை நோக்கி நந்தாச் செங்கோ லந்தமி லின்பத் தரசா ளுரிமை யிளையோற் குண்டென வுளைவன னனிவெருண் டழுக்

காற்றெழுக்கத் திழுக்கு நெஞ்சினன் கண்ணெரி தவழ வண்ணலை நோக்குங் கொங்கவிழ் நறுந்தார்க் கொடித்தேர்த் தானைச் செங்குட்டுவன்றன் செல்ல னீக்கப்பகல்செல் வாயிற் படியோர் தம்மு னகலிடப் பார மகல நீக்கிச் சிந்தை செல்லாச் சேணெடுந் தூரத் தந்தமி லின்பத்தரைசாள் வேந்தாயினனென்பது. இக்கதையைப் பதிற்றுப்பத்தினுள் அஞ்சாம்பத்தின்முடிவின்கண், “வடவருட்கும்” என்னுங் கவியுள்ளும், இந்நூலுள் வாழ்த்தின்கண்ணும், வரந்தரு

காதைக்கண்ணுங் காண்க.

குணவாயில் - திருக்குணவாயிலென்பதோரூர் ; அது வஞ்சியின் கீழ்த்திசைக்கணுள்ளது; அஃது ஆகுபெயர். அது குணக்கண்வாயில் குணவாயில் ; குணக்கின்கண்வாயில் குணவாயிலெனச் சாரியைபெறுதும் பெற்றும் வரினும் அமையும். என்னை? [1] "ஏழ னுருபிற்குத் திசைப்பெயர் முன்னர்ச், சாரி யைக் கிளவி யியற்கையு மாகும்" என்றாராகலின். வாயிற்கோட்டமென்பது [2] "லகார வீறு னகார வியற்றே" என்பதனால், ஏழனுருபின்கண்வந்த சாரியை லகாரவீறு, வருமொழிமுதல் வல்லெழுத்துவர னகாரம் வேற்றுமைக்கண் திரிந்து றகாரமாயிற்றே போலத் ‡ திரிந்தது. கோட்டம் - அருகன்கோயில்.

---

[1] தொல். உருபியல், சூ. உக. [2] தொல். புள்ளிமயங்கியல், சூ. எக.

(பி - ம்.) * 'குறவிற்குக்காரணம்பாதோர்.' † 'பெருநரம்பாகென' ‡ 'திரிந்துவாயிற்கோட்டமாயிற்று.' பதிகம்.

கூ

அது [1] "மஃகான் புள்ளிமு னத்தே சாரியை" என்பதனால் ஏழனுருபின்கண் சாரியைபெற்று, [2] "அத்தே வற்றே யாயிரு மொழிமேல், ஒற்றுமெய் கெடுத லென்மனார் புலவர்" [3] "அத்தி னகரம் அகரமுனை யில்லை" என்பதனால், அகரங்கெட்டு முடிந்தது. [4] "அவற்றுள், மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல்", [5] "குற்றிய லுகரமு

மற்றென
பொழிய" என்பதனலும், [6] "புள்ளி யீற்றுமு னுயிர்தனித் தியலாது, மெய்
யொடுஞ் சிவணு மவ்வியல் கெடுத்தே" என் பதனலும் வருமொழி அகரவுயி
ரேறிற்று. அரசு - அரசாட்சி. துறந்திருந்த, நிலைமொழியீற்றுக்
குற்றுகரமும் முற்கூறியவாறே முடிந்தது. குடக்கோவென்பது [7] "
அகர விறுதிப்பெயர் நிலை முன்னர்,..........ஒற்றிடை மிகுமே" "
வேற்றுமைக் கண்ணு மதனே ரற்றே என்பவற்றால்,
பெயரொடுபெயர்புணர்ந்து வல்லொற்று மிக்கது. கோச்சேரலென்பது,
[8] " ஒகார விறுதி யேகார வியற்றே " என்பத னல்,
ஒகாரவீற்றுப் பெயர்ச்சொல் அல்வழிக்கண் ஏகாரவீற்று அல்வழியே
போல வல்லெழுத்துப் பெற்றுமுடிகவென் றலின் வல்லொற்றுமிக்கது.
சேர லென்றது அண்ணல், தோன்றல், திரையல்,
இளவலென்றாற்போல்வதோர் லகாரவீற்றுப் பெயர்ச்சொல்; அன்றியும்
சேரலனென் னும் பெயர்த்திரி சொல்லெனினுமமையும்.
சேரலிளங்கோவென்பது "புள்ளி யீற்றுமு னுயிர்" என்பதனல்,
லகாரவொற்றீற்று நிலைமொழிமேல் வருமொழிமுதல் இகரவுயி
ரேறிமுடிந்தது. கோவடிகட்கென்பது [9] "எல்லா * மொழிக்கு
முயிர்வரு
வழியே, யுடம்படு மெய்யி னுருபுகொளல் வரையார்" என்பதனல்,
வகரவுடம்
படுமெய்யாயிற்று. அடிகட்கென்றது [10] " ளகார விறுதி ணகார
வியற்றே"
என்பதனல், ணகாரம் வேற்றுமைக்கண் திரிந்து டகாரமாயிற்றேபோல
இது
வும் வேற்றுமைக்கண் திரிந்து டகாரமாயிற்று.

இனிப் பொருளாராய்ச்சி எண்வகைய :— அவை திணை, பால், செய்யுள், நிலம், காலம், வழு, வழக்கு, இடமென்பன. அவற்றுள், திணை இரண்டு; ஆவன : அகத்திணை புறத்திணையென்பன. பால் பதினொன்று; ஆவன : கைக்கிளைமுதல் பெருந்திணையிறுவாய் [1] ஏழும், வெட்சிமுதல் பாடாண்டிணை இறுவாய் [2] ஏழும். செய்யுள் அறுவகை; ஆவன : வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, பரிபாடற்பா, மருட்பாவென்பன. நிலன் நால்வகை; ஆவன : முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தலென்பன. காலம் பன்னிரண்டு; ஆவன : [3] சிறுபொழுதாறும் [4] பெரும்பொழுதாறும். வழு பதினொன்று; ஆவன : அகத்திணைவழுவேழும், புறத்திணை வழுவேழும். வழக்கு இருவகை; ஆவன : நாடகவழக்கும், உலகியல்வழக்குமென்பன. இடம் இருவகை; ஆவன : வழக்கிடமும், செய்யுளிடமும்.

இவற்றுள் நிறுத்தமுறையானே அகத்திணைப்பொருட்பகுதிமுதலியன இப் பதிகச்செய்யுளுண் முடியாமையின், அவை முடியுமிடங்கூறுதற்கு, ஆசிரியர் அகப்பொருட்பகுதி கூறுவார், [5] " மாயோன் மேய காடுறை யுலகமுஞ், சேயோன் மேய மைவரை யுலகமும், வேந்தன் மேய தீம்புன லுலகமும், வருணன் மேய பெருமண லுலகமு, முல்லை குறிஞ்சி மருத நெய்தலெனச், சொல் லிய முறையாற் சொல்லவும் படுமே " என முல்லைத்திணையை முதலாகநாட்டு தலின் அம்முறையே அகத்திணைப் பொருட்பகுதி முடியுமிடம் ஈண்டு எடுத் துக்காட்டப்படும்.

[6] "முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டி, னியல்பென மொழிப வியல்புணர்ந் தோரே" என்பதனால், முதற்பொருள் இருவகைப்படும். முல்லைத்திணை நிலமுதற்பொருள். [7] "காரு மாலையு முல்லை" என்பதனால், அத்திணைக்குரிய பெரும்பொழுதும் சிறுபொழுதுங் கொள்ளப்படும். பெரும் பொழுது : [8] "காரோவந்தது" என்பதனாற் காரும், சிறுபொழுது : [9] "மாலையீ யாயின்" என்பதனால் மாலையுங்கூறினார். கருப்பொருள், [10] "தெய்வ முணவே மாமரம் புட்பறை, செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ, யவ்வகை பிறவுங் கருவென மொழிப" என்பதனாலுணர்க. இந்நிலத்திற்குக் கருப்பொருள் :

---

[1] ஏழாவன: கைக்கிளைத்திணை, முல்லைத்திணை, குறிஞ்சித்திணை, மருதத்திணை, நெய்தற்திணை, பாலைத்திணை, பெருந்திணையென்பன; இவை அகத்திணையெனப்படும்.

[2] ஏழாவன: வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாணென்பன; இவை புறத்திணையெனப்படும்.

[3] சிறுபொழுதாறுவன: மாலை, யாமம், வைகுறு, காலை, நண்பகல், எற்பாடென்பன.

[4] பெரும்பொழுதாறுவன : கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனிலென்பன.

[5] தொல். அகத்திணையியல், சூ. ௫. [6] சிலப். கால்கோட்காதை, ௯௯-அ.

[7] " " " ௬. [8] " " " ௪. [9] " கானல்வரி, "வைபுரேய்"

[10] தொல். அகத்திணையியல், சூ. ௧௮.

"கன்று குணிலாக் கனியுகுத்த மாயவன்" என்பதனாற் றெய்வமும், [2] "அவ்வரை
விலே புணவின்" என்பதனால் உணவும், [3] "நீர்நசைஇ வேட்கையின் மானின்று
விளிக்கும்" என்பதனன் மாவும், [4] "கொல்லைப் புனத்துக் குருந்தொசித்
தான்" என்பதனன் மரமும், [5] "கானவாரணங் கதிர்வர வியம்ப" என்பத

னாற் புள்ளும், [6] "ஏறங் கோட்பறை" என்பதனாற் பறையும், [7] "கோகுல
மேய்த்து" என்பதனாற் செய்தியும், [8] "குடமுதல்......வேண்டிய பெயரே"
என்பதனால் முல்லையாழும், பண் : [9] "முல்லைத்தீம் பாணி யென்றாள்" என்
பதனாற் சாதாரியும் கூறினார். உரிப்பொருள் : [10] "புணர்தல் பிரித லிருத்த
லிரங்க, லூட லிவற்றி னிமித்த மென்றிவை, தேருங் காலைத் திணைக்குரிப்
பொருளே" என்பதனாலுணர்க. [11] "இருந்தேங்கி வாழ்வா ருயிர்ப்புறத்தாய்"
என்பதனால் இருத்தலும், [11] "பேரருளி னீழல்" என்பதனால் இருத்தனிமித்த
முங் கூறினார். பிறவுமென்றதனால் நிலமக்களும் நீர்நிலையும் வார்கொடியும்

பூவுங் கொள்ளப்படும்; இவற்றுள், [12] "இளேசூழ் கோவலர்" என்பதனால்
நிலமக்களும், [13] "புடைநெறிப் போயோர் பொய்கையிற் சென்று" என்பத

னால் நீர் நிலையும், [14] "ஆய்கொடிக் கவலையும்" என்றதனால் வார்கொடியும்,
[15] "காயாமலர் மேனி", [16] "முல்லை நிகர்மலர்" என்பவற்றாற் பூவும் கூறினார்.

குறிஞ்சித்திணை நிலமுதற்பொருள். பெரும்பொழுது : [17] " அருவி யொலிக்கு .........மலைகாண் குவம் " என்பதனாற் கூதிர்ப்பொழுதும், சிறுபொழுது : [18] " குன்றத்துச் சென்று வைகியும் " என்றதனால் நள்ளியாமமும், கருப்பொருள் : [19] " நீலப்பறவைமேல்............புதல்வன் வரும் " என்பதனால் தெய்வமும், [20] " ஐவன வெண்ணெலும்............கொய்பூந் தினையும் " என்பதனால் உணவும், மாவும், [22] "கோங்கம்

[21] " புலியொடு பொருஉம் புகர்முகம் " என்பதனான் வேங்கை" என்பதனான் மரமும், [23] " கானக் கோழியுந் தேன்மொழிக் கிள்ளையும் " என்பதனாற் புள்ளும், [24] " தொண்டகந் தொடு மின் சிறுபறை தொடுமின் " என்பதனாற் பறையும், [25] "கொய்பூந் தினையும்", [26] "நறவுக் கண்ணுடைத்த" என்பவற்றாற் செய்தியும்; [27] "அந்தீங் குறிஞ்சி" என்பதனால் யாழும், [28] " குறிஞ்சி பாடுமின் " என்பதனாற் பண்ணும், உரிப்

1 சிலப். ஆய்ச்சியர்குரவை, "கன்று"
2 ,, கொலைக்களக்காதை, ௬.
3 ,, காடுகாண்காதை, எ௮
4 ,, ஆய்ச்சியர்குரவை, "செந்நிலை"
5 ,, புறஞ்சேரியிறுத்தகாதை, ௬எ.
6 ,,
7 ,, ஆய்ச்சியர்குரவை, "கோவாம"
8 ,, ,, "குடமுத"
9 ,, ,, "செந்நிலை"
10 தொல். அகத்திணையியல், சூ. கச.
11 சிலப். கானல்வரி, "பிரிந்தார்"
12 ,, கொலைக்களக்காதை, ச.
13 ,, காடுகாண்காதை, கசுகூ.
14 ,, ,, ௮௬.
15 சிலப். வேட்டுவவரி, "ஆய்பொன்னரி."
16 ,, கறுத்திறமுரைத்தகாதை, க-உ.
17 ,, காட்சிக்காதை, ௬ - எ.
18 ,, குன்றக்குரவை, "குருவி"
19 ,, ,, "வேலனூர்"
20 ,, காடுகாண்காதை, ௮௦ - ௮௧.
21 ,, காட்சிக்காதை, உ௧.
22 ,, ,, கஎ.
23 ,, ,, ௯ச.
24 ,, குன்றக்குரவை, "குருவி"
25 ,, காடுகாண்காதை, ௮௧.
26 ,, காட்சிக்காதை, உஎ.
27 ,, நடுகற்காதை, ௧௫.
28 ,, குன்றக்குரவை, "குருவி"



# சிலப்பதிகாரம்

பொருள் ; [1] " அஞ்சலோம் பென்று நலனுண்டு " என்பதனும் புணர்தலும், [1] " நல்காதார் " என்பதனுற் புணர்தனிமித்தமும், [2] " குன்றவருங்கண்டு நிற்க " [3] " குறத்தியர் பாடிய " என்பனவற்றுல் நிலமக்களும், [4] " அருவி யாடியு ங்கன்சுனை குடைந்தும் " என்பதனுல் நீர்நிலையும், [5] " ஏலவல்லியு மிருங்கறி வல்லியும் " என்பதனுல் வார்கொடியும், [6] " விரவு மலர்ந்துவு மின் " என்பதனுற் பூவும் கூறினுர்

மருதத்திணை நிலமுதற்பொருள். [7] " இன்னிள வேனில் வந்த தின்னென " என்பதனுற் பெரும்பொழுதும், [8] " வான்கண் விழியா வைகறை யாமத்து " என்பதனுற் சிறுபொழுதும், கருப்பொருள் : [9] "மலைச்சிற கரிந்த வச்சிர வேந்தற்கு " என்பதனுல்

தெய்வமும், [9] "குமரிக் கூட்டிற் கொழும் பல் லுணவு" என்பதனால் உணவும், [11] "கழாமயிர் யாக்கைச் செங்கட் காரான்" என்பதனால் மாவும், [12] "மருதோங்கு முன்றுறை" என்பதனான் மரமும், [13] "கம்புட் கோழியுங் கனைகுர லுரையும்" என்பதனாற் புள்ளும்,
[14]
[15]

"தெண்கிணைப் பொருநர் செருக்குட னெடுத்த" என்பதனாற் பறையும், "ஏரொடு நின்றோர்" [16] "அரிந்துகால் குவித்தோர்" என்பனவற்றாற்

செய்தியும், யாழ்:
யாழும், பண்: [18]

[17] "அதிரா மரபின் யாழ்கை வாங்கி" என்பதனான் மருத
"வைகறைப் பாணியும்" என்பதனால் மருதப்பண்ணும்,

உரிப்பொருள்: [19] "சிலம்புள கொண்மென" என்பதனால் ஊடலும், [20] "விடுதலறியா விருப்பினன்", [21] "போற்று வொழுக்கம் புரிந்தீர்" என்பனவற்றால்

ஊடனிமித்தமும், [22] "கருங்கை வினைஞருங் களமருங்", [23] "சின்மொழிக் கடைசியர்", என்பனவற்றால் நிலமக்களும், [24] "பூநா றிலஞ்சிப் பொருகய லோட்டி" என்பதனால் நீர்நிலையும், [25] "மாதவி" என்பதனால் வார்கொடியும், [26] "வெண்பூ மல்லிகை ............ தண்செங் கழுநீர்" என்பதனாற் பூவுங் கூறினர்.

நெய்தற்றிணை நிலமுதற்பொருள். பெரும்பொழுது: காரும் இருவகை வேனிலும். இவை ஆசிரியர் எடுத்தோதாமையின் அடிகள் கூறிற்றிலர்போலும். சிறுபொழுது: [27] "வையமோ கண்புதைப்ப வந்தாய் மருண்மாலை"

என்பதனால் மாலையும், கருப்பொருள்: தெய்வம்: [1] "கடற்றெய்வங் காட்டிக் காட்டி" என்பதனால் வருணனும், உணா: [2] "விலைமீ னுணங்கற் பொருட்டாக" என்பதனான் மீன்விலையுணவுங்கூறினார். மா, உமணர் பகடன்றி இந் நிலத்திற்கு விலங்கின்மையின் ஆசிரியர் கூறிற்றிலர்போலும். இனி முதலை யும் சுறவும் [3] மாவென்பர்; [4] "தெண்கடை யஞ்சினை மேய்ந்து இளைந்து போய், மூண்டகத்துறை சேர்ந்த முதலைமா, வண்டல் வார்கரை மாமக ரக்குழாங், கண்டு நின்று கனலுங் கழியெலாம்" எனக் காட்டுவாருளராயி னும், அவை மீனெனப்படுவவல்லது மாவெனப்படா; [5] "பொறைமலி பூம் புன்னை" என்பதனால் மரமும், [6] "அன்னந் துணையோ டாட" என்பதனாற் புள்ளுங்கூறினார். பறை கூறிற்றிலர்; மீன்கோட் பறையென்க. [7] "கடல் புக் குயிர்கொன்று வாழ்வர்" என்பதனாற் செய்தியும், [8] "சித்திரப்படத்துள் …………குற்ற நீங்கிய யாழ்" என்பதனான் யாழும், பண்: [9] "நுளையர் விளரி' என்பதனான் விளரிப்பண்ணும், உரிப்பொருள்: [9] "கொளவல்லா யென்னுயிர் கொள்" என்பதனான் இரங்கலும், [10] "பேரருளினீழ, விருந் தேங்கி வாழ்வார்" என்பதனான் நிமித்தமும், [11] "சேரிப் பரதர் வலைமுன் றில்," [12] "பவள வுலக்கை," [13] "எறிவளைக ளார்ப்ப" என்பனவற்றுள் பரத ரும் பரத்தியரும் நுளையரும் நுளைச்சியருமாகிய மக்களும், [14] "ஈர்ந்தண் டுறை" என்பதனான் நீர்நிலையும், [15] "அம்மெ னிணர வடும்புகாள்" என் பதனான் வாரார்கொடியும், [16] "நறுஞாழல் கையி னேந்தி" என்பதனாற் பூவுங் கூறினார்.

தெய்யா வொருசிறை" என வும், [4] "கொற்றவையுங் கொடுமரமுன் செல்லும்" எனவுங் கூறுதலானும், பிறவாற்றானும் பரிதியஞ்செல்வனும், திகிரியஞ் செல்வியுமெனக்கொள்க.
உணா: [5] "ஆரிடை யத்தத் தியங்குந ரல்லது, மாரி வளம்பெறா வில்லே ருழவர்" என்பதனால், ஆறெறிந்துஞ் சூறைகொண்டும் உண்ணுமுணவாம். மா: [6] "மானின்று விளிக்கும்" என்பதனால் உழைமான் முதலியனவும், [7] "அலர்தலை மராஅமு மூலறுதலை யோமையும்" என்பதனால் மரமும், [8] "கானவாரணங் கதிர்வர வியம்ப" என்பதனாற் புள்ளும், [9] "துண்ணென் றுடியொடு" என்பதனாற் பறையும், [10] "பொருள்கொண்டு புண்செயின்" என்பதனாற் செய்தியும், [11] "செந்திறம் புரிந்த செங்கோட்டி யாழ்" என்பதனால் யாழும், பண்: [12] "ஆசான் றிறத்தின்" என்பதனாற் காந்தாரபஞ்சமமுங் கூறினார்; உரிப்பொருள்: [13] "தொடிவளைச் செங்கை தோளிற் காட்டி" எனவும், [14] "ஆரிடை யுழந்த மாதரை நோக்கி" எனவுங் கூறினமையாற் போக்கும், வாளாது [15] "போக்கெல்லாம் பாலை" என்றலின், உடன்போக்கும் கொள்ளப் பட்டன. நிலமக்கள்: [16] "கண்ணி லெயினர்" எனவும், [17] "இளமா வெயிற்றி" எனவுங்கூறலின், எயினரும் எயற்றியரும்; ஈண்டு நீரின்மை நிலை: "நீர்நசைஇ வேட்கையின் மானின்று விளிக்கும்" என்பதனாலும், [18] "நீரின்றி வேனி றெறுநிலம் பாலை" என்பதனானும் நீரின்மையே இந்நிலத்திற்குச் சிறப்பென வுணர்க. [19] "அறுநீர்ப் பைஞ்சுனை யாமறப் புலர்தலி, னுகுநெற் பொரியும் வெம்மை" என அகப்பாட்டினும், [20] "மரையா மரல்கவர" எனக் கலி யுள்ளுங் கூறினார். [21] "ஆயகொடிக்கவலையும்" என்பதனால் வார்கொடியும், [22] "கொம்பர் நல்லில வங்கள்கு விந்தன" என்பதனாற் பூவுங்கூறினார்.

---

[1] சிலப். வேட்டுவவரி, க.
[2] ,, காடுகாண்காதை, சுஉ - கூ.
[3] ,,
[4] ,,
[5] ,,

---

[8] சிலப். புறஞ்சேரியிறுத்தகாதை, கஎ.
[9] ,, வேட்டுவவரி, "துண்ணென்"

வேட்டுவவரி, ச. 10 " " "பொருள்"
" "கன்விளையாட்டி" 11 " புறஞ்சேரியிறுத்தகாதை, ௬௦௬.
காடுகாண்காதை, உ௦௬ - ௬௦. 12 " " ௬௬உ.
6 " " எஅ. 13 " " ௬௬.
7 " " எ௯. 14 " " ௬௦.

15 "போக்கெல்லாம் பாலை புணர்த லறுங்குறிஞ்சி
ஆக்கஞ்சே ரூட லணிமருதம்—நோக்கொன்றி
யில்லிருக்கை முல்லை யிரங்க லறுநெய்தல்
சொல்லிருக்கு மைம்பாற் றுறை."

இச்செய்யுள் நாற்கவிராயநம்பியகப்பொருள்விளக்கவுரையின் இறுதியிலும், திருவாய்மொழியீட்டின் "அஞ்சிறையமடநாராய்" என்பதன் அவதாரிகைக்குரிய ஜீயரரும்பதவுரையிலுங் காணப்படுகின்றது; இன்னநாலிலுள்ளதென்று தெரியவில்லை.

16 சிலப். வேட்டுவவரி, "துன்னென்"
17 " " "இளமா"
18 திவாகரம், ஐந்தாவது இடப்பெயர்த்தொகுதி.
19 அகநானூறு, க.
20 கலித்தொகை, க.
21 சிலப். காடுகாண்காதை, அஉ.
22 " வேட்டுவவரி, "செம்பொன்."

(பி - ம்.) * 'எதிபாடு.'

## பதிகம். ௧௧

இச்சொல்லப்பட்ட ஐந்திணையின் முதல் கரு உரிப்பொருளும் பிறவுமாகிய அகத்திணைப்பொருட்பயன் * உடம்பொடு புணர்த்தியுணர்த்திப் புறத்திணைப் பொருட்பயனும் பிறவும் இவ்வாறு * உடம்பொடு புணர்த்தியுணர்த்துங்காற் புனைந்துரைக்கப்பட்டுக் கேட்போர்க்கு இன்பம்பயவாது உணர்வுசலிக்குமாதலின் வந்தன வந்துழிக்காட்டுதலைக்கருதிற்று இவ்வுரையென்க.

இனி, இசைநாடகத்தமிழ்நூலது பகுதியும், இவைபோலப் பெருவழக்கின்றுதலானும், நிலத்தோடும், கலத்தோடும், கண்டத்தோடும், கருவியோடும், நிலையோடும், இயக்கத்தோடும், இருவகை பலவகைவிலக்குறுப்புக் கை கால்

வட்டணை பொருள் யோனி விருத்தி சந்தி சுவை சாதி குறிப்பு சத்துவம் அவி நயம் சொல் சொல்வகை வண்ணம் வரி
சேதமென்பனவற்றோடும் கதை யோடும் பலகூத்துக்கூறுங்கால்
உய்த்துணர்வில்லோர்க்குச் செவிச்சுவை பயக்குமாதலானும்
ஈண்டுவிரியாது விரித்தலைக்கருதிற்று இவ்வுரையெனக் கொள்க.

இனிப் பதிகச்செய்யுளுள்; முதலீரடியும்போல
யாண்டும்விரியாதது உரை பெருகுமென்பதனைக் கருதியெனக்கொள்க.

க - கூ. குணவாயில்.................அறிந்தருளியென

(இதன்பொருள்.) திருக்குணவாயிற்கோயிற்கண்ணே
அரசபோகத்தைத் துறந்து தவவுருத்தாங்கியிருந்த
குடதிசைக்கோவாகிய செங்குட்டுவனென்னுஞ் சேரற்கு
இளங்கோவாகிய அடிகட்குக் குறவரெல்லாருந் திரண்டு சென்று
எமதூர் மலைப்பக்கத்துப் பொன்போலும் பூவினையுடையவேங்கை
மரத்தின் நிழற்கண்ணே ஒருமுலையிழந்தவந்துநின்றாள் ஒரு
மாபத்தினி; அவள்பொருட்டு இந்திரன்றமர் ஈண்டி வந்து
அவள்கொழுநனைக் காட்டி அவ
ளோடும் அவர் எம்கட்புலங்காண விட்புலம்போயவது
அதனை நீ அறிந்தருளுவாயாக என்றவளவிலேயென்க.

ஓரதிசயமாயிருந்தது;

குன்றக்குரவர் - ஏழனுருபுத்தொகை; குன்றம் - கொடுங்கோளூர்க்கு அயலதாகிய செங்குன்றென்னுமலை. அது திருச்செங்கோடெனவாலெனின், அவரறியார்; என்னை? அத்திருச்செங்கோடு வஞ்சிநகர்க்கு
வடகீழ்த்திசைக் கண்ணதாய் அறுபதின்காதவாறுண்டாகலானும், 1
அரசனும் உரிமையும் மலைகாண்குவமென்றுவந்து கண்ட அன்றே

மையினென்க.

வஞ்சிபுகுதலானும் அது கூடா

பொலம்பூ, உவமத்தொகை.

மாபத்தினி - அழகியவீரபத்தினி ;

நலம் - குளிர்ச்சி. கிளர்தல் - மிகுதல். திரு

குவ்வுருபு பொருட்டு ; அது [1] "வரி

சைக்கு வருந்தும்" என்றாற்போலநின்றது. தமர் - தேவர். ஓடு

உடனிகழ்ச்சி. கட்புலம் - கண்ணினதறிவு ;

கண்ணென்கின்றபுலமுமாம். விட்

புலம் - விண்ணிடம். இறும்பூது - அதிசயம் ; [2] "இறும்பூதுசான்ற"

மணிமேகலையிலும்.

என்றார்

[1] அரசன் - செங்குட்டுவன் ; உரிமை - வேண்மாள். இவர்கள் வஞ்சிபுகுந்ததனை இந்நூற் காட்சிக்காதையிற்காண்க.

மலைகண்டவன்றே

[1] புறநானூறு, ௩௯. [2] மணிமேகலை, ௨௦ - ஆம் காதை, ௬௬, (பி - ம்.) * 'உடம்படிபுணர்த்தி,'



சென்றோனவும், நின்றோனவும் வருவிக்க.

குறவர் கூடிப் பத்தினிக்கு ஈண்டி வந்து போய அது மென்றாரென்க.

இறும்பூதுபோது

ஈண்டி வந்து காட்டிக் காணப் போயவென்னும்பெயரெச்சம் ஊஞ் சுட்டுப்பெயரோடு முடிந்தது.

அதுவென்

போய அது போயதெனவிகாரம்.

இதனுட் பத்தினியென்பதூஉம், தமரென்பதூஉம், குன்றக்குறவர் திங்கமை குன்றக்குரவையுட் காண்க.

கொழுநனென்பதூஉம்

இது மருட்கையென்னு மெய்ப்பாடு.

௫0 - ௬௬. அவனுழை.............உரைப்போன்

(இ - ள்.) குறவர் இளங்கோவடிகளைநோக்கி அறிந்தருளென்றவளவிலே செங்குட்டுவன் அதிசயித்து முகநோக்கப் பரிசில்காரணமாகவந்து அவனுழையிருந்த சாத்தன் அதனைக்குறிப்பானறிந்து அதுவிளைந்ததெல்லாம் யானறிகுவனென் றுரைக்கின்றவனென்க.

அதுவென்றது, ஒருமுலையிழந்ததனை. பட்டது - விளைந்தது.

௬௨ - ௭0. ஆரங்கண்ணி...........புகுந்தனன்

(இ - ள்.) ஆத்திந்தாரையுடைய செம்பியனது பழையநகரங்களில்வைத்து மாறாத விழவுச்சிறப்பினையுடைய புகாராகிய நகரத்திடத்துக் கோவலனென்று பெயர்கூறப்படுவானொருவாணிகன் தன்னூர்க்கண் நாடகந்தானேத்தும் நாடகப் பொதுமகளாகிய மாதவியெனபாளோடுகூடிய ஒழுக்கத்தாலே பெறுதற்கரிய பொருள் தொலைதலின், அவன்மனைவி கண்ணகியென்று பெயர்கூறப்படுவாள்; அவளுடைய காலணியாகிய ஓசையமைந்த சிலம்பினை விற்றல்வேண்டித் தமிழினது பாடல்சிறந்த சிறப்பினையுடைய பாண்டியனது மிக்கபுகழையுடைய மாடமதுரைக்கண்ணே சென்றுபுக்கானென்க.

நாடகமேத்துமென்றது - நாடகம் தான் இவளாற்சிறப்பெய்துதலின் ஏத்திற்றென்றவாறு. இனி ஏத்துநாடகமெனமாறிப் பதினோராடலாக்கி உரைப்பினு மமையும்; இனி நான்கனுருபுவிரித்து உருப்பசிமுதலியோர்யாவரும் ஏத்துமெனவுமாம். கணிகையர்பலராதலின், இவளை நாடகக்கணிகையென்றார்; பதியிலாளென்பது தோன்ற. ஆடுதல் - அனுபவித்தல்; [1] "இளையார்விளையாட" என்றார் சிந்தாமணியினும். அரும்பொருள் - அறனும் இன்பமுந்தரும் பொருள். [2] "அப்பொரு, ளென்னுங் காலத்துன் றுதன விஸ்லையே" என்றார் பிறரும். கேடுற - அழிவுற. [3] "வஞ்சியும் வறிதே", "மதுரையும் வறிதே", "உறந்தையும் வறிதே" என்றாராகலின், இதனைப் பேராச்சிறப்பினையுடைய புகாரென்றார். காற்சிலம்பு பகர்தல்வேண்டியெனவே தலைக்கோலமுதலிய அணிகலனைத்தும் முன்னமேதொலைந்தது விளங்குகின்றது. சிறப்பிற்பாண்டிய

[1] சீவகசிந்தாமணி, ௫௪௧. [2] சீவகசிந்தாமணி, ௧௫௫௩. [3] சிறுபாணாற்றுப் படை, ௫௦, ௬௭, ௮௩.



னென்றும், பெருஞ்சீர்மாடமதுரையென்றும் அடிகள்புகழ்ந்தார்; இவையும் பழவினையால் அழிந்தவென்னுமிரக்கந்தோன்ற. மாடமதுரை புகுந்தனனென்பது - காட்டினன்றி ஓரூரின்கண் உயிரும் பொருளுமிழந்தானென்பது மேல் விளையத் தோன்றுகின்றது.

நகரத்துவாணிகன் கொள்கையாற் கேடுறுதலிற் பகர்தல்வேண்டி மனைவியோடுபுகுந்தனனென்க.

௨௦ - ௨௨. அதுகொண்டு..............காட்ட

(இ - ள்.) அங்ஙனம் முன்னாட்புகுந்தனனாய்ப் பிற்றைஞான்று அதனைக் கொண்டுபோய் விற்கைக்குப் பீடிகைமறுகிற் செல்கின்றவன் கூற்றுவன்வருந்தாற்போல முன்வந்த பொற்கொல்லனைக்கண்டு அவன்

கையிற்காட்டவென்க.

கண்டென ஒருசொல்வருவிக்க. அதுகொண்டென்றார், அச்சிலம்பால் மேல்விளைவன தோன்ற ; அது அரியாடபுரத்தே புகுகின்றவன் கூற்றத்தையும் உடன்கொண்டு புக்கானென்றாற்போன்றிருந்தது. மன், கழிவின்கண்வந்தது.

செல்வோன் கண்டு காட்டவென்க.

உரு - சு. கோப்பெருந் தேவி...........கள்வன் கையென

(இ - ள்.) அங்ஙனங் காட்டக்கண்ட சிலம்பு கோப்பெருந்தேவிக்கே ஆவதன்றிப்

பொற்கொல்லன் இப்பெருவிலைச் பிறர் பூணுந்தரமல்லவாதலான்,

இதனை யான் அரசற்குணர்த்திவருந்துணையும் இக்கோட்டத்திருக்கவெனச் சொல்லிப்போயத் தான் முன்பு பணிக்களரியில் வஞ்சித்துக்கொண்டு நிலைநிற்ற

லான் ஆராய்ச்சி சிறிதுபிறந்துவருகின்றசிலம்பினைப் பிறர்நாட்டு கையிற் கண்டேனென்று அரசற்குரைப்பவென்க.

ஒருகள்வன்

தான்கொண்டவென்றார், தன்னெஞ்சறியத் தான்கொண்டதனை இங்ஙனங்கூறினானென்பதுதோன்ற. ஈங்கிருக்கவென்றார், பிறிதோரிடத்தாயின் ஊர்காவலர் ஆராய்வரென்றுகருதினானென்பதுதோன்ற. என்றேகியென்றார், அவன்கருத்தும் முயற்சியுந்தோன்ற. சில்லரிச்சிலம்பினையென்றார், தொழிற் பன்மைதோன்ற. பிறனோர் கள்வன்கையிற்கண்டனனென்றார், தன்னையும் கள்வனென்றமைதோன்ற.

உஎ - ௩௦. வினைவினா...........ஈங்கென

(இ - ள்.) அங்ஙனம் அவன்சொல்லக்கேட்ட பாண்டியன் தான் முற்பவத்திற்செய்த தீவினைவந்து பலிக்கின்றகாலமாதலாலே ஒன்றையுந்தேரானாய்க் காவலில் அடிப்பட்டோரையழைத்து இவன்சொன்ன அக்கள்வனைக்கொல்ல அச்சிலம்பையும் அவனையும் இப்பொழுதே இங்கே கொண்டுவருவீராகவெனச் சொல்லக்கருதினவன் காமபரவசனாய் இச்சிலம்பு இவளுடல்தீர்க்கு மருந்தாமென்னுங்கருத்தால் வாய்சோர்ந்து கொன்று அச்சிலம்பை இப்பொழுதே கொணர்கவென்றுகூறவென்க.

இதனானன்றே [1] "தென்னவன் றீதிலன் றேவர் கோமான் கோயி, னல்விருந் தாயினன்" என்றகருத்துமெனக்கொள்க. அச்சிலம்பெனக் கோப்

[1] சிலப், வாழ்த்துக்காதை, செங்குட்டுவற்குக் கண்ணகி கடவுணல்லணிகாட்டியது.



பெருந்தேவி சிலம்பைச்சுட்டிக் கூறினாயிற் கள்வனைக்கொன்று சிலம்பைக் கொணர்கவென்றானெனினுங் குற்றமில்லை ; அக்கருத்தினானன்றே வழக்குரை காதையுள்ளும் " கள்வனைக் கோறல் கடுங்கோ லன்று" (௬௪) என்றதுமென்க. இங்ஙனங்கூறியது, [1] "பாட்டிடை வைத்த குறிப்பி னானும், பாவின் றெழுந்த கிளவி யானும், பொருளொடு புணராப் பொய்ம்மொழி யானும், பொருளொடு புணர்ந்த நகைமொழி யானுமென், றுரைவகை நடையே நான்கென மொழிப" என்பதனானென்க. இதனை மேல்வருவனவற்றிற்குங் கொள்க.

இதனை ஆராயுநெறி பலவுளவாகவும், அவற்றில் ஒன்றையும் தேர்ந்திலனென்பார், யாவதும் தேறானாகியென்றார்; முன்னர்க் கைகுறைத்தன்முதலிய முறைசெய்தோன் இதனைத் தேர்ந்திலனென்று அடிகள் இரங்கிக்கூறினார். கன்றியகாவலரென்றார், அவரும் முன்னர்த் தீதுசெய்யாரென்பது தோன்ற.

காலமாதலின் தோராஞகிக் கூஉய்க் கொன் று கொணர்கவென்ருனென இயைக்க.

௲க - ௬. கொலைக்களம்.........இவளென

(இ - ள்.) அங்ஙனம் கொன் றுகொணர்கவென் று அரசன் கூறக்கேட்ட காவலரும் வினைவிளைகாலமாதலிற் கொல்லக் கொலையிடத்தேபட்ட கோவலன் மனைவி தனக்குநிலையிடங்காணுளாய் அவடான் பத்தினியாதலிற் பாண்டியன் முன்னர்ச்சென் று அவனுயிர்கேடுறக் கண்ணீருகுத்து அவனூரையும் தன்முலை முகத்தெழுந்த தீயையுண்ணப்பண்ணிய பலரும்புகழப்படும் இக்குறவர்சொன்னவளென் றுகூற வென்க.

பத்தினிகாணும்

பாண்டியனும் கூடலுங்கேடுற உகுத்து ஊட்டியவென்க. கண்ணும் முலை

யும் உகுத்த நீரானும் நெருப்பானும் அடுதலும் சுடுதலுஞ்செய்தாளென்ப தாயிற்று. இக்கருத்தானன்றே வாழ்த்தினுள்ளும் "தொல்லை வினையாற் றுய ருழந்தாள் கண்ணினீர், கொல்ல வுயிர்கொடுத்த கோவேந்தன்" என்பதூஉம். ௲எ - அ.

வினைவினை...............என்ன

(இ - ள்.) நீர் முன்னை வினைவிளைகாலமென் று சொல்லிப்போந்தீர் ; அவர்க்கு வினைவிளைந்தகாலம் என்னையென் று அரசன் வினவவென்க.

[1] தொல். செய்யுளியல், சூ. ௧எ௲.

[2] பாண்டியன் தன்கைகுறைத்ததை மேற் கட்டுரைகாதை [சக - ௬௨] யிலும், "நாவிளங் கொண்புகழ் நடுதல் வேண்டித்தன், ளுடு மழைத் தடக்கை யறுத்து முறை செய்த, பொற்கை நறுந்தார்ப் புனைதேர்ப் பாண்டியன்" (தொல். களவு. சூ. க - இளம்; நம்பி. சூ. சஙு - உரை; இ - வி. சூ. சகூ௯ - உரை, மேற்) என்பதிலும், "எனக்குத் தகவின்று லென்பதே நோக்கித், தனக்குக் கரியாவான் றானாய்த் தவறினை, நினைத்துத்தன் கைகுறைத்தான் பாண்டியன் காணு, ரெனச்செய்யார் மாணவினை" என்னும் ௬௨ - ஆம் பழமொழிச் செய்யுளினுங்காண்க. இதனை இ௫௭ - ஆம் திருக்குறளுரையில் "தன்கைகுறைத்தான்" எனப் பரிமேலழகரும் குறிப்பித்தனர். இக்கதையைபுட்கொண்டே "நிறைசெய் தாய்போற் செங்கை குறைத்தாய் முறை யேயோ" என்றார் பரஞ்சோதிமுனிவரும்.



கூஅ - ருச. விறலோய்..................யானென

(இ - ள்.) விறலோய், கேட்பாயாக ; நடுக்கமில்லாத சிறப்பினையுடைய மதுரையாகிய மூதூரிடத்து மன்றப்பொதியில்களில் இறைவனுறைகின்ற வெள்ளியம்பலத்துள் யான் துயின்றேனாக ; செறிந்த இருளின்கண்ணே அந்நகர்க்குக் காவற்றெய்வமாகிய மதுராபதிதெய்வம் பெரியவருத்தமுற்ற வீர பத்தினிமுன்னர்வந்து வெளிப்பட்டு நினது மிக்கசினத்தால் வெவ்விய அழலை நின்கொங்கையிடத்தே விளைவித்தோய், பைந்தொடி, நுங்கட்கு முற்பட்ட நல்வினை முடிந்ததாகலான், நின்கணவனோடு நினக்கு முற்பிறப்பின்கண்ணே குன்றுதபுகலையுடைய நல்ல கலிங்கநாட்டுச் சிங்கபுரமென்னு நகரின்கட் சங்கமனென்னும் வாணிகனுடைய [1] மனைவியிட்டசாபம் இப்பிறப்பின் கண்ணே வந்துமூண்டதாகலின், நீண்டு செறிந்ததோர் கூந்தலையுடையாய், நின்கணவனை இவ்வேளையன்றி நீ இனிப் பதினுனாநாட் பகல் நீங்கியபொழுதிற் காண்பை ; காணுங்கால் வானோர்வடிவிற்காண்பதல்லது மக்கள்வடிவிற் காண்ப தில்லையென்றுகூற அவ்வஞ்சமற்ற கட்டுரையினை யான்கேட்டேனென்றுகூற வென்க.

கேட்டி, இகரவீற்று முன்னிலையொருமை வினைத்திரிசொல்; [2] "இ ஐ ஆய்" என்னுஞ் சூத்திரத்தான்முடிக்க. அதிராச்சிறப்பு - பகைவரால் நடுக்கமில்லாத சிறப்பு; [3] "நீர்முற்றி மதில்பொருஉம்" என்பதனானுணர்க. கொன்றை யஞ்சடைமுடி, ஆகுபெயரான் இறைவன். பொது இல் - பொதியில்; உகர வீறு இகரமாய்த்திரிந்து உடம்படுமெய்யும் பெற்று, [4] "ஔளந்தவல்ல" என்னும் அதிகாரப்புறனடையான் முடிந்தது. மன்றப்பொதியிலில் வெள்ளியம்பலத்தென்றது, பொன்னம்பலமுமுண்டாகலின்; என்னை? [5] "கண்ணிலாக் கவர்வன கனககூடமும், வெண்ணிலாச் சொரிவன வெள்ளி வேயுளுந், தண்ணிலாத் தவழ்மணித் தலமுஞ் சார்ந்தரோ, மண்ணினு வியன்றில மதலை மாடமே" என்றார் சூளாமணியுள்ளும். நள்ளிருள் - செறிந்தவிருள்; [6] உரிச்சொல் ஈறுதிரிந்தது; இனி வினைத்தொகையாக்கி அனுகரணத்தையுடைய இருளென்பதுஞ் சிறந்தது; "நள்ளென் றிறுத்த நடுவுகொள் யாமத்து" என்றுராகலின். ஆரஞர் - பெரியவருத்தம்; ஆவது கணவனை யிழத்தல்; [7] "மக்க ளிழந்த விடும்பையினு மனையா ளிழந்த விடும்பையினு, மிக்க விடும்பை வேல்வேந்தே விதவை யிடும்பை யெனவிளம்பித், தக்க வதனு லென்கழுத்திற் றாலி நீதந் தருளென்று, தொக்க மணிநீண் முடியானைத் தொழுது பின்னுமிவை சொல்லும்" என்றார் பிறரும். வீரபத்தினி, மறக்கற்புடையாள். கோப்பெருந்தேவி, அறக்கற்புடையாள்; ஆக [8] ஆறியகற்புஞ் சீறியகற்புமெனக் கற்பு இரு

---

[1] மனைவி - நீலி; இவள் சாபமிட்ட செய்தி முதலியவற்றை இந்நூற் காதையாலும், மணிமேகலை, உக - ஆம் காதையாலும் உணர்க.

கட்டுரை

[3] தொல். வினையியல், சூ. உக. [3] கலித்தொகை, கஎ.
[4] ,, குற்றியலுகரப்புணரியல், சூ. எஅ.
[5] சூளாமணி, நகரவருணனைச்சருக்கம், எ. [6] உரிச்சொல் நனி.

[7] உத்தர. திக்கு. கஊஎ. [8] "ஆறிய கற்பிற் றேறிய நல்லிசை, வண்டார் கொண்டொடி கணவ" என்றார்(கo)பதிற்றுப்பத்திலும்.

கூந்த கைசா;

சிலப்பதிகாரம்

வகை. கொதியழல் - வெவ்வழல். சீற்றம் - மிகுசினம். விளைந்தோய், முன் வினைத்தொழிற்பெயர். முதிர்தல் - முற்படுதல். எனவே நல்வினைமுடிதலா லென்க. [1] "ஏனைவினையுலப்ப" என்றார் பிறரும். இனி முதிர்வினையால்

இவை முடிந்தவென்ன வழக்காறுக்கினும் அமையும். பைந்தொடியும் கூந்த லும் அண்மைவிளி. சிக்கல் - குன்றல். வார்தல் - நெடுமை. ஒலி - தழைத்தல். எல்லி - பகற்பொழுது. கோட்டம் - வஞ்சம். கட்டுரை - பொருள்பொதிந்த சொல், உறுதியையுடைய சொல்லுமாம். வினைவிளைவு யாதென் றவினவி னாற்குப் பாண்டியன்வினைவிளைவு கூறிற்றிலர்; என்னை ? அது கட்டுரை காதையில் விளங்கவுரைக்கப்படும்.

ஔ - கo. அரைசியல்...............செய்யுளென

அங்ஙனம் அரசனோடு சாத்தனார்கூறக்கேட்ட அடிகள் மூவகை உள்ளுறையாக வகுத்துக்கூறுவார் :

பொருட்பகுதியை

(இ - ள்.) நூலொழுக்கிற்றாய அரசியலுட் சிறிது ஒழுக்கம்

பிழைப்பினும்
அவ்வரசரை அறக்கடவுடானே கூற்றமாய்க் கொல்லுமென்பதூஉம், புக ழமைந்த கற்புடைமகளை மக்களேயன்றித் தேவருமுனிவருமுதலாயுள்ளோர் சென்றேத்துதல் இயல்பாகலும், முன்செய்த இருவினையும் செய்தமுறையே செய்தோனை நாடிவந்து உருக்கொண்டுநின்று நுகர்விக்குமென்பதூஉமாகிய இம்மூன்றுபகுதியும் இச்சிலம்புகாரணமாக முறைமையிற் பிறந்தனவாதலிற் சிலப்பதிகாரமென்னும் பெயரான் ஒருகாப்பியமாக நாம் நிறுத்துதுமென்று அவ்வடிகள்சொல்லவென்க.

அறம் அறக்கடவுள். பத்தினிக்கு - பத்தினியை. உருத்து - உருக்கொண்டு; முதிர்ந்தென்றுமாம். வினை - தொழில். நாட்டுதும், உயர்திணைக்கண் வந்த இடவழுவமைதித் தனித்தன்மை; அஃது உளப்பாட்டுத் தன்மைபோன் றிருந்தது. பாட்டுடைச்செய்யுள் - பலபாக்களோடு உரைப்பாட்டையும் இசைப் பாட்டையுமுடைய இயலிசைநாடகப் பொருட்டொடர்நிலைச்செய்யுள். அறம் கொல்லுமென்பது, * "என்பிலதனை வெயில்போலக் காயுமே, யன்பி லதனை யறம்" என்பதனானுணர்க.

ஆவதூஉம், ஏத்தலும், ஊட்டலும் இச்சிலம்புகாரணமாகப் பிறந்தன வென ஒருசொல் வருவித்துமுடிக்க.

கூக - உ. முடிகெழு..............யருளுகென் றற்கு

(இ - ள்.) முடிபொருந்திய தமிழ்நாட்டு வேந்தர்மூவர்க்கும் உரியதாகலின், அடிகள் நீரேயருளிச்செய்கவென்று வினவிய சாத்தற்கென்க.

கெழுவென் னுஞ்சாரியை, [3]
முங் கெழுவு முளீப்படப் பிறவு,

" லனவென வரூஉம் புள்ளி யிறுதிமு, னும்
மன்ன மரபின மொழியிடைத் தோன்றிச்,

செய்யுட் டொடர்வயின் மெய்பெற நிலையும்" என்னுஞ்சூத்திரத்துள், அன்ன மரபின் மொழியிடைத்தோன்றி என்பதனுல் அவ்விருபுள்ளியீற்றுச்சொல்லும் அல்லாதனவும் சாரியைபெற்று முடிவனவுளவென்றாராகலின், புள்ளியீறல்

[1] நாலடியார், கூ. [2] திருக்குறள், எஎ. [3] தொல். குற்றியலுகரப்புணரியல், கூ. எகூ



லாதவழிவந்த சாரியைச்சொல்லெனக்கொள்க. சாரியையாவது சொல் தொடர்ந்துசெல்லு நெறிக்கணின்று அதற்குப் பற்றுக்கோடாகச் சிறிது பொருள்பயந்ததும் பயவாததுமாய் நிற்பது. அவற்றுள் இது சிறிதுபொருள் பயப்ப நிற்பது; பொருந்துதலென்னும் பொருண்மைசாரும். மூவர்க்கு முரியது, புகாரினும் மதுரையினும் வஞ்சியினும் நிகழ்ந்ததாகலின். அடிகள், அண்மைவிளி. என்றற்கு - தான் பாடக்கருதி வினவின சாத்தற்கு; அங்ஙனங் கூறாது இங்ஙனங் கூறினரென்க. என்சொல்லியவாறோவெனின்,— இச்செய்கின்ற காப்பியம் மூவேந்தர்க்குமுரியதென்பதனுல், ஏனையோரை இவர் புகழ்ந்துரையாராகலின், யாம் காப்பியஞ்செய்யக்கடவேமென்பதுகருதி நீரே அருளுகென ஏகாரவினைப்பொருண்மைதோன்ற இதுகருதி இதுசொன்னற்கு அவர் கருதியபொருளிற்கு உடம்படாது சொல்லிற்கு உடம்பட்டாரென்பதாயிற்று.

இனித் தாம் வகுத்துக்கொண்டதனைக் கூறுவார்.

சுஉ - ரு. அவர் மங்கல வாழ்த்துப் பாடலும

(இ - ள்.) அவர்மணத்தில் மகளிர் வாழ்த்துதலையுடைய பாடலும்,

மங்கலம் - கலியாணம். இதனை மங்கலவாழ்த்துக் காதையுமென்னாது பாடலுமென்றது என்னையோவெனின், —இஃது ஆசிரியப்பாவால் வாராது கொச்சகக்கலியால் வருதலானும், கதையையுடையது காதையாமாதலானும், அவ்வாறு இதிற் கதை நிகழ்ச்சியின்மையானும், வாழ்த்தும் உரையும் பாட்டுமாய் வருதலானும் இங்ஙனம் பெயர்கொடுத்தாரெனவுணர்க. அஃது அற்றாக ; மேலும் கானல்வரி, வேட்டுவவரி, ஆய்ச்சியர்குரவை, துன்பமாலை, ஊர் சூழ்வரி, வஞ்சினமாலை, குன்றக்குரவை இவையிற்றையும் காதையென்றிலராலெனின், —அவற்றைக்கூறுதலும் சில வேறுபாடு கருதிப்போலும். என்னை வேறுபாடெனின், —அவை தத்தமுடிவிற் கூறுதும்.

சுரு - ச. குரவர் மனையறம் படுத்த காதையும்

(இ - ள்.) இருமுதுகுரவரும் இவரை இல்வாழ்க்கையில் வேண்டி வேறுபடவிட்ட காதையும்,

அடிப்படுத்த

சுச - ரு. நடநவின் மங்கை மாதவி யரங்கேற்று காதையும்

(இ - ள்.) ஐயாண்டில் தண்டியம்பிடித்து எழாண்டு நடநவின்றமாதவி மங்கைப்பருவத்தே அரங்கேற்றின காதையும்,

சுசு. அந்தி மாலைச் சிறப்புச்செய் காதையும்

(இ - ள்.) அந்திக்காலத்துமாலையைச் சிறப்புச்செய்த காதையும்,

சுஎ. இந்திர விழவூ ரெடுத்த காதையும்.

(இ - ள்.) அந்நகரின்கண் இந்திரனுக்கு விழவெடுத்தகாதையும்,

சுஅ. கடலாடு காதையும்

(இ - ள்.) அங்ஙனமெடுத்த விழவிறுதியிற் கடலாடினகாதையும்,



சுகூ. மடலவிழ் கானல்வரியும்

(இ - ள்.) அங்ஙனம் கடலாடிய கோவலனும் மாதவியும் கழிக்கானலிடத்து யாழ்ப்பாட்டு நிகழ்த்திய கானல்வரியும்,

இஃது இசைப்பாவாற்பெற்றபெயர். இதனுள்ளும் கதைநிகழாமையுணர்க.

கூ - எ0. வேனில்வந் திறுத்தென மாதவி யிரங்கிய காதையும்

(இ - ள்.) இளவேனில்வந்து தலைப்பட்டதாகப் பிரிந்தமாதவி வருந்திய காதையும்,

எ0 - எக. தீதுடைக் கனாத்திற முரைத்த காதையும்

(இ - ள்.) கண்ணகி தான்கண்ட தீங்கையுடைய தேவந்திக்கு உரைத்தகாதையும்,

கனாவின் திறத்தைத்

இது கலிவெண்பாட்டாகலின், [1] "ஒருபொரு ளுதலிய வெள்ளடி யிய லாற், றிரிபின்றி வருவது கலிவெண் பாட்டே" என்பதனாற் கனாநிலையுரைத்தற் பொருண்முடிபாகிய பாலதனைக்கூறுதலிற் காதையாயிற்றெனவுணர்க.

எக - ட. வினுத்திறத்து நாடுகாண் காதையும்

(இ - ள்.) கண்ணகியார் மதுரைமூதூர்யாதென வினவின திறத்தை யுடைய சோணாட்டின்வளனே அவர்கண்டகாதையும்,

இனிக் கவுந்தியடிகள் வினவின திறமெனவும், பிறர்வினவுந்திறத்தை யுடைய எனவுமமையும்.

எஉ. காடுகாண் காதையும

(இ - ள்.) அங்ஙனம் மருதநிலமாகிய நாட்டினைக்கண்டு இன்புற்றவர் பாலைநிலமாகிய காட்டினைக்கண்டு துன்புறறகாதையும்,

எங. வேட்டுவவரியும்

(இ - ள்.) வேட்டுவமகளாகிய சாலினி கொறறவை கோலச்சாரியும்,

உருக்கொண்டாடிய

"இருவகை பல்வகை யென்னும் விலக்கோ, டரியவுறப் புப்பதினொராட்டுக் - குரவை வரி, [2] சொக்க மவிநய நாடக மென்றிவற்றுற, றக்கவனே யாடலா சான்" என்றமையான், வரியென்பது கோலச்சாரி; இது வேட்டுவமக ளாகிய சாலினி கொற்றவை யுருக்கொண்டு ஆடுதலின் ; [1] "கொற்றவை கொண்ட வணிகொண்டு நின்றவிப், பொற்றொடி மாதர் தவமென்னை கொல்லோ" என்பத ஞலறிக. கூத்தன்படுதலின், இது வேட்டுவவரியாயிற்று.

நாடகவரிப்பெயராய, வேட்டுவவரி நிகழ்தலின்

இது கூத்தாற்பெற்றபெயர்.

எங-ச. தோட்டலர்.....இறுத்த காதையும்

(இ - ள்.) கண்ணகியோடு மதுரைப் புறஞ்சேரியிற் சென்று விட்ட காதையும்.

---

[1] தொல். செய். சூ. கஇக. [2] வேட்டுவவரி. (பி - ம்.) * 'சோகம்', 'சேதும்.'

எச - ர. கறங்கிசை யூர்காண் காதையும்

(இ - ள்.) முழங்காநின்ற முரசொலியையுடைய மதுரையைக் கோவலன் கண்டகாதையும்.

எரு - சு. சீர்சா னங்கை யடைக்கலக் காதையும்

(இ - ள்.) அழகெல்லாமமைந்த கண்ணகியாகியநங்கையை மாதரிபாற் கவுந்தியடிகள் அடைக்கலங்கொடுத்தகாதையும்.

எசு. கொலைக்களக் காதையும்

(இ - ள்.) கோவலன் கொலைக்களப்பட்டகாதையும்,

எஎ. ஆய்ச்சியர் குரவையும்

(இ - ள்.) தம் சேரிக்கு உற்பாதசாந்தியாக மாதரிமுதலாயுள்ள ஆய்ச்சியர் குரவைக்கூத்தாடின முறைமையும்,

"குரவை யென்பது கூறுங் காலைச், செய்தோர் செய்த காமமும் விறலு, மெய்த வுரைக்கு மியல்பிற் றென்ப" எனவும், "குரவை யென்ப தெழுவர் மங்கையர், செந்நிலை மண்டலக் கடகக் கைகோத், தந்நிலைக் கொட்பநின் றாடலாகும்" எனவுஞ் சொன்னாராகலின், இதுவும் ஆய்ச்சியரிடத்து நிகழ்தலான் ஆய்ச்சியர்குரவையெனக் கூத்தாற் பெற்றபெயர்.

எஎ - அ. தீத்திறங் கேட்ட துன்ப மாலையும்

(இ - ள்.) அங்ஙனம் அவன் கொலையுண்ட தீத்திறத்தைக் கண்ணகி கேட்டுத் துன்புற்ற இயல்பும்,

இதுவும் ஊர்சூழ்வரியும் சிறிது கதைநிகழ்ச்சியுளவெனினும் மருட்கை யென்னு மெய்ப்பாடும் அவலம் அரற்றுக் கவலை கையாறென்னுமிவையும் நிகழ்தலியல்பினான் இதனை மாலையென்முறெனக் கொள்க.

எஅ - கூ. நண்பக னடுங்கிய ஊர்சூழ்வரியும்

(இ - ள்.) எல்லாருங்காண நாணிறந்து

ணகி ஊர்சூழ்வந்த ஊர்சூழ்வரியும்,

வெளிப்பட்டவுருவினொடு கண்

கண்ணகி ஊர்சூழவருவதனைப் பத்தினிப்பெண்டிர் கண்கூடாகக் காண்ட வின் இஃது ஊர்சூழ்வரி யென்பதாயிற்று.

இதுவும் கூத்தாற் பெற்றபெயர்.

எகூ - அ0. சீர்சால் வேந்தனொடு வழக்குரை காதையும்

(இ - ள்.) புகழமைந்த தென்னனோடு கண்ணகி வழக்குரைத்தகாதையும்,

உரைகாதை, வினைத்தொகை; இறப்பு.

அ0. வஞ்சின மாலையும்

(இ - ள்.) அங்ஙனந்தானுரைத்த வழக்குந்தோற்று உயிருந்தோற்றநெடுஞ் செழியன்றேவியைநோக்கிக் கண்ணகி வஞ்சினங்கூறிய இயல்பும்,

வஞ்சினமாவது - மேற்கோள். இக்கலிவெண்பாட்டுப்பத்தினித்தன்மைத்தா ஒருபொருளையே கருதிக்கூறிய இயல்பையுடைத்தாகலின், மாலையென்றார்.



அக. அழற்படு காதையும்

(இ - ள்.) அங்ஙனம் வஞ்சினங்கூறினவள் முலைமுகத்து எழுந்ததீ

அவளே விய இடமெங்கும் பட்டு எரித்தகாதையும்,

**அக - உ. அருந்தெய்வந் தோன்றிக், கட்டுரை காதையும்**

(இ - ள்.) அங்ஙனம் அழற்படுதலின் அதற்காற்றாது மதுரைமாதெய்வம் அவ்வழறணித்தற்குவந்து இவளது பவத்தொடர்பு கட்டுரைத்தகாதையும்,

**அஉ - ரு. மட்டலர் கோதையர் குன்றக் குரவையும்**

(இ - ள்.) மதுவொழுகமலர்ந்த கோதையினையுடைய குறத்தியர் இவளை வேங்கைநிழற்கண் கண்டதற்கு உற்பாதசாந்தியாக முருகவேளைநோக்கி அக் குன்றின்கண்ஆடிய குரவையும்,

ஆய்ச்சியர்குரவையிற் கூறி பது இதற்குங்கூறுக. கூறிக் கோதைக்கு அவர்களெடுத்த குரவையெனினும்

கோதையென்று பாடம் அமையும்.

**அரு.** என்றிவை யனைத்துடன்

(இ - ள்.) என்று சொல்லப்பட்ட இவ்விருபத்துநான்குடனே,

**அச.** காட்சி—(இ - ள்.) காட்சிக்காதையும், கற்காட்சியும், குறவர் பாகுடக் காட்சியமெனக.

**அச.** கால்கோள்—(இ - ள்.) கற்கொண்ட காதையும், கற்கோள் கால்கோளென விகாரம்.

**அச.** நீர்ப்படை—(இ - ள்.) அக்கொண்டகல்லினைக் நீர்ப்படுத்தினகாதையும், கங்கையாற்று

**அச.** நடுகல்—(இ - ள்.) அக்கல்லினை நட்டகாதையும்,

அ௫. வாழ்த்து—(இ - ள்.) அங்ஙன நடுங்கல்லான

பிரதிட்டையும் விழவும் பெற்ற பத்தினிக்கடவுள் செங்குட்டுவனையும் நெடுஞ்செழியனையும் பெருங்கிள்ளியையும் வாழ்த்தினகாதையும்,

அ௬. வரந்தரு காதையொடு

(இ - ள்.) அங்ஙனம்வாழ்த்தியகடவுள் அவரோடு கனகவிசயர்முதலிய ஆரியமன்னருள்ளிட்டார்க்கு வரங்கொடுத்தகாதையோடே,

ஒடு, ஒப்பலொப்புரை ; எண்ணொடுவுமாம். தருதல் = கொடை.

அ௬. இவ்வா றைந்தும்—(இ - ள்.) முப்பதுமென்றெண்ணப்பட்ட,

அஎ. உரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யுள் (இ - ள்.) உரையிடையிட்டனவும் பாட்டுடையனவுமாகிய செய்யுளை,

அனைத்துடன் காதையொடு இவ்வாறைந்தும் உரையிடையிட்ட பாட் டுடைச்செய்யுளென்க. உம்மை முற்று.

## ப தி க ம். 

அஅ. உரைசா லடிக ளருள

(இ - ள்.) புகழமைந்த இளங்கோவடிகள் அருளிச்செய்ய, அருளுகென்றற்கு அருளவென்க.

அஅ - கூ. மதுரைக் கூலவாணிகன் சாத்தன் கேட்டனன்

(இ - ள்.) மதுரைக் கூலவாணிகனை சாத்தன் கேட்டனன்;

கூலம் எண்வகைத்து; அவை:— நெல்லு, புல்லு, வரகு, தினை, சாமை, இறுங்கு, தோரை, இராகி; பதினெண்வகைத்தென்பர்

கூத்தநூலார்.

கூ0. இது—(இ - ள்.) இவ்வரையறை

கூ1. பால்வகை தெரிந்த பதிகத்தின் மரபென்

(இ - ள்.) அறப்பால், பொருட்பால், காமத்துப்பாலாகிய அப்பால்களின் வகையைத்தெரிந்த செய்யுளின் பதிகத்தினது மரபு இதுவென்க.

என்னென்னும் அசைச்சொல் ஆசிரியப்பாவிற்கு முடிபு சிறப்புடைத்து.

அடிகட்கு அறிந்தருணீயென இருந்தசாத்தன் உரைப்போன் இவனென, வினைவிளைவு யாதென, விறலோய், கேட்டனன்யானென, அரங்கூற்றுவதூஉம் உயர்ந்தோரேத்தலும் ஊட்டுமென்பதூஉங் காரணமாகப் பெயரான் நாட்டுதும் யாம் ஒரு பாட்டுடைச்செய்யுளென, அருளுகென்றற்கு அருளக் கேட்டனளென்க.

அறுபத்தெட்டாமடியுட் "கடலாடு காதையும்" எனக் குறளடியும், (அரு) "வாழ்த்து வரந்தரு காதையொடு" எனச்சிந்தடியும் (அகூ) "இவ்வாறைந்தும்" எனக் குறளடியும் வந்து, [1] "ஈற்றய லடியே யாசிரிய மருங்கிற், றோற்ற முச்சீர்த் தாகு மென்ப" என்ற ஆசிரியர், [2] "இடையும் வரையார் தொடையுணர் வோரே" என்றதனாற் குட்டச் செந்தூக்காயிற்று.

இது, நாற்பொருளுள்ளும் அகத்திணைக்கண்ணது இன்பமாகலானும், புறத்திணைக்கண்ணது பொருளும் அறனுமாகலானும் வீடொழிந்த முடிபு கூறிநின்றது. அதனானன்றே, [3] "மணிமே கலைமே லுரைப்பொருண் முற்றிய சிலப்பதிகாரம்" என்பாரானதுவு மென்க.

# பதிகம் முற்றிற்று.

---

# உரைபெறுகட்டுரை.

க. அன்றுதொட்டுப் பாண்டியனாடு மழைவறங்கூர்ந்து வறுமை யெய்தி வெப்புநோயுங் குருவுந் தொடரக் கொற்கையிலிருந்த வெற்றி வேற்செழியன் நங்கைக்குப்
பொற்கொல்லராயிரவரைக்கொன்று களவேள்வியால் விழவொடுசாந்திசெய்ய நாடுமலிய மழைபெய்து துன்பமு நீங்கியது.
நோயுங்

உ. அதுகேட்டுக் கொங்கிளங்கோசர் தங்கணாட்டகத்து நங்கைக்கு விழவொடுசாந்திசெய்ய மழைதொழிலென்றும் மாறாதாயிற்று.

ந. அதுகேட்டுக் கடல்சூழிலங்கைக் கயவாகுவென்பான் நங்கைக்கு நாட்பலிபீடிகைக்கோட்டமுந்துறுத்தாங்கு அரந்தைகெடுத்து

[1] தொல்காப்பியம், செய்யுளியல், சூ. கஅ.
[2] ,, ,, ,, கக.
[3] இதனைச் சிலப்பதிகார இறுதிக்கட்டுரையிற் காண்க.

வரந்தருமிவளென ஆடித்திங்க ளகவையினுங்கோர் பாடிவிழாக்கோள் பன்முறை யெடுப்ப மழைவீற்றிருந்து வளம்பலபெருகிப் பிழையா விளையு ளுடாயிற்று.

௪. அதுகேட்டுச் சோழன்பெருங்கிள்ளி கோழியகத்து எத்திறத் தாலும் வரந்தருமிவளோர் பத்தினிக்கடவுளாகுமென நங்கைக்குப் பத்தினிக்கோட்டமுஞ்சமைத்து நித்தல்விழாவணி நிகழ்வித்தோனே.

## உரைபெறுகட்டுரை முற்றிற்று.



---

௨. கொங்கிளங்கோசர் - குறும்புசெலுத்துவார் சிலவீரர்.

௩. நாட்பலிபீடிகைக் கோட்டம், - நித்தலும் பலியிடுமிடத்தையுடைய கோட்டம். அரந்தை - துக்கம். பிழையாவிளையுள் - குன்றுவிளையுள்.

௪. கோழி - உறையூர். எத்திறத்தாலும் - வேண்டினுர் வேண்டியவாறெல் லாம். நித்தல்விழாவணி - நித்தமாகிய அணிவிழா.

உரைபெறுகட்டுரை - உரைத்துப்போதுகின்ற கட்டுரை

உரைபெறுகட்டுரை. ௩௯

க. அன்றுதொட்டு.........நோயுந்தன்பமுநீங்கியது

அன்றென்றது கதையை உட்கொண்டு நின்றது; [1] "வெள்வா ளெறிந்த னன் விலங்கூ டறுத்தது, புண்ணுமிழ் குருதி பொழிந்துடன் பரப்ப, மண்ணக மடந்தை வான்றுயர் கூரக், காவலன் செங்கோல் வளைஇய வீழ்ந்தனன், கோவலன்" என்றாராகலின்.

நோ
(இ - ள்.) பாண்டியனுடு அன்றுதொடங்கி மழைவறத்தன் மிக்கு வறுமையுற்றுத் தொழுநோயும் குருவும் இடைவிடாதுநலிதலிற்

அதனு
கொற்
கைக்கணிருந்த இளஞ்செழியன் நங்கைக்கு
ஆயிரம்பொற்கொல்லரைப் பலி
யிட்டுக் களவேள்வியாற் சாந்திசெய்து விழவெடுத்தலானே அவனுடு
மிகவும்
மழைபெய்து மூற்கூறியவறுமையும் நோயுநீங்கிற்று.

வெப்பு - தொழுநோய்; [2] "வெப்பின்மூப்பழச்சுவே"
என்றாராகலின். இது வெதுப்பெனினு மமையும்.

உ. அதுகேட்டு........மாறுதாயிற்று

(இ - ள்.) அங்ஙனம் செழியன் நன்மைசெய்து அவைநீங்குதலின் அதனைக்கேட்டுக் கொங்குமண்டிலத்து இளங்கோவாகிய கோசரும் நங்கைக்கு அங்ஙனம் சாந்தியும் விழவுஞ்செய்தலான் அவைநீங்குதலோடே மழை பெய்தற்றொழில் பெய்யுநாளென்றும் வழுவாதாயிற்று.

பெய்யுநாளென்றது திங்கண்மும்மாரியை;
பருவநாளெனினுமமையும்.

௲. அதுகேட்டு.........நாடாயிற்று

(இ-ள்.) அதுகேட்டுக் கடலை அகழாகவுடைய இலங்காபுரத்துக் கயவாகு வென்று பெயர்கூறப்பட்ட அரசன் நங்கைக்கு அங்ஙனம் நாடோறும் பலி கொள்ளுதலையுடைய பலிபீடத்தை முந்தச்செய்து பின்பு கோட்டமுமமைத்து முற்கூறிய துன்பங்களைக்கெடுத்து நமக்கு வேண்டும்வரங்களை இவள்தரு மென்று துணிந்து ஆடித்திங்களிடத்தே ஆட்டைவிழாவாகத் தன்னகரவீதி தோறும் உலாச்செய்விக்க மழை குறைவின்றி நிலைபெறுதலானே அன்றே பொய்யாதுவிளையும் விளைவினையுடைய நாடாயிற்று அவனுடு.

பாடி - நகரி.

௪. அதுகேட்டு.........நிகழ்வித்தோனே

(இ-ள்.) அதனைக்கேட்டுச் சோழநாட்டு உறையூரிடத்தே பெருநற்கிள்ளி யரசனாகியவளவன் இவள் பத்தினிக்கடவுளாதலின், எத்திறத்தாலும் நமக்கு அரந்தையைக்கெடுத்து வரந்தருமெனக்கருதி நங்கைக்கு அங்ஙனம் கோட்ட முமமைத்து நித்தல்விழவும் நடத்தினனென்க.

எத்திறத்தாலுமென்றார், இவள்பிறந்த உரிமைபற்றி.

கோழியென்றது, [1] ஒருகோழி நிலமுக்கியத்தால் யானையோடு பொருது அதனைப் போர்தொலைத்தல் ———

[1] சிலப். கொலைக்களக்காதை, உகக - எ. [2] சீவகசிந்தாமணி, எ௫.

௲௨ உரைபெறுகட்டுரை,

கண்டு அந்நிலத்திற்செய்த நகர்க்குப் பெயராயிற்று ; [2] "முறஞ்செவி வாரண முன்சம முருக்கிய, புறஞ்சிறை வாரணம்" என்பர்மேலும்.

சேபலி. அரந்தை - துன்பம்.

நித்தல்விழா -

உரைபெறுகட்டுரை-இவைமுற்கூறிய கட்டுரைச்செய்யுள். [3]

"உரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யு, ளுரைசா லடிக ளருள" என்றமையாற் காப்பியங் கட்குச் சிறுபான்மை இவ்வுறுப்புக்களும் சில வ நமெனக்கொள்க. என்னை ? [4] "உரையும் பாடையும் விரவியும் வருமே" என்பது அணியியலாகலின்.

உரைபெறுகட்டுரை முற்றிற்று.



## நூற்சிறப்புப்பாயிரம்.



வெண்பா.

நீடிருங் குன்ற நிழல்கா லு மண்டிலத்துக்
கோடுகோ டாய்த்தோன் றுங் கொள்கைத்தே - கூடலார்
கொண்டாடுஞ் செஞ்சொற் குடக்கோ முனிசேரன்
றண்டா வுரைமுத் தமிழ்.

கட்டளைக்கலித்துறை.

நலத்தகு நால்வரென் றோதிய நான்முகத் தோன்படைத்த
குலத்ததி கார வணிகர் குலபதி கோத்ததமிழ்ப்
புலத்ததி கார ருறைபதி பூம்புகார் போற்றநின்ற
சிலப்பதி காரஞ்*செய் தானேசேர் சேரர் சிகாமணியே.

இவ்விரண்டும் பழைய செய்யுட்களே; இயற்றியவர்பெயர் விளங்கவில்லை.



[1] சிலப். நாடுகாண்காதை, உசள - அ. [2] சிலப். பதிகம், அஎ-அ [3]
"ஒருதிறப் பாட்டினும் பலதிறப்பாட்டினும், முரையும் பாடையும் விரவியும் வருமே" தண்டியலங்காரம், பொதுவணியியல், சூ. கக: என்பதில் இவ்வடி கின்றது.

காணட்டு

(பி - ம்.) * 'செய்தான்சேரலன்பர் சகாமணியே.'

## முதலாவது

# புகார்க்காண்டம்.

## க.—மங்கலவாழ்த்துப்பாடல்

[1] திங்களைப் போற்றுதுந் திங்களைப் போற்றுதுங்
[4] கொங்கலர் தார்ச் சென்னி குளிர்வெண்
குடைபோன்றிவ்
வங்க ணுலகளித்த லான்
[2] ஞாயிறு போற்றுது ஞாயிறு போற்றுதுங்
[5] காவிரி நாடன் றிகிரிபோற் பொற்கோட்டு
மேரு வலந்திரித லான்
[3] மாமழை போற்றுது மாமழை போற்றுது
நாமநீர் வேலி யுலகிற் கவனளிபோன்
மேனின்று தான்சுரத்த லான்

பூம்புகார் போற்றுதும் பூம்புகார் போற்றுதும்
வீங்குநீர் வேலி யுலகிற் கவன்குலத்தோ
டோங்கிப் பரந்தொழுக லான்
ஆங்கு,
பொதியி லாயினு மிமய மாயினும்

௧. திங்களைப்போற்றுதும் திங்களைப்போற்றுதுமென்னுமடுக்கு, சிறப்பின்கண் வந்தது.

௫. அங்கணுலகு - அழகிய உலகிடம். [பொருளுக்கும் மேலாகநின்று.

௮. நாமநீர் - அச்சத்தைத்தருகின்ற கடல். ௯. மேனின்று - எல்லாப்

௧௧. வீங்குநீர் - நிறைந்த நீர்.

௧-௧௨. இவை நான்கு சிந்தியல் வெண்பாவும் செம்பியனையும் புகாரினையும் சிறப்பித்தன.

௧௫. ஆங்கு - ஆதலால்.

[1] "முந்நீர்நாப்பண்" (௯௦) என்னும் புறப்பாட்டு இதனுடன் ஒப்பிடற்பாலது. இது குடைமங்கலத்திற்கு மேற்கோள்; (தொல். புறத். சூ. ௩௦ - இளம்; சூ. ௩௪ - ந.)

[2] இது நிரைப்புனைந்துரைத்ததற்கு மேற்கோள்; (தொல். புறத். சூ. ௩௫ - ந.)

[3] "மதிவாழி ரவிவாழி மழைவாழியே" (தக்க. கடவுள். ௧ - உரை) என்பதற்கு இது மேற்கோள். இத்தொடர், "திங்களைப்போற்றுதும்" என்பது முதலிய மூன்றையும் பின்பற்றியிருக்குமுறை இங்கே அறிதற்பாலது.

(பி - ம்.) * 'புகார்காண்டம்.' † 'கொங்கலரார்'

இ

[1] பதியெழு வறியாப் பழங்குடி * கெழீஇய
பொதுவறு சிறப்பிற் புகாரே யாயினு
நடுக்கின்றி நிலைஇய வென்ப தல்லதை
யொடுக்கங் கூறா ருயர்ந்தோ ருண்மையின்
முடித்த கேள்வி முழுதுணர்ந் தோரே
அதனால்,
[2] நாகநீ ணகரொடு நாகநா டதனொடு
போகநீள் புகழ்மன்னும் புகார்நக ரதுதன்னில்
மாகவா னிகர்வண்கை மாநாய்கன் குலக்கொம்பர்
† ஈகைவான் கொடியன்னா ளீராறாண் டகவையாள்
அவளுந்தான்,
‡ போதிலார் திருவினாள் புகழுடை வடிவென்றுந்
தீதிலா வடமீனின் றிறமிவ டிறமென்று
மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக்
காதலாள் பெயர்மன்னுங் கண்ணகியென் பாண்மன்னோ
ஆங்கு,

---

கரு. பொதுவறு சிறப்பு - தனக்கே உரிய சிறப்பு.

கச - கரு. பொதியில் இமயம் புகாரென்ற மூன்றனையும் ஒப்புரைக்கின்றார்.

ஒருவாற்றான்

கஎ - உo. (பா) நிலீஇயர் நிற்பதாக. கேள்வியான்

முழுதுணர்ந்தோர் அப்
படிப் புகழினல்லது இம்மூன்றிடத்திற்கும் ஒடுக்கங் கூறுார்; உயர்ந்தோருண்
மையானென்க. புகார்ச்சிறப்புக்கூறியவாறு. அதனுல் - ஆதலால்.

உக - உ. நாகருலகத்துடனும் தேவருலகத்துடனும் போகம்
இலை பொருந்தும்.
கீள்புகழ்

உஈ. மாக வான் - விண்ணின் மேகம்.

உச. ஈகை - பொன்.

உரு. போதிலார் திரு - போதில் நிறைந்த திரு; இவள்வடிவென
வருவிக்க.

உஅ - கூ. வயங்கிய பெருங்குணத்துக்
குணத்தாற் காதலித்தவள்.

காதலாள் - விளங்கிய பெருங்

இவளை முன் கூறிற்று; கதைக்குநாயகியாதலின்.

---

[1] "பதிபெழு வறியாப் பழங்குடி கெழீஇ" (மலைபடு. சஎகூ.)

[2] இவ்வடி, "மேலைநாகர் கீழைநாகர் பொன்மயங்கி வீழவே" (தக்க.
என்பதற்கு மேற்கோள்.
ுெ)

(பி - ம்.) * 'தழீஇய.' † 'ஈய்கை.' ‡ 'போதில்வாழ்.'

## க.—மங்கலவாழ்த்துப்பாடல்.

கூ

பெருநில முழுதாளும் பெருமகன் றலைவைத்த
வொருதனிக் குடிகளோ டுயர்ந்தோங்கு செல்வத்தான்
வருநிதி பிறர்க்கார்த்து மாசாத்து வானென்பா
னிருநிதிக் கிழவன்மக னீரெட்டாண் டகவையான்
அவனுந்தான்,
மண்டேய்த்த * புகழினான் மதிமுக மடவார்தம்
பண்டேய்த்த மொழியினா ராயத்துப் பாராட்டிக்
கண்டேத்துஞ் செவ்வேளென் றிசைபோக்கிக் காதலாற்
கொண்டேத்துங் கிழமையான் கோவலனென்
பான்மன்னோ
அவரை,
இருபெருங் குரவரு மொருபெரு நாளான்
மணவணி காண மகிழ்ந்தனர் † மகிழ்ந்துழி
யானை யெருத்தத் தணியிழையார் மேலிரீஇ
மாநகர்க் ‡ கீந்தார் மணம்
அவ்வழி, [குடை
முரசியம்பின முருடதிர்ந்தன முறையெழுந்தன பணிலம் வெண்
யரசெழுந்ததொர் படியெழுந்தன வகலுண்மங்கல வணியெழுந்
மாலைதாழ் சென்னி வயிரமணித் தூணகத்து [தது

௩௧ - ௩. பெருமகன் முன்வைக்கப்பட்ட வணிகராகிய தன் கிளையோடு கூடி உயர்ந்தசெல்வத்தினையுடையான். இது [1] சுற்றத்தாற் சுற்றப் படுவொழுகல்; எனவே தமக்குத் தாமேநிகராகிய வணிகரென்றவாறாயிற்று. மாசாத்துவான் - குடிப்பெயர்.

௩௫ - ௯. மண்டேய்த்த புகழ் - பூமி சிறுகும்படி வளர்ந்தபுகழ்.

மடவார் ஆயத்துக் கண்டேத்துஞ் செவ்வேளென்று
கண்டார்கொண்டேத்துங் கிழமையான்.

௪௫ - ௪. யானையெருத்தத்தின்மேல் அணியிழையாரையிருத்தி மாநகர்க்கு
ரர்.

௪௬. முருடு - மத்தளம்.

௪௭. அகலுள் - ஊரிலே. மங்கலவணியெழுந்தது - மாங்கலிய சூத்திரம் வலஞ்செய்தது.

௪௮. மாலைதாழ் சென்னித்தூண்.

---

[1] "சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன்."—(திருக்குறள், ௫௨௪.)

(பி - ம்.) * 'புகழுடையான்.' † 'மகிழ்ந்தழீஇ.' ‡ 'சய்த்தார்மனைப்.'



நீல விதானத்து நித்திலப்பூம் பந்தர்க்கீழ்
[1] வானூர் மதியஞ் சகடணைய வானத்துச்
சாலி யொருமீன் றகையாளைக் கோவலன்
மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத்
தீவலஞ் செய்வது காண்பார்க ணோன்பென்னை
விரையினர் மலரினர் விளங்கு மேனிய
ருரையினர் பாட்டின ரோசிந்த நோக்கினர்
சாந்தினர் புகையினர் * தயங்கு † கோதைய

ரேந்திள முலையின ரிடித்த சுண்ணத்தர்
விளக்கினர் கலத்தினர் விரிந்த பாலிகை
முளைக்குட னிரையினர் முகிழ்த்த மூரலர்
௪௦ போதொடு விரிகூந்தற் பொலனறுங் கொடியன்னார்
காதலற் † பிரியாமற் கவவுக்கை ஞெகிழாமற்
றீதறு கெனவேத்திச் சின்மலர் கொடுதூவி
‡ யங்க ணுலகி னருந்ததி யன்னாளை
மங்கல நல்லமளி யேற்றினார் தங்கிய
௪௫ விப்பா லிமயத் திருத்திய வாள்வேங்கை
யுப்பாலைப் பொற்கோட் டுழையதா வெப்பாலுஞ்
செருமிகு § சினவேற் செம்பிய
னொருதனி யாழி ** யுருட்டுவோ னெனவே.



---

௫௦ - ௫௧. சந்திரன் உரோகிணியைச்சேர அருந்ததியனை
கோவலன் கலியாணம்பண்ணுவது.

௫௪ - ௬. விரையினர் மலரினராகிய இவை வினைக்குறிப்புப்பெயர்.
தகையாளைக்

விளங்குமேனியர்; பிறவுமன்ன.

௬௦. இச்சொல்லப்பட்ட கொடியன்னார்.

௬௧. உலகினருந்ததி, இஃபொருளுவமை.

௬௬. உழையதாம்படி (௬௮) உருட்டுவோனென (௬௪) ரென்க.

[1] "அங்க ணிருவிசும்பு விளங்கத் திங்கட், சகடம் வேண்டிய துகடீர் கூட்டத்து ..............வதுவை மன்னிய மகளிர்" (அகநாறுாறு, ககக.)

[3] "பலவகை விரித்த வெதிர்பூங் கோதையர், பலர்தொகு ... பிடித்த தாதுகு கண்ணத்தர்' (மதுரைக்காஞ்சி, ககூஅ - கூ.)

(பி - ம்) * 'தயங்குமேனியர்.' † 'பிரியாமைக் கவவுக்கை ஞெகிழாமை.' ‡ 'அங் கண்விசும்பிளங்குந்துறிபன்றுள.' § 'நெடுவேல்.' ** 'உருட்டியோன்.'

## க.—மங்கலவாழ்த்துப்பாடல்.

நுதலி

க - ங. திங்களை............அளித்தலான்

(இ - ள்.) நாம் திங்களைப்போற்றுவோம்; திங்களைப்போற்றுவோம்; அஃது எற்றுக்கெனின், தாது பரந்தஸ்செய்த மாலையையுடைய சென்னியுடைய குளிர்ச்சியையுடைய வெண்குடைபோன்று பொதுவற இவ்வுலகிற்கு அளி செய்தலானென்க.

இது பண்பும் பயனும் கூடின உவமம். கொங்கு - தாது. அம் - அழகு. கண் - இடம். போற்றுதும் - தன்மைத் தன்மை; [1] "அம்மாம் ...." என்னுஞ் சூத்திரத்துக் கடதறவால் முடிந்தது.

இது [3] "கடைமிகுத் தேத்திய குடைநிழன் மரபு"

ச - சு. ஞாயிறு............திரித லான்

(இ - ள். ) நாம் ஞாயிற்றைப் போற்றுவேம்; ஞாயிற்றைப் போற்றுவேம்; அஃது எற்றுக்கெனின், காவிரிநாட்டையுடையானுடைய ஆழிபோலப் பொலிவு பெற்ற கொடுமுடியையுடைய மேருவை வலமாகத் திரிதருதலானென்க.

திகிரி - ஆக்கினைசக்கரம். இது தொழிலுவமம்.

ஏ - கூ. மாமழை..............சுரத்தலான்

(இ - ள்.) நாம் பெரிய மழையைப் போற்றுவேம் ; பெரிமழையைப்
போற்றுவேம்; அஃது எற்றுக்கெனின்,
அவன் அளிசெய்யுமாறுபோல மாறாது

அச்சத்தைத்தரும் கடல்சூழுலகிற்கு
மேலாய்நின்று தன்பெயலான் வளத்
தைச் சுரத்தலானென்க.

நாம் - நாமமென உரிச்சொல் ஈறுதிரிந்தது ; புகழெனினுமமையும் ; எழ்வகைப் பெயருமாம். வேலி - சூழ்தல். அளி - கொடை. மேனின்று - மேலாய் நின்று. தான், அசை. சுரத்தல் - இடைவிடாதுசொரிதலுமாம். உலகிற்குச் சுரத்தலானென இயையும்.

கo - கஉ. பூம்புகார்......................ஒழுகலான்

பூம்புகார், விகாரம்; பூ - பொலிவு.

(இ - ள்.) நாம் [2] புகாரைப் போற்றுவேம்;

புகாரைப்போற்றுவேம்;
அஃது எற்றுக்கெனின், மிக்க கடலை வேலியாகவுடைய
குலம்புகழ்வார் இதனையும் புகழ்வாராகலினென்க.

உலகின்கண் அவன்

உலகிற்கு - உலகின்கண் ; உருபுமயக்கம் ; [4] "யாதனு.........சாரும்" என்பதனுன் முடிந்தது ; [5] "தில்லைச் சூழ்பொழிற்கு" என்முற்போல.

திங்களை முற்கூறினர், இத்தொடர்நிலைச்செய்யுட்குச் சிறந்த முதன் மொழி அதுவாகலான். இத்திங்கள்முதலியவற்று இவனளித்தல்முதலிய செய்கையொத்தலான், இவையும் இவனுற் சிறந்தனவென்பதாம். இறப்பப்

[1] தொல். வினையியல், சூ. ௫.
[2] ,, புறத்திணையியல், சூ. ௩௧.
[3] புகார் - காவிரிப்பூம்பட்டினம்.

[4] தொல். வேற்றுமைமயங்கியல், சூ. ௨௧.
[5] திருச்சிற்றம்பலக்கோவையார், ௧௯௭.



புனைந்துரைத்தற்கு, "குடைநிழல் மரபு" என்றதனுல் உயர்ச்சியும் புனைந்துகூறியவாருயிற்று.

கொடையும் திகிரியும்

௩௬ - ௯. ஆங்கு ..............முழுதுணர்ந்தோரே

(இ - ள்.) அப்பழிப்போற்றினல்லது, முனைவனூலின் முடித்தகேள்வியான் எனைத்துப்பொருளையுமுணர்ந்தபெரியோர், பொதியில் இமயம் புகாரென்னும் இம்மூன்றும் ஒருதன்மையவாதலான், ஆதியிற்றேன்றிச் சலிப்பின்றி நிலைபெற்றனவென்று கூறினல்லது, அவற்றிற்கு அந்தமுண்டென்று கூருர் ; அவற்றில் உயர்ந்தோருண்டாகலானென்க.

ஆயினுமென்பது ஒரெண்ணிடைச்சொல்; [1] "கிளந்த வல்ல வேறுபிற தோன்றினுங், கிளந்தவற் றியலா னுணர்ந்தனர் கொளலே" என்னும் புறனடையாற் கொள்க. பதியெழுவறியா - பதியினின்றும் பெயர்தலையறியாத; எனவே பகையின்மைகூறிற்று. பழங்குடி - தொன்மரபு; ஆதிகாலத்தேறிய குடியுமாம். கெழீஇய - பொருந்தின. பொதுவறுசிறப்பு - தனக்கே உரியசிறப்பு. ஒடுக்கம் - முடிபு. உயர்ந்தோர் - முனிவனும், இறைவனும், அரசனும்; இனி உயர்ந்தோர் - அகத்தியனும் இருடிகளும் பழங்குடியிலுள்ளாருமென்றுமாம்; என்றது இமயத்தோடும் பொதியிலோடுமுள்ள இருடிகளையும் புகாரிலுள்ள வணிகரையும் உவமித்தவாறும். உண்மையின் - உண்டாகலின். முடித்தகேள்வி - கரைகண்டகேள்வி.

இவற்றாற் செம்பியன்சிறப்பும் புகார்ச்சிறப்பும் கூறியவாறாயிற்று.

௨0. அதனால் - (இ - ள்.) அஃது அத்தன்மையதாகலான், என்றது, புகார் நிலைபேறுடையதாகலாற் போகமும் புகழும் நிலைபேறுடையவென்றவாறு.

௨௧ - ௪. நாகநீ ணகரொடு..............அகவையாள்

(இ - ள்.) சுவர்க்கம் [2] பவணமென்னும் இவற்றிற்குள்ள புகழும் போகமும் நிலைபெற்ற அப்புகாரென்னு நகரின்கண் மழைபோல்வழங்கும் கையை யுடைய மாநாய்கனுடைய குலத்திற்றோன்றிய கொம்புங்கொடியும்போல்வாள்; பன்னீராண்டிற்குட்பட்ட பிராயத்தாளாயினளென்க.

நாகநீணகர் - சுவர்க்கம். நாகநாடு - பவணம். போகநீள்புகழ், உம்மைத் தொகை; இருபெயர்க்கண்வந்தது; எதிர்நிரனிறை. மன்னும் - நிலைபெறும்; இடைநிலைவிளக்கு. மாக வான் - விசும்பின் மேகம். மாநாய்கன், சிறப்புப்பெயர். ஈகை - பொன்; வான்கொடி - வானவல்லி; பொன்மெய் வானவல்லியென்க. அவற்றோடுமொக்க மன்னும் புகாரெனினுமமையும்.

உ-ம். அவளுந்தான் - (இ - ள்.) அவள்தான், உம்மை இசைநிறை.

[1] தொல்காப்பியம், இடைச்சொல்லியல், சூ. சஅ.
[2] பவணம் - நாகலோகம். சுவர்க்கத்திலும் நாகலோகம் போகத்திற் சிறந்ததென் பது சைனநூற் றுணிபு.

## க.—மங்கலவாழ்த்துப்பாடல்.

கு.க.

உச - கூ. போதிலார்..............என்பாண்மன்னோ
(இ - ள்.) போதிற்பொருந்திய திருமகளுடைய புகழுடையவடிவு இவள் வடிவையொக்குமென்றும், பழுதில்லாத அருந்ததியுடைய புகழையுடைய கற்பு இவள் கற்பையொக்குமென்றும் உலகின்மாதரார் தன்னைத்தொழுதேத் தும்படி விளங்கிய பெருங்குணங்களைக் காதலிப்பாள்; அவள்யாரெனிற் கண் ணகியென்று பெயர்கூறப்படுவாளென்க.

பெயரால் வேறுபடுமென்பதாம். திருவினாள், ஒருபெயர். தீது - [1] பிறர் நெஞ்சு புகுதல். திறம் - கற்பு. மன்னும், இடைச்சொல். புகழ், இடைநிலை விளக்கு. பின்வருகின்ற இவளென்பதனை முன்னுங்கூட்டுக. மன்னும் ஓவும் இடைச்சொல்.

கூ0 - ச. ஆங்கு..............அகவையான்
(இ - ள்.) அப் புகாரினிடத்து * நெடுநிலமுழுவதையும் தனியேயாளும் கரிகாலனைமுதற்குடியாகவைத்து எண்ணுதலையுடைய ஒப்பற்றகுடிகளின் மிக் கோங்கிய செல்வத்தையுடையான்; அவன்யாரெனின், தன்னுடையபொருளை இல்லாதார்க்கருளும்

மாசாத்துவானென்று பெயர்கூறப்படுவான்; அவ்விரு நிதிக்கிழவனுடையமகன் பதினாறாண்டிற்கு உட்பட்ட பிராயத்தானென்க. பன்னிரண்டும் பதினாறுமாகிய பிராயத்தின் முதிர்தல் மரபன்மையின்,

அகவையான் அகவையானென்றார். ஒப்பின்மையின் மிகுதிகூறுவார் ஒரு தனிக்குடியென்றார். ஒடு - இன்; உருபுமயக்கம்; உறழ்பொரு; இதுவும் புறனடையான் முடிந்தது. வருநிதி - நல்வினையாற்[1] கலத்தினுங் காலினும் வருநிதி; நியாயத்தால் வருநிதியுமாம். பிறர்க்கு - பொருளற்றார்க்கு; நிதியற்றார்க்கும் நல்வினைசெய்தார்க்குமென்றுமாம்.

பலர்க்கென்றும்பாடம்; அதற்கு இல்லாராகிய பலர்க்கென்க. ஆர்த்தும் - நிறைவிக்கும்; நுகர்விக்குமென்றுமாம். மாசாத்துவான், நிதிக்கிழவன், சிறப்புப்பெயர். இயற்பெயர். இரு

**௩௫. அவனுந் தான்**—(இ - ள்.) அவன்றான்.

ஈண்டும் உம்மை இசைநிறை.

௩௬ - ௯.

மண்டேய்த்த........................என்பான்மன்னோ.

(இ - ள்.) மண்ணைத்தொலைத்த புகழினையுடையான், பண்ணைத்தொலைத்த மொழியினராகிய மதிபோலுமுகத்தினையுடைய மடவார் தம் காதலால் உலகிற் கண்டேத்தப்படுஞ்செவ்வேளென்று அவனிசையைத் தமதாயத்தின்கட் பாராட்டிப் பரப்பிக் காமக்குறிப்பினால் உட்கொண்டு ஏத்துதற்குரியான்; அவன்யாரெனின், கோவலனென்று பெயர்கூறப்படுவானென்க.

'மண்டேய்த்த' என்றார், புகழ்வளரப் பூமி சிறுகலான்; மண் இடத்திற் சிறிது என்றார் வள்ளுவனும். புகழினன், எழுவாய். பண்டேய்த்த-பண்ணைக் கெடுத்த. செவ்வேளென்றார், வேள் இருவருளராகலின். முருகவேளைச் செவ்

[1] மணிமேகலை, உஉ - ஆம் காதை, சசு - ஆம் அடி முதலியவற்றைப்பார்க்க.
[2] சிலப். மனையறம், எ. (பி - ம்.) * 'தேமிதிலம்.'

வேளென்றது, [1] "ஞாயிறு கடற்கண் டாஅங்கு" என்பதனுல். போக்கி - எங்கும் போகப்பண்ணி; பரப்பியென்றபடி. கொண்டு - காமக்குறிப்பினால் உட்கொண்டு. கிழமை - உரிமை.

இனி, மடவாரென்பதற்குப் பூமாதும் கலைமாதும் சயமாதும் புகழ்மாதும் புவிமாதுமென்று கூறி, இவர், அழகிற்கும் அறிவிற்கும் ஆண்மைக்கும் புகழுக்கும் பொறைக்கும் இவனென்றுட்கொண்டு ஏத்தாங் கிழமையானெனினுமமையும்; [2] "கலையின தகலமுங் காட்சிக் கின்பமுஞ், சிலையின தகலமும் வீணைச் செல்வமு, மலையினி னகலிய மார்ப னல்லதிவ், வுலகினி லிலையென வொருவ னுயினன்" என்றாற்போல.

இனி, மொழியினுலென்றுபாடமாயின், மடவார் திரண்டுவே மொழியாலே புகழினுன் செவ்வேளென்று இசையைப்பரப்ப ஏனையோரும் காதன்மையாற் கொடை அழகு வீரம் இவற்றிற்குரியான் யாவனெனிற் கோவலனென்று பெயர் சொல்லப்படுவானென்றலுமொன்று; இப்பொருளுக்கு, போக்கி - போக்கவென்க.

கண்ணகியை முற்கூறினுர், பத்தினியை ஏத்துதல் உட்கோளாகலான்.

௪0 - ௪௨. அவரை..............மகிழ்ந்துழி

(இ - ள்.) அத்தன்மையாரைக் குரவரிருவரும் ஒருபெருநாளிலே மணவணி காணவேண்டி மனமகிழ்ந்தனர்; மகிழ்ந்த அளவிலே யென்க.

உழி - அளவு.

௪௩ - ௪. யானை..............ஈந்தார் மணம்

(இ - ள்.) அவர் அணியிழையாரை யானையெருத்தத்து இருத்தி அம்மா நகர்க்கு இவர்மணமென்னுமகிழ்ச்சியைக் கொடுத்தாரென்க.

எருத்தம் - புறக்கழுத்து. இரீஇ - இருத்தி. ஈந்தாரெனவே அறிவித்தா ரென்பதாயிற்று. சிலமகளிரையணிந்து யானையேற்றி அறிவித்தல் மரபு.

௪௫ - எ. அவ்வழி,..............அணியெழுந்தது

(இ - ள்.) அவ்விடத்து, முரசுமுதலிய இயம்பின; முருடுமுதலிய அதிர்ந்

தன; பணிலமுதலிய முழங்குதல் எழுந்தன; வெண்குடைகள் வெழுந்தபடி எழுந்தன; மங்கலவணி ஊரெங்கும் எழுந்ததென்க.

அரசனுயர்

முருடு - பத்தல்; மத்தளமுமாம். அகலுள் - தெருவுமாம்,

௪அ- கூ. மாலைதாழ்..............பந்தர்க்கீழ்

(இ - ள்.) மாலைதங்கிய சென்னியையுடைய வயிரமணித் தூணிரைபொருந்திய மண்டபத்து நீலப்பட்டு மேற்கட்டியின்கீழ்நிறுத்தின முத்தின்பந்தரிடத்தேயென்க.

நீலவிதானங்கூறினார், முத்து ஒளிபெறுதல்நோக்கி; அஃது அக்காலத்து முத்துநோக்குவார் ஒப்புக்கு விரித்து நோக்குப. பூ - பொலிவு.

௫0 - ௫௩. வானூர்...........நோன்பென்னை

## ௧—மங்கலவாழ்த்துப்பாடல்.

௬௩

(இ - ள்.) மதியம் சகடணைந்தாளிலே பார்ப்பான் மறையிற் சோதிடாங் கத்துள் வணிகர்க்குக் கூறியநெறியிலே சடங்குகாட்ட இவர் இங்ஙனம் தீவலஞ் செய்கின்ற இதனைக் காண்கின்றவர் கண்கள் முற்பவத்திற்செய்த தவம் யாது காணென்பாராயும்,

காண்கின்றவர்கள்நோன்பு என்னையெனினுமமையும். சகடு - உரோகிணி. மாமுதுபார்ப்பான் - பிதாமகன் ; புரோகிதனுமாம்.

௫௪ - ௫. விரையினர்............நோக்கினர்

(இ - ள்.) விளங்குமேனியர், விரையினராய் மலரினராய் உரையினராய்ப் பாட்டினராய் ஒதுங்கிப்பார்த்த பார்வையினராயும்,

௫௬ - ௭. [1] சாந்தினர்............சுண்ணத்தர்

(இ - ள்.) எந்திளமுலையினர், சாந்தினராய்ப் புகையினராய்க் கோதையராய்ச் சுண்ணத்தினராயும்,

௫௮ - ௯. விளக்கினர்..............மூரலர்

(இ - ள்.) முகிழ்த்தமூரலர், விளக்கினராய்க் கலத்தினராய் முளைப்பாலிகையினராய் நிறைகுடத்திட்ட கை புல்லினும் போதினும் நெகிழாமற் புணர்ந்தனராயும் நிரையினர்கள்,

ஒருசொல் வருவிக்க.

௬௦ - ௬௮. போதொடு...............எனவே

(இ - ள்.) கூந்தலையுடைய கொடியன்னார், இவளும்

தன்காதலனைத் தன்
கண்ணினும் நெஞ்சினும் பிரியாமற் புணர்வோளாக; இவள்காதலனும் இவளை
அகத்திட்டகை * புல்லினும் போதினும் நெகிழாமற் புணர்வோனாக; இருவரன்
பும் சருவதா ஒருவரன்பாகவென நினைந்து தம் வழிபடுதெய்வத்தை மனத்தால்
வணங்கி அவ்வகையேத்திப் பின்பு சிலமலரைத்தூவி, இப்பால் இமயத்திருத்
திய வேங்கை பொற்கோட்டு உப்பாலிடத்ததாயே நிற்பதாக; எப்பாலும் தன்
பேர்மேம்பட்ட வேலையுடைய கரிகாலன் மாறில்லாத தன் திகிரியை உருட்டு
வோனாகவெனச் சொல்லி, உலகில் அருந்ததியன்னாளை அமளியேற்றினரென்க.

கொடியன்னார், பிரியாமல் நெகிழாமல் தீதறுகென ஏத்தித் தூவி அருந்ததியன்னாளை உழையதாக உருட்டுவோனாகவென அமளியேற்றினரென்க.

இது பிராசாபத்தியம்.

பா, மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா.

## க.—மங்கலவாழ்த்துப்பாடல் முற்றிற்று.



---

[1] மதுரைக்காஞ்சி, கசுஅ - க.
(பி - ம்.) * 'புல்லும்போதுநெகிழாமல்.'

# இரண்டாவது
# மனையறம்படுத்தகாதை.



உரைசால் சிறப்பி னரைசுவிழை திருவிற்
பரதர் மலிந்த பயங்கெழு மாநகர்
முழங்குகடன் ஞால முழுவதும் வரினும்
வழங்கத் தவாஅ வளத்த தாகி
யரும்பொரு டரூஉம் விருந்திற் றேஎ
மொருங்குதொக் கன்ன வுடைப்பெரும் பண்டங்
கலத்தினுங் காலினுந் * தருவன ரீட்டக்
குலத்திற் குன்றாக் கொழுங்குடிச் செல்வ
ரத்தகு திருவி னருந்தவ முடித்தோ
ருத்தர குருவி னொப்பத் தோன்றிய
கயமலர்க் கண்ணியுங் காதற் கொழுநனு
மயன்விதித் தன்ன மணிக்கா லமளிமிசை
நெடுநிலை மாடத் திடைநிலத் திருந்துழிக்
கழுநீ ராம்பன் முழுநெறிக் குவளை

---

க. உரைசால் சிறப்பு - புகழமைந்த சிறப்பு.

உ. பரதர் - கடலோடிகள்.

ச. வழங்க - உபசரிக்க. தவா - கெடாத.

ரு. விருந்திற்றேம் - பரதேசங்கள்.

சு. அத்தேயங்களிற் பொருள்களின் தொகுதிகூறுவார், தேம் தொக்கன்னவென்றார்.

ஒருங்கு

அ. குலத்திற்குன்றா - குலதருமத்திற்குன்றாத. செல்வர் - இருவர்

பிதாக் களும்.

கூ - க0. அத்தகு...........தோன்றிய - அங்ஙனம் தக்க திருவினையுடைய அருந்தவமுடித்தோர் போகபூமியில் தோன்றுமாறுபோலத் தோன்றிய. எ. கலத்திலுங் காலிலுந் தருவன ரீட்டுதலால் (ரு) விருந்திற்றேஎம் (கூ) ஒருங்குதொக்கன்னபண்டம் (ச) வழங்கத் தவாஅப்பெருக்கத்ததாகி (க) அரசு விழை திருவினையுடைய (உ) கடலோடிகள் மலிந்தநகர் (க0) உத்தரகுருவினை யொக்கும்படி (கூ) செல்வர்க்குத் தோன்றிய கண்ணகியுங்கோவலனும். இவர்தோன்றுதலான் நகர் உத்தரகுருவை ஒத்தது.

(பி - ம்.) * 'தருவனரீட்டி'

## உ.—மனையறம்படுத்தகாதை.

சுஅ

யரும்புபொதி யவிழ்ந்த சுரும்பிமிர் தாமரை
வயற்பூ வாச மளைஇ யயற்பூ
மேதகு தாழை விரியல்வெண் டோட்டுக்
கோதை * மாதவி சண்பகப் பொதும்பர்த்
தாதுதேர்ந் துண்டு மாதர்வாண் முகத்துப்
புரிகுழ லளகத்துப் † புகலேக் கற்றுத்
திரிதரு சுரும்பொடு செவ்வி பார்த்து
மாலைத் தாமத்து மணிநிரைத்து வகுத்த
கோலச் சாளரக் குறுங்க ணுழைந்து
வண்டொடு புக்க மணவாய்த் தென்றல்
கண்டுமகிழ் வெய்திக் காதலிற் சிறந்து

விரைமலர் வாளியொடு ‡ வேனில்வீற் றிருக்கு
நிரைநிலை மாடத் தரமிய மேறிச்
சுரும்புணக் கிடந்த நறும்பூஞ் சேக்கைக்
கரும்பும் வல்லியும் பெருந்தோ ளெழுதி
முதிர்கடன் ஞால முழுவதும் விளக்குங்
கதிரொருங் கிருந்த காட்சி போல
வண்டுவாய் திறப்ப நெடுநிலா விரிந்த
வெண்டோட்டு மல்லிகை விரியன் மாலையொடு
கழுநீர்ப் பிணையன் முழுநெறி பிறழத்
தாரு மாலையு மயங்கிக் கையற்றுத்
தீராக் காதலிற் றிருமுக நோக்கிக்
கோவலன் கூறுமோர் குறியாக் கட்டுரை
' குழவித் திங்க ளிமையவ ரேத்த
வழகொடு முடித்த வருமைத் தாயினு
§ முரிதி னின்னோ டுடன்பிறப் புண்மையிற்

௩௫. இருவரது புணர்ச்சி கூறுவார், 'தாரு மாலையு மயங்கி' கையற்று - செயலற்று; புணர்ச்சியால் அவசமாகி.

என்றார்.

கக. கண்ணகியும் கோவலனும் (௧௯) இடைநிலத்திருந்துழித் (௨௪) தென்றல் (௨௫) கண்டுமகிழ்வெய்திச் சிறந்து (௨௭) ஏறியிருந்து (௩௫) கையற்றெனக்கூட்டுக.

(௨௧) எழுதிக்

இனி நயப்புக் கூறுகின்றது.

௪0. உரிதின் - உரித்தாக.

---

[1] குழவியென்னும் இளமைப்பெயர் திங்களையடுத்தவருமென்பதற்கு இது மேற்கோள்; (தொல். மரபு. சூ. ௨௪ - பேர்; நன். மயிலை. சூ. ௧௮௭.)

(பி - ம்.) * 'மாதவிச்.' † 'பூவிலேக்கற்அ.' ‡ 'வெளில்வீற்றிருந்ததெய்வதிலை.' § 'உரிதுநின்றேடு', 'உரிதினினின்றேடு.'



பெரியோன் றருக திருநுத லாகென
வடையார் முனையகத் தமர்மேம் படுநர்க்குப்
படைவழங் குவதோர் பண்புண் டாகலி
னுருவி லாள னொருபெருங் கருப்புவி
லிருகரும் புருவ மாக * வீக்க

மூவா மருந்தின் முன்னர்த் தோன்றலிற்
றேவர் கோமான் றெய்வக் காவற்
† படையினக் கலிக்கவத னிடையினக்

கிடையென

வறுமுக வொருவனோர் பெறுமுறை யின்றியு
மிறுமுறை காணு ‡ மியல்பினி னன்றே

யஞ்சுடர் நெடுவே லொன்றுநின் முகத்துச்
செங்கடை மழைக்க ணிரண்டா § வீத்தது
மாயிரும் பீலி மணிநிற ** மஞ்ஞைநின்
சாயற் கிடைந்து தண்கா னடையவு

மன்ன நன்னுதன் மென்னடைக் கழிந்து
நன்னீர்ப் பண்ணை †† னளிமலர்ச் செறியவு
மளிய தாமே சிறுபசுங் கிளியே
குழலும் யாழு மமிழ்துங் குழைத்தநின்
மழலைக் கிளவிக்கு வருந்தின வாகியு
மடநடை மாதுநின் ‡‡ மலர்க்கையி னீங்கா
துடனுறைவு மரீஇ யொருவா வாயின
நறுமலர்க் கோதைநின் னலம்பா ராட்டுநர்
மறுவின் மங்கல வணியே யன்றியும்

---

சஉ - ரு. காமனுக்கு வென்றிகொடுத்தலால் அமர்மேம்படுநராமுறைமை இவட்குக் கூறப்பட்டது.

சசு. இவளைத் திருமகளாக்கி அமிர்தின்முன்பிறத்தல் கூறப்பட்டது.

சகு - ருஉ. இவ்வாறு ஒருரிமையின்றியேயும் குமரவேள் தன்கையில் வேலொன்றையும் இரண்டாக்கித்தந்தது எம்மை வருத்தும் இயல்பினனன்றே.

ருரு. நன்னுதல், முன்னிலைப்பெயர். ருசு. செறிதல் - ஒளித்தல். ருஎ. குழைத்தல் - கூட்டுதல்; இஃபொருளுவமை.

ருஎ. கிளி (சுக) நீங்காவாயின; அதனால் (ருஎ) அளியவென்க.

சுஉ. நலம்பாராட்டுநர் - ஒப்பிப்பார். சுரு. மங்கலவணி - இயற்கையழகு.

---

[1] 'அடையார்...சக்க' என்னும் பகுதி, தக்கயாகப்பரணியில், ௩௨௨ - ஆம் தாழிசையுரையில் மேற்கோளாகக் காட்டப்பெற்றுள்ளது.

(பி - ம்.) * 'சுப்த்தனன்.' † 'படைநினக்களித்தனன்தன்.' ‡ 'இயல்பினன்றே.' § 'சுத்தனன்.' ** 'மஞ்ஞைஞ்சாயற்கு' †† 'தளிர்மலர்.' ‡‡ 'மலர்க்கைநீங்கா துடனுறைபு.'

## ௨.—மனையறம்படுத்தகாதை.

பிறிதணி யணியப் பெற்றதை யெவன்கொல்
பல்லிருங் கூந்தற் சின்மல ரன்றியு
மெல்லவிழ் மாலையொ டென்னுற் றனர்கொ
னான நல்லகி னறும்புகை யன்றியு
மான்மதச் சாந்தொடு வந்ததை யெவன்கொ
றிருமுலைத் தடத்திடைத் தொய்யி லன்றியு
மொருகாழ் * முத்தமொ டுற்றதை யெவன்கொ
றிங்கண்முத் தரும்பவுஞ் சிறுகிடை வருந்தவு
மிங்கிவை யணிந்தன ரென்னுற் றனர்கொன்
**மாசறு பொன்னே வலம்புரி முத்தே**
**காசறு விரையே கரும்பே தேனே**
**யரும்பெறற் பாவா யாருயிர் மருந்தே**
**பெருங்குடி வாணிகன் பெருமட மகளே**
**மலையிடைப் பிறவா மணியே யென்கோ**
**வலையிடைப் பிறவா வமிழ்தே யென்கோ**
**யாழிடைப் பிறவா விசையே யென்கோ**
**தாழிருங் கூந்தற் றையா** னின்னையென்
றுலவாக் கட்டுரை பலபா ராட்டித்
தயங்கிணர்க் கோதை தன்னொடு தருக்கி
வயங்கிணர்த் தாரோன் மகிழ்ந்துசெல் வுழிநாள்
வாரொலி கூந்தலைப் பேரியற் கிழத்தி

அரு மறப்பருங் கேண்மையோ டறப்பரி சாரமும்
விருந்து புறந்தரூஉம் பெருந்தண் வாழ்க்கையும்
வேறுபடு திருவின் வீறுபெறக் காண
வுரிமைச் சுற்றமோ டொருதனி புணர்க்க

கூச. பிறிதணி அணிதலாற் பெற்றபயன் என். [நாற்றம்.
கூரு. எல் - ஒளி. என்னுற்றனர் - என்னவுறவுடையார். கூஎ. நானம் -
கூஅ. மான்மதம் - புழுகு கத்தூரிமுதலாயின. வந்தனை -
வந்தவுறவு.
எ0. உற்றதை - உறவு. எஉ. என்னுற்றனர் - என்னபித்தேறினர்.
அக. உலவாமை - ஒழியாமை. அஉ. தருக்கி - மிக்கு.
அச. (பா) பேரிற்கிழத்தி - கோவலன் மாதா.
அடு. கேண்மை - சுற்றத்தாரைப்பேணுதல். (பா) அறப்பரிகாரம் -
அறங் காரைப் பூசித்து அறத்தைப் பரிகரித்தல். அசு.
பெருந்தண்வாழ்க்கை-இல்லறம்.
அஎ. வேறுபடுதிருவின் - நானாவிதமான செல்வத்தோடே. வீறு -
பெருமை.
அஅ. உரிமைச்சுற்றம் - அடிமைத்திரள். ஒருதனியாகப்
புணர்க்கவென்க.

(பி-ம்) * 'மூத்துடன்.'



யாண்டுசில கழிந்தன விற்பெருங் * கிழமையிற் கூற காண்டகு
சிறப்பிற் கண்ணகி தனக்கென். வெண்பா.

† தூமப் பணிகளொன் றித் தோய்ந்தா லெனவொருவார்
காமர் மனைவியெனக் கைகலந்து - நாமர்

தொலையாத வின்பமெலாந் துன்னினர் மண்மே னிலையாமை கண்டவர்போ னின்று.



க - உ. [1] உரைசால்..........மாநகர்

(இ - ள்.) புகழமைந்த சிறப்பினையுடைய அரசரும் விரும்பும் தையுடைய பரதரான் மிகுதிபெற்ற பயன்மிக்க மாநகரென்க.

செல்வத்

அரசென்பது, [3] "குடிமை யாண்மை" என்னுஞ் சூத்திரத்து '
நிலையின வாயினு, மஃறிணை மருங்கிற் கிளந்தாங் கியலும் '
சிறப்பும்மை விரிக்க.

என்பதனால் முடிந்தது;

இனிப் பரதர் மிகுதிபெறுதற்குக் காரணமான நகரெனினுமாம்.

பயம் - மன்னர் விழைச்சி.

௫ - கக. முழங்குகடல்..........கொழுநனும்

(இ - ள்.) மாநகர், கலத்தாலும் காலாலும் ஈட்டுதலானே பெறுதற்கரிய பொருளைத்தரூஉம் புதுமையையுடைய தீவுமுதலிய தேயங்கள்வந்து கூடி

ஒருங்குதொக்காற்போன் றுள்ள பண்டம் முழங்குகடல்சூழ்ந்த ஞாலமுழுதும் ஒக்கவரினும் வழங்கத்தொலையாதவளத்தினையுடையதாகலின், அங்ஙனம் அறத்

திணுகிய பொருளால் [4] தலைப்படுதானத்தைச் செய்தோரெய்தும் உத்தரகுருவினையொக்கும்படி குலத்திற்குன்றாத செல்வர்க்குத் தோன்றிய பெரியமனைபோலும் கண்ணையுடையாளும் அவள் காதலிக்கப்படும் கொழுநனுமென்க.

---

[1] இவ்வெண்பாப் பலபிரதிகளிலில்லை.

[5] இந்த "உரைசால் சிறப்பின்" என்னும் அடிக்குமுன்னர், "திருவின் செல்வி பொலிவு பெருநில மடந்தையை, பொருதனி யாண்ட செருவடு திண்டோட், கரிகாற் பெரும்பெயர்த் திருமா வளவனைப், பாலை பாடிய பரிசிலன் றெடுத்த, மாலைத் தாகிய
வளங்கெழு செல்வத், தாறைந் திரட்டியு மாயிரங் குடிகளும், வீரசான் ஞாலத்து வியலணி யாகி, யுயர்ந்தோ ருலகிற் பயந்தரு தானமு, மில்லது மிரப்பு நல்லோர் குழுவுந், தெய்வத் தானமுந் திருந்திய பூமியு, மைய ருறையுளு மறவோர் பள்ளியும், விண்ணவ ருலகினி வண்ணிடு நகரமொ, டெண்ணுவரம் பறியா விசையொடு சிறந்த" என்னும் அடிகள் பதின்மூன்றும், மிதிலைப்பட்டி. அழகியசிற்றம்பலக்கவிராயரவர்கள் வீட்டிச் சிலப்பதிகார மூலப்பிரதியில் இருந்தன.

[6] தொல்காப்பியம், இளவியாக்கம், சூ. ௩௯.

[7] நிலைப்படுதானம் - உத்தமதானம்; "அறத்தி னீந்திய வரும்பெரும் பொருளைப், புறத்துறைக் குற்றமூன் றகந்தநற் றவர்க்குக், கொள்ளெனப் பணிந்து குறையிரந் தவர்வயி, னுள்ளமுவந் தீவ துத்தம தானம்" என்பது திவாகரம்.

(பி - ம்.) * 'கேண்மையிற்.' † 'நாமப்பணிபலவுந்தோலாதவேலேந்து.'

## உ.—மனையறம்படுத்தகாதை.

சூ

அத்தகு திருவினென்பதற்கு அவ்வளத்திற்குத் தக ஒழுகும் மனைவியோ டேயெனினுமமையும்.

அரும்பொருளாவன:—[1] "நீரின் வந்த நிமிர்பரிப் புரவியுங், காலின் வந்த கருங்கறி மூடையும், வடமலைப் பிறந்த மணியும் பொன்னுங், குடமலைப் பிறந்த வாரமு மகிலுங், தென்கடன் முத்துங் குணகடற் றுகிருங், கங்கை வாரி யுங் காவிரிப் பயனு, மீழத் துணவுங் காழகத் தாக்கமு, மரியவும் பெரியவும்" எனப் பட்டினப்பாலையுட்

சொன்னவும் பிறவும்.

[1] " இருவகைப் பிரிவு நிலைபெறத் தோன்றினு, மூரிய தாகு மென்மனார் புலவர் " என்பதனாற் கலத்தினும் காலினு மென்றார்; கலம் - மரக்கலம். கால் - வட்டை. இதனானே பின்னரிருமரபோரும் மிக்கு மாரபெனக்கொள்க.

கலத்தொடுசேறல் பின்னரு

அருந்தவம் - ஈண்டுத்தானம். உத்தரகுரு - போகபூமி; அஃது அறு வகைப்படும்; என்னை: [3] " ஆதி யரிவஞ்ச நல்லரி வஞ்ச, மேமதவஞ்சமிரண வஞ்சந், தேவ குருவ மூத்தர குருவமெனப், போக பூமி யறுவகைப் படுமே " என்றாராகலின். அதிற்பிறந்து [4] போகநுகருமாறு, [5] முடிபொருட்டொடர்நிலை யுள் தானப்பயன் கூறும்வழிக்காண்க.

ஈட்டுதலால் ஒருங்குதொக்கன்ன பண்டம் வழங்கத்தவா வளத்ததென ஒட்டுக.

குலத்திற்குன்றுதல்-பூப்பின்கட்பிரிதல்; அன்றி [6] நடுவின்றி நன்பொருள் வெஃகலுமாம். குலத்திற்குன்றாமை - [7] "கெடுநுகத்துப் பகல்போல, நடுவு நின்ற நன்னெஞ்சினோர், வடுவஞ்சி வாய்மொழிந்து, தமவும் பிறவு மொப்ப நாடிக், கொள்வதூஉ மிகைகொளாது கொடுப்பதூஉங்

தெனக்கொள்க. செல்வர் - இருவர் பிதாக்களும்.

குறைகொடாது " என்ப

மாநகர், வளத்ததாகலின் ஒக்கும்படி செல்வர்க்குத்தோன்றிய கொழுநனுமென்க.

கண்ணியும்

கஉ - ரு. மயன்விதித் தன்ன............இருந்துழி

(இ - ள்.) அங்ஙனந் தோன்றிய கண்ணியும் கொழுநனும் மாடத்து இடைநிலைக்கண்ணே மயன் நிருமித்துவைத்தாற் போன்ற மணிக்காலமளியிலைசயே இருந்தழியென்க.

---

[1] பட்டினப்பாலை, கஅ௫ - கஉ. [2] தொல்காப்பியம், அகத்திணையியல், சூ. கக.

[3] திவாகரம், கஉ - வது.

[4] போகபூமியிற் பிறந்து போகநுகருமாற்றைப் பின்வரும் திவாகரச்சூத்திரத்தா லுணர்க; "பதினு றுட்டைக் குமரனும் விதிவழிப், பன்னீ ராட்டைக் குமரியு மாகி, யொத்த வன்பினு மொத்த நலத்தினுங், கற்பக நன்மர நற்பய னுதவ, வாங்கிய செய்தவத் தளவு மவ்வழிப், போக நுகர்வது போக பூமி."

[5] முடிபொருட் டொடர் நிலையென்றது, அறமுதலிய நாற்பயனையுஞ் சிந்தாமணி முதலியவற்றை.

கூறும் சேவக

[6] திருக்குறள், எகக. [7] பட்டினப்பாலை, உ0௬ - ௬0.



உழி - அளவு. மயன் - தெய்வத்தச்சன். நெடுநிலை - எழுநிலை; இடை நிலம் - காலாநிலம்.

கச - உ௫. கழுநீ ராம்பல்..........சிறந்து

(இ - ள்.) முழுநெறியாகிய மேதகு குவளையுடைய அரும்புகள் சுரும்பு இமிர இதழவிழ்ந்த கழுநீர்முதலிய நீர்ப்பூக்களின் வாசத்தைக் கலந்துண்டு அவற்றின் வேறாய கோட்டுப்பூமுதலியவற்றுள் தாழையினது விரிந்த வெள்ளிய தோட்டினையும் சண்பகப்பொதும்பரிலுண்டாகிய கோதைபோலும் மாதவிப் பூவின் தாதினையும் ஆராய்ந்துண்டுபோந்து வாண்முகத்து மாதருடைய புரிந்த குழற்சிகையையுடைய

அளகத்துண்டாகிய கலவைமணம்பெறுதற்கு எக்கற்றுப் புகுதற்கு வழிகாணமற் சுழலுகின்ற சுரும்பொடும் வண்டொடும் மணித்தாமத் தாலே ஒழுங்குபட்டுநிரைத்து வகுத்த அழகினையுடைய சாளரக்குறும்புழையாற் செவ்வியறிந்து நுழைந்துபுக்க மணவாய்த் தென்றலைக்கண்டு மகிழ்ச்சியெய் திப் புணர்ச்சியைவிரும்பிக் காதன்மிகுதலாலென்க.

சாதிபற்றி ஆம்பலென்றாரெனினும் ஈண்டுக்கூறியது சேதாம்பலென வுணர்க; இஃது அவற்றோடு ஒருதன்மைத்தாகிய பகற்போதன்றெனினும் அவை விரியுங்காலத்து இது குவிதலின்மையிற் கலந்துண்டென்றார். இதழொடிக்கப் படாதவெனவே செவ்விகூறிற்று; [1] "தீநீர்ப்பெருங்குண்டுசுனைப்பூத்தகுவளைக், கூம்புவிடு முழுநெறி" என்றார் புறப்பாட்டினும். கோதை-மாலை; ஒழுங்குமாம். வெண்கோட்டுத்தாழையுமாம்; சண்பகப்பொதும்பர்க் கோதைமாதவியென்க; பொதும்பர் - மரச்செறிவு. இவை சண்பகத்தோடு மலர்தலின் தேர்ந்துண்டென்றார்.

வாண்முகத்தளகமென்பாருமுளர்.

செவ்விபார்த்து நுழைந்து புக்கவென்க.

புகல - புகுதற்கு. ஒடு - ஒருவினை.

செவ்வி - இவர்மகிழுஞ்செவ்வி.

பின்னின்ற உண்டென்பதனை அளைஇ உண்டெனவும், தேர்ந்துண்டெனவும் இரண்டிடத்தும் ஒட்டுக. அன்றி அளைஇ வண்டொடுபுக்கதென்றலெனினுமமையும். மணவாய்த்தென்றல் - மணத்தைத் தன்னிடத்தேயுடைய தென்றல்.

அளைஇ உண்டு தேர்ந்துண்டு எக்கற்றுத் திரிதருசுரும்பொடும் வண்டொடும்புக்க தென்றலென்க.

உசு - எ. விரைமலர்...........ஏறி

(இ - ள்.) அங்ஙனம் அவர் காதன்மிகுதலாலே இடைநிலத்துநின்றும் மேல் நிரைத்துவகுத்த நிலங்களில் மணத்தினையுடைய மலர்வாளியோடே காமன்வீற்றிருக்கும் மேனிலமாகிய நிலாமுற்றத்தின்மேல் ஏறியென்க.

வேனில், ஆகுபெயராற் காமன். பகையின்றிக் கல்வியொடு செல்வத்திடை † நஞ்சுற்றகாம நுகர்ந்திருத்தலின், வரனியும் காமனும் வருந்தாதிருந்தமை தோன்ற வீற்றிருக்குமென்றார்; இஃது உதாரமென்னுமலங்காரம்; என்னை?

¹ புறநானூறு, கககை. † சீவகசிந்தாமணி, கக.

## உ.—மனையறம்படுத்தகாதை.

சூத்திரம்

¹ "உதார மென்ப தோதிய செய்யுளிற், குறிப்பி னொருபொருணெறிப்படத் தோன்றல்" என்பது அணியியலாகலின்.

உஅ - கூக. கரும்புணக் கிடந்த........... காட்சிபோல

(இ - ள்.) அங்ஙனம் நிலாமுற்றத்து ஏறினவர்கள், கரும்புகளுண்டற்குப் பாரித்துவைத்தாற்போலக் கிடந்த நறும்பூஞ் சேக்கைக்கண்ணே கடல்சூழ் ஞாலமுழுவதையும் விளக்கும் ² ஞாயிறும் திங்களும் சேர இருப்பக்கண்ட காட்சிபோல இருந்து கரும்பு வல்லியென்பனவற்றைப் பெரிய தோளிலே யெழுதியென்க.

கரும்பையும் வல்லியையும் தோளில் எழுதியெனவே தொய்யிலொன்றையும் முலைமேலெழுதியென்பதாயிற்று. பூவின்செவ்வி கூறுவார், கரும்புணக் கிடந்த வென்றார்.

இனி ³ அதிகாரப்புறனடையால், உகரங்கெடுத்து உண என்பதனைப் பெயர்ப்படுத்துச் சுரும்புகடாம் பலவகையுணவும் உளவழி அவ்வக்காலத்து ஆண்டுச்சென்று ஏறியும் இழிந்தும் சுழன்றும் மெய்வருந்தாது அவையெல்லாம் ஒருகாலத்து ஒருவழியுண்ணும்

உணவுகிடந்த தன்மையொத்த பூஞ்சேக்கை யெனவுமமையும். இது, பூக்களின் சாதிப்பன்மையும் செவ்வியுங்கூறிற்றாகும்.

முதிர்தல் - முற்றுதல் ; சூழ்தலுமாம் ; [1] "நீர்முற்றி மதில்பொரூஉம்" என்றார் பிறரும்; முதிர்ந்த கடலுமாம்.

ஒருங்கிருத்தல், இஃபொருளுவமம். போல இருந்தென ஒருசொல்வருவிக்க.

இனிப் புணர்ச்சி கூறுவார்.

சுஉ - எ. வண்டுவாய்........கட்டுரை

(இ - ள்.) அங்ஙனமிருந்தவர்கள், வண்டுகள் புரிநெகிழ்க்க வாயவிழ்ந்த வெள்ளிய இதழையுடைய மல்லிகையினது பெரிய இளக்கத்தையுடைய மாலை யோடே இதழொடியாது கட்டின கழுநீர்ப்பிணையலும் குலைந்தலைய மார்பிலிட்ட இவ்விருவகைமாலையும் மயங்கப்பட்டு இருவரும் செயலற்ற புணர்ச்சியிறுதிக் கண்ணே கோவலன் திருமகளைப்போல்வாளுடைய முகத்தைநோக்கித் தனது அறிவுமுதலியனவற்றைக் குறியாத நலம்பாராட்டலென்னும் பொருள்பொதிந்த உரையைக் கூறுமெனக.

நிலாவிரிந்த, உவமத்தொகை; ஒளியுமாம். விரியல் - மலர்ச்சி. பிறழ - சரிய. மயங்கி - மயங்கப்பட்டு; இடக்கர். தீரா, தீர்தலென்னும் விடற்பொருண்மையெதிர்மறை. கூறும், முற்று. ஓர், இடைச்சொல்.

---

[1] இச்சூத்திரம் தண்டியலங்காரத்திலும் (பொதுவணியியல், சூ. உக.) படுகின்றது.

காணப்

[2] "மதியமு ஞாயிறுங் கதிர்விரித் தோடிக், கடலிற விசும்பி னுடனின் றாங்கு" (பெருங்கதை, க. கஉ: உஉ - ந.) என்பதும், "வெங்கதிர்க் கனலியுந் தண்கதிர் மதியமுந் தங்கதி வழுவித் தலைப்பெய்தாற்போலவும்" (இறை. சூ. உ - உரை) என்பதும் இங்கே அறியற்பாலன.

[3] தொல்காப்பியம், குற்றியலுகரப்புணரியல், சூ. எ௯. [4] கலித்தொகை, கஎ.

இனிக் குறியாக்கட்டுரை - முன் கருதப்படாத கட்டுரையெனினும் பொருந் தும். [1] "குறியா வின்ப மெளிதி னின்.........எய்தும்" என்றார்; கட்டுரை - நலம்பாராட்டலென்னும் பொருள்பொதிந்தவுரை.

எதிரிருந்து எழுதிப் பிறழ மயங்கிக் கையறநக் கூறுமென்க.

அக்கட்டுரை மேற்கூறுவார்.

௩௮ - சக. குழவித் திங்கள்......ஆகெனு.

(இ - ள்.) பிறை, இறைவன் இமையவரேத்தாநிற்கத் தன்முடிக்கு அழகு செய்தல்காரணத்தாற் சூடிய பெறுதற்கருமையுடைத்தெனினும் அதனை அவன் நினக்குத் திருநுதலாகத் தரக்கடவன்; அஃது எற்றாலெனின், அப் பிறை நின் னோடு உடன் பிறப்புண்டாகலின் நினக்கு உரித்தாதலானென்க.

பெரியோன் - இறைவன். உரிது - உரித்து; [2] "உரிதினிற், பெயர்தல் வேண்டும்" என அகப்பாட்டினுங்கூறினர்.

கொண்டாங்குப்

திங்கட்குழவியென்றது [3] "சொல்லியா வல்ல பிறவவண் வரினும்" என் னும்மரபியற் புறனடையான் முடியும். [4] "அப்பிறை, பதினெண் கணனு மேத் தவும் படுமே" என்றார்புறப்பாட்டினும். அருமைத்து, அஃறிணைவினைக் குறிப்புமுற்று. தருகவென்றது சூடினபிறை இரண்டுகலையாதலின், அதனை என்னுட்டிங்களாக்கித் தருகவென்பது கருத்து; என்னை [5] "மாக்கட னடுவ ணெண்ணாட் பக்கத்துப், பசுவெண் டிங்க டோன்றி யாங்குக், கதுப்பயல் விளங்குஞ் சிறுநுதல்" என்றாராகலின்.

இதனுன் மேற்கூறுகின்ற கரும்பையும் வச்சிரத்தையும் அவ்வவ்வுறுப்புக் கட்கேற்பத் திருத்தி ஈக்க அளிக்கவென்பதாயிற்று; என்றது கரும்பிற்கு நிற ஒும், வச்சிரத்துக்கு நேர்மையும் உண்டாக்கியென்றவாறு.

இஃது எதிரதுபோற்றலென்னும் தந்திரவுத்திவகை.

இங்ஙனங்கூறினுர்; பிறை திருவொடு பாற்கடலினுடப் னேத் திருமகளாகமதித்து.
பிறத்தலின், இவ

சஉ - இ. அடையார் முனையகத்து......ஈக்க

(இ - ள்.) அநங்கன் போர்செய்தற்கு எடுத்த ஒப்பில்லாத கருப்புவில் லொன்றையும் நினக்குக் கரிய இருபுருவமாகத் திருத்தித் தரக்கடவன்; அஃது எற்றுலெனின், பகைவர்முனையிடத்தே தம்மை மேம்படுப்பார்சிலர்க்குப் படைக்கலமுதலிய கொடுத்தல் அரசர்க்கு இயல்பாதலானென்க.

தன்னுல் ஒறுக்கப்படாத தெவ்வரை அழிக்குங்கால் இவருறுப்பாகிய
படைக்கலங்கொண்டன்றி அழிக்கலாகாமையின், இங்ஙனம் கூறினுர். ஈக்க, [4] "ஈத்தவக்கும்" என்றாற்போலநின்றது. முனிவராகிய முரட்பகையை அழித் தற்கு வல்வில்லே வேண்டுதலின், ஒருபெருங்கருப்புவில்லென்றார். என்றது,

[1] அகநானூறு, உ. [2] தொல். மரபியல், கு ககo. [3] குறுந்தொகை, கஉக.
[2] " -- சo. [4] புறநானூறு, கடவுள்வாழ்த்து. [5] திருக்குறள், உ௨அ.

## உ.—மணையறம்படுத்தகாதை.

இக் காமனுக்குக் [1] காமனும் [2] ஆலையும் வில்லாதலின், அதன் வன்மைகூறி

ஞர். ஒருபெருங்கருப்புவில். இருகரும்புருவமாகவென்றது கூட்டி; [3] "வானூர்......வேண்டினன்" என்றாராகலின்.

சேமவில்லையும்

சக - அ. மூவா மருந்தின்......இடையென

(இ - ள்.) இந்திரன் அசுரரையழித்துச் சுரரைக் காத்தற்காக வச்சிரப்படையை நினக்கு இடையாகவெனத் திருத்தித் தரக்கடவன்;

எடுத்த

அஃது

எற்றாலெனின், இமையவர்க்கு மரணமின்மையைப் பயக்கும் முற்பிறத்தலானென்க.

அமிழ்திற்கு நீ

ஆகவென ஒருசொல் வருவிக்க. மூவா, மூத்தவென்னும் பெயரெச்ச வெதிர்மறை. எனவே மூப்புக்கும் பிணிக்கும் மருந்தென்பதாயிற்று; என்றது

அமிர்தத்தை. மருந்தின், உருபுமயக்கம். நீ அமுதாகலின், வச்சிரம் பிறத்தலாலெனினுமமையும்.

நினக்குமுன்னர்

வச்சிரமும் அமுதமும் கடல்கடைகின்றகாலத்துப் பிறந்தவெனப் புராணங்கூறும்; வச்சிரம் இருதலைச்சூலமாய் நடுவுபிடியாயிருத்தலான் அதனிடையை நுசுப்புக்கு உவமங்கூறுப.

இறைவன் காமன் இந்திரனென்னுமிவர், பிறை கரும்பு வச்சிரமென்னு மிவற்றை நுதல் புருவம் இடையாகத் தருக ஈக்க அளிக்க உடன்பிறப்புண்மை யிற் பண்புண்டாகலின் முன்னர்த் தோன்றலினென உய்த்துரைக்க.

சக - ௫௨. அறுமுக வொருவன்......ஈத்தது.

(இ - ள்.) முருகவேள் தன்கையில் அழகிய சுடரையுடைய நெடிய வேலொன்றையும் நின்முகத்து மழைக்கண் இரண்டுமாம்படி ஈதற்குக் காரணம் வேறில்லையாகவும் ஈத்தது யான் வேண்டுதல் காரணத்தானென்க.

இறந்துபடுமுறைமையைத் தன்கண்ணாற் காண

[4] "தன்னுகர்க் காண்மார்" என்றாற்போல. பெறுமுறையின்றியும் - அவ்வாறு தான் ஈத்தற்கு உரிமையின்றாகவும். வேலொன்று இரண்டாகவீத்தல்- திருமித்துத்தருதல்; [5] "ஒக்கிய முருகன் கைவேலொன்றிரண் டனைய கண்ணாள்" என்றாராகலின்.

இனிப் பெறுமுறையின்றியுமென்பதற்குத் தனக்குப்பெருங்கூறு ஒன்றும் இல்லையாகவுமெனினுமமையும். இறுமுறை - முடியுமுறை; வருந்துந்தன்மை யெனினுமமையும்.

இவை [6] புகழுவமையலங்காரம்; அஃதாவது "இறையோன் சடைமுடிமே லெந்நாளுந் தங்கும், பிறையேர் திருநுதலும் பெற்ற - தறைபுனல்சூழ், பூவல யந் தாங்கு மரவின் படம்போலும்,பாவைநின் னல்குற் பரப்பு" எனவரும்.

---

[1] காமநூல் - புவிசேடம்; இதனை மன்மததந்திரமென்பர் வடநூலார்; இது மன் மதனுக்கு வில்லென்பதை அரவிசயத்திற்காண்க; "பைக்க ணின்ற பூவின் மிக்க காம காண்டங் கன்னல்வில்" (கந்த. காமதகன. ௬௨) என்பதும் இங்கே கருதற்பா லது. [2] ஆலை - கரும்பு. [3] சீவகசிந்தாமணி, ௨௦௪௫. [4] கலித்தொகை, ௭. [5] சீவகசிந்தாமணி, ௬௨௬௬. [6] புகழுவமையாவது உவமேயத்தைப்புகழ்ந்தமைப்பது.

இவற்றுட் கட்புலனாய் எழுதப்படும் உறுப்புக்களைப் பாராட்டி, புலனாயும் ஆக்கரமாய் எழுதப்படாதன பாராட்டுவான்.

இனிக் கட்

## ருஅ - சுக. மாயிரும் பீலி.........ஒருவாவாயின

(இ - ள்.) நன்னுதால், மாதே, மயிற்குலம் நின்னுடைய சாயற்கு எதிர்ந்து வந்து பொருது தோற்றுத் தண்ணிய காட்டிடத்தேபோய் ஒடுங்காநிற்கவும், அன்னம் மெல்லிய நடையினைக்கண்டு எதிர்ந்துவந்து தோற்றுத் தனதுநடை யழிந்து கல்லகீர்பொருந்தின பண்ணையிற் செறிந்தமலரிற்புக்கு மறையவும், சிறிய பசிய கிள்ளைகள்தாம் குழலிசையினையும் யாழிசையினையும் அமுதத்தினையும் கலந்து குழைத்தாலொத்த நினது முதிராத மழலைக்கிளவிக்கு எதிர்ந்து வந்து தோற்றனவாயும் நின்னை வழிபட்டு அக்கிளவிகற்பக்கருதி நினதுகையி னின்றும் நீங்காவாய் நின்னுடனே வெறுப்புத்தோன்றுமல் உறைதலையும் பொ ருந்திப் பிரியாவாயினவாகலின், அவை அளிக்கத்தக்கன காணென்றுனென்க.

மாயிரு, ' "கோயில்" போலநின்றது; ' அதிகாரப்புறனடைவிதி. மா - கருமை. இருமை - பெருமை. மணி - நீலமணி. கான் - இழிந்தகாடு. நன்னுதல், ' "எஞ்சிய ' சாயல் - மென்மை. தண் விரண்டி னிறுதிப் பெயரே, நின்ற கீற்றய விட்டம் வேண்டும்" என்பதனால் நீட்டித்தது. நளி - செறிவு. செறிதல் - ஒடுங்குதல். குழைத்த, இஃபொருளுவமை; ' "கரும்புந் தேனும்

மழுதம் பாலுங் கலந்த தீஞ்சொல்" என்றாற்போல. இனிக் குழைத்த, குழைவித்தவெனினுமமையும்; வருத்திடவென்பதாம்; "குழைமுற்றின வாழைக் கொழுங்கனி குழைத்தும்" என்றாராகலின். மாது, முன்னிலை; விளி; [4] "இவ் வுவ்வு மேயொடு சிவணும்" என்பதனான் முடிந்தது.

அடையவும், செறியவுமே இவை ஒருவாவாயினவாகலான் அளியவென்க.

இனியும் இவள்வளர்ப்பனபலவாகலாற் பன்மைகூறினர்.

கூஉ - ச. நறுமலர்க் கோதை........எவன்கொல்

(இ - ள்.) இத்தன்மையையாகிய கோதாய், நின்னைப் புனைந்து அழகு செய்யுமகளிர் குற்றமற்ற நினது புனையாத அழகன்றியும் வேறுசில அணிகளை அணிந்ததனாற்பெற்ற உதவி யாதுதானென்றானென்க.

[7] "ஐயா யாகும்" என்பதனாற் கோதை கோதாயென விளியேற்றது. வணி - மாங்கலியமென்பாருமுளர்.

மங்கல

கூ௩ - ௬. பல்லிருங் கூந்தல்.........என்னுற்றனர்கொல்

(இ - ள்.) பலவகைத்தாகிய கூந்தலிற் சிலமலரைப்பெய்தலேயன்றி அதன்மேலும் ஒளிபொருந்தி அவிழ்கின்ற மாலையைப் புனைதற்கு அந்தமாலையோடு அவர்கள் என்ன உறவுடையார்களோவென்றானென்க.

---

[1] சீவகசிந்தாமணி, கஙஙு.
[2] தொல். குற்றியலுகரப்புணரியல், சூ. எஅ.
[3] " உரிச்சொல்லியல், சூ. உக.
[4] " விளிமரபு, சூ. உஎ.
[5] சீவகசிந்தாமணி, உசகஅ.
[6] தொல்காப்பியம், விளிமரபு, சூ. ௧.
[7] " " சூ. ௪.

சின்மலர் - மங்கலமலர்; கற்புமுல்லை முதலியவை; அருச்சனை மலருமாம்.

கஎ - அ. நான நல்லகில்.........எவன்கொல்

(இ - ள்.) அவர், கூந்தற்கு செய்யையுடைய நல்ல அகிற்புகையை யூட்டு தன்மேலும் மான்மதச்சாந்தை அணிதற்கு அதனோடு தமக்குளதாகிய அந்தக் கண்ணோட்டம் யாதுதானென்றானென்க.

மான்மதம் - கத்தூரி.

கக - எ0. திருமுலைத் தடத்திடை.........எவன்கொல்

(இ - ள்.) அவர் அழகிய முலைத்தடத்தின்மேல் தொய்யிலெழுதன் மேலும் தனிமுத்துவடத்தைப் பூட்டுவதற்கு அதனோடு அவர்க்குண்டான [1] கெழுதகைமை யாதுதானென்றானென்க.

திரு - [2] முலைமேற்றோன்றும் வீற்றுத்தெய்வம்.

தடம் - பரப்பு. தொய்யில்- பத்திக்கீற்று. காழ் - வடம். முத்தக்காழென மாற்றுக.

எக - உ. திங்கள்..................என்னுற்றனர்கொல்

(இ - ள்.) இங்ஙனமாகிய மங்கலவணியும் சின்மலரும் அகிற்புகையும் தொய்யிலும் பாரமாய் அரும்பவும் வருந்தவும் இவ்விடத்து இவைகண்டுவைத்தும் பிறிதணியும் மாலையும் சாந்தும் முத்தும் அணிந்தாராகலின், அவர்கள் என்னபேய்கொண்டார்களோவென்றானென்க.

எங. மாசறுபொன்னே—(இ - ள்.) கட்கு இனிமையான் மாசற வோடிய பொன்னை யொப்பாய்;

வலம்புரிமுத்தே—(இ - ள்.) ஊற்றின் இன்பத்தான் முத்தையொப்பாய்; மரபின் தூய்மைகூறுவான்[3] வலம்புரிமுத்தென்றான்.

எசு. காசறு விரையே—(இ - ள்.) உயிர்ப்பின் இனிமையாற் குற்றமற்ற விரையையொப்பாய்;

கரும்பே—(இ - ள்.) சுவையினினிமையாற் கரும்பை யொப்பாய்;

தேனே—(இ - ள்.) இனியமொழியையுடைமையால் தேனையொப்பாய்;

இவற்றாற்சொல்லியது, ஒளியும் ஊறும் நாற்றமும் சுவையும் ஓசையு மாகலின், [4] "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு, மொண்டொடி கண்ணே யுள" என நலம்பாராட்டப்பட்டன.

எ௭ - அக. அரும்பெறற் பாவாய்..................பாராட்டி

[1] கெழுதகைமை - உரிமை.
[2] "ஆமணங்கு குடியிருந் தஞ்சணங்கு பரந்தனவே" (சீவக. கஎக.)
[3] "வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்" (ஆத்திரையன். பொதுப்பாயிரம்.)
[4] திருக்குறள், கக0க.



(இ - ள்.) பாவாய், மருந்தே, மடமகளே, தையால், நின்னை யான் மணியே யென்கோ! அமுதேயென்கோ! இசையேயென்கோவெனச்சொல்லித் தொலையாத நலம்பாராட்டாகிய பொருள்பொதிந்த உரையைப் பலபாராட்டியென்க.

உயிர்மருந்து-மிருதசஞ்சீவினி. இவற்றுற்சொல்லியது என்னையெனின்,— காட்சியின் உயிர்மயக்குறுதலிற் கொல்லியிற்பாவாயென்றும், அவ்வாறு அழியு முயிரை இமைப்பிற் பெறுதலின் ஆருயிர்மருந்தேயென்றுங்கூறி, மலையிடைப் பிறக்குமணி குழையாமையின் அதிற்பிறவா மணியே யென்பேனே! அலையிடைப் பிறக்கும் அமிர்திற்கு இவ்வடிவின்மையின் அதனிற்பிறவாத அமுதேயென் பேனே! யாழ் கட்கு இன்னாதாகலின் அதனிடைப்பிறவாத பேனேவெனத் தெரிதருதேற்றவுவமையென்னுமலங்காரமும்,

இசையேயென்

மலை கடலென

விரோதமும், பின்வருநிலையென்னு மலங்காரமும் புலப்படுத்தினுரெனவுணர்க.

அஉ - கூ. தயங்கிணர்..................செல்வுழிநாள்

(இ - ள்.) வயங்கிணர்த்தாரோன் இங்ஙனம் கோதையொடு ந்து செல்லாநின்றநாளிலே ஒருநாள்,

தருக்கி மகிழ்

தயங்கல் வயங்கலிரண்டும் விளக்கமாதலிற் பரியாயமென்னும் அலங் காரமும், தலையாய எதுகைத்தொடையின்பமும் புலப்படுத்தினமையுணர்க.

அச - கூ. வாரொலி..................கண்ணகி தனக்கென்

(இ - ள்.) நீண்டு ஒலித்த கூந்தலையுடைய வீரபத்தினியை இருநிதிக்கிழவன் மனைக்கிழத்தி, சுற்றந்தழாலோடே துறவறத்திற்குச் செய்யும் பரிசாரமும் விருந்தினரைப் புறங்கண்டுபுகுத்தலும் ஒழிந்த செய்கைகளுமாகிய இவற்றோடுபொருந்திய இல்வாழ்க்கையைப் பலபடைப்பாகிய செல்வத்தோடே நடத் திக் கைவந்து உயர்ச்சிபெறுதலைக் காணவேண்டி அடிமைத்திரளோடே வேறே கூட்ட,

அத்தைக் கண்டகண் அங்ஙனம் காட்சிதரும் சிறப்பினையுடைய கண்ணகிக்கு இற்பெருங்கிழமையிற் சிலவாண்டு கழிந்தனவென்க.

மறப்பு - பொச்சாப்பு. இதனை எல்லாவற்றோடுமொட்டுக.

இதன்கருத்து:—கேண்மையோடெனவே

சுற்றந்தழாலும், அறப்பரிசாரமு மெனவே அறவோர்க்களித்தலும் அந்தணரோம்பலும் துறவோர்க்கெதிர்தலு மென்பதாயிற்று. இவற்றோடே பொருந்திய வாழ்க்கையெனவே அருளுடைமை, அன்புடைமை, இனியவைகூறன் முதலிய இல்லறப்பகுதியெல்லாமடங்கும். இக்

---

[1] என்கோ - என்பேனோ. [2] மாறனலங்காரம், சூ. கஉஉ - உரையைப் பார்க்க.

[3] "இளங்கோவடிகள், மனையறம்படுத்தகாதையுள், 'தயங்கிணர்...செல்வுழி' என்ற வதனுள், தயங்கல் வயங்கல் இரண்டும் விளக்கமாதலின் அதற்கு விரித்துரையெழுதிய அடியார்க்குநல்லாராகிய ஆசிரியர் அதனையும் பரியாயமென்னும் அலங்காரமாகக் குறித்தார்; அஃது இப்பொருளணியுள் முந்துறக்கூறிய அடங்குமென்றறிக." (மாறனலங்காரம், சூ. கககூ - உரை.)

பொருட்பின்வருநிலையுள்

[4] "படைப்புப்பல படைத்துப் பலரோ (புறநானூறு, ககஅ.)

டுண்ணும், முடைப்பெருஞ் செல்வர்"

## உ.—மனையறம்படுத்தகாதை. ருரு

கருத்தானன்றே, கோவலக்கணக்காடதயிற் கண்ணகியார், [1] "அறவோர்க் களித்தலு மந்தண ரோம்பலுந், துறவோர்க் கெதிர்தலுந் தொல்லோர் சிறப்பின், விருந்தெதிர் கோடலு மிழந்த வென்னை" என்றதுமென்க.

கூந்தலையுடைய பெரியற்கிழத்தி யெனினுமமையும்;

பெரியற்கிழத்தி-கோவலனமாதா.

கண்ணகிக்குச் சிலயாண்டு கழிந்தனவெனவே மாதவிக்குப் பலயாண்டு கழிதலும் கொள்ளப்பட்டது. இன்னும் மேற் கனாத்திறமுரைத்தகாதையில், தேவந்தி, [2] "கண்ணகி நல்லாளுக் குற்றகுறை யுண்டென்று" என்புழி எச்சவும்மைவிரிக்க, இவட்கு அவள் இளமைப்பருவந்தொடங்கி நிகழும் பார்ப்பனத்தோழியாய் மாநாய்கன் மனைவளர்தலின், ஒருகாலத்தே குடிபுக்குச் செல்கின்றுழிப் பிரிவும் ஒருகாலத்தாயிற்றெனபதாகலின், [3] "நாலீ ராண்டு நடந்ததற் பின்னர்" என்பதனை இருவர்க்குமாக்கி மாதவிக்கு எட்டிறந்த பலயாண்டு சேறலிற் கண்ணகிக்குச் சிலயாண்டு கழிந்தவெனப் பொருள்கூறலுமொன்று; இதனன் மிக்க பலமின்று; ஏற்குமேற்கொள்க. இது பொலி.

[4] செல்வர்க்குத்தோன்றிய கண்ணியும் கொழுநனும் தென்றலைக் கண்டு மகிழ்ந்து இறந்து ஏறிக் காட்சிபோலச் சேக்கையிலிருந்து எழுதி மயங்கிக் கையற்று முகநோக்கிக் குறியாக்கட்டுரை கூறுகின்றவன் திங்கள் முதலியவற்றை முதன்முதலில்வரச் சொல்லிப் பலபாராட்டி மகிழ்ந்து செல்வுழி ஒருநாள் பெரியற்கிழத்தி புணர்க்கக் கண்ணகிதனக்குப் பெருங்கிழமையோடு ஆண்டு சில கழிந்தனவெனக்கூட்டுக.

எல்லாவடியும் நேரடியாய் வந்து முடிதலின், இது நிலைமண்டிலவாசிரியப்பா.

## ௨.—மனையறம்படுத்தகாதை முற்றிற்று.



[1] சிலப்பதிகாரம், கொலைக்களக்காதை, எக - க.
" கனாத்திறமுரைத்தகாதை, சக.

" வரந்தருகாதை, அ௫.

[4] இம்முடியிலுள்ள
பாகக்கொள்க; பின்னும்

செய்தெனெச்சங்களுட் சிலவற்றைச் செயவெனெச்சத்திரி
இங்ஙனம் கொள்ளவேண்டிய இடங்களுண்டு.

# மூன்றாவது
# அரங்கேற்றுக்காதை.

[1] தெய்வ மால்வரைத் திருமுனி யருள
வெய்திய சாபத் திந்திர சிறுவனொடு
தலைக்கோற் றானத்துச் சாப நீங்கிய
மலைப்பருஞ் சிறப்பின் வானவர் மகளிர்
சிறப்பிற் குன்றாச் செய்கையொடு பொருந்திய
பிறப்பிற் குன்றாப் பெருந்தோண் மடந்தை

கூத்தியதலைமை கூறுகின்றது:—

க. தெய்வமால்வரை - பொதியின் மலை;

தெய்வத்தன்மையையுடைய வரை; உருபுதொக்குத் தெய்வமால்வரையென்றாயிற்று.

திருமுனி - அகத்தியன். அருள - அவன் சாபமிட்டருள.

உ. எய்திய - அச்சாபத்தை யெய்திய.

க. அருளாலென்று பாடமோதி அருளாற் சாபநீங்கியவென்றுமாம்.

உ. இந்திரசிறுவன் - சயந்த குமாரன். இந்திர சிறுவனொடென்றது

ஞற் சயந்தகுமாரனோடே உருப்பசியும் சாபநீங்கிப் போனாளென்க; "திரு திய.........வாகிவந் தனளென" என்றாராகலின்.

"திருந்

௩. தலைக்கோற்றானம் - நாடக வரங்கு.

ச. மலைப்பருஞ் சிறப்பின் வானவர் மகளிரென்றது - இப்படியால் ஒப்பில்லாத சிறப்பினையுடைய வானவர் மகளிர்; ஆவார் - தனியிலார்; உருப்பசி வந்த சாபத்தாற் பிறக்கையால் அவள்வழியுள்ளாரையும் வானவர்மகளிரென்றாராயிற்று. அவருள்,—

ரு. சிறப்பு - வரிசை. செய்கை - தொழில்.

சு. பிறப்பு - அம்மாதவிவழிவந்த பிறப்பு. பெருந்தோண்மடந்தை - மகளிர்க்குத் தோள்பெருக்கை இலக்கணம்; என்னை? [1] "அகலல்குறோள் கண்ணென மூவழிப் பெருகி" என்றாராகலின்.

---

[1] "தெய்வ மால்வரைத் திருமுனி யருளால்" என்புழித் தெய்வவரையென்று ஒட்டுத் தெய்வத்தன்மையுடைய வரையெனப் பொருள் தருகின்றது இன்னோசை தருதற்கு மாலென்பதனோடும் ஒட்டிநின்றதுபோல"—(தொல். புணரியல், சூ. ௧ - ந.)

[2] அரும்பதவுரையில், இப்படியே முதலிறுதிகள்மட்டுமே கொடுக்கப்பெறும் சூத்திர முதலியவற்றின் முழுவடிவங்களை அடியார்க்கு நல்லாருரையிற் காண்க.

[3] கலித்தொகை, ௬௰.

## ௩.—அரங்கேற்றுகாதை

இள

தாதவிழ் புரிகுழன் மாதவி தன்னை
[1] யாடலும் பாடலு மழகு மென்றிக்
கூறிய மூன்றி னொன்றுகுறை படாம
லேழாண் டியற்றியோ ரீரா றாண்டிற்
சூழ்கழன் மன்னற்குக் காட்டல் வேண்டி
யிருவகைக் கூத்தி னிலக்கண மறிந்து

---

௭. தாதவிழ் புரிகுழல் மாதவி தன்னையென்றது - பூக்கள் தாதுக்களை அவிழ்க்கும் புரிந்த குழலையுடைய மாதவியாகியவள் தன்னை.

௮ - ௯. ஆடலும்........குறைபடாமலென்றது - கூத்தும் பாட்டும் அழகுமென்று சொல்லப்பட்ட இம்மூன்றினுள்ளும் ஒன்றும் குறைபடாமல்.

௧௦. ஏழாண்டு இயற்றி ஓரீராறாண்டில் - மையுண் கண்ணி

மடக்தைமற்ற
வீனா ஐயாண்டு நிரம்பியபின்றைக் காண்போர் காண அரங்கிற் சிரமம் இரு பொழுது எழாண்டியற்றுவித்து இப்படியாற் பன்னிராண்டுபிராயம் புக்கபின்பு.

கக. சூழ்கழன் மன்னற்குக் காட்டல் வேண்டி -
வீரக்கழலினையுடையசோ ழன் கரிகாற்பெருவளத்தான்
அவையரங்கேறிக் காட்டல்வேண்டி யென்றவாறு.

இனி, ஆடலாசிரியனமைதி கூறுகின்றது:—

கஉ - உரு. இருவகைக் கூத்தின் .............ஆடற்கமைந்த வாசான்
றன் ஞெனுமென்றது - தேசியும் மார்க்கமுமென்று சொல்லப்படாநின்ற
இரண்டு
வகைப்பட்ட
நடங்களையும்

அக்கூத்தினது இலக்கணங்களையறிந்து பலவகைப்பட்ட புற
விலக்குறுப்புக்களைச் சேரப்புணர்க்கவும் வல்லனாகி அல்லிய முத

லாகக் கொடுகொட்டி ஈறாகக்கிடந்த பதினொருகூத்துக்களும்
களுக்குரிய பாட்டுக்களும் அவற்றுக்குஅடைத்தவாச்சியக்கூறும்

அக்கூத்துக்
நூல்களின்
வழியே தெரியவறிந்து அக்கூத்தும் பாட்டும் தாளங்களும் தாளங்களின் வழியே
வந்த தூக்குக்களும் தம்மிற்கூடி நிகழுமிடத்துப் பிண்டி பிணையல் எழிற்கை
தொழிற்கையென்னும் அக்காளகினையும் நூல்களிலகத்துக்கொண்ட கூறு

பாட்டையறிந்து அகக்கூத்தினிடத்துக் கூடைக்கதியாகச்செய்தகை வாரக்கதியிற்புகுதாமலும் வாரக்கதியாகச்செய்தகை கூடைக்கதியிற்புகுதாமலும் புறக்கூத்தில் ஆடனிகழுமிடத்து அவினய நிகழாமலும் அவினயநிகழுமிடத்து ஆடல் நிகழாமலும் குரவைக்கூத்தும் வரிக்கூத்தும் தம்மில்விரவாதபடியும் செலுத்த வல்ல ஆடலாசிரியனுமென்றவாறு.

இது, பொழிப்புரை. என்சொல்லியவாறோவெனின்,—

கஉ. இருவகைக்கூத்தாவன:—தேசி மார்க்கம் எனவிவை; "மார்க்கமென் பது வடுகின் பெயரே" இவற்றது இலக்கணமாவது:—"அறுவகை நிலையும்...... ஆகு மென்ப." இவை ஈங்குரைப்பிற் பெருகும்; விரிந்தநூலிற்கண்டுகொள்க. இவ்வுறுப்புக்களையுடைய கூத்தை கற்றென்றவாறு.

இலக்கணத்துடனே பொருத்தக்

¹ "ஆடல் பாடல் அழகென்பவற்றுறக்கனிந்து" (திருக்குறள், கககூ - பரி.)

அ

# ஙஅ சிலப்பதிகாரம்

பலவகைக் கூத்தும் விலக்கினிற் புணர்த்துப்
பதினோ ராடலும் பாட்டுடன் கொட்டும்
கரு விதிமாண் கொள்கையின் விளங்க வறிந்தாங்

கரு. பலவகைக்கூத்தும் விலக்கினிற் புணர்த்தலாவது - நகைக்கூத்து முத லாகப் பலவகைப்பட்ட புறநடங்களையும் வேற்றுவிலக்கும் படைவிலக்கும் ஊர் விலக்குமென்று சொல்லாநின்ற

விலக்குக்களாகிய பாட்டுக்களுக்கு உறுப்பாய் வருவனவற்றுடனே பொருந்தப்புணர்த்தல்; என்றது பாட்டுக்களுக்கு வரவுறுக் குமபடியை.

விலக்குறுப்பாவன :—பொருள், யோனி, விருத்தி, சந்தி, சுவை, சாதி, குறிப்பு, சத்துவம், அவினயம், சொல், சொல்லின்கூறுபாடு, வண்ணம், வரி, சேதமென இவைபதினுலும் ; என்னை ? "விலக்குறுப் பென்பது… ………ஈரே ழுறுப்பே." இவை ஈங்குரைப்பிற் பெருகும்.

கசு - ம் பதினோராடலும்………அறிந்தென்றது - அல்லியமுதற் கொடு கொட்டி ஈறுகக்கிடந்த பதினொருகூத்தும், அக்கூத்துக்களுக்குரிய பாட்டுக் களும் அக்கூத்துக்களின் விகற்பங்களுக்கெல்லாமமைந்த வாச்சியக் கூறுகளும நூலின்வழியே விளங்கவறிந்து.

கச. அவற்றுள், பதினொராடலாவன:—"கடைய………பதினோர் கூத்து" இவை தெய்வவிருத்தி ; இரண்டு கூறுபடும் :—"அல்லியம்…………ஆறு", "துடிகுடையம்………ஐந்து" இவை அசுரரைக்கொல்ல அமரராடின. விற்றின்விரிவு நூல்களுட்காண்க.

இவை பாட்டுமென்றது - அகநாடகங்களுக்கும் புறநாடகங்களுக்குமுரிய உருக் களுமென்றவாறு.

அகக்கூத்திற்குரிய உருவாவன :—கந்தமுதலாகப் பிரபந்தவுருவீறுக பத்தெட்டும்.

இரு

புறநாடகங்களுக்குரிய உருவாவன :—தேவபாணி முதலாக அரங்கொழி செய்யுளந்தமாகச் செ ந்துறை விகற்பங்களெல்லாமென்றவாறு.

கொட்டுமென்றது - கூத்து விகற்பங்களுக்குஅமைந்த மென்றவாறு.

வாச்சியக்கூறுகளு

அவை: கீதானுகம், நிருத்தானுகம், உபயானுகமெனவிவை.

இவற்றுள், கீதானுகம் - கீதத்துக்குவாசித்தல்; நிருத்தானுகம் - துக்குவாசித்தல்; உபயானுகம் - இரண்டுக்கும் வாசித்தல்.

நிருத்தத் கரு. விதிமாண் கொள்கையின்
விதித்தவழியே விளங்கவறிந்து.

விளங்கவறிந்தென்றது - நூல்களில்

ஆங்கென்பது, அசைச்சொல்.

## ஈ.—அரங்கேற்றுகாதை.

இக

காட்டும் பாட்டும் பாணியுந் தூக்கும்
கூடிய * நெறியின கொளுத்துங் காலைப்

---

கக. ஆடலுமென்றது - அகக்கூத்தினும் மென்றவாறு.

புறக்கூத்தினுமுள்ள ஆடலு

நீற்று கடி சரிமுதலாகத் தேசிக்குரியகால்களும், சுற்றுதல் எறிதல் உடைத்தன்முதலான வடுகிற்குரிய கால்களும், உடற்றூக்குமுதலாய உடலவர்த்தனையுமுடைய அகக்கூத்துக்குரியன.

ஈங்குச் சிங்களமென வழங்கிவருகின்ற கூத்துச்

சொல்லிற்றிலரெனின்,
"சிங்கள.........மெய்தும்" என்னுஞ்சூத்திரத்தால் அதற்கு இன்மையினென்பது ; [1] பாலைக்கு நிலமில்லாததுபோல வென்க.

வேறுகால்க

புறக்கூத்திற்குரிய கூத்தாவன:—பெருநடை சாரியை பிரமரி இவைமுதலாயினவும் பதினோராடலுமான கூத்துக்களுமாம்.

இவ்வகையால் அகக்கூத்துக்களுக்கும புறக்கூத்துக்களுக்குமுரிய மென்றவாறு.

ஆடலு
பாடலுமென்றது-பண்ணல்முதலான எட்டுவகைப்பட்ட

குறிக்கோளும்.
அவை:—"இன்பம்.........பயனே" என எண்வகைப்பட்ட

பயனையுமுடைய பாடலுமென்றவாறு.

பாணியுமென்றது - தாளங்களுமென்றவாறு.

அவை:— சச்சபுடமுதலான பஞ்சதாளமும்,

அரைமாத்திரையுடைய ஏக தாளமுதலாகப் பதினாறுமாத்திரையுடைய பார்வதிலோசனமீறாகச்சொன்ன
நாற்பத்தொருதாளமும், ஆறன்மட்டம் எட்டன்மட்டமென்பனவும், தாளவொரியல் தனிநிலையொரியலென்பனவும், ஒன்றன்பாணிமுதலாக எண்கூத்தப்பாணியிறுதியாகக்கிடந்த பதினொருபாணி விகற்பங்களும் முதனடை வாரமுதலாயினவுமென்றவாறு.

தூக்குமென்றது - இத்தாளங்களின்வழிவரும் செந்தூக்கு, மதலைத்தூக்கு, துணிவுதூக்கு, கோயிற்றூக்கு, நிவப்புத்தூக்கு, கழாற்றூக்கு, நெடுந்தூக்கென்று சொல்லப்பட்ட ஏழுதூக்குக்களுமென்றவாறு.

கஎ. கூடியநெறியினவென்றது - இச்சொல்லப்பட்ட கூத்தும் பாட்டும் தாளமும் தூக்கும் தம்மிற்கூடிய நெறியையுடைய அகக்கூத்தும் புறக்கூத்து முதலியனவென்றவாறு.

கொளுத்துங்காலையென்றது - ஆடுவிக்குமிடத்தும் பாடுவிக்குமிடத்து மென்றவாறு.

[1] தொல்காப்பியம், அகத்திணையியல், சூ. ௨ - உரை. (பி - ம்.) * 'நெறியித'



பிண்டியும் பிணையலு மெழிற்கையுந் தொழிற்கையுங்
கொண்ட வகையறிந்து கூத்துவரு காலைக்
கூடை செய்தகை வாரத்துக் களைதலும்
வாரஞ் செய்தகை கூடையிற் களைதலும்
பிண்டி செய்தகை யாடலிற் களைதலு
மாடல் செய்தகை பிண்டியிற் களைதலுங்
குரவையும் வரியும் விரவல செலுத்தி
யாடற் கமைந்த வாசான் றன்னொடும்

கஅ. பிண்டி - ஒற்றைக்கை ; அவை, பதாகைமுதலாகஇருபத்துநான்கு.

பிணையல் - இரட்டைக்கை ; அவை, அஞ்சலிமுதலாகப்

பதின்மூன்று.

எழிற்கை - அழகுபெறக்காட்டுங்கை.

தொழிற்கை - தொழில்பெறக்காட்டுங்கை.

" அவைதா, மெழிற்கை.........பொருளா கும்மே."

கக. கொண்டவகையறிதல் - பிண்டியும்
கையென்றும், எழிற்கையும் தொழிற்கையும்
மறிதல்.
பிணையலும் புறக்கூத்திற்குரிய
அகக்கூத்திற்குரிய கையென்று

கூத்துவருகாலையென்றது -
கூத்துக்களின்வரவுநிகழுமிடத்தென்றவாறு.

உ0 - உக. கூடை செய்தகை.........களைதலுமென்றது - அகக்கூத்தினிடத்து ஒற்றையிற்செய்த கைத்தொழில் இரட்டியிற்புகாமலும், இரட்டியிற் செய்த கைத்தொழில் இரட்டிக்கிரட்டியிலும் ஒற்றையிலும் புகாமலுங்களைதல். இன்னும் தேசியிற்கைத்தொழில் மார்க்கத்திற்புகுதாமலும், மார்க்கத்திற்கைத் தொழில் தேசியிற் புகுதாமலுங் களைதலென்றுமாம். ஒற்றையும் இரட்டியும் தேசிக்கூறுதலாலும், இரட்டியும் இரட்டிக்கிரட்டியும் வடுகிற் கூறுதலாலு மென்றுமாம்.

உஉ - ரூ. பிண்டி...........களைதலுமென்றது - புறக்கூத்தினிடத்துப் பிண்டியென்றது பொருட்கையென்றும், பிணையலென்றது
தொழிற்கையென்று
மறிந்து ஆடல்நிகழுமிடத்து அவினயநிகழாமலும், அவினய ஆடல்நிகழாமலுங் களைதலென்றவாறு.

நிகழுமிடத்து

உச. குரவையும்............செலுத்தியென்றது -

குரவைக்கூத்திற்குரிய கால்களும் வரிக்கூத்திற்குரிய கால்களும் தம்மில் விரவாதபடி செலுத்தியென்றவாறு;

“குரவையென்பது...........இயல்பிற்றாகும்”, “வரியெனப்............ வழங்கல்” என்பவாகலின்.

௨௫. ஆடற்கமைந்த ஆசான்றன்னொடுமென்றது - இக்கூத்துக்களை இப்படியால் அவற்றுடனே பொருந்த ஆடவும் ஆடுவிக்கவும்வல்ல ஆடலாசிரியனொடுமென்றவாறு.



> யாழுங் குழலுஞ் சீரு மிடறும்
> தாழ்குரற் றண்ணுமை யாடலொ டிவற்றி
> னிசைந்த பாட லிசையுடன் படுத்து

இனி, இசையாசிரியனமைதி கூறுகின்றது:—

௨௬ - ௩௬. யாழுங்குழலும்...........இசையோன்றானும் - யாழ்ப்பாடலும் வங்கியப்பாடலும், இருவகைத்தாளக்கூறுபாடுகளும், மிடற்றுப்பாடலும், மந்தமாகிய சுரத்தினையுடைய தண்ணுமையும், அகக்கூத்துப் புறக்கூத்துப் பதினோராடலென்னுங்கூத்துக்களும் வல்லனாய் இவற்றுடனே சேரச்செய்த உருக்களை இசைகொள்ளும்படியும் இரதம் பொருந்தும்படியும் புணர்க்கவும்வல்லனாய் இருவகைப்பட்ட பாடல்களுக்கும் பொருளான இயக்கம் நான்கினையுமமைத்துத் தேசாந்தரங்களிற் பாடைகளையுமறிந்து அந்தப்பாடைகள் இசைபூணும்படியையுமறிந்து இயற்புலவன் நினைவும் நாடகப்புலவன் ஈடும் வரவுகளும் இவற்றுக்கு அடைத்த பாடல்களும் தம்மிற்சந்திக்குமிடத்துக் குற்றந்தீர்ந்த நூல்வழக்காலே வகுக்கவும் விரிக்கவும் வல்லனுமுள்ள இசைப்புலவனுமென்றவாறு.

இது, பொழிப்புரை; என்சொல்லியவாறோவெனின்,—

உக. யாழுமென்றது - ''கோட்டின
தமைதியும்...........வகையே'' என முடிக்கப்பட்ட
யாழ்ப்பாடலுமென்றவாறு.

குழலுமென்றது - பருமையும் நீளமும்
இலக்கணத்துடனமைந்து விர லிடையிட்ட விரலுளர்துளையும்
ஊதுதுளையுமுடைத்தாயச் சுரபேதங்கள் நிலை குலையாமல்
அளவறுக்கப்பட்டுநின்ற வங்கியப்பாடலுமென்றவாறு

சீருமென்றது - ''செம்முறை.........நிமிர்த்தல்''
என்றுசொல்லப்பாநின்ற வண்ணக் கூறுபாட்டையும்
இருவகைத்தாளக்கூறுபாட்டையும் பாலை நிலையினையும்
பண்ணுநிலையினையும் நிலைப்படைபகத்தர் தாய்தாகக் காட்டுந்தன்
மையுமென்றவாறு..

மிடறுமென்றது - மூலாதாரந்தொடங்கிய மூச்சைக்
காலாற்கிளப்பிக் கருத்தாலியக்கி ஒன்றெனத்தாக்கி
இரண்டெனப்பகுத்துப் பண்ணீர்மைகளைப் பிறப்பிக்கப்பட்ட
பாடலியலுக்கு அமைந்த மிடற்றுப்பாடலுமென்றவாறு.

உஎ. தாழ்குரற்றண்ணுமையென்றது - தாழ்ந்த குரலினையுடைய
தண்ணுமைக்கருவிமுதலாயின வாசித்தலுமென்றவாறு.

ஆடலொடென்றது - அகக்கூத்துப் புறக்கூத்துப்
சொல்லப்பாநின்ற ஆடலுடனென்றவாறு.

பதினோராடலென்று

ஓடுவென்றது, உடனிகழ்ச்சி ;
இச்சொல்லப்பட்டவற்றுடனேயென்ற வாறு.

உஎ - அ. இவற்றினிசைத்த.....படுத்தென்றது -

இச்சொல்லப்பட்ட
கூத்துக்களுக்குச் சேரச்செய்த உருக்களை இசைகொள்ளும்படியும்
பொருந்தும்படியும் புணர்க்கவல்லனுமியென்றவாறு.

இரதம்
கூட

சிலப்பதிகாரம்

வரிக்கு மாடற்கு முரிப்பொரு ளியக்கித்
கூ0 தேசிகத் திருவி னோசை கடைப்பிடித்துத்
தேசிகத் திருவி னோசை யெல்லா
மாசின் றுணர்ந்த வறிவின னாகிக்
கவியது குறிப்பு மாடற் றொகுதியும்
பகுதிப் பாடலுங் *கொளுத்துங் காலை
கூ௫ வசையறு கேள்வி வகுத்தனன் விரிக்கு
மசையா மரபி னிசையோன் றானு
மிமிழ்கடல் வரைப்பிற் றமிழக மறியத்
தமிழ்முழு தறிந்த தன்மைய னாகி

---

உக. வரிக்கு...இயக்கியென்றது - செந்துறை வெண்டுறையென்னப்
படாநின்ற இருவகைப்பாடல்களுக்கும் பொருளாயமைந்த
மமைத்தென்றவாறு.
இயக்காரன்கினையு
கூ0. தேசிகத்..............பிடித்தென்றது - இயற்சொல் திரிசொல்
திசைச் சொல் வடசொலென்று சொல்லப்படாநின்ற சொற்கள்
கடைப்பிடித்தென்றவாறு.

இசைபூணும்படியைக்

௬௧ - ௨. தேசிகத்..............ஆகியென்றது - இச்சொற்களிற் புணர்ப் புண்ட இசைவேறுபாடுகளையெல்லாம் குற்றந்தீர உணரவல்ல அறிவினையுடையனாகியென்றவாறு.

௬௬. கவியதுகுறிப்புமென்றது-இயற்புலவன் நினைத்த கோட்பாடுமென்றவாறு.

ஆடற்குறிப்புமென்றது - ஆடலாசிரியனிடும் வரவுகளின் மென்றவாறு.

தொகுதிபு

௬௪. பகுதிப்பாடலுமென்றது - இவற்றுக்கு அமைந்த பாடற்பகுதிபு மென்றவாறு.

கொளுத்துங்காலையென்றது - இக்கூத்துக்களை ஆசிரியன்குறிப்புக்கும் பாடலுள்ளிட்டனவற்றுக்கும் சேரவியற்றுமிடத்தென்றவாறு.

௬௫ - ௬. வசையறு............தானுமென்றது - இச்சொல்லப்பட்டவற் றைக்குற்றந்தீர்ந்த நூல்வழக்கால் வகுக்கவும் விரிக்கவும்வல்ல பாடலாசிரியனு மென்றவாறு.

இசையுடன்படுத்து இயக்கிக் கடைப்பிடித்து அறிவனாகி விரிக்கும் இசையோனென்க.

இனிக் கவிஞனமைதி கூறுகின்றது:—

௬௭ - அ. இமிழ்கடல்...........ஆகியென்றது-ஆரவாரத்தினையுடைய கடல்

சூழ்ந்தநிலத்தில் வடக்கும் தெற்கும் குடக்கும் குணக்கும் வேங்கடம்குமரி தீம்புனற்பௌவமெனத் தமிழோரால் எல்லைகூறப்பட்டுநின்ற தமிழ்த்தேசத்தா ரறியுமூன்றுதமிழும் போமென்னும் தன்மையையுடையனாகியென்றவாறு.

---

(பி-ம்.) * கொளுத்துங்கால

வேத்தியல் பொதுவிய லென்றிரு திறத்தின்[1]
ஞட்டிய நன்னூ னன்கு கடைப்பிடித்
திசையோன் வக்கிரித் திட்டதை யுணர்ந்தாங்
கசையா மரபி னதுபட வைத்து
மாற்றோர் செய்த வசைமொழி யறிந்து
நாத்தொலை வில்லா நன்னூற் புலவனு
மாடல் பாட லிசையே தமிழே

௩௯-௪0. வேத்தியல்...........கடைப்பிடித்தென்றது - வேத்தியலென்றும் பொதுவியலென்றும் இரண்டுகூறுபாட்டினையுடைய நாடகநூல்களை நன்றாகக் கடைப்பிடித்தென்றவாறு.

௪௧-௨. இசையோன்..............வைத்தென்றது - இசைப்புலவன் ஆளத்திவைத்த பண்ணீர்மையை முதலும் முறைமையும் முடிவும் நிறைவும் குறையும் கிழமையும் வலிவும் மெலிவும் சமனும் வரையறையும் நீர்மையுமென்னும் பதினொருபாகுபாட்டினுமறிந்து அவன் அவை தாளநிலையில் எய்தவைத்த திறம் தன் கவியினிடத்தே தோன்றவைக்கவல்லனுமென்றவாறு.

௪௩-௪. மாற்றோர் செய்த...........புலவனுமென்றது - சத்துருக்களாற் செய்யப்பட்ட வசையாயுள்ளனவறிந்து அவைதோற்றுதபடி வசையின் மொழிகளால் நாடகக்கவிசெய்யவல்ல நல்லநூல்களையுணர்ந்த புலவனுமென்றவாறு; "இன்ன...........தருமே" என்றாராகலின்.

தன்மையனுகிக் கடைப்பிடித்து உணர்ந்துவைத்து அறிந்து தொலைவில்லாத புலவனென்க.

இனித் தண்ணுமையாசிரியனமைதி கூறுகின்றது:—

சரு - ருரு. ஆடல்பாட........முதல்வனுமென்றது -

எல்லாக்கூத்துக்களும், எல்லாப்பாட்டுக்களும், எல்லாஇசைகளும், வடவெழுத்தொரீஇவந்த எழுத்தாலேகட்டப்பட்ட இசைக்கட்டளைக்கூறுபாடுகளும், எல்லாப்பண்களும், இருவகைத்தாளங்களும், எழுவகைத்தூக்குக்களும், இவையிற்றின்முடங்களும், இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொலென்னுஞ்சொற்களுமென்று சொல்லப்பட்டனவற்றையுணர்ந்து ஒருருவை இரட்டிக்கிரட்டி சேர்த்தவிடத்து நெகிழாதபடி நிரம்பநிறுத்தவும் அவ்விடத்துப் பெறுமிரட்டியை ஒப்பாக உருவானவழி நிற்குமானநிறுத்திக் கழியுமானங்கழிக்கவும்வல்லனாய் இப்படி நிகழ்ந்த உருக்களில் யாழ்ப்பாடலும் குழலின்பாடலும் கண்டப்பாடலும் இயைந்துநடக்கிறபடி கேட்போர் செவிக்கொள அமைந்தகரணத்தாற் குறியறிந்து சேரவாசித்தலும் மற்றைக் கருவிகளிற் குறைநிரப்புதலும் அக்கருவிகளின் மிகுதியடக்குதலும் ஆக்குமிடத்தும் அடக்குமிடத்தும் இசையின்இரக்கந் தோன்றுதபடிசெய்தலும் செய்யுமிடத்துக் கைத்தொழில் அழகுபெறச்செய்து

[1] இவ்வடியின்பின், 'மாத்திரை யறிந்து மகிழ்தரு மரபின்' என ஓரடி மிகுதியாக ஒருபிரதியிற் காணப்பட்டது.



பண்ணே பாணி தூக்கே முடமே
தேசிக மென்றிவை யாசி னுணர்ந்து
கூடை நிலத்தைக் குறைவின்று * மிகுத்தாங்கு
வார நிலத்தை வாங்குபு வாங்கி

௪0 வாங்கிய வாரத் தியாழுங் குழலு
மேங்கிய மிடறு மிசைவன கேட்பக்
கூருகிர்க் கரணங் குறியறிந் து † சேர்த்தி

---

காட்டலும் வல்லனுய் அழகுதக்க தன்னுமைக் கருவியினையும் வினையுமுடைய ஆசிரியனுமென்றவாறு.

அரியதொழி

இதுபொழிப்புரை; என்சொல்லியவாறோவெனின்;—

௪௫. ஆடலென்றது - எல்லாக்கூத்துக்களும்.

பாடலென்றது - பண்ணல்முதலிய பாடலியல்புகளும்.

இசையாவது - நரப்படைவாலுரைக்கப்பட்ட பதினோராயிரத்துத் தொள்ளாயிரத்துத்தொண்ணூற்றொன்ருகிய ஆதியிசைகளும்; அவையாவன: "உயிருயிர்.........கடனே" என்னுஞ் சூத்திரத்தாலுறழ்ந்து கண்டுகொள்க.

தமிழாவது - வடவெழுத்தொரீஇவந்த எழுத்தானே கட்டப்பட்ட வாக்கியக்கூறுகளும், இயலிசைநாடகங்களுமென்று சொல்லப்படாநின்ற மூன்று தமிழ்களும்.

௪௬. பண்ணென்றது - நரப்படைவால் நிறந்தோன்றப் பண்ணப்படா நின்றபண்ணும், பண்ணியற்திறமும், திறமும், திறத்திறமும்.

பாணியென்றது - இருவகைத்தாளவிகற்பங்களும்.

தூக்கென்றது - செந்தூக்குமுதலாய எழுதூக்குக்களும்.

முடமென்றது - இவையிற்றின் குற்றங்களும்.

௪௭. தேசிகமென்றது - இயற்சொல் திரிசொல் லென்று சொல்லப்படாநின்ற சொற்பிரயோகம்.

இசைச்சொல் வடசொ

இவையாசிறுணர்ந்தென்றது - இச்சொல்லப்பட்ட ஒன்பதும் கனவழியே நன்னிதாக வறிந்தென்றவாறு.

இலக்

சஅ - க. கூடைநிலத்தைக்.........வாங்கியென்றது - ஒருருவை இரட்டித் தெரட்டி சேர்த்தவிடத்து ரெகிழாதபடி நிரம்பநிறுத்தவும் அவ்விடத்துப்பெ

றும் இரட்டியை ஒப்பாக உருவானவழி நிற்குமானநிறுத்திக் கவும் வல்லளுயென்றவாறு.

கழியுமானக்கழிக்

சு0-சுஉ. வாங்கிய.........சேர்த்தியென்றது - இப்படி நிகழ்ந்த உருக்களில் யாழ்ப்பாடலும் குழலிசையும் கண்டப்பாடலும் இயைந்து நடக்கின்றபடி கேட்போர்க்குச் செவிகொள்ளாநிற்கத் தண்ணுமைக்கருவியமைந்த கரணத்தாற் குறியறிந்து சேரவாசிக்கவல்லளுயென்றவாறு.

(பி - ம்.) * 'மிருத்தவார்' † 'சேவுத்தி'

## ௩.—அரங்கேற்றுகாதை.

கூடு

யாக்கலு மடக்கலு மீத்திறம் படாமைச் சித்திரக் கரணஞ்

சிதைவின்று செலுத்து
ருடு மத்தகு தண்ணுமை யருந்தொழின் முதல்வனுஞ்
சொல்லிய வியல்பினிற் சித்திர வஞ்சனை
புல்லிய வறிந்து புணர்ப்போன் பண்பின் வர்த்தனை நான்கு *
மயலறப் பெய்தாங்

ருக. ஆக்கல் - மற்றக்கருவிகளின் குறையை நிரப்புகை.
அடக்கல் - மற்றக்கருவிகளின் மிகுதியை அடக்குதல்.
சீத்திறம்படாமை - ஆக்குமிடத்தும் அடக்குமிடத்தும்
இரந்திரந்தோன்றுமற் செய்கை.

ருச. சித்திரக்கரணஞ்சிதைவின்று செலுத்தும் - இவ்வினைத்தஞ் செய்யுமிடத்துக் கைத்தொழில் அழகுபெறச்செய்து காட்டவல்லவென்றவாறு.

ருடு. அத்தகு......முதல்வனுமென்றது - இச்சொல்லப்பட்ட கூறுபாடுகளில் ஒன்றும் குறைவின்றியேயிருக்கும் தண்ணுமைக் கருவியாசிரியனுமென்றவாறு.

உணர்ந்து மிகுத்து வாங்கிச் சேர்த்திச் செலுத்தும் தண்ணுமைமுதல்வனென்க.

இனிக் குழலோனமைதி கூறுகின்றது:—

ருசு. சொல்லிய வியல்பாவது - நூல்களிற்சொன்ன முறைமையென்றவாறு.

ருசு - எ. சித்திரவஞ்சனை புல்லியவறிந்தென்றது - சித்திரப்புணர்ப்பும் வஞ்சனைப்புணர்ப்புமென்று சொல்லப்படாநின்ற இரண்டு கூற்றினையுமறிந் தென்றவாறு.

இவற்றுள், சித்திரப்புணர்ப்பாவது - மேலே பண்ணீர்மை நிறுத்தல்.
இசைகொள்ளுமெழுத்துக்களின்

வஞ்சனைப்புணர்ப்பாவது - இசைகொள்ளாவெழுத்தின்மேல் வந்துழி மெல்லொற்றுப்போல் நெகிழ்த்துப்புணர்த்தல்.

வல்லொற்று

௫௭. புணர்ப்போன் பண்பினென்றது - புணர்க்கத்தக்க பாடலாசிரியனை யொத்த அறிவினையுடையனாகியென்றவாறு.

௫௮. வர்த்தனை............பெய்தாங்கென்றது - வங்கியத்து விரலுளர்ந்தூதுந்துளைகள் தர்ச்சனிமுதலாக விட்டுப்பிடிப்பது ஆரோகணமாதலானும் கனிட்டன்முதலாக விட்டுப்பிடிப்பது அவரோகணமாதலானும் இரண்டுகூறும் இப்படிச்செய்தல் வர்த்தனையாதலின் இப்படியால்[1] நாற்றுமூன்றுபண்ணீர்மைகளையும் தங்கிலைகுலையாமல் நிரம்பக் காட்டவல்லனையென்றவாறு.

ஆங்கு - அவ்விடத்து. தர்ச்சனி - சுட்டாமுட்டி. கனிட்டன் - சிறுவிரல்.

[1] ௧௮ - ஆம் பக்கம் பார்க்க. (பி - ம்.) * 'மயலறத்தெரிந்தாங்கேற்றிய'





கேற்றிய குரலிளி யென்றிரு நரம்பி
னொப்பக் கேட்கு முணர்வின னாகிப்
பண்ணமை முழவின் கண்ணெறி யறிந்து
தண்ணுமை முதல்வன் றன்னொடும் பொருந்தி
வண்ணப் பட்டடை யாழ்மேல் வைத்தாங்
கிசையோன் பாடிய விசையி னியற்கை
வந்தது வளர்த்து வருவ தொற்றி

## யின்புற வியக்கி யிசைபட வைத்து

இக - கo. ஏத்திய குரலினி...........ஆகியென்றது - பதினாற்கோவையி லிடத்துக் குரனரம்பிரட்டிக்கவரும் அரும்பாலையும் இளிநரம்பு இரட்டிக்க வரும் மேற்செம்பாலையும்போல அல்லாத பாலைகளையும் இசைநூல்வழக்காலே இணைநரம்புதொடுத்துப்பாடும் அறிவினையுடையனுயென்றவாறு.

கக. பண்ணமை.........அறிந்தென்றது - பண்ணுத்தலைமைந்த நெறியினையறிந்தென்றவாறு.
முழவின்கண்

கஉ. தண்ணுமை.........பொருந்தியென்றது
னுடும் பொருந்தியென்றவாறு.

தண்ணுமையாசிரியன்றன்

உம்மையாற் பொருந்துமிடமும் பொருந்தியென்க.
கங.

வண்ணப்.........வைத்தென்றது...................................
பட்டடையென்றது நரம்புகளில் இளிக்குப்பெயர்; என்னை? எல்லாப்பண்ணிற்கும் அடிமனையாதலின். வண்ணமென்றது - நிறம்; நிறத்தினையுடைய பட்டடையென்றவாறு; இதனை யாழ்மேல்வைத்தென்க
ஆக்கென்றது, அசை.

கச. இசையோன்.........இயற்கையென்றது - இக்கிரமத்தினாலே பண்கனை யாழ்மேல்வைத்து அதன்வழியே இசைக்காரன்பாடிய பாட்டினியல்பையென்றவாறு.

கரு. வந்தது வனர்த்தென்றது - பாடுகின்ற பண்வரவுகளுக்குச் சுரம் குறைவுபடாமனிறுத்தியென்றவாறு.

வருவதொற்றியென்றது - அந்தப்பண்ணுக்கு அயல்விரவாமல் நோக்கி யென்றவாறு.

௬௬. இன்புறவியக்கியென்றது - வண்ணமுதலாகக் காட்டப்பட்ட பாடலியல் வழக்கெல்லாம் இரதம்பொருந்த நிரம்பக்காட்டியென்றவாறு.

இசைபடவைத்தென்றது - முற்கூறிய முதலும் முறையுமுதலான பண் ணிலக்கணம் பதினொன்றினையும் நிரம்பவைக்கவல்லனாயென்றவாறு.



வார நிலத்தைக் கேடின்று வளர்த்தாங்
கீர நிலத்தி னெழுத்தெழுத் தாக
வழுவின் றிசைக்குங் குழலோன் றானு
மீரேழ் தொடுத்த செம்முறைக் கேள்வியி
னோரேழ் பாலை நிறுத்தல் வேண்டி
வன்மையிற் கிடந்த தார பாகமு
மென்மையிற் கிடந்த குரலின் பாகமு
மெய்க்கிளை நரம்பிற் கைக்கிளை கொள்ளக்
கைக்கிளை யொழிந்த பாகமும் பொற்புடைத்
தளராத் தாரம் விளரிக் கீத்துக்
கிளைவழிப் பட்டன ளாங்கே கிளையுந்
தன்கிளை யழிவுகண் டவள்வயிற் சேர

௬௭. (பா.) வாரநிலத்தைக்

கேடின்று பார்த்தென்றது-முதனடை வாரம் கூடைதிரளென்று

சொல்லப்படாநின்ற இயக்காான்கினும் முதனடை மிகவும் தாழ்ந்த செலவினையுடைத்தாதலானும், திரள் மிகவும் முடுகியநடையினையுடைத் தாதலானும், இவைதவிர்ந்து இடைப்பட்டவாரப்பாடல் சொல்லொழுக்கமும் இசையொழுக்கமுமுடைத்தாதலானும், கூடைப்பாடல் சொற்செறிவும்இசைச் செறிவுமுடைத்தாகலானும், சிறப்புநோக்கி இவ்விரண்டினுள்ளும் பாடலை அளவுநிரம்ப நிறுத்தவல்லனுயென்றவாறு.

வாரப்

எனவே, கூடைப்பாடலும் அமைவதாயிற்று. நிலம் - இடைநிலம்.

சுஎ - அ. ஆங்கு ஈர நிலத்தினெழுத்தெழுத்தாகவென்றது -

பாடலிடத்

தச்சொன்னீர்மையின் எழுத்துக்கள் சிதையாமல் எழுத்தை எழுத்தாகஇசைக் குங்குழலோனென்றவாறு; அன்றியும் ச ரி க ம ப த நி என்பாருமுளர்.

சுக. வழுவின்றிசைக்குங்

குழலோன்முனுமென்றது-இச்சொல்லப்பட்ட இயல்புகளை இலக்கணப்படியே வாசித்துக்காட்டவல்ல மென்றவாறு.

வங்கியவாசிரியனு

அறிந்து மயலறப்பெய்து உணர்வினனுகி அறிந்து பொருந்தி வைத்து வளர்த்து ஒற்றி இயக்கி வைத்துப் பார்த்து இசைக்குங் குழலோனென்க.

**இனி, யாழாசிரியனமைதி கூறுகின்றது:—**

எ0 - எக. ஈரேழ் தொடுத்த............வேண்டியென்றது - ஆயப்பாலையாய் நின்ற பதினாற்கோவை பொலிந்து செப்பமுடைத்தாய்ப் பாடலியல்பு ஒத்த மைந்த சிறப்புடைத்தாகலினுல் அதிலே செம்பாலை படுமலைப்பாலை

செவ்வழிப் பாலை அரும்பாலை கோடிப்பாலை விளரிப்பாலை மேற்செம்பாலையென்று சொல்லப் பட்ட எழுபாலையினையும் இணைநரம்பாகத்தொடுத்து நிரம்பிநுத்திக்காட்டல் காரணமாகவென்றவாறு.

எ௨ - அ. வன்மையிற்கிடந்த.........அவ்வயிற் சேரவென்றது - "தார பாகமும்..........என்மனார் புலவர்" என்னுஞ்சூத்திரத்தாலே வரப்பட்ட பாலை கூஅ சிலப்பதிகாரம்

வேனி மகளிருங் * கிளைவழிச் சேர
மேல துழையினி கீழது கைக்கிளை
வம்புறு மரபிற் செம்பாலை யாய
திறுதி யாதி யாக வாங்கவை
பெறுமுறை வந்த † பெற்றியி னீங்காது
படுமலை செவ்வழி பகாரும் பாலையெனக்
குரல்குர லாகத் தற்கிழமை திரிந்தபின்
முன்னதன் வகையே முறைமையிற் றிரிந்தாங்
கிளிமுத லாகிய ‡ வெதிர்படு கிழமையுங்
கோடி விளரி மேற்செம் பாலையென
நீடிக் கிடந்த கேள்விக் கிடக்கையி

யின்முடிவு,கானமாய் வலித்த நிலைமையினையுடைய தாரம்பெற்ற இரண்டலகில் ஓரலகையும் விளரிப்பாலையின் முதல்தாரமாதலின் மேனிற்கிற குரனரம்பு பெற்ற நாலலகில் இரண்டலகையும் தாரநரம்பில் அந்தரக்கோலிலே கைக்கிளை

யாகவிறுத்தத் தாரந்தான் கைக்கிளையாயிற்று. அந்தரம்பில் ஒழிந்த ஓரளைக யும் பண்டைவிளரியிலே கூட்ட அவ்விளரி அந்தரம்பாயிற்று. இப்படியாற் பன்னிருகாற்றிரிக்கப் பன்னிருபாலையும் பிறக்கும்;
தொண்ணூற்றொன்றும் பன்னிரண்டுமாய்ப் [1] பண்கள்
காரணமாமெனக்கொள்க.

பன்னிருபாலையினுருக்
நூற்றுமூன்றுதற்குக்

இவ்விடத்துத் தாரநரம்பின் அந்தரக்கோலைத் தாரமென்றது,
மும்.........வழிப்படர'' என்னுஞ் சூத்திரத்தாலெனக்கொள்க.

''தன்ன எக. ஏனே மகளிருங் கிளைவழிச் சேரவென்றது-இதனைப் தானமாகிய பதினாற்கோவையிலே கூட்டவென்றவாறு.
கூட்டும்படி:—

பெண்டிர்க்குரிய

அ0 - அக. மேலதுழையிளி.........செம்பாலையாயதென்றது - உழை முதற் கைக்கிளையிறுதியாக மெலிவுநான்கும் சமமேழும் வலிவுமூன்றுமாய்ச் செம்பாலையாயதென்க.

அஉ - ரு. இறுதி யாதி......... நீங்காதென்றது - தாரமுதலாகப்

பெறு முறையாய்வந்தபடியே நீங்காமலென்றவாறு.

அசு - ரு. படுமலை செவ்வழி.........திரிந்தபினென்றது - கைக்கிளைகுர லாய்ப் படுமலைப்பாலையும், துத்தம்குரலாய்ச் செவ்வழிப்பாலையும்,குரல்குரலாய் அரும்பாலையும் தற்கிழமைதிரிந்தபினென்க.

. அரும்பாலைக்கு நரம்பு இரட்டித்த பெற்றித்தென்றவாறு.

அசு - க. முன்னைதன் வகையே........கிடக்கையினென்றது - முன்பிற் பிடியே தாரம் குரலாகக் கோடிப்பாலையும், விளரிகுரலாக விளரிப்பாலையும், இளி குரலாக மேற்செம்பாலையுமாயின.

இனி, மேற்செம்பாலை இளிநரம்பு இரட்டித்த நிலைமையினையுடைத்தாய் இப்படிச்சமைந்த பதினாற்கோவைப்பாலை நிலையிலென்றவாறு.

[1] பக்கம், ௯௯. (பி - ம்.) * 'மெலிவிற்சேர' † 'பெற்றிதிக்காது' ‡ 'வர்ப'

## ௩.—அரங்கேற்றுகாதை.

னிணைநரம் புடையன வணைவுறக் கொண்டாங்
கியாழ்மேற் பாலை யிடமுறை மெலியக்
குழன்மேற் கோடி வலமுறை * மெலிய
வலிவு மெலிவுஞ் சமனு மெல்லாம்
பொலியக் கோத்த புலமை யோனுடன்
னெண்ணிய நூலோ ரியல்பினின் வழாஅது
மண்ணக மொருவழி வகுத்தனர் கொண்டு
புண்ணிய நெடுவரைப் போகிய நெடுங்கழைக்
கண்ணிடை யொருசாண் வளர்ந்தது கொண்டு
நூனெறி மரபி னரங்க மளக்குங்
கோலள விருபத்து நால்விர லாக

௧0. இணைநரம் புடையன வணைவுறக் கொண்டாங்கென்றது - இப்பதினாற் கோவைப்பாலைநிலையிலும் பண்ணுநிலையிலும் இரட்டித்த குரல்குரலாகிய அரும்பாலையும் இளிகுரலாகிய மேற்செம்பாலையும்போல அல்லாத ஐந்துபாலையும் உழைகுரலாகச் செம்பாலைக்கு

உழைபெய்தும் கைக்கிளைகுரலாகப் படுமலைக்குக் கைக்கிளைபெய்தும் துத்தம் குரலாகச் செவ்வழிப்பாலைக்குத் துத்தம்பெய்தும் தாரங்குரலாகக் கோடிப்பாலைக்குத் தாரம்பெய்தும் விளரிகுரலாக விளரிப் பாலைக்கு விளரிபெய்தும் பாடப்படுமென்றவாறு.

கக - உ. யாழ்மேற் பாலை..........மெலியவென்றது - யாழினிடத்து அரும் பாலைமுதலியன இடமுறை மெலியவும் குழலினிடத்துக் கோடிப்பாலைமுதலி யன வலமுறைமெலியவும் பாடப்படுமென்றவாறு.

கக - ச. வலிவு..........புலமையோனென்றது - இப்படியால் வலிவும் மெலிவும் சமனுமென்று சொல்லப்படாநின்ற தானநிலையினையுடைய இசைக் கூறுபாடுகளுக்கெல்லாம் நரப்படைவுகெடாமலும் பண்ணீர்மை முதலாயின குன்றாமலும் புணர்க்கவல்லனாய் அப்புணர்ப்பிற்கு அமைந்த எழுத்துக்களால் இசைசெய்யவல்ல யாழாசிரியனுமென்றவாறு.

எக. நிறுத்தல்வேண்டிப் (கச) பொலியக்கோத்த புலமையோனென்க.

கச. உடனென்றது -
ஆடலாசிரியன்முதலாயுள்ளாருடனென்றவாறு.

**இனி, அரங்கினமைதி கூறுகின்றது :—**

கரு - க.
எண்ணிய நூலோர்.........வகுத்தனர்கொண்டென்றது-எண்ணப் பட்ட நாடகநூலாசிரியர் வகுத்த இயல்புகளின் வழுவாதவகை அரங்குசெய்யத் துவர் வரி வளை பொருத்தன்முதலிய நிலக்குற்றங்கள் நீங்கினவிடத்திலே கலந்தெரிந்து இவ்விடமென்று வகுத்துக்கொண்டென்றவாறு.

கள - ௧00. புண்ணிய நெடுவரைப்.........நால்விரலாகவென்றது - பொதி யில்வரைமுதலான புண்ணிய நெடுவரைப்பக்கங்களில் நெடிதாகி உயரவளர்ந்த மூங்கிலிற் கண்ணொடு கண்ணிடை ஒருசாணாக வளர்ந்ததுகொண்டு நூல்களிற்

(பி - ம்.) * 'வலிய'



# சிலப்பதிகாரம்.

வெழுகோ லகலத் தெண்கோ னீளத்
தொருகோ லுயரத் துறுப்பின தாகி
யுத்தரப் * பலகையோ டரங்கின் பலகை
வைத்த விடைநில நாற்கோ லாக
வேற்ற வாயி லிரண்டுடன் பொலியத்
தோற்றிய வரங்கிற் றொழுதன † ரேத்தப்
பூதரை யெழுதி மேனிலை வைத்துத்
தூணிழற் புறப்பட மாண்விளக் கெடுத்தாங்

---

சொல்லுகிறபடியே அரங்குசெய்ய அளக்குங்கோல் உத்தமன்கைப்பெருவிரல் இருபத்துநாலுகொண்டது ஒருமுழமாகக் கோல் நறுக்கியென்றவாறு;

"ஒத்த வனுமுத லடர்ந்தவரு கணக்கி, னுத்தமன் பெருவிர லிருபத்து நாலு, கொண்டது கோலெனக் கோறகுநிப் புணர்ந்த, தண்டாக் கேள்வித் தலைவர் கிளந்தனர்" என்றாராகலின்.

௧0௧ - உ. எழுகோல்...........உறுப்பினதாகியென்றது - எழுகோலகலமும் எட்டுக்கோல் நீளமும் அக்கோலால் என்னை? "அக்கோலேழுகன்று...... .

ஒருகோல் குறட்டுயரமுமாயென்க;
உயரவுமுரித்தே " என்முராகலின்.

௧௬௬. உத்தரப் பலகை......அரங்கிலென்றது-தூணத்தக்குமீதுவைத்த உத்தரப்பலகைக்கும் அரங்கினிடத்து அகலத்துக்கிட்டபலகைக்கும் இடைநின்றநிலம் நான்குகோலாக உயரங்கொண்டு இத்தன்மையவாய அளவுக்குப் பொருந்த வகுத்த வாயிலிரண்டினையுடையதாகச்செய்த அரங்கிலென்றவாறு.

வாயிலிரண்டு :— புகச்சமைத்தவாயிலும் புறப்படச்சமைத்தவாயிலு மெனக்கொள்க.

௧௦௬. தோற்றியவரங்கு - இப்படியாற்சமைக்கப்பட்ட நூலிற்சொல்லுகிற படியே எல்லாவிலக்கணமும் தோற்றின அரங்கென்க.

௧௦௬ - எ. தொழுதனர்........வைத்தென்றது - அந்தணர் அரசர் வணிகர் சூத்திரரென்று சொல்லப்பட்டநின்ற நாலுவருணத்துப்பூதரையும் மேனிலத்தே யாவரும் புகழ்ந்து வணங்க எழுதி வைத்தென்றவாறு;

என்னை ? " கூறிய வரங்கில்.........இயற்பிற் முமே " என்முராகலின்.

௧௦அ. தூணிழற்.........கெடுத்தென்றது - தூண்களினிழல் நாயகப்பத்தி யின்கண்ணும் அவையின்கண்ணும் படாதபடி மாட்சிமைப்பட்ட விளக்கை யேற்றி யென்றவாறு.

---

(பி - ம்.) * 'பலகையோடோங்கின' † 'ஏத்தி'

## ௩.—அரங்கேற்றுகாதை.

[1] கொருமுக வெழினியும் பொருமுக வெழினியுங்
கரந்துவர லெழினியும் புரிந்துடன் வகுத்தாங்
கோவிய விதானத் துரைபெறு நித்திலத்து
மாலைத் தாமம் வளையுட னாற்றி
விருந்துபடக் கிடந்த வருந்தொழி லரங்கத்துப்
[2] பேரிசை மன்னர் பெயர்புறத் தெடுத்த
சீரியல் வெண்குடைக் காம்புநனி கொண்டு
கண்ணிடை நவமணி யொழுக்கி [3] மண்ணிய
நாவலம் பொலந்தகட் டிடைநிலம் போக்கிக்

---

௧௦௯ - ௧௦. ஒருமுகவெழினியும்......வருத்தென்றது - இடத்தூணினிலையி
டத்து ஒருமுகவெழினியும் இரண்டுவலத்தூணினிலையிடத்துப் பொருமுகவெழி
னியும் மேற் கரந்துவரலெழினியுமாகச் செயற்பாட்டுடனே வகுத்தென்றவாறு.

௧௧௧. ஓவியவிதான த்து - சித்திரவிதானமான
பலதொழில்களையுமுடைத்
தாகி.

௧௧௧ - ௨. உரைபெறு.........நாற்றியென்றது - நல்லவாகிய முத்துமாலை
களாற் சல்லியும் தூக்குமாக நாற்றியென்றவாறு.

௧௧௩. விருந்துபடக்.........அரங்கத்தென்றது - அழகினாற்

புதுமைத்தாகச் சமைத்த அரங்கினகத்தென்றவாறு.

கூகூ. வகுத்தனர் (கக௨) நாற்றிக் (ககூ) கொண்டு (கoஎ) வைத்து (கoஅ) எடுத்து கிடந்த அரங்கமென்க.

(ககo) வகுத்து

நாற்றுதற்கு இடமாகக் கிடந்த அரங்கமென்க.

ககச - ரு. பேரிசைமன்னர்...........நனிகொண்டென்றது - பெரியசீர்த்தியையுடைய அரசர் பொருதுடைந்து புறங்கொடுத்தவழிப் பறிக்கப்பட்ட அழகிய நற்கொற்றக்குடையின்காம்பைத் தலைக்கோலாகக் கொண்டென்றவாறு. என்றது : தலைக்கோல் கொள்ளுமிடத்து மாற்றுவேந்தரெயிற்புறத்து வெட்டினமூங்கிலும் புண்ணியவரையின் மரமென்...............

மூங்கிலும் மாற்றரசர் குடைக்காம்பு

இது கூறிற்று, வேத்தியலும் பொதுவியலுமாதலான்.

ககரு - எ. கண்ணிடை.........போக்கியென்றது - கண்கடோறும் நவரத்தினங்களாற் கட்டி இடைநிலங்களைச் சாம்பூநதமென்னும் பொற்றகட்டாலே செறிய மலக்கமாகக்கட்டியென்றவாறு.

மலக்கமாகக்கட்டலாவது - மாறுகக்கட்டுவது.

---

[1] "எழினி தானே மூன்றென மொழிப", "அவைதாம், ஒருமுக வெழினியும் பொருமுக வெழினியுங்,கரந்துவரலெழினியு மெனமூ வகையே".(சிலப். கஎ௰-ந. மேற்.)

[2] இவ்வடிமுதலியவை இந்நூல் உ௮ - ஆம் காதையிலுள்ள கூ௮ - ஆம் அடியை ஒத்துள்ளன. (பி - ம்.) *நன்னிய'

காவல் வெண்குடை மன்னவன் கோயி
லிந்திர சிறுவன் சயந்த னாகென
வந்தனை செய்து வழிபடு தலைக்கோல்
புண்ணிய நன்னீர் பொற்குடத் தேந்தி
மண்ணிய பின்னர் மாலை யணிந்து
நலந்தரு நாளாற் பொலம்பூ ணோடை
யரசுவாத் தடக்கையிற் பரசினர் கொண்டு
முரசெழுந் தியம்பப் பல்லிய மார்ப்ப
வரைசொடு பட்ட வைம்பெருங் குழுவுந்
தேர்வலஞ் செய்து கவிகைக் கொடுப்ப
வூர்வலஞ் செய்து புகுந்துமுன் வைத்தாங்

---

கக௮ - ௨0. காவல்வெண்குடை........தலைக்கோலென்றது - இத்தலைக் கோலை தேவேந்திரன்மகன் சயந்தனாகநினைத்து மந்திரவிதியாலேபூசித்து வழிபட்டு இராசாவின் கோயிலிலே காப்பமைத்து இருப்பக்கடவதென்றவாறு.

சயந்தனாதற்குக்காரணம் [1] மேலே சொன்னோம்.

க௨க - ௨. புண்ணிய நன்னீர்........மாலையணிந்தென்றது - நாடகக்கணிகை தலைக்கோல் கொள்ளுமாறு: புண்ணியத்தீர்த்தங்களின்நீரைப் பொற்குடத்திலேயெடுத்துக்கொண்டுவந்து இத்தலைக்கோலை அபிடேகம்பண்ணிப் பின்பு மாலைகளுஞ் சூட்டியென்றவாறு.

முன்புசொல்லிப்போந்த (உரு) நாடகவாசிரியன் முதலானோர் (ககூ) அரங்கத்தின்கண்ணே (கஉஅ) இத்தலைக்கோலைவைத்துப் (கஉக) பொற்குடத்தால் (கஉஉ) நீராட்டியபின்பு மாலைசூட்டுபவென்க.

கஉங. நலந்தருநாளாலென்றது - நல்லநாளிலென்றவாறு.

இதனை நல்லநாளில் (கஉட) மண்ணப்பின்னென்பதனை

முன்னேசேர்க்க.

கஉரு - ச. பொலம்பூணோடை............கொண்டென்றது -

பொற்பட்டத்தையும் ஆபரணங்களையுமுடைய

அடனே கொடுத்தென்றவாறு.

பட்டவருத்தனத்தின்கையில் வாழ்த்

கஉ௫ - அ. முரசெழுந்தியம்பப்........முன்வைத்தரங்கென்றது

- வீர

முரசுமுதலாயினவும் பலவாச்சியங்களுமார்ப்ப அரசனும் மந்திரி புரோகித சேனாபதித்தொடக்கத்தாருங் கூட வீதியின்கணின்ற தேரினையும் இவ்வைராபதத்தினையும் உடன்கொண்டுவலஞ்செய்து தேரின்மேனின்ற பாடுவானது கை

யிலே இத்தலைக்கோலைக் கொடுத்துத் தேரினைக்கொண்டு நகரியைவலமாகவந்து அரங்கத்தின்கட்புகுந்து தலைக்கோலை எதிர்முகமாக வைத்தபினென்றவாறு.

என்னை ? "பிணியுங் கோளு.........தக்க தென்ப" என்றார் செயிற்றியனார்.

[1] இப்புத்தகத்தின் ௯௧ - ஆம் பக்கம் பார்க்க.

## ௩.—அரங்கேற்றுகாதை.

ஸர்

யெல்பினின் வழாஅ திருக்கை முறைமையிற்
கூo குயிலுவ மாக்க * ணெறிப்பட நிற்ப
வலக்கால் முன்மிதித் தேறி யரங்கத்து
வலத்தூண் சேர்தல் வழக்கெனப் பொருந்தி
யிந்நெறி †வகையா லிடத்தூண் சேர்ந்த
தொன்னெறி ‡யியற்கைத் தோரிய மகளிருஞ்
கூ௫ சீரியல் பொலிய நீரல நீங்க
வார மிரண்டும் வரிசையிற் பாடப்
பாடிய வாரத் தீற்றினின் றிசைக்குங்
கூடிய குயிலுவக் கருவிக ளெல்லாங்

இனி, அரங்கிலேபுகுந்து ஆடுகின்ற இயல்புகூறுகின்றது:—

கஉகூ. இயல்பினின்.........முறைமையினென்றது - வரிசைக்கேற்ற இருக்கைமுறைகளிலே இருந்தபினென்றவாறு.

கூo. குயிலுவமாக்கள் நெறிப்பட நிற்பவென்றது - குயிலுவக்கருவியாளர் நிற்கக்கடவ முறைமையிலேநிற்பவென்றவாறு.

முறைமையிலேநிற்கையாவது:— "ஆடிட முக்கோல்...............நிலையிட மொருகோல்" என்று கூறின முறைவழுவாதேநிற்கை.

குயிலுவர் - இடக்கைமுதலான கருவியாளர்.

கூக - உ.

வலக்கான்முன்...........பொருந்தியென்றது - நாடகக்கணிகை யாகிய அரங்கேறுகின்ற மாதவி அரங்கத்திலே வலக்கால் முற்படவிட்டேறிப் பொருமுகவெழினிக்கு நிலையிடனை வலப்பக்கத்துத் தூணிடத்தே சேர்தல் வழக்கென்னுமிடத்தாலே சேர்ந்தென்றவாறு.

கூகூ - ச. இந்நெறி வகையா.........தோரியமகளிருமென்றது -

மாதவி வந்தேறிநின்றபடி இடத்தூணிலையாகிய

ஒருமுகவெழினியிடம்பற்றிய பழைய நெறியியற்கையினையுடைய தோரிய

மடந்தமுதலாயினருமென்றவாறு.

தோரியமடந்தையராவார் - ஆடிமுதிர்ந்தார்; என்னை? "இந்நெறி

வகை

யால்........தோரிய மகளே" எனவும், "தலைக்கோ

மகளே" எனவுஞ் சொன்னாராகலின்.

லரிவை.........தோரிய

கஙரு - சு. சீரியல்.........பாடவென்றது - நன்மையுண்டாகவும்

நீங்கவும்வேண்டித் தெய்வப்பாடல் பாடவென்றவாறு.

தீமை

யுள்;

வாரமிரண்டாவன:—ஓரொற்றுவாரம், ஈரொற்றுவாரமென்னுஞ் செய்

அவை தாளத்து ஒருமாத்திரையும் இரண்டுமாத்திரையும் பெற்றுவரும்.

கஙஎ - அ. பாடிய

பாடலின் ஈற்றிலேநின்று

வாறு.

வாரத்து.........கருவிகளெல்லாமென்றது - தெய்வப்

கூடி இசைக்கப்படாநின்ற கருவிகளெல்லாமென்ற இக்கருவிகள்

எவ்வண்ணங்கூடியிசைத்தனவோவெனின் :—

(பி.

---

டி.). * 'நெறிபட' † 'வகையில்' ‡ 'இயற்கையிற்றோரியமகளும்'

குழல்வழி நின்ற தியாழே யாழ்வழித்
தண்ணுமை நின்றது தகவே தண்ணுமைப்
பின்வழி நின்றது முழவே முழவொடு
கூடிநின் * றிசைத்த தாமந் திரிகை
யாமந் திரிகையோ டந்தர மின்றிக்
கொட்டிரண் டுடையதோர் † மண்டில மாகக்
கட்டிய † மண்டிலம் பதினொன்று போக்கி
‡ வந்த முறையின் வழிமுறை வழாமல்

---

௧௩௯. குழல்வழி நின்றதியாழேயென்றது - வங்கியத்தின் வழியே நின்றது யாழ்ப்பாடலென்றவாறு.

எனவே மிடற்றுவழி யாழாதலின் மிடற்று மட்டும் கொள்க.
யாழ்வழித்தெனக்

௧௩௯ - ௪௦. யாழ்வழி.........தகவேயென்றது - யாழ்ப்பாடலின்வழியே தண்ணுமைக்கருவி நின்றதென்றவாறு.

௧௪௦ - ௪௧. தண்ணுமைப் பின்வழிநின்றது முழவேயென்றது - மத்தளக் கருவியின்வழியே குடமுழவுநின்றதென்றவாறு.

௧௪௧ - ௨. முழவொடு கூடிநின்றிசைத்ததாமந் திரிகையென்றது

- மூழ
வொடுகூடிநின்ற வாச்சியக் கூறுகளை அமைத்தது ஆமந்திரிகை யென்னுங்கருவி
யென்றவாறு.

ஆமந்திரிகையாவது - இடக்கை. நின்றது கருவியென்னுது ஓசையென்க.

அஃதேல் மிடற்றுப்பாடல் சொல்லிற்றிலராலெனின், வாரப்பாடல் பாடியபின்னெனவே மிடற்றுப்பாடலுமடங்கும்.

கசரு.

ஆமந்திரிகையோடந்தரமின்றியென் றது-இவ்வாமந்திரிகையோடே முன்சொன்ன குயிலுவக் கருவிகளனைத்தும் பருந்தும் நிழலும்போல நிற்பவென்றவாறு.

ஒன்றாய்

கசச. கொட்டிரண்டுடையதோர்மண்டிலமாகவென்றது - ஒரு தக்கு இரண்டுபெற்றாக வென்றவாறு.

தானந்

கசரு. கட்டிய மண்டிலம் பதினொன்று போக்கியென்றது - பஞ்சதாளப் பிரபந்தமாகக் கட்டப்பட்ட தேசியொத்தை ஒருதாளத்துக்கு இரண்டுபெற்றாகப் பத்தும் தீர்வு ஒன்றுமாகப் பதினொருபற்றாலே தேசிக்கூத்தை ஆடிமுடித்தென்ற வாறு.

கசசு. வந்த முறையின் வழிமுறைவழாமலென்றது - இப்படிச் செய்கை நாடகநூல்களிலமைந்த முறையாகலான், அம்முறை வழுவாமலென்றவாறு.

‡ "குழல்வழி யாழெழீஇத் தண்ணுமைப் பின்னர், முழவியம்ப லாமந் திரிகை" (சிலப். ௩-௪, ௧௪௫, ந-மேற்.); "குழலெழீஇ யாழெழீஇத் தண்ணுமை.....ஆமந் திரிகை என்று கூத்தநூலுடையாரும் சொன்னார்" (இறை சூ. ௪௦ - உரை, மேற்.) (பி-ம்). * 'இசைத்தரியாமத்திரிகை' † 'மண்டலம்' ‡ 'வந்தமுறைமையின்.'

## ௩.—அரங்கேற்றுகாதை.

சரு

லந்தரக் கொட்டுட னடங்கிய * பின்னர்
மீத்திறம் படாமை வக்காணம் வகுத்துப்
பாற்பட நின்ற பாலைப் பண்மே
னான்கி னொரீஇய நன்கன மறிந்து
மூன்றளந் தொன்று † கொட்டி யதனை
யைது மண்டிலத்தாற் கூடை போக்கி
வந்த வாரம்வழி மயங்கிய பின்றை
யாறு நாலு மம்முறை போக்கிக்

கசஎ. அந்தரக் கொட்டுட னடங்கிய பின்னரென்றது - ... ... ... அந்தரக்கொட்டென்றும் முகமென்றும் ஒத்தென்றும் இதற்குப்பெயர். இந்த ஒத்து ஆடியபின்னரல்லது உருவுகாட்டுகை வழக்கல்லவென்றவாறு; என்னை? "முகமா யொத்திரி யோகப் பொருட்டே" என்பதனாற் காண்க.

கசஅ - கூ. மீத்திறம்.........பாலைப்பண்மேலென்றது - மங்கலப் பண்ணாய் நாப்படைவுமுடைத்தாயிருக்கிற பாலைப்பண்ணை அளவுகெடாதபடி ஆளத்தியிலேவைத்து அதன்மேலே யென்றவாறு.

கரு௦. நான்கின் னெரீஇய நன்கனமறிந்தென்றது - மங்கலச்சொல்லினை யுடைத்தாய் நாலுறுப்பும் குறைபாடில்லாத உருவுக்குச் சொற்படுத்தியும் இசைப்படுத்தியுமறிந்து பாட்டும் கொட்டும் கூத்தும் நிகழ்த்தியென்றவாறு.

நாலுறுப்பாவன :—உக்கிரம் துருவை ஆபோகம் பிரகலை எனவிவை.

நாலுறுப்பும் குறைபாடில்லாத உருவெனவேண்டியது, மூன்றுறுப்பாலே வருவனவுமுளவாதலின். அவை இரண்டாமடியே ஈற்றடியாகப் பாடிமுடிவன; அவை மங்கலத்துக்குப் பொருந்தாவென்க.

கருக. மூன்றளந் தொன்று கொட்டியென்றது - மூன்றொத்துடைய மட்டத்திலேயெடுத்து ஓரொத்துடைய ஏகதாளத்திலே முடித்தென்றவாறு.

கருஉ. ஐதுமண்டிலத்தாலென்றது - அழகிய மண்டிலநிலையாலென்றவாறு;

என்னை ? "கொண்ட.........வருதக வுடைத்தே" என்பவாகலின்.

கருஉ. கூடை போக்கியென்றது - தேசிக்கு ஒற்றித்தொத்தலும் இரட்டித்தொத்தலுமேயாகலின், தேசிக்கூறெல்லாம் ஆடி முடித்தென்க.

இனி, மார்க்கங் கூறுகின்றது :—

கருச, ஆறுநாலும்முறை போக்கியென்றது - பஞ்சதாளப்பிரபந்தமாகக் கட்டப்பட்ட வடுகிலொத்தையும் தேசியிலொத்தைக் காட்டினாற்போல இரட்டிக்கிரட்டியாக ஆடியென்றவாறு.

---

(பி - ம்.) * 'பின்றைபீத்திறப்படாமை
யைத்துமண்டலத்தால்'

வர்த்தனைவகுத்து' † 'கொட்டியுவுதின ஐகே



கூறிய வைந்தின் கொள்கை போலப்
பின்னையு மம்முறை * பேரிய பின்றைப்
பொன்னியல் பூங்கொடி புரிந்துடன் † வகுத்தென
நாட்டிய நன்னூ னன்கு கடைப்பிடித்துக்
காட்டின ளாதலிற் காவல் வேந்த
னிலைப்பூங் கோதை யியல்பினின் வழாமைத்
தலைக்கோ லெய்தித் தலையரங் கேறி
‡ விதிமுறைக் கொள்கையி னாயிரத் தெண்கழஞ்
சொருமுறை யாகப் பெற்றன ளதுவே

கடுடு - கூ. கூறிய வைந்தின்......பின்றையென்றது - சொல்லிப்போந்த தேசிபோல விடுகும் § மட்டத்தாளமுதலாக வகதாளம் அந்தமாக விலே ஆடி முடித்தபின்னரென்றவாறு;

வைசாகநிலை

என்னை? "வைசாக.........வரையார்" என்றாராகலின்.

கடுஎ. பொன்னியல்.........வகுத்தெனவென்றது - பொலிவினையுடைத் தொரு பொற்கொடியானது கூத்தாடினாற்போலவென்றவாறு.

கடுஅ - கூ. நாட்டிய.........ஆதலினென்றது - தாண்டவம் நிருத்தம் நாட்டியமென்னும் மூன்று கூறுபாட்டினும் நாட்டியமென்பது புறநடத்தை யாதலின், அதனை நூல்களிற் சொன்னமுறைமை வழுவாமல் அவிநயங்காட் டிப் பாவகந்தோன்ற விலக்குறுப்புப் பதினுலின் வழுவாமல் தலினென்றவாறு.

ஆடிக்காட்டினளா

அன்றியும், நாட்டிய நன்னூல்.........காட்டினளாதலின் கூறிய முத்தமிழ் வகையும் காட்டினளாதலினென்றுமாம்.

- இக்காதையிற்

ககூ0. (பா) இலைப்பூங் கோதை யியல்பினின் வழாஅதென்றது - இம் மாதவியுடைய கூத்துக்கும் பாட்டுக்கும் அழகுக்கும் தக்கபடியென்றவாறு.

அன்றியும், அரசனுடைய மாலையுடனே முறைமையாகிய கழஞ்சுபொன்னும் சிறப்பாகப்பெற்றாள்;

ஆயிரத்தெண்

என்னை? "முட்டில் பாணரு.........பெறுப" என்றாராதலின்.

இலைப்பூங்கோதை - பச்சைமாலை; இத்துடனே தலைக்கோலெய்தியென்று மாம். பச்சைமாலைக்கிடை ட்டிக்கலனென்றுமாம்.

ஆயிரத்தெண்கழஞ்சாதலின், இது பரியத்துக்குப்

கசுக. தலைக்கோலெய்தியென்றது - வரிசைக்குத் தக்கபடி பெயர்பெற்றென்றவாறு.

தலைக்கோற்

தலையரங்கேறியென்றது - முன்னரங்கேறப்பெற்றென்றவாறு.

கசுஉ - ரு. விதிமுறை.........பெற்றனளென்றது -

இர்நாடகக்கணிகையர்
க்குத் தலைவரிசை ஆயிரத்தெண்கழஞ்சுபொன் பரியம்பெறுகை வழக்காதலின், இவளும் ஆயிரத்தெண்கழஞ்சுபொன் பரியம்பெற்றாளென்றவாறு.

(பி - ம்.) * 'பெயரிய' † 'வகுத்து' ‡ 'விதிமுறையாகிய', 'விதிமுறையாக' § 'அடைாரம்'.

## ௩.—அரங்கேற்றுகாதை.

எஎ

நூறுபத் தடுக்கி யெட்டுக் கடைநிறுத்த
வீறுயர் பசும்பொன் பெறுவதிம் மாலை
மாலை வாங்குநர் சாலுநங் கொடிக்கென
மானமர் நோக்கியோர் கூனிகைக் கொடுத்து
[1] நகர நம்பியர் திரிதரு மறுகிற்
பகர்வனர் போல்வதோர் பான்மையி னிறுத்த
மாமலர் நெடுங்கண் மாதவி மாலை
கோவலன் வாங்கிக் கூனி தன்னொடு
மணமனை புக்கு மாதவி தன்னொ
டணைவுறு வைகலி னயர்ந்தனன் மயங்கி
† விடுத லறியா விருப்பின னாயினன்
வடுநீங்கு சிறப்பிற்றன் மனையக மறந்தென்.

—:—

கசுரு. ஒருமுறையாகப்பெற்றனளென்றது - ஒருநாளைக்குப் வென்று அரசனாற் பெறப்பட்டாளென்றவாறு.

பரியமாக பெறுகை - பெறகினைப்பிடுகையுமாம். ஆயிரங்கழஞ்சு எண்கழஞ்சு அழிவுக்குமாக்கி நிச்சயித்து.

பரியத்திற்கும்,

அதுவேயென்றது - அன்று தொடங்கி நாடோறும் அந்தப்படியே பரிய மாகவென்றவாறு. அன்றியும், அந்தமாலையென்றுமாம்.

கசுச - கூ. நூறுபத்தடக்கி...பான்மையினிறுத்தவென்றது - இப்பொன் தந்து இம்மாலைவாங்குவான் மாதவிக்குமணவாளப்பிள்ளையாவனென்றுசொல்லி மான்விழிபோன்ற நோக்கினையுடையாளோர் கூனிகைக்கொடுத்துநகரியிற்பெருந் தெருவிலே விலைக்குவிற்பாரைப்போல்வதோர் பண்பினனிறுத்தவென்றவாறு.

இவளுக்குப்பரியமென்னாதே மாலைக்குப்பரியமென்றது இடக்கரடக்கு.

கசுரு. வீறுயர்பசும்பொன் - மாற்றற்றபசும்பொன். இம்மாலை இராசாவின் பக்கற்பெற்ற பச்சைமாலை.

களo - எஉ. மாமலர் நெடுங்கண்...மணமனைபுக்கென்றது - பெரியதாமரை மலர்போன்ற கண்ணையுடைய மாதவிமாலையைப் பரியம் பொன்னையுங்கொடுத்து வாங்கிக் கோவலன் கூனியுடனே மனையிலே புகுந்தென்றவாறு.

ஆயிரத்தெண்கழஞ்சு

மாதவியுடைய மண

களஉ - ச. மாதவிதன்னொடு.........விருப்பினனாயினனென்றது - இக்கோவலன் மாதவிதன்னுடனே அணைந்தபொழுதே அயர்ந்து மயங்கியிருந்து மனையையும் அவளையும் விட்டு நீங்கமுடியாத விருப்பத்தையுடையனாயினனென்றவாறு.

௲௫. வடுநீங்கு...............மறந்தேனென்றது - யுடைய தன் அகத்தையும் மனையாளையுமறந்தேன்றவாறு.

குற்றமற்றசிறப்பினை

என்னென்றது, ஈற்றசை.

———:———

[1] பெருங்கதை, க. ௩௯: ௨௧௧. (பி-ம்.) * 'ஊற்றுப்பத்து' † 'விதேவியா'



வெண்பா.

எண்ணு மெழுத்து மியலைந்தும் பண்ணான்கும்
பண்ணின்ற கூத்துப் பதினொன்று—மண்ணின்மேற்
போக்கினாள் பூம்புகார்ப் பொற்றொடி மாதவிதன்
வாக்கினா லாடரங்கின் வந்து.

———

[கூத்தியது அமைதி.]

க - எ. தெய்வ மால்வரை.........மாதவிதன்னை

தெய்வமால்வரை - தெய்வத்தன்மையையுடைய பெரியவரையென உருபு தொக்கது; வரை - பொதியில்; திருமுனி - அகத்தியன்; வரை பொதியிலாதலும், திருமுனி அகத்தியனாதலும் பெறுமாறு என்னை? இமயமும் இறைவனுமாகற்பாலவெனின்,—அற்றன்று; மேல், [1] "திருமுனி யருளா, லெய்திய சாபத் திந்திர சிறுவனொடு, தலைக்கோற் றானத்துச் சாப நீங்கிய" என இக்காதையிலும், [2] "நயந்தெரி பாடலுந், தோரிய மடந்தை வாரம் பாடலு, மாயிரங் கண்

ணென் செவியக நிறைய, நாடக முருப்பசி நல்கா ளாகி, மங்கல மிழப்ப வீணை மண்மிசைத், தங்குக விவளெனச் சாபம் பெற்ற, மங்கை மாதவி வழிமுதற் றோன்றிய, வங்கர வல்குல்" எனக் கடலாடுகாதையிலுங் கூறினாராதலானும், நான்முகத்துள்ளும் "திருந்திய பொதியி லருந்திற லகத்தியன், சுந்தர மணி முடி யிந்திரன் மகனை, மாணு விறலோய் வேணு வாகென, விட்ட சாபம் பட்ட சயந்தன், சாபவிடை யெமக்கரு ளவந்தோ யென்று, மேவினன் றொழுது மேதக வுரைப்ப, வருந்தவ மாமுனி தமிழ்க்கூத் தியர்க்குத், திருந்திய தலைக் கோற் றனைத் தீருமென், றவனிவி துரைப்ப வாங்கவர் சகனென்" என்றாராக லானும் பொதியிலும் அகத்தியனுமென்பதாயிற்றெனக்கொள்க.

அருள நீங்கியவென்க; அவன் சாபமிட்டருள வென்றுமாம்.

அருளாற்பாடமாயின் - அவனது அருளாற் சாபநீங்கியவென்க.

(இ - ள்.) தெய்வத்தன்மையையுடைய பெரிய பொதியின்மலைக்கண் இரு முனியாகிய அகத்தியன் முன்பாலிட்ட [2] சாபம் இந்திரசிறுவனோடே அம் முனியருளத் தலைக்கோற்றனத்து நீங்கிய மாறுபடுதலரிய சிறப்பினையுடைய அரம்பையரில் வரிசையிற் குறைவற்ற நாடகத்தொழிலொடுபொருந்திய உருப் பசியாகிய அம்மாதவி மரபில்வந்த பிறப்பிற் குன்றுதலில்லாத பெரியதோளி னையும் தாதுகளவிழும் பூக்களையுடைய கடைகுழன்றுசுருண்ட குழலினையு முடைய மாதவியாகிய மடந்தைதன்னையென்க.

பெருந்தோளென்றார், மகளிர்தோள் பெருத்தல் மரபாதலின்.

என்னை? [4] "அகலல்கு றோள்கண்ணென மூவழிப் பெருகி" என்றாராகலின்.

---

[1] சிலப். அரங்கேற்றுகாதை, க-ரு. [2] சிலப். கடலாடுகாதை, கஅ.

---

உ-ஓ.

[2] இந்திரனவைக்களத்து ஒருவரையொருவர் விழைந்து அகத்தியமுனிவராற் சாபம்பெற்ற சயந்தனும் உருப்பசியும் முறையே விந்தமலையில் மூங்கிலாயும், காஞ்சி நகரத்துத் தேவகணிகையாயும் பிறந்தனரென்ற, "வானவர் கோமான் வாவிடை யிருந்து" என்னும் ஆசிரியப்பாவாற் சுத்தானந்தப்பிரகாசப்பரதநூலாசிரியர் கூறினர்.

[4] கலித்தொகை, [illegible]. (பி - ம்.) [3] 'பன்னமைத்தகைத்த'

# ௩.—அரங்கேற்றுகாதை.

௭௯

**௮ - ௯. ஆடலும் பாடலும்........குறை படாமல்**

(இ - ள்.) கூத்தும் பாட்டும் அழகுமென்றுசொல்லப்பட்ட மூன்றும் ஒன்றன் குறைவுபடாமல்,

இம்மூன்றி

இவை குறைவுபடாமைக்குக் காரணமுடையளாகவினென்க.

**௧௦ - ௧௧. ஏழாண் டியற்றி........வேண்டி**

(இ - ள்.) ஐயாண்டில் தண்டியம்பிடிப்பித்து ஏழாண்டு இயற்றுவித்துப் பன்னீராண்டில் வீரக்கழல்சூழ்ந்த காலினையுடைய **சோழன்கரிகாற் பெரு வளத்தா**னுக்கு அவளையரங்கேற்றிக்காட்டலை விரும்பியென்க.

என்னை? "*பண்ணியாழ்வைத் தானைமுகன் பாதம் பணிந்துநாட், புண்ணிய வோரை புகன்றனகொண் டெண்ணியே, வண்டிருக்குங் கூந்தன் மடவரலை யையாண்டிற், றண்டியஞ்சேர் விப்பதே சால்பு*" எனவும், [1] '*வட்டணையுந் தாசியு* • *மண்டலமும் பண்ணமைய, வெட்டுட னீரிரண் டாண் டெய்தியபின்- கட்டளைய, கீதக் குறிப்பு மலங்கார முங்கிளரச், சோதித் தரங்கேறச் சூழ்*" எனவும், "*மன்னர் விருப்புடையோ னற்குணமு மிக்குயர்ந்தோன், சொன்ன குலத் தலைமைந்த தொன்மையளாய்ப்—பன்னிரண்டாண், டெய்துதற்பி னூலுடன் பாடலமு மிம்மூன்றும், வாய்ந்தவரங் கேற்றல் வழக்கு*" எனவும் கூறினார் **பரதசேனாபதியார்.**

[ஆடலாசிரியன் அமைதி.]

**௧௨-௨௫. இருவகைக் கூத்தின்........ஆசான் றன்னொடும்**

(இ - ள்,) இருவகைத்தாகிய அகக்கூத்தின் இலக்கணங்களையறிந்து பல வகைப்பட்ட புறநடங்களையும் விலக்குறுப்புக்களைச் சேரப்புணர்க்கவும் வல்லனாகி அல்லியமுதற் கொடுகொட்டியீறாகக்கிடந்த பதினொருகூத்துக்களும் அக்கூத்துக்களுக்குரிய பாட்டுக்களும் அவற்றுக்கு அடைத்த வாச்சியங்களின் கூறுகளும் நூல்களில் விதித்தவழியே தெரிந்து கூத்தும் பாட்டும் தாளங்களும் தாளங்களின் வழிவந்த தூக்குக்களும் தம்மிற்கூடின நெறியையுடைய அகக்கூத்தும் புறக்கூத்துமுதலாயின நிகழ்த்துமிடத்துப் பிண்டி பிணையல் எழிற்கை தொழிற்கையென்று சொல்லப்பட்ட நான்கினையும் நூலினகத்துக்கொண்ட கூறுபாட்டையறிந்து அகக்கூத்து நிகழுமிடத்துக் கூடைக்கதியாகச்செய்தகை வாரக்கதியுட்புகாமலும், வாரக்கதியாகச்செய்தகை கூடைக்கதியுட்புகாமலும், புறக்கூத்தினிடத்து ஆடனிகழுமிடத்து அவிநயநிகழாமலும், அவிநயநிகழுமிடத்து ஆடனிகழாமலும், குரவைக்கூத்தும் வரிக்கூத்தும் தம்மில்விரவாதபடியுஞ் செலுத்தி அமைந்த ஆடலாசிரியனுமென்க.

இது பொழிப்புரை.

கஉ. இருவகைக் கூத்தாவன:—வசைக்கூத்து, புகழ்க்கூத்து; வேத்தியல், பொதுவியல்; வரிக்கூத்து, வரிச்சாந்திக்கூத்து; சாந்திக்கூத்து, விநோதக்

[1] சீவகசிந்தாமணி, கஎக - ந. மேற்.

(பி - ம்.) * 'பண்ணமைய வெண்மையான், மட்டேட லிராருள் டெய்தியபின் - வட்டணையுள், தேக்'



கூத்து; ஆரியம், தமிழ்; இயல்புக்கூத்து, தேசிக்கூத்தெனப் பலவகைய. இவை விரிந்தநூல்களிற்காண்க.

கஉ. ஈண்டு இருவகைக்கூத்தாவன:—சாந்தியும், விநோதமும். என்னை? [1] "அவைதாம், சாந்திக் கூத்தும் விநோதக் கூத்துமென், றாய்ந்துற வகுத்தன னகத்தியன் றானே" என்றாராகலின்.

[1] "சாந்திக் கூத்தே தலைவ[*] னின்ப, மேந்திநின் றாடிய! வீரிரு கடமலை, சொக்க மெய்யே யவிநய நாடக, மென்றிப் பாற்படூஉ மென்மனார் புலவர்" என்பதனால் நாயகன் சாந்தமாக ஆடியகூத்துச் சாந்திக்கூத்தெனப்படும்.

இவற்றுள்,—

சொக்கமென்றது - சுத்தநிருத்தம். அது நூற்றெட்டுக்கரணமுடைத்து.

மெய்க்கூத்தாவது:— தேசி வடுகு சிங்களமென மூவகைப்படும். இவை மெய்த்தொழிற்கூத்தாகலின், மெய்க்கூத்தாயின. இவை அகச்சுவைபற்றி யெடுத்தலின், அகமார்க்கமென நிகழ்த்தப்படும்.

அகச்சுவையாவன :—இராசதம், தாமதம், சாத்துவிகமென்பன. "குணத்தின் வழியதகக் கூத்தெனப் படுமே" என்றார் குணநூலுடையார்; "அகத்தெழு சுவையா னகமெனப் படுமே" என்றார் சயந்தநூலுடையாருமெனக்கொள்க.

அவிநயக்கூத்தாவது:— † கதை தழுவாது பாட்டினதுபொருளுக்குக் கைகாட்டி வல்லபஞ்செய்யும் பலவகைக்கூத்து.

நாடகம் - கதைதழுவிவருங் கூத்து.

விநோதக்கூத்தாவது:—குரவை, கலிநடம், குடக்கூத்து, கரணம், நோக்கு, தோற்பாவை என்பர். இவற்றுள்,—

குரவையென்றது:— காமமும் வென்றியும் பொருளாகக் குரவைச்செய்யுள் பாட்டாக எழுவரேனும் எண்மரேனும் ஒன்பதின்மரேனும் கைபிணைந்தாடுவது; [*] "குரவையென்பது......இயல்பிற் றென்ப" என்றாராகலின்.

குரவை - வரிக்கூத்தின் ஒருறுப்பு; அவை வந்தவழிக்கண்டுகொள்க.

கலிநடமென்றது - கழாய்க்கூத்து.

குடக்கூத்தென்றது - மேற்பதினொராடலுட் காட்டப்படும்.
கரணமாவது - படிந்தவாடல்.
நோக்கென்றது - பாரமும் நுண்மையும் மாயமுமுதலாயினவற்றை உடையது.
தோற்பாவையென்றது - தோலாற் பாவைசெய்து ஆட்டுவிப்பது.
இன்னும் நகைத்திறச்சுவையென்பதனோடு கூட்டி எழென்பாருமுளர்; அஃதாவது விதூடகக்கூத்து. இதனை வசைக்கூத்தென்பாருமுளர்.
வசை - வேத்தியல், பொதுவியலென இரண்டுவகைப்படும்; நூல்களிற் கண்டுகொள்க.

அவைமூர்த்து

[1] சிவசிந்தாமணி. சுஎ - ந. மேற். [2] இப்புத்தகம் உஎ - ஆம் பக்கம் பார்க்க. (பி - ம்.) * 'அவிநயம்' † 'திருத்தக்கை'

## ௬.— அரங்கேற்றுகாதை.

அக

வெறியாட்டுமுதலைத் தெய்வமேறியாடுகின்ற அத்திறக்கூத்துக்களும் கூட்டி எழென்பாருமுளர்.
என்னை? "எழுவகைக் கூத்து மிழிகுலத் தோரை, யாட வகுத்தன னகத்தியன் றானே" என்றாராகலின்.

இவற்றின் இலக்கணங்களாவன:— [1] " அறுவகை நிலையு [2]

றவகைப் பாதமு, [2] மீரெண் வகைய வங்கக் கிரியையும், [3] வருத்தனை நான்கு [4] நிருத் தக்கை முப்பது, மத்தகு தொழில வாகு மென்ப." இவை விரிப்பிற்பெருகும்.

கங. பல்வகைக்கூத்தாவன:—வென்றிக்கூத்து, வசைக்கூத்து, விநோதக் கூத்துமுதலியன; என்னை? "பல்வகை யென்பது பகருங் காலை, வென்றி வசை யே விநோத மாகும்" என்றாராகலின்.

"அவற்றுள், மாற்றா னொடுக்கமு மன்ன னுயர்ச்சியு, மேற்படக் கூறும் வென்றிக் கூத்தே."

"பல்வகை யுருவமும் பழித்துக் காட்ட, வல்லவ னாதல் வசையெனப் படுமே."

[5] "எனவிவை தானத்தி னியல்பின வாகும்."

"விநோதக் கூத்து வேறுபா டுடைத்து, வென்றி விநோதக் கூத்தென விளம்புவர்." இதன்கருத்து: கொடித்தேர்வேந்தரும் குறுநிலமன்னருமுதலாக உடையோர் பகைவென்றிருந்தவிடத்து விநோதங்காணுங் கூத்தென்பதாம்.

விலக்கினிற்புணர்த்து - விலக்குறுப்பினோடு பொருந்தவித்து ;

---

[1] அறுவகைநிலையாவன:—க.வைணவம், உ. சமநிலை, ங. வைசாகம், ச. மண்டலம், ரு.ஆலீடம், சு.பிரத்தியாலீடமென்பன.

[2] ஐவகைப்பாதமாவன:—க.சமநிலை, உ.உற்கடிதம், ங. சஞ்சாரம், ச. காஞ்சிதம், ரு. குஞ்சிதமென்பன.

[3] அங்கக்கிரியைபதினாறுவன:—க.சரிகை, உ. புரிகை, ங. சமகவி, ச. நிரிகை, ரு.ஊர்த்துவகவிகை, சு. பிருட்டகம், எ. அர்த்தபிருட்டகம், அ. சுவத்திகம், கூ. உல்லோலம், ௰.குர்த்தனம், கக.வேட்டனம், கஉ. உபவேட்டனம், கங. தானுபதப்பிராவிருத்தம், கச. உக்ஷேபணம், கரு. அவக்ஷேபணம், கசு. நிகுஞ்சனமென்பன.

[4] வருத்தனைநான்காவன:—க. அபவேட்டிதம், உ. உபவேட்டிதம், ங. தம், ச. பராவர்த்திதமென்பன.

விபாவர்த்தி

[5] நிருத்தக்கைமுப்பதாவன:—க. சதுரச்சிரம், உ. உத்துவீதம், ௩. தலமுகம், ௪. சுவத்திகம், ௫. விப்பிரகீர்ணம், ௬. அருத்தரேசிதம், எ. அராளகடகாமுகம், அ. ஆவித்தவத்திரம், ௯. சூசிமுகம், க0. இரேசிதம், கக. உத்தானவஞ்சிதம், கஉ. பல்லவம், க௩. நிதம்பம், க௪. கசதந்தம், க௫. இலதை, க௬. கரிக்கை, கஎ. பக்கவஞ்சிதம், கஅ. பக்கப்பிரதியோகம், க௯. கருடபக்கம், உ0. தண்டபக்கம், உக. ஊர்த்துவமண்டலி, உஉ. பக்கமண்டலி, உ௩. உரோமண்டலி, உ௪. உரப்பார்சுவார்த்தமண்டலி, உ௫. முட்டிகச்சுவத்திகம், உ௬. நளினீபதுமகோசம், உஎ. அலபதுமம், உஅ. உற்பணம், உ௯. இலளிதை, ௩0. வலிதையென்பன. இவை, சுத்தானந்தப்பிரகாசமென்னும் பழைய தமிழ்ப்பரதநூலிற் காணப்பட்டன.

[6] வென்றிக்கூத்தும் வசைக்கூத்தும் தாள இயல்புடையனவென்றபடி.





இன், சாரியை ; மூன்றனுருபு ஐந்தனொடுமயங்கிற்று.

வென்றிக்கூத்துமுதலாகிய பலவகைப்பட்ட புறநடங்களையும் வேறு விலக்குப் படைவிலக்கு ஊர்விலக்கென்று சொல்லப்பட்ட விலக்குக்களாகிய பாட்டுக்களுக்கு உறுப்பாய்வருவனவற்றுடனே பொருந்தப்புணர்த்தி,

பொருந்தப் புணர்த்தல் - ஈண்டுப் பாட்டுக்களுக்கு வரவுவகுத்தல்.

விலக்குறுப்பாவன:—பதினன்குவகைப்படும்; அவை [1] பொருள், யோனி, விருத்தி, சந்தி, சுவை, சாதி, குறிப்பு, சத்துவம், அவிநயம், சொல், சொல் வகை, வண்ணம், வரி, சேதமெனவிவை;

என்னை ? "விலக்குறுப் பென்பது விரிக்குங் காலைப், பொருளும் யோனி யும் விருத்தியுஞ் சந்தியுஞ், சுவையுஞ் சாதியுங் குறிப்புஞ்சத் துவமு, மபிநயஞ் சொல்லே சொல்வகை வண்ணமும், வரியுஞ் சேதமு முளப்படத் தொகைஇ, மிசைய வெண்ணி னீரே ழுறுப்பே" என்றாராகலின்.

அவற்றுள், — பொருள் நான்குவகைப்படும் ; என்னை ?
"அறம்பொரு ளின்பம் வீடென நான்குந், திறம்படு பொருளெனச் செப்பினர் புலவர்" என்று ராகலின்.

இவை நாடகத்திற் பிரிந்தும் கூடியும் வருங்காற் பெயர்வேறுபடும். அவை நாடகம், பிரகரணப்பிரகரணம், பிரகரணம், அங்கமெனப்பெயரவாம்.

என்னை ? "அவைதாம், நாடகம் பிரகர ணப்பிர கரண, மாடிய பிரகரண
மங்க மென்றே, யோதுப நன்னூ லுணர்ந்திசி னோரே" என்றார் மதிவாணனும்.
"அறமுத னான்கு மொன்பான் சுவையு, முறைமுன் னுடைய முன்னோ னாகும்" எனவும், "அறம்பொரு ளின்ப மரசர் சாதி" எனவும், "அறம்பொருள் வாணி கர் சாதியென் றறைப" எனவும், "அறமேற் சூத்திர ரங்க மாகும்" எனவும் சொன்னார் சேயிற்றியனார். இவை நான்கும் நாடகமென்றறிக.

யோனி நான்குவகைப்படும்:—உள்ளோன் தலைவனாக உள்ளதோர் பொருண் மேற் செய்தலும், இல்லோன் தலைவனாக உள்ளதோர் பொருண்மேற் செய்த லும், உள்ளோன் தலைவனாக இல்லதோர் பொருண்மேற் செய்தலும், இல்லோன் தலைவனாக இல்லதோர் பொருண்மேற் செய்தலுமெனவிவை;

என்னை? "உள்ளோற் குள்ள து மில்லோற் குள்ள து, முள்ளோற் கில்லது மில்லோற் கில்லது, மென்னா துரைத்தல் யோனி யாகும்"
என்றுராகலின். விருத்தி நான்குவகைப்படும்:— அவை சாத்துவதி, தியெனவிவை.
ஆரபடி, கைசிகி, பார
இவற்றுள்,—சாத்துவதியாவது அறம் பொருளாகத்

தெய்வமானிடர் தலைவராக வருவது.

ஆரபடியாவது:—பொருள் பொருளாக வீரராகியமானிடர் தலைவராகவருவது.

கைசிகியாவது:—காமம் பொருளாகக் காமுகராகியமக்கள் தலைவராகவருவது.

---

[1] இப்புத்தகம், கக - ஆம் பக்கம் பார்க்க.

## ரு.—அரங்கேற்றுகாதை. அகூ

பாரதியாவது:—கூத்தன் தலைவனாக நடன் நடி பொருளாகக் காட்டியும் உரைத்தும வருவது.

இச்சொல்லப்பட்ட நால்வகை விருத்தியுள்ளும் பாரதிவிருத்தி, அந்த மூன்று விருத்தியும்போலப் பிறிதின்றலைவர் பிறிதுபொருள்பற்றி விருத்தி கூறுது பொருளாலே விருத்திகூறுமெனக்கொள்க.

சந்தி ஐந்துவகைப்படும்:—அவை முகம், பிரதிமுகம், கருப்பம், துய்த்தலெனவிவை.

விளைவு,

இவற்றுள் முகமாவது:—[1] எழுவகைப்பட்ட உழவினுற் சமைக்கப்பட்ட பூமியுளிட்டவித்துப் பருவஞ்செய்து முளைத்து முடிவதுபோல்வது.

பிரதிமுகமாவது:—அங்ஙனம் முளைத்தல் முதலாய் இலைதோன்றி நாற்றாய்முடிவதுபோல்வது.

கருப்பமாவது:—அந்நாற்று முதலாய்க் கருவிருந்து பெருகித் தன்னுட் பொருள்பொதிந்து கருப்பமுற்றிநிற்பது போல்வது.

விளைவாவது:—கருப்பமுதலாய் விரிந்து கதிர் திரண்டிட்டுக் முற்றி விளைந்துமுடிவதுபோல்வது.

காய் தாழ்ந்து

துய்த்தலாவது:—விளையப்பட்ட பொருளை அறுத்துப் விட்டுத் தூற்றிப் பொலிசெய்து கொண்டுபோய் போரிட்டுக் கடா இவை ஐந்துசந்தியும் நாட்டியக்கட்டுரை.

உண்டு மகிழ்வதுபோல்வது.

சுவை ஒன்பதுவகைப்படும்:—அவை வீரச்சுவையவிநயம், பயச்சுவையவி நயம், இழிப்புச்சுவையவிநயம், அற்புதச்சுவையவிநயம், இன்பச்சுவையவி நயம், அவலச்சுவையவிநயம், நகைச்சுவையவிநயம், நடுவுநிலைச்சுவையவி நயம், உருத்திரச்சுவையவிநயமென; அவற்றுள் , —

"வீரச்சுவை யவிநயம் விளம்புங் காலை, முரிந்த புருவமுஞ் சிவந்த கண்ணும், பிடித்த வாளுங் கடித்த வெயிறு, மடித்த வுதடுஞ் சுருட்டிய நுதலுந், திண்ணென வுற்ற சொல்லும் பகைவரை, யெண்ணல் செல்லா விகழ்ச்சியும் பிறவு, நண்ணு மென்ப நன்குணர்ந் தோரே."

"அச்ச வவிநய மாயுங் காலை, யொடுங்கிய வுடம்பு நடுங்கிய நிலையு, மலங்கிய கண்ணுங் கலங்கிய வுளனுங், கரந்துவர லுடைமையுங் கையெதிர் மறுத்தலும், பரந்த நோக்கமு மிசைபண் பினவே."

"இழிப்பி னவிநய மியம்புங் காலை, யிடுங்கிய கண்ணு மெயிறுபுறம் போதலு, மொடுங்கிய முகமு முஞற்றுக் காலுஞ், சோர்ந்த யாக்கையுஞ் சொன்னிரம் பாமையு, நேர்ந்தன வென்ப நெறியறிந் தோரே."

"நாட்டுங் காலை நடுவுநிலை யவிநயம், கோட்டா டறியாக் கொள்கையு மாட்சியு, மறந்தரு நெஞ்சமு மாறிய விழியும், பிறழ்ந்த காட்சி நீங்கிய நிலையுங், குறிப்பின் முகனுந் துணுக்க மில்லாத், தகைமிக வுடைமையுந் தன்னொ வுடைமையு, மனத்தற் கருமையு மன்பொடு புணர்தலுங், கலக்கமொடு புணர்ந்த நோக்குங் கதிர்ப்பும், விலக்கா ரென்ப வேண்டுமொழிப் புலவர்"

[1] உருத்திரச்சுவை யவிநயம்..............................................

[2] அஃதாவது விறலென்பது; சத்துவமென்பாருமுளர். அச்சத்துவந்தான் [3] பத்துவகைப்படும். எங்ஙனே? மெய்ம்மயிர்சிலிர்த்தல், கண்ணீர்வார்தல், நடுக்கமடுத்தல், வியர்த்தல், தேற்றம், களித்தல், விழித்தல், வெதும்பல், சாக்காடு, குரற்சிதைவு எனவிவை.

சத்துவமாவது - குறிப்புவரையறை; ஆவது, சுத்தச்சுவையாகின்ற ஒன்பதினும் பாவிக்கும் அத்துணையே மெய்ம்மைத்தாய் வருவதெனக்கொள்க.

என்னே? வேம்பென்று காட்டப்புக்கால் அவ்வேம்பின் இரதங்காட்டாதே அதுதான் இறைவனுக்கு மெய்யின்கண்வருவது.

கருணையென்றுற் பாவித்துக்காட்டுமதன்றி மெய்யாகக் கண்ணீர்வந்தழுவது.

அல்லாத சுவைகளும் வந்த சத்துவமும் இப்படி ஒட்டிக்கண்டுகொள்க.

அவைதாம் அச்சுவைகளில் எண்ணம் வந்தால் தோற்று முடம்பில்; உடம்பின்மிகத்தோற்றும் முகத்து; முகத்தின்மிகத்தோற்றும் கண்ணில்; கண்ணின் மிகத்தோற்றும் கண்ணின்கடையகத்தென்றவாறு.

[4] சாதியாவது..............................................

---

[1] உருத்திரச்சுவைபவிநயச்சூத்திரம் ஒருபிரதியிலும் இல்லை. அச்சுவையின் மெய்ப்பாடேனே, "கைபிசையா வாய்மடியாக் கண்சிவவா வெய்துயிரா, மெய்குலையா வேரா வெகுண்டெழுந்தான்" என்பதனுணர்க.

அஃதென்றது அச்சுவையுணர்வு உள்ளத்து
கூறிய உடம்பின்வேறுபாட்டை.

நிகழ்ந்தவழித்தோன்றும் மெய்ப்

இத்தொகையும் இதன்வகையும் வடநூல் விதிக்கு மாறாக உள்ளன.

நிருத்தமுறையே சுவையின்பின்னர் வகைகாட்டுதற்குரிய [illegible]வகைப் பதின்; அவை, நாடகம், பிரகரணம், பாணம், பிரகசனம், டிமம், [illegible], சமவாகாரம், வீதி, அங்கம், ஈகாமிருகமெனவிவை.



குறிப்பாவது - சுவைபதன்கட்டோன்றுவது.

சத்துவமாவது - அக்குறிப்பின்கண் நிகழ்கின்ற நிகழ்ச்சி.

அவிநயமென்றது - பாவகம்; அஃது இருபத்துநான்குவகைத்து; வரலாறு:—வெகுண்டோனவிநயம், ஐயமுற்றோனவிநயம், சோம்பினோனவிநயம், களித்தோனவிநயம், உவந்தோனவிநயம், அழுக்காறுடையோனவிநயம், இன்பமுற்றோனவிநயம், தெய்வமுற்றோனவிநயம், ஞஞ்ஞையுற்றோனவிநயம், உடன்பட்டோனவிநயம், உறங்கினோனவிநயம், துயிலுணர்ந்தோனவிநயம், செத்தோனவிநயம், மழைபெய்யப்பட்டோனவிநயம், பனித்தலைப்பட்டோனவிநயம், வெயிற்றலைப்பட்டோனவிநயம், நாணமுற்றோனவிநயம், வருத்தமுற்றோனவிநயம், கண்ணோவுற்றோனவிநயம், தலைநோவுற்றோனவிநயம், அழற்றிறம்பட்டோனவிநயம், சீதமுற்றோனவிநயம், வெப்பமுற்றோனவிநயம், நஞ்சுண்டோனவிநயமெனவிவை. அவற்றுள்,—

“வெகுண்டோ னவி நயம் விளம்புங் காலை, மடித்த வாயு மலர்ந்த

மார்புந், அடித்த புருவமுஞ் சுட்டிய விரலுங், கன்றின வுள்ளமொடு கைபுடைத் திடுதலு, மன்ன நோக்கமோ டாய்ந்தனர் கொளலே."

"பொய்யில் காட்சிப் புலவோ ராய்ந்த, வைய முற்ற னவிநய முரைப்

பின், வாடிய வுறுப்பு மயங்கிய நோக்கமும், பீடழி புலனும் பேசா திருத்தலும், பிறழ்ந்த செய்கையும் வான்றிசை நோக்கலு, மறைந்தனர் பிறவு மறிந்திசி னோரே."

"மடியி னவிநயம் வகுக்குங் காலை, நொடியொடு பலகொட் டாவிமிக வுடைமையு, மூரி நிமிர்த்தலு முனிவொடு புணர்தலுங், காரண மின்றி யாழ்ந்துமடிந் திருத்தலும், பிணியு மின்றிச் சோர்ந்த ராய்ந்தன ரென்ப."

செலவோ, டணிதரு புலவ

"களித்தோ னவிநயங் கழறுங் காலை, யொளித்தவை யொளியா துரைத்த லின்மையுங், கவிழ்ந்துஞ் சோர்ந்துந் தாழ்ந்துந் தளர்ந்தும், வீழ்ந்த சொல் லொடு மிழற்றிச் சாய்தலுங், களிக்கைக் கவர்ந்த கடைக்கணுக் குடைமையும், பேரிசை யாளர் பேணினர் கொளலே."

"உவந்தோ னவிநய முரைக்குங் காலை, நிவந்தினி தாகிய கண்மல ருடைமையு, மினிதி னியன்ற வுள்ள முடைமையு, முனிவி னகன்ற முறுவலை யுடைமையு, மிருக்கையுஞ் சேறலுங் கானமும் பிறவு, குறிப்பிற் றன்றே."

மொருங்குட னமைந்த

"அழுக்கா றுடையோ னவிநய முரைப்பி, னிழுக்கொடு புணர்ந்த விசைப் பொரு ளுடைமையுங், கூம்பிய வாயுங் கோடிய வுரையு, மோம்பா திறிக்குங் கைவகை யுடைமையு, மாரணங் காகிய வெகுளி யுடைமையுங், காரண மின்றி மெலிந்தமுக முடைமையு, மெலிவொடு புணர்ந்த விடும்பையு மேவரப், பொலிவு மென்ப பொருந்துமொழிப் புலவர்."

"இன்பமொடு புணர்ந்தோ னவிநய மியம்பிற், றுன்ப நீங்கித் துவர்த்த
யாக்கையுந், தயங்கித் தாழ்ந்த பெருமகிழ் வுடைமையு, மயங்கி வந்த செலவு

அரு சிலப்பதிகாரம்

நனி புடைமையு, மழருள் ளுறுத்த சொற்பொலி
புணர்ந்த நறுமல ருடைமையுங், கலங்கள்சேர்ந்
மையு, நலங்கெழு புலவர் நாடின ரென்ப.".
வுடைமையு, மெழிலொடு
தகன்ற தோண்மார் புடை

[1] "தெய்வ முற்றோ னவிநயஞ் செப்பிற், கைவிட் டெறிந்த கலக்க
மையு, மடித்தெயி றுகௌவிய வாய்த்தொழி லுடைமையுந்,
முடை துளங்கிய நிலையுஞ், செய்ய முகமுஞ் சேர்ந்த செருக்கு,
வியல்புணர்ந் தோரே."
அடித்த புருவமுந்
மெய்து மென்ப

"ஞஞ்ஞை யுற்றோ னவிநய நாடிற், பன்மென் றிறங்கிய * நாவழி வுடைமையு, நுரைசேர்ந்து கூம்பும் வாயு நோக்கினர்க், குரைப்போன் போல வுணர்வி லாமையும், விழிப்போன் போல விழியா திருத்தலும், விழுத்தக வுடைமையு மொழுக்கி லாமையும், வயங்கிய திருமுக மழுங்கலும் பிறவு, மேவிய தென்ப விளங்குமொழிப் புலவர்." இஃது ஏமுறுமர்க்களவிநயம்.

"சிந்தையுடம் பட்டோ னவிநயந் தெரியின், முந்தை யாயினு

முணரா நிலைமையும், பிடித்த கைமே லடைத்த கவினு, முடித்த அருத் கரும நிலைமை யுஞ், சொல்லுவது யாது முணரா நிலைமையும்,
மொழிப் புலவர்."

புல்லு மென்ப பொருந்த

"தஞ்சா நின்றோ னவிநயந் துணியி, னெஞ்சுத லின்றி யிருபுடை மருங்கு, மலர்ந்துங் கவிழ்ந்தும் வருபடை யியற்றியு, மலர்ந்துயிர்ப் புடைய வாற் றலு மாகும்."

"இன்றயி லுணர்ந்தோ னவிநய மியம்பி, ஞென்றிய குறுங்கொட் டாவியு முயிர்ப்புந், தூங்கிய முகமுந் துளங்கிய வுடம்பு, மோங்கிய திரிபு மொழிந்தவுங் கொளலே."

"செத்தோ னவிநயஞ் செப்புங் காலை, யத்தக வச்சமு மழிப்பு மாக்கலுங், கடித்த நிரைப்பலின் வெடித்துப் பொடித்துப், போந்ததுணி வுடைமையும் வலித்த வுதப்பு, மெலிந்த வகடு மென்மைமிக வுடைமையும், வெண்மணி தோன்றக் கருமணி கரத்தலு, முன்மையிற் புலவ ருணர்ந்த வாறே."

"மழைபெய்யப் பட்டோ னவிநயம் வகுக்கி, னிழிதக வுடைய வியல்புகளி யுடைமையு, மெய்கூர் நடுக்கமும் பிணித்தலும் படாத்தை, மெய்பூண் டொடுக்கிய முகத்தொடு புணர்த்தலு, மொளிப்படு மனனி லுலறிய கண்ணும், விளியி னுக் துனியினு மடிந்தசெவி யுடைமையுங், கொடுங்கிவிட் டெறிந்த குளிர்மிக வுடைமையும், நடுங்கு பல்லொலி யுடைமையு முடியக், கனவுகண் டாற்று னெழுதலு முண்டே."

"பனித்தலைப் பட்டோ னவிநயம் பகரி, னடுக்க முடைமையு நகைபடு நிலைமையுஞ், சொற்றளர்ந் திசைத்தலு மற்றமி லவதியும், போர்வை விழைதலும் புக்கிநோ வுடைமையும், † நீரும் விழியுஞ் சேறு முனிதலு, மின்னவை பிறவு மிசைந்தனர் கொளலே."

[1] சிலப்பதிகாரம். ௧௦ - ஆம் காதை, ௧௮ - ஆம் அடிமுதலியவற்றைப்பார்க்க. (பி - ம்.) * நாவனி † நீராம் விழியும்.



"உச்சிப் பொழுதின் வந்தோ னவிநய, மெச்ச மின்றி யியம்புங் காலைச், சொரியா நின்ற பெருந்துய ருழந்து, தெரியா நின்ற வுடம்பொறி யென்னச், சிவந்த கண்ணு மயர்ந்த நோக்கமும், பயந்த தென்ப பண்புணர்ந் தோரே."

"நாண முற்றோ னவிநய நாடி, னிறைஞ்சிய தலையு மறைந்த செய்கை யும், வாடிய முகமுங் கோடிய வுடம்புங், கெட்ட வொளியு மொட்டின றென்ப வுணர்ந்திசி னோரே."

கேழ்க்க ணோக்கமு,

"வருத்த முற்றோ னவிநயம் வகுப்பிற், பொருத்த மில்லாப் புன்க ணுடைமையுஞ், சோர்ந்த யாக்கையுஞ் சோர்ந்த முடியுங், கூர்ந்த வியர்வுங் குறும்பல் லுயாவும், வற்றிய வாயும் வணங்கிய வுறுப்பு, முற்ற தென்ப வுணர்ந்திசி னோரே."

"கண்ணோ வுற்றோ னவிநயங் காட்டி, னண்ணிய கண்ணீர்த் துளிவிரற் றெறித்தலும், வளைந்த புருவத்தொடு வாடிய முகமும், வெள்ளிடை நோக்கின் விழிதரு மச்சமுந், தெள்ளிதிற் புலவர் தெளிந்தனர் கொளலே."

"தலைநோ வுற்றோ னவியஞ் சாற்றி, னிலைமை யின்றித் தலையாட் டுடை மையுங், கோடிய விருக்கையு ந் தளர்ந்த வேரொடு, பெருவிர லிடுக்கிய நுதலும் வருந்தி, யொடுங்கிய கண்ணொடு பிறவுந், திருந்து வர்."

மென்ப செந்நெறிப் புல

"அழற்றிறம் பட்டோ னவிநய முரைப்பி, னிழற்றிறம் வேண்டு நெறிலை யின் விருப்பு, மழலும் வெயிலுஞ் சுடரு மஞ்சலு, நிழலு நீருஞ் சேறு மூவத் தலும், பனிநீ ருவப்பும் பாதிரித் தொடையலு, நனிவிர வீர மருநெறி யாக்க லும், புக்க தன்பொடு புலர்ந்த யாக்கையுந், தொக்க தென்ப துணிவறிந் தோரே."

சீத முற்றோ னவிநயஞ் செப்பி, னுறைய பருவர லுள்ளமோ டுழத்தலு, மீர மாகிய போர்வை யுறுத்தலு, மார வெயிலுழந் தழலும் வேண்டலு, முரசிய முரன்று முயிர்த்து முரைத்தலுந், தக்கன பிறவுஞ் சாற்றினர் புலவர்."

"வெப்பி னவிநயம் விரிக்குங் காலைத், தப்பில் கடைப்பிடித் தன்மையுந் தாகமு, மெரியி னன்ன வெம்மையோ டியைவும், வெருவரு மியக்கமும் வெம் பிய விழியும், நீருண் வேட்கையு நிரப்பா வலியு, கொளலே."

மோருங் காலை யுணர்ந்தனர்

"கொஞ்சிய மொழியிற் கூரெயி றடித்தலும், பஞ்சியின் வாயிற் பனி நுரை கூம்பலுந், தஞ்ச மாந்தர் தம்முக நோக்கியோ, ரின்சொ லியம்புவான் போலியம் பாமையும், நஞ்சுண் டோன்ற னவிநய மென்ப."

"சொல்லிய வன்றியும் வருவன வுளவெனிற், புல்லுவழிப் பொருந்துவழிப் புணர்ப்ப" எனவரும்.

சேர்த்திப்

இனி, சொல்வருமாறு:—அது மூன்றுவகைப்படும் ; உட்சொல், சொல், ஆகாயச்சொல்லென.
புறச்

அவை நெஞ்சொடுகூறல், கேட்போர்க்குரைத்தல், தானேகூறலென்பன; என்னை? "நெஞ்சொடு கூறல் கேட்போர்க் குரைத்தல், தஞ்சம் வரவறிவு தானே கூறலென், றம்மூன் றென்ப செம்மைச் சொல்லே" என்றாராகலின்.



சொல்வகை நான்குவகைப்படும்:—சுண்ணம், சுரிதகம், வண்ணம், வரிதகமென.

சுண்ணம் - நான்கடியான் வருவது.

சுரிதகம் - எட்டடியான் வருவது.

வண்ணம் - நானுன்கடியான்வருவது.

வரிதகம் - முப்பத்திரண்டடியான் வருவது.

என்னை? "சுண்ண நான்கடி சுரிதக மெட்டடி, வண்ண நானுன்கு வரிதக மெண்ணுன்கேன் , றெண்ணிய வடித்தொகை யெய்தவுர் பெறுமே" என்று ராகலின்.

வண்ணம் ஒருவகையான் மூன் றுவகைப்படும்:—பெருவண்ணம், இடை வண்ணம், வளப்புவண்ணமென. அவற்றுட் பெருவண்ணம் ஆறுய்வரும். இடைவண்ணம் இருபத்தொன்றாய் வரும். வளப்புவண்ணம் நாற்பத்தொன்றாய்வரும்.

வரி எட்டுவகைப்படும்:—கண்கூடுவரி, காண்வரி, உள்வரி, புறவரி, கிளர் வரி, தேர்ச்சிவரி, காட்சிவரி, எடுத்துக்கோள்வரியென. என் னை ? "கண்கூடு காண்வரி புள்வரி புறவரி, கிளர்வரி யைந்தோ

டொன்ற வுரைப்பிற், காட்சி தேர்ச்சி யெடுத்துக் கோளென, மாட்சியின் வரூஉ மெண்வகை நெறித்தே" என்றாராகலின். அவற்றின் பகுதியெல்லாம்[1] கானல்வரியிற் கூறுதும்.

இவ்வரியென்பதனைப் பல்வரிக்கூத்தென்பாருமுளர்; என்னை ? "சிந்துப்
பிழுக்கை யுடன்சந்தி யோர்முலை, கொந்தி கவுசி குடப்பிழுக்கை, †கந்தன்பாட்டாலங்காட் டாண்டி ‡பருமண னெல்லிச்சி, சூலந் தருநட்டந் துண்டியுடன்-சீலமிகு, மாண்டி யமண்புனவே டாளத்தி கோப்பாளி, பாண்டிப் பிழுக்கை யுடன் பாம்பாட்டி - மீண்ட, கடவுட் சடைவீர மாகேசங் காமன், மகிழ்சிந்து வாமன ரூபம் - விகடநடம், பத்திரங் கொற்றி பலகைவாள் பப்பரப்பெண், டத்தசம் பாரந் தகுணிச்சங்-கத்து, முறையீண் டிருஞ்சித்து முண்டித மன்னப், பறைபண் டிதன்புட்ப பாண - மிறைபரவு, பத்தன்* குறவையே பப்பறை காவதன், பித்தனொடு மாணி பெரும்பிழுக்கை - யெத்துறையு, மேத்திவருங் கட்களி யாண்டு விளையாட்டுக், கோத்த பறைக்குடும்பு கோற்கூத்து - மூத்த, கிழவன் கிழவியே கிள்ளுப் பிராண்டி, யழகுடைய §பண்ணிவிக டாங்கந்-திகழ்செம்பொ, னம்மனை பந்து கழங்காட லாலிக்கும், வண்ணகக் காளி விறற் கொற்றி - யல்லாத, வாய்ந்த தனிவண்டு வாரிச்சி பிச்சியுடன், சாந்த முடைய சடாதாரி - யேய்ந்தவிடை, தக்கபிடார் சித்தர் தனிப்பாட்டுச் சாதாரங்கள், தொக்க தொழில்புனைந்த **சோணண்டு - மிக்க, மலையாளி வேதாளி வாணி குதிரை, சிலையாடு வேடு செவிபுத் - தலையிற், றிருவிளக்குப் பிச்சி திருக்குன்

---

[1] கானல்வரிக்கு அடியார்க்குநல்லாரியற்றிய உரைகிடைத்திலது; ஆனும் இந்நூல், அ - ஆம் காதை எச - ஆம் அடிமுதலியவற்றாலும் அவற்றின் உரையிற்கண்ட மேற்கோள்களாலும் கன்கூடுவரிமுதலிய எட்டன்பகுதிகள் நன்கு விளங்கும்.

(பி - ம்.) * 'தாற்பத்தொன்பது.' † 'கந்தியின்பாட்டு' ‡ 'பரிருமணனெல்லி. § 'பண்ணிவிகடாங்கந்' ** சொன்றுண்டு.

ங.—அரங்கேற்றுகாதை. அத்

றயிற்பெண், டிருண்முகத்துப் பேதை யிருளன் - பொருமுகத்துப், பல்லாங் குழியே பகடி பகவதியா, னல்லார்தர் தோள்வீச்சு நற்சாழ - லல்லாத, வுந்தி யவலிடி யூராணி யோகினிச்சி, குந்திவரும் பாரன் குணலைக்கூத் - தந்தியம்போ, தாடுங் களிகொய்யு முள்ளிப்பூ வையனுக்குப், பாடும்பாட் டாடும் படுபன்னி -

நாடறியுங், கும்பீடு காட்டங் குணட்டங் குணலையே, தஞ்சாத சும்மைப்பூச்

சோனக - மஞ்சள், யேறற வுழைமை பறைமைமுத லென்றெண்ணிக், வரிக் கூத்தின் குலம்" என்முராகலின்.

கோத்த

சேதும்:—ஆரியம் தமிழென இருவகைத்து; என்னை? "ஆரியந் தமிழெனுஞ் சீர்நட மிரண்டினு, மாதிக் கதையை யவற்றிற் கொப்பச், சேதித் திடுவது சேதமென் முகும்" என்முராகலின்.

இனி, விலக்குறுப்பென்ற சொற்குப்பொருள் யாதோவெனின்;—தலைவன் செலுத்துகின்ற கதையை விலக்கியும் அக்கதையை நடாத்தியும் முன்புசெய்த கதைக்கே உறுப்பாகுவதென்க.

கச - ரு. பதினோராடலும்.........அறிந்தாங்கென்றது - அல்லியமுதற் கொடுகொட்டி ஈருய்க்கிடந்தனவும், அவற்றுக்குரிய பாட்டுக்களும், அக்கூத்துக்களின் விகற்பங்களுக்கெல்லாம் அமைந்த வாச்சியக்கூறுகளும், மாட்சிமைப்பட்ட நூல்களில்விதித்த முறைமையாலே விளங்க அறிந்தென்க.

கச. பதினோராடலாவன:—"கடையமயி ராணிமரக் கால்விந்தை கந்தன், குடைதுடிமா லல்லியமல் கும்பஞ் - சுடர்விழியாற், பட்டமதன் பேடுதிருப் பாவையரன் பாண்டரங்கம், கொட்டியிவை காண்பதினோர் கூத்து."

இவைதெய்வவிருத்தி.

இவை இரண்டுகூறுபடும்; என்னை? "அல்லியங் கொட்டி குடைகுடம் பாண்டரங்க, மல்லுட னின்றுட லாறு", "துடிகடையம்

பேடி மரக்காலே பாவை, வடிவுடன் வீழ்ந்தாட லைந்து."

இவை அசுரரைக்கொல்ல அமரராடின.

"அல்லியம் மாயவ னாடிற் றதற்குறுப்புச், சொல்லுப வாறு மெனல்."

"கொட்டி கொடுவிடையோ னாடிற் றதற்குறுப், பொட்டிய மொனல்."

நான்கா "அறுமுகத்தோ னாடல் குடைமற் றதற்குப், பெறு மெனல்."

முறுப்பு நான்கா

"குடத்தாடல் குன்றெடுத்தோ னாட லதனுக், கடைக்குப வைந்துறுப் பாய்ந்து."

"பாண்டரங்க முக்கண னாடிற் றதற்குறுப், பாய்ந்தன வாறு மெனல்."

"நெடியவ னாடிற்று மல்லாடன் மல்லிற், கொடியா வுறுப்போரைந் தாம்."

* "துடியாடல் வேன்முருக னாட லதனுக், கொடியா வுறுப்போ தாம்."
ரைந்

---

(பி - ம்.) * 'துடியாடனங்கை பெருவரதாடல்'

௨

# சிலப்பதிகாரம்

"கடையம் அயிராணி யாடிற் றதனுக், கடைய வுறுப்புக்க ளாறு."

"காமன தாடல்பே டாட லதற்குறுப்பு, வாய்மையி னாராயி

னுன்கு."

''மாயவ ளாடன் மரக்கா லதற்குறுப்பு, நாமவகை யிற்சொ லுங்கா

னுன்கு."

"பாவை திருமக ளாடிற் றதற்குறுப், போவாம லொன் றுடனே யொன் று.'

"புரமெரித்தல் சூர்மாத் துளைபடுத்தல் கஞ்ச, னுரனெரித்தல் வாணனைவா

னுய்த்தல் - பெரிய, வரன்முத லாகவே லன்முதன் மாயோ, னமர்முத லாடி

வாறு" எனக்........................கண்டுகொள்க.

பாட்டுமென்றது - அகநாடகங்களுக்கும் புறநாடகங்களுக்கும் உரியஉருக்

களுமென்க.

அகநாடகங்களுக்குரிய உருவாவன:—கந்தமுதலாகப்

வுள்ள இருபத்தெட்டும். இவற்றுள்,—

பிரபந்தவுரு ஈடு

கந்தமென்றது-அடிவரையறையுடைத்தாய் ஒருதாளத்தாற்

புணர்ப்பது....

....................................................................................

பிரபந்தமென்றது-அடிவரையறையின்றிப் பலதாளத்தாற்

புணர்ப்பது.

புறநாடகங்களுக்குரிய உருவாவன:—தேவபாணிமுதலாக அரங்கொழி

செய்யுளீறாகவுள்ள செந்துறைவிகற்பங்க ளெல்லாமென்க.

கொட்டுமென்றது - கூத்துவிகற்பங்களுக்கு அமைந்த

வாச்சியக்கூறுகளுமென்றவாறு.

அவை கீதாங்கம், நிருத்தாங்கம், உபயாங்கமென்பன.

அவற்றுள்,—

கீதாங்கம் - கீதத்துக்கு வாசிப்பது.

நிருத்தாங்கம் - நிருத்தத்திற்கு வாசிப்பது.

உபயாங்கம் - இரண்டிற்கும் வாசிப்பது.

கரு. ஆங்கு, அசைநிலை.

கசு. ஆடலும் - முற்கூறிய அகக்கூத்தினும் புறக்கூத்தினுமுள்ள ஆடலுமென்றவாறு.

நீற்று கடிசரிமுதலாகிய [1] தேசிக்குரிய கால்களும், சுற்றுதல் எதிர்தல் உடைத்தல் முதலாகிய [2] வடுகிற்குரிய கால்களும், உடற்றாக்குமுதலாகிய [3] உடலவர்த்தனையும் அகக்கூத்துக்குரியன.

---

[1] தேசிக்குரியகால்கள், உச:— க. நீற்று, உ. கடிசரி, ங. மண்டலம், ச. வர்த்தனை, ரு. கரணம், சு. ஆலீடம், எ. குஞ்சிப்பு, அ. கட்டுப்புரியம், கூ. களியம், ௧0. உள்ளாளம், கக. கட்டுதல், கஉ. கம்பித்தல், கங. ஊர்தல், கச. நடுக்கல், கரு. வாங்குதல், கசு. அப்புதல், கஎ. அறுக்குதல், கஅ. வாசிப்பு, ககூ. குத்துதல், உ0. தெளிதல், உக. மாறுகால், உஉ. இட்டுப்புகுதல், உங. சுற்றிவாங்குதல், உச. உட்புரிவு.

[2] வடுகிற்குரியகால்கள், கச:—க. சுற்றுதல், உ. எதிர்தல், ங. உடைத்தல், ச. ஒட்டுதல், ரு. கட்டுதல், சு. வெட்டுதல், எ. போக்கல், அ. நீக்கல், கூ. முறுக்கல், க0. அறுக்கல், கக. வீசல், கஉ. குடுப்புக்கால், கங. கத்தரிகைக்கால், கச. கட்டுதல்.

[3] உடலவர்த்தனை, கூ:— க. மெய்சாய்த்தல், உ. இடைநெரித்தல், ங. சுழித்தல், ச. அணைத்தல், ரு. தூக்குதல், சு. அசைத்தல், எ. பற்றல், அ. விரித்தல், கூ. குவித்தலெனவிவை, "மெய்சாய் விடைநெரிவு மேற்சுழிவோ டாக்கணைத்தல், கைதூக் கசைத்தல் கிடைபற்றல் - கைகள், விரித்தல் குவித்தலிவை சிங்களமா மென்று, தெரித்தனர் தண்டமிழோர் தேர்ந்து." (சத்தானந்தப்பிரகாசம்.)

## ங.—அரங்கேற்றுகாதை.

ஏண்டுச் சிங்களமென்று வழங்கிவருகின்ற கூத்துச் சொல்விற்றிலராலெனின், "சிங்கள மிருவகை நிலையினு மெய்தும்" என னுஞ்சூத்திரத்தான் இதற்கு வேறு கால்களின்மையினென்க; [1] பாலைக்கு நிலையில்லாததுபோல.

புறக்கூத்துக்குரிய ஆடல்களாவன:—பெருநடை, சாரியை, பிரமரி இவை முதலாயினவும், பதினோராடலிற் கூத்துக்களுமாம்.

இவ்வகையால் அகக்கூத்துக்களுக்கும், புறக்கூத்துக்களுக்குமுரிய ஆடலு மென்றவாறு.

கசு. பாடலுமென்றது - [*] பண்ணன்முதலிய எட்டுவகைப்பட்ட குறிக் கோளும், "இன்பந் தெளிவே நிறைவே யொளியே, வன்சொ லிறுதி மந்த முச்சமெனா, வந்த வெட்டும் பாடலின் பயனே" என்றுசொல்லப்பட்ட எண் வகைப்பயனுமுடைய பாடலும்.

பாணியுமென்றது - தாளங்களுமென்றவாறு; "கொட்டு மசையுந் தூக்கு மளவு, மொட்டப் புணர்ப்பது பாணி யாகும்" என்றாராகலின்.

இவை மாத்திரைப்பெயர்கள்; கொட்டு அரைமாத்திரை; அதற்குவடிவு, க; அசை ஒருமாத்திரை; அதற்குவடிவு, எ; தூக்கு இரண்டுமாத்திரை; அதற்குவடிவு, உ; அளவு மூன்றுமாத்திரை; அதற்குவடிவு, ஃ எனக்கொள்க.

என்னை? "ககரங் கொட்டே யெகர மசையே, * புகரந் தூக்கே யளவே யாய்தம்" என்றாராகலின்.

இவற்றின்தொழில் வருமாறு:—கொட்டாவது - அமுக்குதல்; அசையாவது - தாக்கியெழுதல்; தூக்காவது:—தாக்கித் தூக்குதல்; அளவாவது —தாக்கினவோசை நேரே மூன்றுமாத்திரை பெறுமளவும் வருதலெனக்கொள்க.

அரைமாத்திரையுடைய ஏகதாளமுதலாகப் பதினாறுமாத்திரையுடைய பார்வதிலோசனமீறாகச் சொன்ன நாற்பத்தொருதாளமும் புறக்கூத்திற்குரிய; ஆறன்மட்டமென்பனவும், எட்டன்மட்டமென்பனவும் நாளவொரியலென்பனவும், தனிநிலையொரியலென்பனவும், ஒன்றன்பாணிமுதலாக எண்கூத்துப் பாணியீறாகக் கிடந்த பதினொருபாணிவிகற்பங்களும், முதனடைவாரமுதலாயினவும் அகக்கூத்திற்குரியவென்க.

கசு. தூக்குமென்றது - இத்தாளங்களின் வழிவரும் செந்தூக்கு, மதலைத் தூக்கு, துணிபுத்தூக்கு, கோயிற்றூக்கு, நிவப்புத்தூக்கு, கழாற்றூக்கு, நெடுந் தூக்கெனப்பட்ட எழுதூக்குக்களுமென்க; என்னை? "ஒருசீர் செந்தூக் கிருசீர் மதலை, முச்சீர் துணிபு நாற்சீர் கோயி, லைஞ்சீர் நிவப்பா மறுசீர் கழாலே, யெழுசீர் நெடுந்தூக் கென்மனார் புலவர்" என்றாராகலின்.

கஎ. கூடிய நெறியினவென்றது - முற்சொல்லப்பட்ட கூத்தும் பாட்டும் தாளமும் தூக்கும் தம்மிற்கூடின நெறியையுடைய அகக்கூத்தும் புறக்கூத்து முதலாயினவென்க.

---

[1] பாலைக்கு நிலமின்மையை, தொல்காப்பியம், அகத்திணையியல், சூ. ௨ - உரையிற் காண்க.

[2] சிலப்பதிகாரம், கானல்வரி. ௧. (பி - ம்.) * 'வகரத்.'



கொளுத்துங்காலை - ஆட்டுவிக்குமிடத்தென்க.

கஅ. பிண்டியுமென்றது - ஒற்றைக்கையுமென்றவாறு.

முற்கூறிய சொல்விகற்பமாகிய உட்சொல், புறச்சொல் ஆகாயச்சொ லென்னு மூன்றினையும், அவிநயத்தோடே காட்டிச்செய்யுமிடத்துச்

செய்யு

முறைமைதான் நான்குவகைப்படும்; கையும் கருத்தும் மிடறும் சீரமுமென. என்னை? "அவைதாம், கையே கருத்தே மிடறே சீரமென், றெய்தமுன் பகைத்த விலையென மொழிப" என்றாராகலின்.

அவற்றுட் கைதான் இரண்டுவகைப்படும்; இணையாவினைக்கையும் இணைக் கையுமென. இவை ஒற்றைக்கை இரட்டைக்கையென்றும் வழங்கப்படும்.

இன்னும் [ஒருசாரார்] ஒற்றைக்கை இரட்டைக்கையென்னு மிவற்றை, இவ்வகையோடும் [1] ஆண்கை [2] பெண்கை [3] அலிக்கை [4] பொதுக்கையென்னும் நான்கினையுங்கூட்டி ஆறென்பாருமுளர். என்னை? "மெய்பெறத் தெரிந்து மேலோராய்ந்த, கைவகை தன்னைக் கருதுங் காலை, யிணையா வினைக்கை யிணைக்கை யென்ன, வகையு மென்ப வறிந்திசி னோரே", "......மொழிநரு முளரே", "இணையா தியல்வ திணையா வினைக்கை,
என்று பிறரும் கூறினாராகலின்.
யிணைந்துடன் வருவ திணைக்கை யாகும்"

இனி அவற்றுள் இணையாவினைக்கை முப்பத்துமூன்று வகைப்படும்; அவை: பதாகை-௧, திரிபதாகை-௨, கத்தரிகை-௩, தூபம்-௪, அராளம்-௫, இளம்பிறை-௬, சுகதுண்டம் - ௭, முட்டி-௮, கடகம்-௯, சூசி-௧0, கமலகோசிகம்-௧௧, காங்கூலம்-௧௨, கபித்தம்-௧௩, விற்பிடி-௧௪, குடங்கை-௧௫, அலாபத்திரம் - ௧௬, பிரம
ரம் - ௧௭, தாம்பிரசூடம் - ௧௮, பிசாசம் - ௧௯,
தெரிநிலை - ௨௨, மெய்ந்நிலை - ௨௩, உன்னம் -

முகுளம் - ௨0, பிண்டி - ௨௧,
௨௪, மண்டலம் - ௨௫, சது
ரம்-௨௬, மான்றலை-௨௭, சங்கு-௨௮, வண்டு-௨௯, இலதை-௩0, கபோதம்-௩௧, மகரமுகம் - ௩௨, வலம்புரி - ௩௩ என. என்னை?

யதிர்வி லிலதை
கபோத மகரமுகம், வலம்புரி தன்னொடு முப்பத்து மூன்றென்,
புலவ ரிசைத்தன ரென்ப" என்முராகலின்.

நிலக்குமொழிப்
இவற்றுள், பிண்டியென்றது ஒன்றாய்
பெயராயிற்று.
ஆகுபெயரான் ஒற்றைக்கைக்குப்

பிணையல் - இணைதலாதலால் இணைக்கையாயிற்று. ஆதலாற் பிணையலுமென்றுரெனக்கொள்க.

பிண்டியும்

இவற்றுட் பிண்டிக்குக்காட்டிய முப்பத்துமூன்று வகையினுள்,—

பதாகைக்கையாவது - நான்குவிரலும் தம்முள் ஒட்டிநிமிரப் பெருவிரல் குஞ்சித்திருப்பது; என்னை? "பதாகை யென்பது பகருங் காலைப், பெருவிரல் குஞ்சித் தலாவிர னான்கு, மருவி நிமிரு மரபிற் றென்ப" என்முராகலின்.

இக்கைகளின் தொழில் முதலியவிரிப்பின் உரைபெருகுமாதலின், விடுக்கப் பட்டன ; விரிந்தநூல்களிற் கண்டுகொள்க.
(க)
திரிபதாகையாவது - பதாகைக்கையின் [1] அணிவிரல் முடக்குவது; என்னை? "திரிப தாகை தெரியுங் காலை, யறைப தாகையி னணிவிரன் முடக்கினஃ, தாமென மொழிப வறி ந்திசி னோரே" என்முராகலின்.
(உ)
கத்தரிகையாவது - திரிபதாகையின் முடங்கிய அணிவிரற்புறத்ததாகிய நடுவிரலைச் சுட்டுவிரலோடு பொருந்தநிமிர்ப்பது ; என்னை ? "கத்தரி கையே காண்டக விரிப்பி, னத்திரி பதாகையி னணியின் புறத்ததைச், சுட்டக மொட்ட விட்டுநிமிர்ப்

பதுவே" என்றாராகலின். (௩)

தூபமென்றது - நிமிர்ந்த நடுவிரலும் சுட்டுவிரலும் பாதிப்படவளையுதிற் பது ; என்னை ? "தூப மென்பது அணியுங் காலை, விளங்குகத் தரிகை விரலகம் வளைந்து, துளங்கு மென்ப துணிபறிந் தோரே" என்றாராகலின். (௪)

அராளமாவது - பெருவிரல் குஞ்சித்துச் சுட்டுவிரல் முடக்கி ஒழிந்த விரன்மூன்றும் நிமிர்ந்தவளைவது ; என்னை ? "அராள மாவ தறிவரக் கிளப்பிற், பெருவிரல் குஞ்சித்துச் சுட்டுவிரன் முடக்கி, விரல்கண் மூன்று நிமிர்த் தகம் வளைத்தற், குரிய தென்ப வுணர்ந்திசி னோரே" என்றாராகலின். (௫)

இளம்பிறை : "சுட்டும் [2] பேடு [3] மநாமிகை சிறுவிர, லொட்டி யகம்வளைய வொசித்த பெருவிரல், விட்டு நீங்கும் விதியிற் றென்ப." (௬)

சுகதுண்டம்:—"சுகதுண்ட மென்பது தொழில்பெறக் கிளப்பிற், சுட்டு விரலும் பெருவிர லுறை, மொட்டி யுகிர்நுனை கௌவி முன்வளைந், தநாமிகை முடங்கப் பேட்டொடு சிறுவிர, லுன்மிக நிமிர்ந்த தகுதித் தென்ப." (௭)

---

1 அணிவிரல் - பவித்திரவிரல்.
2 பேடு - நடுவிரல்; இதுபேடியெனவும் வழங்கப்படும்.
3 அநாமிகை - பவித்திரவிரல்.



முட்டி:—"முட்டி யென்பது மொழியுங் காலைச், சுட்டு நடுவிர லநாமிகை சிறுவிர, லிறுக முடக்கி யிவற்றின்மிசைப் பெருவிரன், முறுகப் முறைமைத் தென்ப."

பிடித்த
(அ)

கடகம்:—"கடக முகமே கருதுங் காலைப், பெருவிர லுனியுஞ் சுட்டுவிர லுனியு, மருவ வளைந்தவ் வுகிர்தனி கௌவி, யொழிந்த மூன்றும் வழிவழி நிமிர, மொழிந்தன ரென்ப முடிபறிந் தோரே." (க)

குசி:—"குசி யென்பது அணியுங் காலை, நடுவிரல் பெருவிர லென்றிவை தம்மி, னைடவுட னொற்றிச் சுட்டுவிர னிமிர, வொழிந்தன வழிவழி முடங்கி
நிற்ப, மொழிந்தனர் மாதோ முடிபறிந் தோரே." (௧௦)

பதுமகோசிகம்:—"பதும கோசிகம் பகருங் காலை, யொப்பக் கைவிரனந் தைந்து விரலு, மெய்ப்பட வகன்ற விதியிற் றாகும்." (௧௧)

காங்கூலமாவது - மூன்றுவகைப்படும்; குவிகாங்கூலம், முகிழ்காங்கூலம், விரிகாங்கூலமென. என்னை? [1] "காங்கூ லம்மே கருதுங் காலைச்; சுட்டும் பேடும் பெருவிரன் மூன்று, மொட்டிமுன் குவிய வநாமிகை முடங்கிச், சிறு
விர னிமிர்ந்த செய்கைத் தாகும்", "முகிழ்காங் கூல முந்தற மொழிந்த, காங் கூலங் குவிவிழந் ததுவே", "மலர்காங் கூல மதுமலர்ந் ததுவே."

குவி
(௧௨)

கபித்தமாவது - சுட்டுவிரலுனியும் பெருவிரலுனியும் உகிர்நுனி கௌவிப் பிடித்து ஒழிந்த மூன்றுவிரலும் மெல்லெனப் பிடிப்பது; என்னை? "கபித்த மென்பது காணுங் காலைச், சுட்டுப் பெருவிர லொட்டிநுனி கௌவி, யல்ல மூன்று மெல்லப்பிடிப் பதுவே"

என்றாரகலின். (கங)

விற்பிடி:—"விற்பிடி யென்பது விரிக்குங் காலைச், சுட்டொடு பேடி யநா மிகை சிறுவிர, லொட்டி யகப்பால் வளையப் பெருவிரல், விட்டு நிமிரும் விதி யிற் றாகும்." இதற்குச் சிகரமென்றும் பெயர். (கச)

குடங்கையாவது - எல்லாவிரலுங்கூட்டி உட்குழிப்பது; என்னை? "குடங்கை யென்பது கூறுங் காலை, யுடங்குவிரற் கூட்டி யுட்குழிப் பதுவே" என்றாரகலின். (கரு)

அலாபத்திரமாவது - சிறுவிரன்முதலாகியவைந்தும் வளைந்துமறிவது; என்னை? "அலாபத் திரமே யாயுங் காலைப், புகாணமையின் மிகுத்த சிறுவிரன் முதலா, வருமுறை யைந்தும் வளைந்துமறி வதுவே" என்றாரகலின். (கசு)

பிரமரமாவது - அநாமிகைவிரலும் நடுவிரலும் தம்மிற்பொருந்தி வலஞ் சாயப் பெருவிரல் நடுவிரலினுள்ளேசேரச் சுட்டுவிரலும் சிறுவிரலும் பின்பே வளைந்துநிற்பது; என்னை? "பிரமர மென்பது பேணுங் காலை, யநாமிகை நடு விர லறவுறப் பொருந்தித், தாம்வலஞ் சாயத் தகைசால் பெருவிர, லொட்டிய நடுவுட் சேரச் சிறுவிரல், சுட்டு வளைந்துபின் றோன்றிய நிலையே" என்றாரகலின். (கஎ)

[1] ஏர்க்கடலமென்றது குவிகாக்கடலத்தை.

## ௩.—அரங்கேற்றுகாதை.

கூடு

தாம்பிரசூடமாவது - நடுவிரலும் சுட்டுவிரலும் பெருவிரலும் தம்மில் நனியொத்துக் கூடி வளைந்து சிறுவிரலும் அணிவிரலும்

முடக்கிநிமிர்வது ; என்னை ? "தாம்பிர சூடமே சாற்றுங் காலைப், பேடே சுட்டுப் பெருவிர லுனி யொத்துக், கூடி வளைந்து சிறுவிர லணிவிர, லுடனதின் முடக்கி நிமிரநிற் பதுவே" என்றாராகலின். (கஅ)

பிசாசமாவது - பெருவிரலும் சுட்டுவிரலுமன்றி ஒழிந்த மூன்றுவிரலும் தம்மிற்பொலிந்துநிற்பதெனக்கொள்க.

அப்பிசாசந்தான் மூன்றுவகைப்படும் ; அகநிலைப்பசாசம், முகநிலைப் பசாசம், உகிர்நிலைப்பசாசமெனை. அவற்றுள்,

அகநிலைப்பசாசம் சுட்டுவிரல்நுனியிற் பெருவிரலகப்படுவது.

முகநிலைப்பசாசம் அவ்விரன்முகங்கூடி உகிர்விட்டுநிற்பது.

உகிர்நிலைப்பசாசம் சுட்டுவிரலும் பெருவிரலும் உகிர்நுனை கௌவிநிற்பது.

என்னை? "பசாச மென்பது யார்படக் கிளப்பி, னகநிலை முகநிலை யுகிர் நிலை யென்னத்,தொகைநிலை பெற்ற மூன்றுமென மொழிப", "அவைதாஞ், சுட்டு விரனுனியிற் பெருவிர லகப்பட, வொட்டி வளர்த்த தகநிலை முகநிலை, பவ்விர னுனிகள் கௌவிப் பிடித்தல்,
கௌவிய தொழிந்த மூன்றுந்,
என்றாராகலின்.
செவ்வி தாகுஞ் சிறந்த வுகிர்நிலை, யுகிர்நுனை
தகைமையி னிமிர்த்தலம் மூன்றற்குந் தகுமே"

(கக)

முகுளமாவது - ஐந்துவிரலும் தம்மில் தலைகுவிந்து உயர்ந்துநிற்பது ; என்னை ? "முகுள மென்பது சேர்ப, வந்து நிகழு மாட்சித் பொழியுங் காலை, யைந்து விரலும் தலைகுவிந் தாகும்" என்றாராகலின். (உ0)

பிண்டியொன்றது - சுட்டுவிரல் பேடிவிரல் அநாமிகை சிறுவிரல் ஒட்டி நெகிழமுடங்க அவற்றின்மேலே குறுக்கிடப் பெருவிரல் கட்டி விலங்கி விரல்வழி முறையொற்றல் ; என்னை ? "பிண்டி யென்பது பேசுங் காலைச், சுட்டுப் பேடி யநாமிகை சிறுவிர, லொட்டி நெகிழ முடங்க வவற்றின்மிசை, விலங்குறப் பெருவிரல் விட்டுங் கட்டியு, மிலங்குவிரல் வழிமுறை யொற்றலு மியல்பே" என்றாராகலின். (உக)

தெரிநிலையாவது - எல்லாவிரலும் விரிந்து குஞ்சித்துநிற்பது ; என்னை ? "தெரிநிலை யென்பது செப்புங் காலை, யைந்து விரலு மலர்ந்துகுஞ் சித்த, கைவகை யென்ப கற்றறிந் தோரே" என்றாராகலின். (உஉ)

மெய்ந்நிலையாவது - சிறுவிரலும் அணிவிரலும் நடுவிரலும் சுட்டுவிரலும் விட்டுநிமிரச் சுட்டுவிரன்மேற் பெருவிரல் சேரவைப்பது ; என்னை ? "மெய்ந் நிலை யென்பது விளம்புங் காலைச், சிறுவிர லநாமிகை பேடொடு சுட்டிவை, யுறுத லின்றி நிமிரச் சுட்டின்மிசைப், பெருவிரல் சேரும் பெற்றித் தென்ப" என்றாராகலின். (உஙு)

உன்னமாவது - சிறுவிரலும் பெருவிரலும் தம்முட்கூட ஒழிந்த மூன்று விரலும் விட்டு நிமிர்வது ; என்னை ? "உன்ன நிலையே யுணருங் காலைப், பெரு விரல் சிறுவிர லென்றிவை பிணைய, வருமுறை மூன்று மலர்ந்துநிமிர் வதுவே" என்றாராகலின்.

சிலப்பதிகாரம்

மண்டலம்:—"மண்டல மென்பது மாசறக்

(உச)

ளைப்பிற், பேடு றனியும் பெருவிர லுனியுங், கூடி விளர்ந்தம் முகிர்றவின் கௌவி, யொழிந்த மூன்று மொக்க விலைவதென, வின்.

மொழிந்தன ரென்ப முழு துணர்ந் தோரே" என்றாராக

(உரு)

சதுரமாவது - சுட்டுவிரலும் நடுவிரலும் அணிவிரலும் தம்முட் சேர்ந்து இறைஞ்சப் பெருவிரல் அகம்வரவைத்துச் சிறுவிரல் பின்பே நிமிர்ந்துநிற்பது; என்னை ? "சதுர மென்பது சாற்றுங் காலை, மருவிய மூன்று கிமிர்ந்தகம் வளை யப், பெருவிர லகமுறப் பொற்பச் சேர்த்திச், சிறுவிரல் பின்பே நிமிர்ந்த செவ் விவி, னிறமுறைத் தென்ப வியல்புணர்ந் தோரே" என்றாராகலின். (உசு)

மான்றலையாவது - பெருவிரலும் சிறுவிரலுமொழிந்த மூன்றும் தம்மில் ஒத்தொன்றி முன்னே இறைஞ்சிநிற்பது ; என்னை ? "மான்றலை யென்பது வகுக்குங் காலை, மூன்றிடை விரலு நிமிர்ந்தக மிறைஞ்சிப், பெருவிரல் சிறுவிர லென்றிவை நிமிர்ந்து, வருவ தென்ப வழக்கறிந் தோரே" என்றாராகலின். (உஎ)

சங்கவது - பெருவிரல் நிமிர ஒழிந்த நான்குவிரலும் வளைந்துநிற்பது ; என்னை ? "சங்கெனப் படுவது சாற்றுங் காலைச், சிறுவிரன் முதலாச் செறிவிர லுன்கும், பெறுமுறை வளையப் பெருவிர னிமிர்ந்தால், இறுமுறைத் தென்ப வியல்புணர்ந் தோரே" என்றாராகலின். (உஅ)

வண்டாவது - பெருவிரலும் அணிவிரலும் வளைந்து றனியொன்றிச் சிறு விரல் நிமிர்ந்து சுட்டுவிரலும் நடுவிரலும் செங்கிழ வளைந்துநிற்பது ; என்னை ?

"வண்டென் பதுவே வகுக்குங் காலை, யநாமிகை பெருவிர னனியிக வளைந்து, தாறுனி யொன்றித் தகைசால் சிறுவிரல், வாலிதி னிமிர மற்றைய வளைந்த, பாவின தென்ப பயன்றெரிந் தோரே" என்றாராகலின். (உகூ)

இலைதயாவது - நடுவிரலும் சுட்டுவிரலும் கூடிநிமிரப் பெருவிரல் அவற்றின்மேல்வரைசேர ஒழிந்த இரண்டுவிரலும் வழிமுறை பின்னே நிமிர்ந்து நிற்பது ; என்னை? "இலைதை யென்ப தியம்புங் காலைப், பேடியுஞ் சுட்டும் பிணைந்துட னிமிர்ந்து, கூடிய பெருவிரல் மேல்வரை குறுகக், கடையிரு விரலும் பின்னர் நிமிர்ந்த, நடையின தென்ப நன்னெறிப் புலவர்" என்றாராகலின். (௩0)

கபோதமென்றது - பதாகைக்கையிற் பெருவிரல் விட்டுநிமிர்வது; என்னை? "காணுங் காலைக் கபோத மென்பது, பேணிய பதாகையிற் பெருவிர னிமிரும்" என்றாராகலின். (௩௧)

மகரமுகமாவது - பெருவிரலும் சுட்டுவிரலும் நிமிர்ந்துகூட ஒழிந்த மூன்றுவிரலும் தம்முளொன்றி அதற்குவேறாய்நிற்பது; என்னை? "மகரமுக

மென்பது வகுக்குங் காலைச், சுட்டொடு பெருவிரல் கூட
யொட்டி நிமிர்ந்தாங் கொன்று வாகும்" என்றாராகலின்.

வொழிந்தவை,
(௩௨)

வலம்புரியாவது - சிறுவிரலும் பெருவிரலுநிமிர்ந்து சுட்டுவிரலின் அகம் வளைந்து ஒழிந்தவிரண்டும் நிமிர்ந்து இறைஞ்சிநிற்பது; என்னை? "வலம்புரிக்

## ௩.—அரங்கேற்றுகாதை.

நிலை

நின்றியங்கு மெய்யெழுத்தாற் - றுய்ய, வொருகாடி நின்றியங்கு
யுந்நிமே

லோங்கி, வருமா லெழுத்துடம்பின் வந்து."
கையே வாய்ந்த கனிட்ட, னலந்திகழ் பெருவிர னயமுற நிமிர்ந்து,

(உ)

பதுமாஞ்சலியாவது - இருகையும் பதுமகோசிகமாகக் கூட்டுவது; என்னை? "பதுமாஞ் சலியே பதும கோசிக, மெனவிரு கையு மிணைந்துநிற் பதுவே" என்று
ராகலின்.

(௩)

கபோதமென்பது - இரண்டுகையும் கபோதமாகக் கூட்டுவது; என்னை? "கருதுங் காலைக் கபோத விணைக்கை, யிருகையுங் கபோத மிசைந்துநிற் பதுவே" என்றுராகலின்.

(௪)

கற்கடகமென்பது-தெரிநிலைக்கையிரண்டும் அங்குலிபிணைந்து வருவதெனக் கொள்க; என்னை? "கருதுங் காலைக் கற்கட கம்மே, தெரிநிலை யங்குலி யிருகையும் பிணையும்" என்றுராகலின்.

(௫)

---

(பி - ம்.) * 'இணையாவிணைக்கை'

௧௩

௬அ சிலப்பதிகாரம்

சுவத்திகமென்பது - மணிக்கட்டிற்பொருந்திய பதாகையிரண்டையும் மணிக்கட்டிலேற்றிவைப்பது; என்னை? "சுவத்திக மென்பது சொல்லுங் காலை, மணிக்கட் டமைந்த பதாகை யிரண்டையு, மணிக்கட் டேற்றி வைப்ப தாகும்" என்றுராகலின்.

(௬)

கடகாவருத்தமாவது - இரண்டுகையும் கடகமாய் மணிக்கட்டுக்கு மேற இயைந்து நிற்பது; என்னை? "கருதிய கடகா வருத்தக் கையே, யிருகையுங் கடக மணிக்கட் டியைவது" என்றுராகலின்.

(எ)

நிடதமாவது - முட்டியாக இரண்டுகையும் சமஞ்செய்வது; என்னை? "நிடத மென்பது நெறிப்படக் கிளப்பின், முட்டி யிரண்டுகை யுஞ்சம மாகக், கட்டி நிற்குங் காட்சித் தென்ப" என்றாராகலின். (௮)

[1] தோரமாவது - இரண்டுகையும் பதாகையாக்கி அகம்புறமொன்றி முன் தாழ்ந்துநிற்பது; என்னை? "தோர மென்பது துணியுங் காலை, யிருகையும் பதாகை யகம்புற மொன்ற, மருவிமுன் றாழும் வழக்கிற் ராகலின்.
றென்ப" என்று
(௯)

உற்சங்கமாவது - ஒருகை பிறைக்கையாகக்கொண்டு ஒருகை அராளமாக்கி இரண்டுகையும் மணிக்கட்டிலேற்றிவைப்பது; என்னை? "உற்சங்க மென்ப துணருங் காலை, யொருகை பிறைக்கை யொருகை யராளந், தெரிய மணிக்கட்டி லேற்றிவைப் பதுவே" என்றாராகலின். (௰)

புட்பபுடமாவது - குடங்கையிரண்டும் தம்மிற் பக்கங் காட்டி நிற்பது; என்னை? "புட்பபுட மென்பது புகலுங் காலை, யொத்த விரண்டு குடங்கையு மியைந்து, பக்கங் காட்டும் பான்மைத் தென்ப" என்றாராகலின். (௧௧)

மகரமென்றது - கபோதமிரண்டுகையும் அகம்புறமொன்றவைப்பது; என்னை? "மகர மென்பது வாய்மையி னுரைப்பிற், கபோத மிரண்டு கையு

மகம்புற, மொன்ற வைப்பதென் றுரைத்தனர் புலவர்"
சித்தமென்பதும் இதனதுபெயர்.

என்றாராகலின். உச்
(௧௨)

சயந்தமென்றது.........................................................

(௧௩)

அபயவத்தமாவது—இருகையும் சுகதுண்டமாக நெஞ்சுறநோக்கி நெகிழ்ந்துநிற்பது ; என்னை ? " அபயவத் தம்மே யறிவுறக் கிளப்பின், வஞ்சமில் சுக துண்ட மிருகையு மாட்சியி, னெஞ்சுற நோக்கி நெகிழ்ந்துநிற் பதுவே " என்று ராகலின். (கச)

வருத்தமான மாவது - முகுளக்கையிற் கபோதக்கையை எதிரிட்டுச் சேர்ப்பது ; என்னை ? "வருத்த மானம் வகுக்குங் காலே, முகுளக் கையிற் கபோதக் கையை, நிகழச் சேர்த்து நெறியிற் றென்ப " என்றுராகலின். (கரு)

இச்சொல்லப்பட்ட பதினோந்தும் பிணையற்கையெனக்கொள்க. இணைக்கையெனினும் இரட்டைக்கையெனினும் பிணையலெனினுமொக்கும். இத்தன்மையவாகிய பிணையலுமென்க.

[1] இது உட்டோளமெனவுங் கூறப்படும்.

# ங.—அரங்கேற்றுகாதை.

கசஅ. எழிற்கையுந் தொழிற்கையுமென்றது: எழிற்கை - அழகுபெறக்காட்டுங்கை. தொழிற்கை - தொழில்பெறக்காட்டுங்கை.

உம்மையாற் பொருட்கையும் கூறப்பட்டது.

பொருட்கை - பொருளுறக்காட்டுங்கை; என்னை? "அவைதா, மெழிற்கை யழகே தொழிற்கை தொழிலே, பொருட்கை கவியிற் பொருளா குமே" என்றாரகலின்.

கக. கொண்ட வகையறிந்து: கொண்டவகையறிதலாவது பிண்டியும் பிணையலும் புறக்கூத்துக்குரியகையென்றும், எழிற்கையும் தொழிற்கையும் அகக்கூத்துக்குரியகையென்றுமறிதல்.

கூத்துவருகாலையென்றது - கூத்துக்களின் வரவு

நிகழுமிடத்தென்க.

௨0 - ௨௧. கூடை

செய்தகை..............................களைதலுமென்றது - அகக்கூத்து நிகழுமிடத்து ஒற்றையிற்செய்த கைத்தொழில் இரட்டையிற் புகாமலும் இரட்டையிற்செய்த கைத்தொழில் ஒற்றையிற்புகாமலுங் களைதல். இன்னும் தேசியிற் கைத்தொழில் மார்க்கத்துப் புகாமலும் மார்க்கத் துக்கைத்தொழில் தேசியிற்புகாமலும் களைதலென்றுமாம்; ஒற்றையும் இரட்டையும் தேசிக்கூறுகலானும் இரட்டையும் இரட்டைக்கிரட்டையும் வடுகிற்கூறுகலானுமென்க.

௨௨ - கூ. பிண்டி

செய்தகை..............................களைதலுமென்றது புறக்கூத்தினிடத்துப், பிண்டியென்றது - பொருட்கையென்றும், பிணையலென்றது - தொழிற்கையென்றுமாம்.

இதன்கருத்து: ஆடல் நிகழுமிடத்து அவிநயநிகழாமலும் மிடத்து ஆடனிகழாமலுங்களைதல்.

அவிநயநிகழு

உச. குரவையும்..............செலுத்தியென்றது - குரவைக்கூத்திற்குரிய கால்களும் வரிக்கூத்திற்குரிய கால்களும் தம்மில் விரவாதபடியே கூத்தை நடத்தியென்க.

[1] "குரவை......................................இயல்பிற் றென்ப."

"வரியெனப் படுவது வகுக்குங் காலைப், பிறந்த நிலனுஞ் சிறந்த தொழிலு, மறியக்கூறி யாற்றுழி வழங்கல்."

உரு. ஆடற்கு..............தன்னொடு மென்றது - இக்கூத்துக்களை இப்படியால் அவற்றுடனேபொருந்த ஆடவும் ஆடுவிக்கவும் வல்ல மென்றவாறு.

ஆடலாசிரியனொடு அறிந்து புணர்த்து விளங்கவறிந்து அறிந்து னென்க.

செலுத்தி அமைந்த ஆசா

[இசையாசிரியன் அமைதி.]

உகு-௩௬. யாழுங்குழலுஞ்.........இசையோன் றானும்

[1] இப்புத்தகம் உச, ௬௦ ஆம்பக்கங்களிற் பார்க்க. 400

சிலப்பதிகாரம்

(இ - ள்.) யாழ்ப்பாடலும் வங்கியப்பாடலும் இருவகைத்தாளக் கூறுபாடு களும் மிடற்றுப்பாடலும் மந்தாரகியசுரத்தினையுடைய தண்ணுமையும் அகக்

கூத்தும் புறக்கூத்தும் பதினோராடலென்னுங் கூத்துக்களும் வல்லனாய் இவற்றுடனே சேரச்செய்த உருக்களை இசைகொள்ளும்படியும் இரதம் பொருந்தும்படியும் புணர்க்கவும் வல்லனாய் இருவகைப்பட்ட பாடல்களுக்கும் பொருளான இயக்கம் நான்கினையுமமைத்துத் தேசாந்தரங்களிற் பாடைகளையுமறிந்து அந்தப்பாடைகள் இசைபூணும்படியையுமறிந்து இயற்புலவனினைவும் நாடகப்புலவனினைவுகளும் இவற்றுக்கு அடைத்த பாடல்களும் தம்மிற்சந்திப்பிக்குமிடத்துக் குற்றந்தீர்ந்த நூல்வழக்காலே வகுக்கவும் விரிக்கவும் வல்லனுமுள்ள இசைப்புலவனுமென்றவாறு.

இது பொழிப்புரை.

உகூ. யாழுமென்றது - யாழ்ப்பாடலுமென்றவாறு.

யாழ் நால்வகைப்படும்; அவை:—பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழென்பன. இவை நாலும் பெருமபான்மை; சிறுபான்மையான் வருவனபிறவுமுள, என்னை? "பேரியாழ் பின்னு மகரஞ் சகோடமுடன், சீர்பொலியுஞ் செங்கோடு செப்பினார் - தார்பொலிந்து, மன்னுந் திருமார்ப வண்கூடற் கோமானே, பின்னு முளவே பிற" என்றாராகலின்

இந்நால்வகை யாழிற்கும்
பத்தொன்றும், மகரயாழிற்குப்

நரம்புகொள்ளப்படுத்துப் பேரியாழிற்கு இரு
பத்தொன்பதும், சகோடயாழிற்குப் பதினு
லும், செங்கோட்டியாழிற்கு ஏழுங்கொள்ளப்படும்; என்னை? "ஒன்று மிருபது மொன்பதும் பத்துடனே, நின்றபதி னான்கும் பின்னேழுங் - குன்றாத, நால்வகை யாழிற்கு நன்னரம்பு சொன்முறையே, மேல்வகை நூலோர் விதி" என்றாராகலின்.

இனி இவ்வியாழென் னும் ஒன்றிற்கு அமைந்த பலவுறுப்பாகிய "கோட்டினமைதியுங் கொளுவிய வாணியு, மாட்டிய பத்தரின் வகையு மாடகமுந், தந்திரி யமைதியுஞ் சாத்திய பிறவு, முந்திய நூலின் முடிந்த வகையே" வகுக்கப் பட்டனவெல்லாம் கானல்வரியில், "குற்றந்தீர்ந்த யாழ்" என்பதன்கண் விரிக்கக்கூறுதும்.

உசு. குழலுமென்றது - வங்கியப்பாடலுமென்றவாறு.

குழல் - வங்கியம்; அதற்கு மூங்கில், சந்தனம், வெண்கலம், செங்காலி, கருங்காலியென ஐந்துமாம்; என்னை? "ஓங்கிய மூங்கி லுயர்சந்து வெண்கல

மே, பாங்குறுசெங் காலி கருங்காலி - பூங்குழலாய், கண்ண

கிவைக ளாமென்றார், பண்ணமைந்த நூல்வல்லோர் பார்த்து

லுவர்த கழைக்

என்றாராகலின்.

இவற்றுள் மூங்கிலிற்செய்வது உத்தமம்; வெண்கலம் மத்திமம்; ஏனைய அதமமாம். மூங்கில் பொழுதுசெய்யும்; வெண்கலம் வலிது;

தம் ஒத்தரிற்கும்.

மரம் எப்பொழு

(பி - ம்.) "ஓரேழ்மேற்பத்துடனே நின்றபதிலுறேழு நேரேழ்காத்'

ரு.—அரங்கேற்றுகாதை.

இக்காலத்துக் கருங்காலி செங்காலி சந்தனம் இவற்றாற் கொள்ளப்படும்; கருங்காலிவேண்டுமென்பது பெருவழக்கு. இவை கொன்றைக்கால் உயர்ந்த ஒத்த நிலத்திற் பெருகவளர்ந்து நாலுகாற்றும் பாங்கின் நாசமில்லாதாக தனான் மயங்காநிலத்தின்கண் இளமையும் நெடும்பிராயமுமின்றி ஒருபுருடாயுப்புக்க பெரிய மரத்தைவெட்டி ஒருபுருடாகாரமாகச்செய்து அதனை நிழலிலே ஆறஇட்டு வைத்துத் திருகுதல் பிளத்தல் போழ்ந்துபடுதலின்மையையறிந்து ஓர் யாண்டு சென்றபின் இலக்கணவகையான் வங்கியஞ்செய்யப்படும்; என்னை? "உயர்ந்த * சமதலத் தோங்கிக்கா லுண்டின், மயங்காமை நின்ற மரத்தின் - மயங்காமே, முற்றிய மாமரக் கன்னல் முதலடித்து, குற்றமிலோ ரண்டிற் கொளல்" என்றாகலின்.

இதன் பிண்டியிலக்கணம்:—நீளம் இருபதுவிரல்; சுற்றளவு நாலரைவிரல். இது துளையிடுமிடத்து நெல்லரிசியில் ஒருபாதி மரணிறுத்திக்கடந்து வெண்கலத்தாலே அணைசுபண்ணி இடமுகத்தையடைத்து வலமுகம் வெளியாகவிடப்படும்; என்னை? "சொல்லு மிதற்களவு நாலுதுஞ் சுற்றளவு, நல்விரல்க ணாலரையா நன்னுதலாய் - சொல்லத், துளையளவு நெல்லரிசி தூம்புடைத்தாக, வளைவாமல் வங்கிய மென்" என்றாகலின்.

இனித் துளையளவிலக்கணம்:— அளவு இருபதுவிரல். இதிலே அணைசுமுகத் திரண்டுநீக்கி முதல்வாய்விட்டு இம்முதல்வாய்க்கு ஏழங்குலம்விட்டு வாயிலுமிரண்டுநீக்கி நடுவினின்ற ஒன்பதுவிரலினும் எட்டுத்துளையிடப்படும்.
இவற்றுள் ஒன்று முத்திரையென்றுகழித்து நீக்கி நின்ற ஏழினும் விரல்வைத்து ஊதப்படும். துளைகளின் இடைப்பரப்பு ஒருவிரலகலம்.

எழுவிரல்
கொள்ளப்
படும்; என்னை ? "இருவிரல்க ணீக்கி முதல்வாயேழ் நீக்கி, மருவ துலையெட்டு மன்னும் - பெருவிரல்க, ளுலைஞ்சு கொள்க பரப்பென்ப நன்னுதலாய், கோலஞ் செய் வங்கியத்தின் கூறு" என்றாராகலின்.

இவ்வங்கியம் ஊதுமிடத்து வளைவாய்ச்சார்ந்ததுளை முத்திரையென்று நீக்கி முன்னின்ற ஏழினையும் ஏழுவிரல்பற்றி வாசிக்க.

ஏழுவிரலாவன:-இடக்கையிற்பெருவிரலும் சிறுவிரலுநீக்கி மற்றைமூன்று விரலும், வலக்கையிற் பெருவிரலொழிந்த நான்குவிரலும் ஆக ஏழுவிரலுமென்க. என்னை? "வளைவாயருகொன்று முத்திரையாய் நீக்கித், துளையேழினின்ற விரல்கள் - விளையாட், டிடமூன்று நான்குவல மென்றார்கா ணோகா, வடமாரு மென்முலையாய் வைத்து" என்றாராகலின்.

இவ்வங்கியத்து ஏழுதுளைகளில் இசைபிறக்குமாறு:—அஃது எழுத்தாற் பிறக்கும். எழுத்து, ச ரி க ம ப த நி என்பன. இவ்வெழுத்தினையும் மாத்திரைப்படுத்தித்தொழில்செய்ய இவற்றுள்ளே ஏழிசையும்பிறக்கும்.

ஏழிசையாவன:—சட்சம், ரிடபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிடாதமென்பன . இவைபிறந்து இவற்றுள்ளே பண்கள் பிறக்கும்;

---

(பி - ம்.) * 'சமநிலத்' † 'தாபமிடமாய்'

என்னை? "சரிக மபதநியென் றேழெழுத்தாற் றானம், வரிபரந்த கண்ணினாய் வைத்துத் - தெரிவரிய, வேழிசையுந் தோன்று மிவற்றுள்ளே பண்பிறக்குஞ், சூழ்முதலாஞ் சுத்தத் துளை" என்றாராகலின்.

இத்தன்மைத்தாகிய குழலுமென்க.

உக. சீருமென்றது - "செம்முறை யுறழ்பே மெய்ந்நிலை கொட்ட, வீட்ட விமிர்த்தல்" என்றுசொல்லப்படாநின்ற வண்ணக்கூறுபாட்டையும் இரு வகைத்தாளக்கூறுபாட்டையும் பாலைநிலையினையும் பண்ணுநிலையினையும் நிலைப் படப்படுத்துத் துய்தாகக் காட்டுந் தன்மையுமென்க.

இதன்பகுதியெல்லாம் ஈண்டுரைப்பிற்பெருகும்; வந்தவழிக்கண்டுகொள்க. அஃதன்றித் நாலவகையோத்தினுள் ஞெக்காணலாகும்.

உங. மிடறுமென்றது - சாரீரவீணையுமென்றவாறு.

அதனை, "பூதமுதற் சாதனத்தாம் புற்கலத்தின் மத்திமத்து, நாதமுத லாமெழுத்து நாலாகி - வீதி, வருவரத்தாற் றானத்தால் வந்து வெளிப்பட், டிருவரத்தாற் றேற்ற மிசைக்கு" என்பதனானுணர்க.

புற்கலம் - உடம்பு. அப்புற்கலத்துக்கு முதலாயுள்ள பூதமாவன: மண் நீர் தீ வளி வானெனவிவை; என்னை? "மண்ணுட னீர்நெருப்புக் கால்வான மென்றிவைதா, மெண்ணிய பூதங்க ளென்றறிந்து - நண்ணிய, மன்னர்க்கு மண்கொடுத்து மாற்றார்க்கு விண்கொடுத்த, தென்னவர்கோ மானே தெளி" என்றாராகலின்.

இப்பூதங்களைந்தாலும் புற்கலமாமென்ற ஆசானை மாணாக்கன் பணிந்து பூதங்கடாம் ஒன்றோடொன்று கூடுவனவல்ல; மண் செறிதலைக் குணமாக வுடைத்து; நீர் நெகிழ்தலைக் குணமாகவுடைத்து; தீத் தெறுதலைக் குணமாக வுடைத்து; காற்று ஓரிடத்தும் நிலைபெற்றுநிற்பதன்று; ஆகாயமென்பது ஒருருவுண்டில்லையன்று; அன்றியும் "செப்பிய பூதங்கள் சேர்ந்தோர் குறியன்றே, யப்பரிசு மண்ணைந்து நீர்நாலா - மொப்பரிய, தீயாகின் மூன்றிரண்டு காற்றும் பரமொன்று, வேயாரூர் தோளி விளம்பு" என்பதனால் மண் ஐந்து பயனுடைத்து; நீர் நான்குபயனுடைத்து; தீ மூன்றுபயனுடைத்து; காற்று இரண்டுபயனுடைத்து; வான் ஒருபயனுடைத்து; ஆதலால் இவை ஒன்றோடொன்று கூடுவனவல்லவாகவும் இவற்றின் கூட்டமுடம்பென்றீராதலால் இவ்வைந்தின்கூட்டம் உடம்பாவது எவ்வாறோவெனின்,—இதற்குவிடை, "மெய்வாய்கண் மூக்குச் செவியெனப் பேர்பெற்ற, வைவாயு மாயவற்றின் மீதடுத்துத் - துய்ய, சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தா, மவை முதற் புற்கலமாம்" என்பது. இது பூதங்கள் பரிணமித்து உடம்பாமாறு கூறுகின்றது:—

பூதங்களைந்தும் தத்தம் தன்மைநீங்கி மண் உடம்பாயும், நீர் வாயாயும்; தீக் கண்ணாயும், காற்று மூக்காயும், ஆகாயம் செவியாயும் நின்று உடம்பாம்.

---

(பி - ம்.) * 'சிதலின'

## ௩.—அரங்கேற்றுகாதை.

௫௦௩.

பொறிகடோறும் விநியோகப்பட்ட புலன் சுவைமுதல் ஐந்துவகைப்படும். இவ்வைந்தும் பொறியைந்தினுமேறி, மண்ணால் உடம்பு ஊறாயும், நீரால் வாய் சுவையாயும், தீயாற் கண் ஒளியாயும், காற்றால் மூக்கு நாற்றமாயும், வானாற் செவி ஓசையாயும்வந்து உடம்பாம். அன்றியும் மண்ணின்பகுதி நரம்பு இறைச்சி என்பு மயிர் தோலென வைந்து . நீரின் பகுதி நீர் மூளை சுக்கிலம் நிணம்

உதிரமெனவைத்து.

"பசிசோம்பு மைதுனங் காட்சிநீர் வேட்கை, தெசிநின்ற தீக்குணமோ ரைந்து - மொசிநின்ற, போக்கு வரவுநோய் கும்பித்தன் மெய்ப்பரிசம், வாக் குடைய காற்றின் வகை" என்பது தீயின் குணமும் காலின் குணமுமுணர்த்து கின்றது; ஆவன: பசி சோம்பு மைதுனம் காட்சி நீர்வேட்கையெனவிவை தீக்குணம். போக்கு வரவு நோய் கும்பித்தல் பரிசமெனவிவை காற்றின் குணம்.

"ஒங்கும் வெகுளி மதமான மாங்கார, நீங்கா வுலோபமுட னிவ்வைந் தும் - பாங்காய், வண்ண முலோபடவாய் வான கத்தின் கூறென்று, றெண்ணி மிக நா ளுணர்ந்தோ ரெண்." இஃது ஆகா த்தின் குணமுணர்த்துகின்றது;
ஆவன: வெகுளி மதம் மானம் ஆங்காரம் உலோபமெனவிவை.
இருபத்தைந்துங் கொண்டு உடம்பாம்.

இப்பூதகுணம்

"ஒப்பார் பிராண னபான னுதானனுடன், றப்பா வியானன் சமான
னே - யிப்பாது, நாகன் றனஞ்சயன் கூர்மன் கிருகரன், றீதிலாத் தேவதத்த னே" என்பது தசவாயுக்களையுமுணர்த்துகின்றது; ஆவன:—பிராணன் அபா னன் உதானன் வியானன் சமானன் நாகன் கூர்மன் கிருகரன் தேவதத்தன் தனஞ்செயனெனவிவை.

"இடைபிங் கலைசுழுனை காந்தாரி யத்தி, புடைநின்ற சிங்குவை சங்கினி
பூடாவோ, டங்குகு கன்னி யலம்புடை யென்றுரைத்தார், தங்குதச நாடிக டாம்." தசநாடிகளாவன:—இடை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, அத்தி, சிங்குவை, சங்கினி, பூடா, குகு, கன்னி, அலம்புடை எனவிவை;

"பூத வகைகளோ ரைந்தாய்ப் பொறியையந்தாய், வாதனையோ ரையைந்
தாய் மாருதமு-மேதகுசேர்ப், பத்தாகு நாடிகளும் பத்தாகும் பாரிடத்தே, முத்திக்கு வித்தா முடம்பு" என்பது பூதபரிணமமுணர்த்துகின்றது:—பூதங்களைந்தாவன:—மண் முதலாயின; பொறியைந்தாவன:—செவிமுதலாயின; புலனைந்தாவன:—சத்தமுதலாயின; வாதனையையைந்தாவன:—நரம்புமுதலிய ஐந்தும், நீர்முதலிய ஐந்தும், பசிமுதலிய ஐந்தும், போக்குமுதலிய ஐந்தும், வெகுளிமுதலிய ஐந்தும். தசவாயுக்களாவன:—பிராணன்முதலியபத்தும். தசநாடிகளாவன:—இடை பிங்கலைமுதலிய பத்தும். மூலாதாரத்து எழுபத்தீராயிரநாடிகளும் பீர்க்கங்கூட்டின் மூன்றுகண்ணும் போல இடை பிங்கலை சுழுமுனையென்னும் மூன்றுநாடிகளுமாய் நடுநின்ற சுழுமுனையொழிய இரண்டானும் மேனோக்கியேறி இரண்டுமூக்கானும் ஒரோர் பரிசத்து ஐந்து நாழிகையாகக் கொண்டு ஒருமாத்திரையில் நூற்றிருபத்தைந்து சுவாதமாய் ஒருசுவா



தத்திலே பன்னிரண்டங்குலியளவு புறப்பட்டு நாலங்குலி தேய்ந்து எண் விரலடங்குகின்றது பிராணவாயுவெனக்கொள்க.

மாத்திரையாவது:—இரண்டரை நாழிகையை * எட்டுக்கூறிட்டு ஒன்றென்றறிக.

ஒருகூ

அபானவாயு மலமூத்திரங்களைப் பெய்விக்கும். உதானன் கண்டத்தானத்தில் நிற்கும். வியானவாயு போக்குவரவு செய்து இயங்கப்பண்ணும். சமானவாயு அறுவகைச்சுவையையும் அன்னத்தையும் பிரித்து எழுவகைத் தாதுவின் கண்ணும் கலப்பிக்கும். கூர்மன் இமைப்பும் விழிப்பும் உறக்கமும் உணர்ச்சியும் பண்ணும்.

பிறப்பிடமாயுள்ள ஆதாரமுணர்

சரீரத்தளவு தன்கையால் தொண்ணூற்றாறங்குலம்; இதனுள் மேலே நாற்பத்தேழரையங்குலமு ம் கீழே

நாற்பத்தேழரையங்குலமும்விட்டு நடுவின்ற ஓரங்குலம் மூலாதாரம்.
நியங்குமெனக்கொள்க.
இதன்மேலே நால்விரல்விட்டுப் பின்னுதாரின்

"ஆதாரம் பற்றியசைவ முதலெழுத்து, மூதார்ந்த மெய்யெழுத்து முன் கொண்டு - போதாரு, மூர்த்தி யிடைவளியா யோங்குமிடை பிங்கலையால், வந்து மே வோசையாம் வைப்பு", "ஐவகைப் பூதமு மாய சரீரத்து, மெய்பெற

(பி - ம்.) ''இருபத்தெட்டு'

# ௬.—அரங்கேற்றுகாதை.

கூடு

நின்றியங்கு மெய்யெழுத்தாற் - றுய்ப, வொருநாடி நின்றியங்கி லோங்கி, வருமா லெழுத்துடம்பின் வந்து."

யுக்திமே

இனி ஆளத்தியாமாறுணர்த்துகின்றது:—"மகரத்தி னொற்றும் அருகி விர

வுர், பகரும் குறிநெடில்பா ரித்து-நிகரிலாத், தென்னு தெனுவென் று பாடுவரே ளாளத்தி, மன்னுவிச் சொல்லின் வகை." முதலிற்பாடுமிடத்து மகரத்தினொற் றலே நாதத்தை உச்சரிக்குமரபு பகரிற் பாரித்து முற்கூறிய நாதத்தினைத் தொழில்செய்யுமிடத்துக் குற்றெழுத்தாலும்
நெட்டெழுத்தாலுஞ்செய்யப்படும்.

அவை அச்சு பாரணையென்று பெயர்பெறும். அச்சுக்கு எழுவாய் குற்றெழுத்து. பாரணைக்கு எழுவாய் நெட்டெழுத்து. அச்சு பாரணை கூத்துடனிகழும்.

தாளத்துடனிகழும்.

ஆளத்திசெய்யுமிடத்துத் தென்னாவென்றும் தெனாவென்றும் இரண்டசையுங்கூட்டித் தென்னாதெனாவென்றும் பாடப்படும். இவைதாம் காட்டாளத்தி, நிறவாளத்தி, பண்ணாளத்தியென மூன்றுவகைப்படும்.

மற்

இவற்றுட் காட்டாளத்தி அச்சுடனிகழும். நிறவாளத்தி நிறங்குலையா பாரணையுடனிகழும். பண்ணாளத்தி பண்ணையே கருதி வைக்கப்படும்

"குன்றாக் குறிலைந்துங் கோடா நெடிலைந்து, நின்றார்ந்த மங்கரந் தவ்வொடு - நன்றாக, நீளத்தா லேழு நிதானத்தா லின்றியங்க, வாளத்தி யாமென்றி" என்பது ஆளத்திக்கு இன்னும்படிவதோரிலக்கணமுணர்த்துகின்றது:— குன்றாக்குறிலைந்துங் கோடாநெடிலைந்துமென்றது குற்றெழுத்தாலும் நெட்டெழுத்தாலும் ஆளத்திசெய்யப்படும் எ - று. குற்றெழுத்தைந்தாவன:— அ இ உ எ ஒ; நெட்டெழுத்தைந்தாவன:—ஆ ஈ ஊ ஏ ஓ எனவிவை. நின்றார்ந்தவென்றது - மெய்யெழுத்தாகிய பதினெட்டெழுத்தினுள்ளும் மவ்வும் நவ்வும் தவ்வுமென மூன்றெழுத்துமல்லா மற்றையெழுத்துக்கள் ஆளத்திக்கு வரப்பெறா எ - று. இம்மூவகைமெய்யினுள்ளும் மவ்வினம் சுத்தத்திற்குரித்து; நவ்வினம் சாளரத்திற்குரித்து; தவ்வினம் தமிழ்க்குரித்து; விரவவும்பெறும்.

இங்ஙனம் மூலாதாரந்தொடங்கிய எழுத்தினுதம் ஆளத்தியாய்ப் பின் இசையென்றும் பண்ணென்றும் பெயராம்; என்னை ? "பாவோடணைத விசை யென்றார் பண்ணென் றார், மேவார் பெருந்தானமெட்டானும் - பாவா, யெடுத் தன் முதலா விருநான்கும் பண்ணிப், படுத்தமையாற் பண்ணென்று பார்." பல இயற்பாக்களுடனே நிறத்தை

இசைத்தலால் இசையென்றுபெயராம்.

பெருந்தானமெட்டினும் கிரியைகளெட்டானும் பண்ணென்று பெயராயிற்று.

பண்ணிப்படுத்தலாற்

பெருந்தானமெட்டாவன: நெஞ்சும் மிடறும் நாக்கும் மூக்கும் கும் உதடும் பல்லும் தலையுமெனவிவை.

அன்றுக்

கிரியைகளெட்டாவன:—எடுத்தல் படுத்தல் நலிதல் ஒலி உருட்டு தாக்கு எனவிவை.
கம்பிதம் குடிலம்

இங்ஙனம்பிறந்து பண்ணப்படும் பண்ணும் இசையுமாகிய இவற்றைப் பயக்கும் மிடறு, ஆகுபெயரான் மிடற்றுப்பாடற்காயிற்று.

கச

## சிலப்பதிகாரம்

உஎ. தாழ்குரற் றண்ணுமையென்றது - தாழ்ந்த குரலினையுடைய தண்ணுமைக்கருவிமுதலாயின வாசித்தலுமெனக.

அவையான:—பேரிகை, படகம், இடக்கை, உடுக்கை, மத்தளம், சல்லிகை
கரடிகை, திமிலை, குடமுழா, தக்கை, கணப்பறை, தமருகம், தண்ணுமை,
தடாரி, அந்தரி, முழவு, சந்திரவளையம், மொந்தை, முரசு, கண்விடு

தூம்பு,
நிசாளம், துடுமை, சிறுபறை, அடக்கம், தகுணிச்சம், விரலேறு,
பாகம்,
உபாங்கம், நாழிகைப்பறை, துடி, பெரும்பறையென்த்
தோலாற்செய்யப்பட்ட கருவிகள்.

என்னை ? "பேரிகை படக மிடக்கை யுடுக்கை, சீர்மிகு மத்தளஞ் சல்லிகை கரடிகை, திமில குடமுழாத் தக்கை கணப்பறை, தமருகந் தண்ணுமை தாவி டடாரி, யந்தரி முழவொடு சந்திர வளைய, மொந்தை முரசே கண்விடு தூம்பு, நிசாளந் துடுமை சிறுபறை யடக்க, மாசி றகுணிச்சம் விரலேறு பாகந், தொக்க வுபாங்கந் துடிபெரும் பறையென, மிக்க நூலோர் விரித்துரைத் தனரே" என்றாராகலின்

இவை அகமுழவு அகப்புறமுழவு புறமுழவு புறப்புறமுழவு * முழவு நாண்முழவு காலைமுழவென எழுவகைப்படும்.

பண்ணமை

அவற்றுள் அகமுழவாவன :—முன்சொன்ன * உத்தமமான மத்தளம் சல்லிகை இடக்கை கரடிகை பேரிகை படகம் குடமுழா வெனவிவை.

அகப்புறமுழவாவன:— முன்சொன்ன மத்திமமான தண்ணுமை தக்கை தகுணிச்சமுதலாயின.

புறமுழவான:— முன்சொன்ன அதமக்கருவியான கணப்பறைமுதலாயின.

புறப்புறமுழவாவன:—முற்கூறப்படாத நெய்தற்பறைமுதலாயின.

பண்ணமைமுழவாவன :—முன்சொன்ன வீரமுழவுநான்கும். அவையாவன:— முரசு நிசாளம் துடுமை திமிலையெனவிவை.

நான்முழவாவன:—நாட்பறை; ஆவது நாழிகைப்பறை.

காலைமுழவாவன மூன் துடியென்றது.

இனி இவற்றுள், மத்தளம்:—மத்து ஓசைப்பெயர்; இசையிடனுகிய கருவிகட்கெல்லாம் தளமாதலான் மத்தளமென்று பெயராயிற்று.

இக்கருவி பலகூத்துக்களுக்கு உரித்தாகாலானும் பாடலெழுத்தான் உள்ளே பிறத்தலானும் முழவுகளெல்லாம் இதனுள்ளே பிறத்தலானும் இதனை † நான் முகனென்பர்.

சல்லிகையென்றது - சல்லென்ற ஓசையையுடைத்தாதலாற் பெயர்.

பெற்ற

---

[1] முன்புகூறிய நாழிகைப்பறை இவ்விடத்துக்கூறப்பட்டிலது.

[2] "தரித்த மதங்க மோமெ மத்தளஞ் சல்லி, பொருத்த கரடிகையே பேரி - புர்த்த, படகங் குடமுழவம் பாங்காய வேமு, மடைவே முதற்கருவி யாம்" என்பது சுத்தானந்தப்பிரகாசம். (பி - ம்.) * 'டன்மைமுழவு', † 'நான்முகனுமென்றவாறு'

# ௩—அரங்கேற்றுகாதை.

௧௦௭

ஆவஞ்சியெனினும் குடுக்கையெனினும் இடக்கையெனினுமொக்கும்; அதற்கு ஆவினுடைய வஞ்சித்தோலைப் போர்த்தலால் ஆவஞ்சியென்று பெயராயிற்று; குடுக்கையாகவுடைத்தலாற் குடுக்கையென்றுபெயராயிற்று ; வினைக்கிரியைகள் இடக்கையாற்செய்தலின் இடக்கையென்றுபெயராயிற்று.

கரடி கத்தினாற்போலும் ஓசையையுடைத்தலாற் கரடிகையென்று பெயராயிற்று.

பிறவற்றையும் இன்னணம் உய்த்துணர்ந்துகொள்க.

இவற்றுள் முதலிற் கூறங்கொள்வது மத்தளமாதலின்

முதற்கருவியாயிற்று.

இடைக்கருவி கல்வி; இடைகொளவைத்ததாகலின்.

கடைக்கருவி உடுக்கை; கடைக்கட்டுக்கு உரித்தாகலின்.

இன்னனமாகிய கருவிகட்கெல்லாம் முதலாகலின் கண்ணுமைமயான் றனையுமே கூறினர்.

௨எ. ஆடலொடென்றது - அகக்கூத்துப் புறக்கூத்துப் பென்று சொல்லப்படாநின்ற ஆடலுடனே எ - று.

பதினோராட

ஒடு, உடனிகழ்ச்சி; "ஒடுவென் கிளவி யுடனிகழ் வாகும்" கலின்.

என்றாரா

இச்சொல்லப்பட்டவற்றுடனே யென்றவாறு

௨எ - அ. இவற்றி னிசைந்த.........படுத்தென்றது - இச்சொல்லப்பட்ட கூத்துக்களுக்குச் சேரச்செய்த உருக்களை இசைகொள்ளும்படியும் சுவைபொருந்தும்படியும் புணர்க்கவல்லனாகி எ - று.

௨௯. வரிக்கும் ஆடற்கும் உரிப்பொருளியக்கியென்றது - செந்துறை வெண்டுறை என்னப்படாநின்ற இருவகைப்பாடல்களுக்கும் உரிமைப்பொருளாயமைந்த இயக்கம் நான்கினையுமமைத்தென்றவாறு.

௩0. தேசிகத்திருவின் ஓசை கடைப்பிடித்தென்றது - இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொலென்றுசொல்லப்பட்ட சொற்கள் இசைபூணும் படியைக் கடைப்பிடித்தறிந்தென்றவாறு.

௩௧ - ௨. தேசிகத் திருவின்............அறிவினனாகி யென்றது-இச்சொற்களிற் புணர்ப்புண்ட இசைவேறுபாடுகளையெல்லாம் குற்றந்தீர உணரவல்ல அறிவினையுடையனாகி எ - று.

௱௲ .

கவியது குறிப்புமென்றது - இயற்புலவனினைந்த கோட்பாடுமென்க.

ஆடற்றொகுதியுமென்றது - ஆடலாசிரியனிடும் மேல்வரவுகளின் தியும் எ - று.

தொகு ௲௪. பகுதிப்பாடலுமென்றது - இவற்றின்பகுதிக்கு மென்றவாறு.

அமைந்த பாடலு

கொளுத்தங் காலையென்றது - இக்கூத்துக்களை ஆசிரியன் பாடலுள்ளிட்டவற்றுக்கும் சேரவியற்றுமிடத்தென்றவாறு.

குறிப்புக்கும்



௲ஓ - ௬. வசையறுகேள்வி..............இசையோன்றானுமென்றது - இச் சொல்லப்பட்டவற்றைக் குற்றந்தீர்ந்த நல்வழக்காலே வகுக்கவும் விரிக்கவும் வல்ல பாடலாசிரியனுமென்க.

இசையுடன்படுத்து இயக்கிக் கடைப்பிடித்து உணர்ந்த விரிக்கும் இசையோனென்க.

அறிவினனாகி

[கவிஞன் அமைதி.]

௲எ - ௪௪. இமிழ்கடல்..............கன்னூற்புலவனும்

௲எ - அ.

இமிழ்கடல்..............தன்மையனாகியென்றது - ஆரவாரத்தை யுடைய கடல்சூழ்ந்தநிலத்திலே வடக்கும் தெற்கும் குடக்கும் குணக்கும் வேங் கடம் குமரி தீம்புனற்பௌவமெனத் தமிழ்நாட்டிற்கு எல்லைகூறப்பட்ட

தமிழ்த் தேசத்தாரதிய மூன்றுதமிழும் போமென்னுந் தன்மையையுடையனுகி எ - று.

௬௬ - ௪0. வேத்தியல்..............பிடித்தென்றது - வேத்தியலென்றும் பொதுவியலென்றுங் கூறப்பட்ட இரண்டுகூறுபாட்டினையுடைய நாடகநூலை நன்முகக் கடைப்பிடித்து எ - று.

வேத்தியல் அகம், பொதுவியல் புறமென்பாரும், அவை முடிந்தநூல்களிற் கண்டுகொள்க.

பிறிதுகூறுவாருமுளர்.

௪௧ - ௨. இசையோன்..................அதுபட புலவன் ஆளத்திவைத்த பண்ணீர்மையை முதலும்

வைத்தென்றது - இசைப் முறையும் முடிவும் நிறை யும் குறையும் கிழமையும் வலிவும் மெலிவும் சமனும் வரையறையும் நீர்மையு மென்னும் பதினெருபாகுபாட்டினுமறிந்து அறிந்தவண்ணம் அவன்தாள நிலையில் எய்தவைத்த நிறம் தன்கவியினிடத்தே தோன்றவைக்கவல்லனுய் எ - று.

௪௫ - ௪. மாற்ருேர் செய்த......................நன்னூற் பகைவராற்செய்யப்பட்ட வசையின் அளவறிந்து புலவனுமென்றது - வசையின்மொழிகளான் நாடகக்கவி செய்யவல்ல

அவை தோற்றுதபடியிலே நல்ல நூலைவல்ல புலவ னும எ - று.

“இன்ன னல்லோன் செய்குவ னுயிற், றேற்று மாந்த ராரியம்

போலக், கேட்டார்க் கெல்லாம் பெருநகை தருமே" என்றார்.

தன்மையனுக் கடைப்பிடித்து உணர்ந்து வைத்து அறிந்து ளாத புலவனுமென்க.

தொலைவில் [தண்ணுமையோன் அமை தி.]

## ௪௫ - ௫௫. ஆடல் பாடலிசையே........முதல்வனும்

(இ - ள்.) எல்லாக்கூத்துக்களும் எல்லாப்பாட்டுக்களும் எல்லாஇசைகளும் வடவெழுத்தொரீஇ வந்த எழுத்தானே கட்டப்பட்ட வர்க்கியக்கட்டளைக்

கூறுபாடுகளும் எல்லாப்பண்களும் இருவகைத்தாளங்களும் எழுவகைத்தூக்குகளும் இவற்றின்குற்றங்களும் இயற்சொல்முதலிய நால்வகைச்சொற்களு

## ௩.—அரங்கேற்றுகாதை. ௬0௯

மென்று சொல்லப்பட்டனவற்றை நன்னிதாக உணர்ந்து ஒரோருருவை இரட்டிக்கிரட்டி சேர்த்துவிடத்து நெகிழாதபடி நிரம்பநிறுத்தவும் அவ்விடத்துப் பெறும் * இரட்டியைப் பாகவுருவானவழி நிற்குமானநிறுத்திக்

கழியு

மானங்கழிக்கவும் வல்லனாய் இப்படி நிகழ்ந்த உருக்களில். யாழ்ப்பாடலும் குழலின்பாடலும் கண்டப்பாடலும் இயைந்து நடக்கின்றபடி கேட்போர் செவிக்கொள்ள அமைந்த கரணத்தாற் குறியறிந்து சேரவாசித்து மற்றைக் கருவிகளிற் குறைநிரப்புதலும் மிகுதியடக்குதலும் ஆக்குமிடத்தும் அடக்குமிடத்தும் இசையில் இரந்திரந்தோன்றுதபடியே செய்தலும் செய்யுமிடத்துக் கைத்தொழில் அழகுபெறச் செய்துகாட்டலும் வல்லனாய் அழகுதக்க தண்ணுமைக் கருவியினையும் அரிய தொழிலினையுமுடைய ஆசிரியனுமென்றவாறு.

இது பொழிப்புரை.

சூ. ஆடலென்றது - எல்லாக்கூத்துக்களும் எ - று.

பாடலென்றது - பண்ணன்முதலிய எல்லாப்பாடலியல்பும் எ - று.

இசையென்றது - நரப்படைவாலுரைக்கப்பட்ட பதினோராயிரத்தொள்ளாயிரத்தொண்ணூற்றொன்றாகிய ஆதியிசைகளும் எ - று.

அவையாவன:—"உயிருயிர் மெய்யள வுரைத்தவைம் பாலினு, முடறமி ழியலிசை யேழுடன் பகுத்து, மூவேழ் பெய்த............,தொண்டு மீண்ட பன்னீ ராயிரங், கொண்டன ரியற்றல் கொள்ளவல்லோர் கடனே" என்னும் சூத்திரத்தானுறழ்ந்து கண்டுகொள்க.

தமிழென்றது - வடவெழுத்தொரீஇ வந்த எழுத்தானே உறழ்ந்து கட்டப்பட்ட வாக்கியக்கூறுகளும், இயலிசைநாடகமென்று சொல்லப்பட்ட மூவகைத் தமிழ்களும் எ - று.

சகூ. பண்ணென்றது - நரப்படைவால் பிறந்தோன்றப் பண்ணப்பட நின்ற பண்ணும் பண்ணியற்றிறமும் திறமும் திறத்திறமும் எ - று.

பாணி யென்றது - இருவகைத்தாள விகற்பங்களும் எ - று.

தூக்கென்றது - செந்தூக்கு முதலாய ஏழு தூக்குக்களும் எ - று.

முடமென்றது - இவற்றின் குற்றங்களும் எ - று.

சஎ. தேசிகமென்றது - இயற்சொன்முதலிய நான்குசொற்கூறிய சொற்பிரயோகமும் எ - று.

என்றிவையாசிலுணர்ந்தென்றது - என்றுசொல்லப்பட்ட ஒன்பதும் இலக்கணவழியே நன்னிதாக அறிந்து எ - று.

ஆச - சிறுமை.

ஆகின்றென்பது பாடமாயிற் குற்றமின்றிபுணர்ந்தென்க; என்னை? [1] "ஆசே சிறுமையுங் குற்றமு மாகும்" என்றாராகலின். இன்றியென்றது இன்றுயிற்று; செய்யுளாதலின்.

[1] திவாகரம்.

(பி - ம்.) * 'இரட்டிபேயாப்பாவரு', 'இரட்டிகை ஒப்பாக'



சஅ - க. கூடை நிலத்தை.........வாங்கியென்றது - ஒருவரை இரட்டிக் கிரட்டி சேர்க்கவிடத்து நெகிழாதபடி நிரம்பநிறுத்தவும் அவ்விடத்துப் பெறும் இரட்டியைப் பாக உருவானவழி நிற்குமானம் நிறுத்திக் கழியுமானம் கழிக்க
வும் வல்லனாய் எ - று.

ருo - ருஉ. வாங்கிய வாரத்து.........சேர்த்தியென்றது - இப்படி நிகழ்ந்த
உருக்களில் யாழ்ப்பாடலும் குழலிசையும் கண்டப்பாடலும் இயைந்து நடக்
கின்றபடி கேட்போர் செவிக்கொள்ளத்
தன்னுமைக்கருவியமைந்தகரணத்தாற்
குறியறிந்து சேரவாசித்து எ - று.

ருங. ஆக்கலாவது - மற்றைக்கருவிகளிற் குறையைநிரப்புதல்.

அடக்கலாவது - மற்றைக்கருவிகளின் மிகுதியை அடக்குதல்.

மீத்திறம் படாமையாவது - ஆக்குமிடத்தும் அடக்குமிடத்தும் இரந்திரம்
தெரியாமற் செய்வதென்க.

ருச. சித்திரக்.........செலுத்துமென்றது - இவ்வினைத்தும் செய்யுமிடத்

துக் கைத்தொழில் அழகுபெறச்செய்து காட்டும் எ - று.

ருரு. அத்தகு.........முதல்வனுமென்றது - இச்சொல்லப்பட்ட கூறு களில் ஒன்றும் குறைவின்றியேயிருக்கும் தண்ணுமைக்கருவியாசிரியனும் எ-று. உணர்ந்து மிகுத்து வாங்கிச் சேர்த்திச் செலுத்தும் தண்ணுமைமுதல்வனு மென்க.

[குழலோன் அமைதி.]

ருசு - சுகூ

சொல்லியவியல்பிற்...................குழலோன்றானும்

ருசு. சொல்லியவியல்பினென்றது - நூல்களிற்சொன்ன முறைமையாலேயென்க.

ருசு - எ. சித்திர வஞ்சனை......அறிந்தென்றது - சித்திரப்புணர்ப்பும் வஞ்சனைப்புணர்ப்புமென்று சொல்லப்பட்ட இரண்டுகூற்றினையுமறிந்தென்க.

இவற்றுட் சித்திரப்புணர்ப்பாவது:—இசைகொள்ளும் எழுத்துக்களின் மேலே வல்லொற்றுவந்தவழி மெல்லொற்றுப்போலப் பண்ணீர்மைநிறுத்தல்.

வஞ்சனைப்புணர்ப்பாவது :—இசைகொள்ளாவெழுத்துக்களின்மேலே வல்லொற்று வந்தவழி மெல்லொற்றுப்போல நெகிழ்த்துப்புணர்த்தல்.

ருஎ. புணர்ப்போன்பண்பினென்றது - பாடலாசிரியனையொத்த அறிவினையுடையனுகியென்க.

ரு௪. வர்த்தனை...............பெய்தாங்கென்றது - வக்கியத்து விரலூர்ந்து தக் ஜிலகள் தர்ச்சனி முதலாக விட்டுப்பிடிப்பது ஆரோகணமாதலானும் கனிட்டன்முதலாக விட்டுப்பிடிப்பது அவரோகணமாதலானும் இரண்டு கூறும் இப்படிச்செய்தல் வர்த்தனையாகலான் இப்படியால் [1] நாற்றுமூன்று பண்ணீர்மைகளையும் தர்க்கிலகுலேயாமற் காட்டவல்லனுயென்க.

---

[1] இப்புத்தகம் ககூ - ஆம் பக்கம் பார்க்க.

## ௩.—அரங்கேற்றுகாதை.

ககக

தர்ச்சனி - சுட்டுவிரல். கனிட்டன் - சிறுவிரல் ஆங்கு - அவ்விடத்து.

ருக - கூ0. எத்திய

குரலினி.........................உணர்வினனுயென்றது - பதினுற்கோவையினிடத்துக் குரன ரம்பு இரட்டிக்கவரும் அரும்பாலையையும், இளிகரம்பு இரட்டிக்கவரும் மேற்செம்பாலையையும், இவைபோல அல்லாத பாலைகளையும் இசைநூல்வழக்காலே இணைநரம்புதொடுத்துப்பாடும் அறிவினையு முடையனுயென்க.

கூக. பண்ணமை...............அறிந்தென்றது - கண்ணெறியினையறிந்தென்றவாறு.

பண்ணுதலைமைந்தமுழவின்

கூ௨. தண்ணுமை...............பொருந்தியென்றது - தண்ணுமை முதல்வனுடன் பொருந்தியென்றவாறு.

தன்னெடுமென்ற உம்மையாற் பொருந்துமிடமும் பொருந்தியென்க.

௬௩. வண்ணப் பட்டடை யாழ்மேல் வைத்தாங்கென்றது.. ......
.....

பட்டடை - நரம்புகளில் இளிக்குப் பெயர் ; என்னை ? எல்லாப்பண்ணிற் கும் அடிமணையாதலின். வண்ணம் - நிறம். இதனை யாழ்மேல்வைத்தென்க. ஆங்கு, அசை. இளிக்கிரமத்தாலே பண்களை யாழ்மேல் வைத்தெனக்கூட்டிநுமையும்.

௬௪. இசையோன் ..................இயற்கையென்றது - அங்ஙனம்வைத்து அதன்வழியே இசைக்கா ர ன்பாடிய பாட்டினியல்பையென்க.

௬௫. வந்தது வளர்த்தென்றது - பாடுகின்ற பண்வரவுகளுக்குச் சுரம் குறைவுபடாமை நிறுத்தியென்க.

வருவதொற்றியென்றது - அந்தப்பண்ணுக்கு அயல்விரவாமல் நோக்கி யென்க.

ஒற்றல் - நினைதல்.

௬௬. இன்புற-வியக்கியென்றது - வண்ணமுதலாகக் காட்டப்பட்ட பாட லில் இயன்ற * அழகெல்லாம் நிரம்பக்காட்டியென்க.

இசைபட வைத்தென்றது - முற்கூறிய முதலும் ணிலக்கணம் பதினொன் றையும் நிரம்பவைத்தென்க.

முறையுமுதலாய பண்

௬௭. வார........வளர்த்தென்றது - முதனடை வாரம் கூடை திரளென்று சொல்லப்படும் இயக்கான்கினும் முதனடை மிகவும் தாழ்ந்தசெலவினை உடைத்தாகலானும், திரள் மிக முடுகிய நடையினை உடைத்தாகலானும், இவைதவிர்ந்து இடைப்பட்ட வாரப்பாடல் சொல்லொழுக்கமும் இசையொழுக்கமுமுடைத்தாகலானும், கூடைப்பாடல் சொற்செறிவும் இசைச்செறிவுமுடைத்தாகலானும் சிறப்புநோக்கி அவ்விரண்டினுள்ளும் வாரப்பாடலை அளவுநிரம்ப நிறுத்த வல்லனுயென்க; எனவே கூடைப்பாடலும் அமைவதாயிற்று.

நிலம் - இடம்.

---

(பி-ம்.) * 'வழக்கெல்லாம்'



௬௮ - அ. ஆங்கு..................எழுத்தாகவென்றது - பாடலிலிட்டுச் சொன்னீர்மைகளின் எழுத்துக்கள் சிதையாமலே எழுத்தெழுத்தாக இசைக்குங் குழலோனென்க.

அன்றியும் ச ரி க ம ப த நி யென்பாருமுளர்.

௬௯. வழுவின்றிசைக்குங் குழலோன்றானுமென்றது - இச்சொல்லப்பட்ட இயல்புகளை இலக்கணப்படியில் வழுவாமல் வாசித்துக்காட்டவல்லனாமென்க.

வங்கியப்

அறிந்து மயலறப்பெய்து உணர்வினனாகி அறிந்து பொருந்தி வைத்து வளர்த்து ஒற்றி இயக்கி வைத்துப் பார்த்து இசைக்குங்குழலோனென்க.

## ௭0 - ௯௯. ஈரேழ் தொடுத்த..................புலமையோனுடன்

௭0 - ௭௧. ஈரேழ் தொடுத்த.......................வேண்டியென்றது - ஆயப் பாலையாய்நின்ற பதினாற்கோவை, கோலினிது செப்பமுடைத்தாய்ப் பெண்டிர்க்குரிய தானமுடைய பாடலியல்பொத்தமைந்த சிறப்புடைத்தாகலான் இதிலே செம்பாலை படுமலைப்பாலை செவ்வழிப்பாலை அரும்பாலை [1] கோடிப்பாலை விளரிப்பாலை மேற்செம்பாலையெனப்பட்ட எழுபாலையினையும் இணைநரம்புதொடுத்து நிரம்ப நிறுத்திக் காட்டல்காரணமாகவென்க.

௭௨ - ௮. வன்மையிற் கிடந்த.......................சேரவென்றது

"தாரபாகமுங் குரலின் பாகமு, நேர்படு வண்கிளை கொள்ள நிற்ப, முன்னர்ப் பாகமும் பின்னர்ப் பாகமும், விளரிக்கு லாகு மென்மனார் புலவர்" என்னுஞ்சூத்திரத்தின்விதிபற்றி வட்டப்பாலையின்முடிவுதானமாய் வலிந்தநிலைமையினையுடையதாரம்பெற்ற இரண்டலகில் ஓரலகையும் இப்பாலையின் முதல்தானமாய்மெலிவினிற்கும் குரல்நரம்பு பெற்ற நாலலகில் இரண்டலகையும் தாரநரம்பில் அந்தரக்கோலிலே கைக்கிளையாகநிறுத்தத் தாரந்தான் கைக்கிளையாயிற்று. அந்த நரம்பில் ஒழிந்த ஓரலகையும் பண்டை விளரியிலேகூட்ட அவ்விளரி தத்த நரம்பாயிற்று. இப்படிப் பன்னிருகாற்றிரிக்கப் பன்னிருபாலையும் பிறக்கும்.

பன்னிருபாலையினுரு தொண்ணூற்றொன்றும் பன்னிரண்டுமாய்ப் பண்கள் [1] நூற்றுமூன்றாதற்குக் காரணமாமெனக்கொள்க.

இவ்விடத்துத் தாரநரம்பின் அந்தரக்கோலைத் தாரமென்றார்; மூர் தாரமுந் தன்வழிப் படா" என்னுஞ்சூத்திரத்தாலெனக்கொள்க.

"தன்ன

எக. ஏனை.........வழிச் சேரவென்றது - இதனைப் பெண்டிர்க்குரியதான மாகிய பதினொற்கோவையிலே பொருந்தக்கூட்டவேண்டுமென்றவாறு.

கூட்டும்படி:—

[1] இதனை இக்காலத்துக்கொடிப்பாலையென வழங்குமென்றனர்.

[2] இப்புத்தகம் கசo - ஆம் பக்கம் பார்க்க.

## ரு.— அரங்கேற்றுகாதை.

கககூ

அo - அக.

மேலது..........................செம்பாலையாயதென்றது - உழை முதற் கைக்கிளை இறுதியாக மெலிவுநான்கும் சமம் ஏழும் வலிவு மூன்றுமாய் உழைமுதலாகச் செம்பாலையாயதென்க.

அஉ - ரு. இறுதி யாதி..........................ரீங்காதென்றது - ளாகப் பெறுமுறையாய்வந்தபடியே ரீங்காரமெலன்றவாறு.

தாரமுத

அச - ௫. படுமலை..........................திரிந்தபினென்றது - கைக்கிளைகுர லாகப் படுமலைப்பாலையும், துத்தம் குரலாகச்செவ்வழிப்பாலையும், குரல்குரலாக அரும்பாலையும் தற்கிழமை திரிந்தபினென்க.

அரும்பாலைக்குக் குரல் நரம்பு இரட்டித்தபெற்றித்தென்க.

அகூ - கூ. முன்னதன்..........................இடக்கையினென்றது - மூன்பிற் படிய தாரம் குரலாகக் கோடிப்பாலையும், விளரி குரளாக விளரிப்பாலையும், இளி குரலாக மேற்செம்பாலையுமாய்.

மேற்செம்பாலை இளிகாம்பிரட்டித்த நிலைமையினையுடைத்தாய் இப்படிச்சமைந்த பதினாற்கோவைப்பாலை நிலையினென் றவாறு.

கூ0

இணைநரம்பு..............கொண்டாங்கென் றது - இப்பதினாற்கோவைப் பாலைநிலையினும் பண்ணின் றநிலையினுமிரட்டித்த குரல்குரலாகிய அரும்பாலையும் இளிகுரலாகிய மேற்செம்பாலையும்போல் துல்லாதன ஐந்துபாலையும் உழைகுரலாகச் செம்பாலைக்கு உழைபெய்தும் கைக்கிளை குரலாகப் படுமலைக்குக் கைக்கிளைபெய்தும் துத்தம் குரலாகச் செவ்வழிக்குத் துத்தம்பெய்தும் தாரம் குரலாகக் கோடிப்பாலைக்குத் தாரம்பெய்தும் விளரி குரலாக விளரிப்பாலைக்கு விளரி பெய்தும் பாடப்படுமென் றவாறு.

கூக - உ. யாழ்மேற் பாலை..............................முறை றது - யாழினிடத்து டத்துக் கோடிப்பாலை மெலியவென்

அரும்பாலைமுதலாயின இடமுறைமெலியவும் குழலினி முதலாயின வலமுறைமெலியவும் பாடப்படுமென்ற வாறு.

கூக - ச. வலிவு மெலிவும்...................உடனென் றது - இப்படியால் வலிவும் மெலிவும் சமனுமெனப்படாநின்ற தான நிலையினையுடைய இசைக்கூறு பாடுகளுக்கெல்லாம் நரப்படைவு கெடாமலும் பண்ணீர்மை முதலாயின குன்றாமலும் புணர்க்கவல்லனுய் அப்புணர்ப்பிற்கு அமைந்த எழுத்துக்களால் இசை செய்யவல்ல யாழாசிரியனுமென் றவாறு.

(எக) நிறுத்தல்வேண்டிப் (கூச ) பொலியக்கோத்த புலமையோனென்க.

[அரங்கின் அமைதி.]

கூ - கக. எண்ணிய நூலோர்......... ..அரங்கத்து

## ௩.—அரங்கேற்றுகாதை.

கக[illegible]

என்னை? “ஒத்த வணுமுதல் உயர்ந்தவரு கணக்கின், உத்தமன் பெருவிர லிருபத்து நாலுகோலே கோடல் குறியறிந் தோரே” என்றாராகலின்.

இதனுள் அணுமுதற் பெருவிரலளவு உயர்ந்துவருமாறு: அணு எட்டுக் கொண்டது தேர்த்துகள்; தேர்த்துகள் எட்டுக்கொண்டது இம்மி; இம்மி எட்டுக்கொண்டது எள்ளு; எள்ளு எட்டுக்கொண்டது நெல்லு; நெல்லு எட்டுக் கொண்டது பெருவிரலெனக்கொள்க.

உத்தமராவார்: கழிய நெடுமையுங் கழியக் குறுமையுமில்லோர்.

க0க - ௨. எழுகோல்..........................உறப்பினதாகியென்றது - இக்கோலால் எழுகோலகலமும் எண்கோனீளமும் ஒருகோற் குறட்டுயரமுமுடையதாமியென்க.

என்னை? “அக்கோ லெழுகல் நெட்டு நீண்டு, மொட்டு உயர்வு மொருகோ லாகு, தற்கோல் வேத்தலக்குறு வாயின், முக்கோ ரொழு முயரவு முரித்தே” என்றார் செயிற்றியனார்: “அக்கோ லொருகோ லளவுறக் கல்வி, மிக்க கம்மியர் வடநூல் விதிமுறைக், கரிய [illegible] ன்றியங் குறிவகைச் [illegible] ச் செய்க வியல்புணர்ந் தோரே” எனக்கூறினருமுளர்.

[illegible], [illegible]

௪0௫ - ௬. உத்தரப்பலகை.................. அரங்கின்றது

தூணத்துக்கு

மேலே வைத்த உத்தரப்பலகைக்கும் அரங்கிடுக்கு

என்னை? [1] கூதிய * வுறுப்பிற் குறியொடு புணர்ந்தாங், காயேர்க் கியற்று மரக்கி னெற்றிமிசை, வழிவிஸ் பூத நான்கு முறைப்பட, வெழுதின ரியற்ற வியல்புணர்ந் தோரே" என்றாராகலின்.

இப்பூதநான்கின் உண்டியும் அணியும் ஆடையும் மாலையும் சாந்தமும்
பொழுதும் செயலுமுதலியவெல்லாம் அழற்படுகாதைக்கண்ணே விரித்துக்
கூறுதும்.

௧௦அ. தூணிழற்.........எடுத்தாங்கென்றது - தூண்களின் நிழல் நாயகப்
பத்தியின்கண்ணும் அவையின்கண்ணும் படாதபடி மாட்சிமைப்பட்ட நிலை
விளக்குநிறுத்தியென்க.

என்னை? "விளக்கியல் வனப்பும்" என்றாராகலின்.

௧௦௧ - ௧௦. ஒருமுகவெழினியும்.........................வகுத்தாங்கென்றது - இடத்தூணிலேயிடத்தே உருவுதிரையாக ஒருமுகவெழினியும் இரண்டுவலத்தூணிடத்தும் உருவுதிரையாகப் பொருமுகவெழினியும், மேற்கட்டுத்திரையாகக் கரந்துவரலெழினியும் செயற்பாட்டுடனே வகுத்தென்க.

மேற்கட்டுத்திரையாய்நிற்பது ஆகாயசாரிகளாய்த்
தோன்றுவார்க்கெனக் கொள்க; என்னை? "முன்னிய வெழினிதான் மூன்று வகைப்படும்" என்றார் மதிவாணனார்; "அரிதரங்கிற், செய்தெழினி மூன்றமைத்துச் சித்திரத்தாற் பூதரையு, மெய்த வெழுதி யியற்று" என்றார் பரதசேனபதியாரும்.

௧௧௧. ஓவிய விதான த்தென்றது
சித்திரவிதானத்தையுமுடைத்தாயென்க.

௧௧௩ - ௨. உரைபெறு......................நாற்றியென்றது - சந்திரன் குரு அங்காரகனென்னும் வெண்ணீர்மை பொன்னீர்மை செந்நீர்மையென்னும் புகழ்மையைத் தமக்குரிமையாகப்பெற்ற மூத்துமாலைகளாற் * சரியும் தூக்கும் தாமமுமாக நாற்றியென்க.

௧௧௩. விருந்துபட..............அரங்கத்தென்றது - புதுமையுடைத்தாகச் சமைத்த அரிய தொழிலையுடைய அரங்கினகனென்க.

வகுத்தனர்கொண்டு வைத்து எடுத்து வகுத்து நாற்றிக்கிடந்த அரங்கமென்க.

[தலைக்கோல் அமைதி.]

௧௧௪ - ௨அ. பேரிசை மன்னர்........வைத்தாங்கு

௧௧௪ - ரு. பேரிசை மன்னர்........கொண்டென்றது - பெரிய புகழையுடைய அரசர்பொருதுடைந்து புறங்கொடுத்தவழிப்பெற்ற அழகிய இயல்பினையுடைய வெண்கொற்றக்குடைக்காம்பைத் தலைக்கோலாகக்கொண்டென்க.

இனி மாற்றார் எயிற்புறத்து பிணக்கன் வெட்டிக்கொண்டமாம்.
மூங்கிலென்று

---

[1] சிவகசிந்தாமணி, கஎ௨ - த. மேற். (பி - ம்.) * 'அரங்கிற்' † 'சவியும்'

## ௩.—அரங்கேற்றுகாதை.

௧௧௭

இது கூறிற்று, வேத்தியலும் பொதுவியலுமாகலான்,
இவற்றுட் பொதுவியற்கு மலையின் மூங்கிலுமாம்.

ககசு - எ. கண்ணிடை.........................போக்கியென்றது - கண்டோறும் நவமணிகளாற்கட்டி இடைநிலங்களைச் சாம்பூநதமென்னும் பொற்றகட்டாற்செறிய மலக்கமாகக்கட்டியென்க.

மலக்கம் - மாறு.

என்னை ? "புண்ணியமால் வெற்பிற் பொருந்துங் கழைகொண்டு, கண்ணி டைக் கண்சான் கணஞ்சாரு - மெண்ணிய, நீளமெழு சாண்கொண்டு நீராட்டி நன்மைபுனை, நாளிற் றலைக்கோலை நாட்டு", "ஆவ கத்தியனுர் சாபத்தா லுன் மூங்கில்" என்றார் பரதசேனபதியார்.

ககஅ - உ0.

காவல் வெண்குடை......................தலைக்கோலென்றது - அரசன் கோயிலிலே காப்பமைத்திருத்தி இந்திரன்மகன் சயந்தனாக மந்திரவிதியாலே பூசித்து வழிபடும் இத்தலைக்கோலையென்க

நினைத்து

சயந்தனுதல்[1] முன்னர்க் கூறிப்போந்தாம்.

கஉக - உ. புண்ணிய நன்னீர்... ..................மாலையணிந்தென்றது - நாடகக்கணிகை தலைக்கோல் கொள்ளுஞான்று புண்ணிய நதிகளின்னீரைப் பொற்குடத்திலே முகந்துவந்து இத்தலைக்கோலை நீராட்டிப் பின்பு மாலைகளுஞ்சூட்டியென்க.

முன் கூறிப்போந்த ஆடலாசிரியன் முதலாயினுர்
அரங்கத்தின்கண்ணே இத்தலைக்கோலைவைத்துப்
பொற்குடத்தாணீராட்டியபின் மாலைசூட்டியென இயைக்க.

கஉ ங. நலந்தருநாளாலென்றது - இதற்குப்பொருந்திய லென்க.

நல்லநாளினு

அவையாவன :—பூராடம் கார்த்திகை பூரம் பரணி

அவிட்டம் சித்திரை விசாகம் மகம் எனவிவை.

இரேவதி திருவாதிரை

நாளென்றது 'நலந்தருநாள்' என்ற இலேசினுல் கொள்க.

இராசிமுதலியனவும் இராசிகளாவன :—இடபம் சிங்கம் துலாம் கற்கடகம் விருச்சிகம் மிதனம் எனவிவை.

என்னே ? " பூராடங் கார்த்திகை பூரம் பரணிகலஞ், சீரா திரையவிட்டஞ் சித்திரையோ - டாருமுற, மாசியிடப மரிதுலே வான்கடகம், பேசிய தேள்மிதுனம் பேக" என்றார் மதிவாணனரும்.

நாளால் நீராட்டியென முன்னுஞ்சேர்க்க.

கூடு - ச. பொலம்பூண்... ....... .....................கொண்டென்றது - பொன்னாற்செய்த பூணையும் பட்டத்தினையுமுடைய பட்டவருத்தனத்தின் கையிலே வாழ்த்துடனேகொடுத்தென்க.

[1] இப்புத்தகம் எஅ - ஆம்பக்கம் பார்க்க.



# சிலப்பதிகாரம்

கூடு - அ. முரசெழுந் தியம்ப............
.....வைத்தான்கென்றது - வீர
முரசுமுதலாய முழ்முரசுகளும் எழுந்துமுழங்க அவையோயன்றிப் பலவாச்சி

யங்களுமுழங்க அரசனும் அமாத்தியர் புரோகிதர் சேனாபதித்தொடக்கத்தாருங் கூட வீதியின்கணின்ற தேரினை இந்தயானையோடும் உடன்கொண்டு வலஞ் செய்து தேர்மிசைநின்ற கவியின்கையிலே இத்தலைக்கோலைக் கொடுப்ப ஊரை வலமாகவந்து அரங்கத்தின்கட் புகுந்து தலைக்கோலை எதிர்முகமாக னென்றவாறு.

வைத்தபி

என்னை? "பிணியுங் கோளு நீங்கிய நாளா, லணியுங் கவினு மாசற வியற்றித், தீதுதீர் மரபிற் றீர்த்த நீரான், மாசறு தீர மண்ணுநீ ராட்டித், தொடலையு மாலையும் படலையுஞ் சூட்டிப், பிண்ட மூண்ணும் பெருங்களிற்றுத் தடக் கைமிசைக், கொண்டு சென்றுநீஇக் கொடியெடுத் தார்த்து, முரசு முருடு முன் முன் முழங்க, வரசு முதலான வவம்பெருங் குழுவத், தேர்வலஞ் செய்து கவிகைக் கொடுப்ப, வூர்வலஞ்செய்து புகுந்த பின்றைத், தலைக்கோல் கோடறக்க தென்ப" என்றார் செயிற்றியனார்

[அரங்கிற்புகுந்து ஆடுகின்றவியல்பு.]

கஉக - எ௫.

இயல்பினின் வழாஅ...............மனையகமறந்தென்.

கஉகூ. இயல்பினின்......

.........முறைமையினென்றது-அரசன்முதலி யோர்யாவரும் வரிசைக்கேற்ற இருக்கைமுறைமைகளிலே இருந்தபின்னரென்க.

கஙo. குயிலுவ................நிற்பவென்றது - குயிலுவக் கருவியாளர்தாம் நிற்கக்கடவ முறைமைகளிலே நிற்கவென்க.

முறைமையாவது:—"ஆடிட முக்கோ லாட்டுவார்க் கொருகோல், பாடுநர்க் கொருகோ லந்தர மொருகோல், குயிலுவர் நிலையிட மொருகோல்" என்று நூலிற்கூறின முறைமையென்க.

குயிலுவராவார் - இடக்கைமுதலாய கருவியாளர்.

கஙக - உ. வலக்கான்

..... .............................பொருந்தியென்றது-
நாடகக்கணிகையாகிய அரங்கேறுகின்றமாதவி அரங்கத்திலே வலக்கால் முற்பட விட்டேறிப் பொருமுகவெழினிக்கு நிலையிடனான வலப்பக்கத்தூணிடத்தே சேர்தல் வழக்கென்னுமிடத்தாலே சேர்ந்தென்றவாறு.

௧௩௩ - ௪. இந்நெறிவகையால்........ ............. . .......... ..மகளிரு மென்றது - மாதவி வந்தேறினின்றபடியே இடத்தூண்நிலையிடமாகிய ஒருமுக வெழினியிடம்பற்றிய பழையநெறியியற்கையையுடைய தோரிய மடந்தையரு மென்க.

தோரியமடந்தையராவார் - ஆடிமுதிர்ந்தவர்; "இந்நெறி வகையா லிடத் தூண் சேர்வோ, டொன்னெறி மரபிற் றோரிய மகளே" எனவும், "தலைக்கோ லரிவை குணத்தொடு பொருந்தி, நலத்தகு பாடலு மாடலு மிக்கோன்.
* சொலப்படு கோதைத் தோரிய மகளே" எனவும் சொன்னாராகலின்.

---

(பி - ம்.) * 'இயற்படு'

## ௩.—அரங்கேற்றுகாதை.

கவி

௧௩௫ - ௬. சீரியல் .. ......... பாட வென்றது - நன்மையுண்டாகவும் தீமைநீங்கவும்வேண்டித் தெய்வப்பாடல் இரண்டினையும் பாடவென்றவாறு.

இனிச் சீரியல்பொலிய நீரல நீங்கவென்பதற்குத் தாளவியல்பு பொலிவுபெற அவதாளநீங்கவென்றுமாம்.

வாரமிரண்டாவன: ஓரொற்றுவாரம்,

சரொற்றுவாரமென்னுஞ்செய்யுள்.

அவை தாளத்து ஒருமாத்திரையும் இரண்டுமாத்திரையும் பெற்றுவரும்.

ககள - அ. பாடியவார்த்து... .. ...........

..கருவிகளெல்லாமென்றது- கொல்லப்பாடலின் இறுதியிலேநின்று கூடி இசைபாகிற்கும், கருவிகளெல்லா மென்றவாறு.

இக்கருவிகள் எவ்வண்ணங்கூடியிசைத்தன வோவெனின், —

க கக. குழல்வழிநின்றதியாழேமெ ன்றது - வங்கியத்தின்வழியேநின்றது யாழ்ப்பாடலென்றவாறு.

எனவே, மிடற்றுவழியது யாழாகளா மிடற்றுவழிப்பாடலும் வழித்தெனக்கொள்க.

குழல்

கககூ - சO. யாழ்வழித் தண்ணுமை நின்றது பாடலின்வழியே அதற்குத்தகத் தண்ணுமையாகிய

தகவேயென்றது - யாழ்ப் கசO - மத்தளநின்றதென்க. பின்வழியே

சக. தண்ணுமை..............முழவேயென்றது - மத்தளக்கருவியின் குடமுழாநின்றதென்க.

கசக - உ. முழவொடு..........................ஆமந்திரிகையென்றது - முழவொடுகூடிநின்று வாச்சியக் கூறுகளை அமைத்தது ஆமந்திரிகையென்னுங்கருவி யென்றவாறு.

ஆமந்திரிகை - இடக்கை. நின்றிசைத்தது கருவியென்னுது ஓசையென்க. அஃதேல் மிடற்றுப்பாடல் சொல்லிற்றிலரெனின், வாரப்பாடல் பாடியபின்ன ரெனவே மிடற்றுப்பாடலுமடங்கும்.

கசந. ஆமந்திரிகையோட ந்தரமின்றியென்றது -

இவ்வாறந்திரிகையோ டே முன்சொன்ன குயிலுவக்கருவிகளனைத்தும் நிற்பவென்றவாறு.

பருந்தும் நிழலும்போல ஒன்றாய்

கசச. கொட்டு... ............. ஆகவென்றது - ஒருதாளத்திற்கு இரண்டு பற்றாகவென்க.

கசரு. கட்டிய.................போக்கியென்றது - பஞ்சதாளப்பிரபந்த மாகக் கட்டப்பட்ட தேசியொத்தை ஒருதாளத்திற்கு இரண்டுபற்றாகப் பத்தும் தீர்வு ஒன்றுமாகப் பதினொருபற்றாலே தேசிக்கூத்தையாடிமுடித்தென்க.

கசசு. வந்த................வழுவாமலென்றது - இப்படிச்செய்கை நாடக நூல்களினமைந்தமுறைமையாகலான் அம்முறைமை வழுவாமலென்க.

கசஎ. அந்தரக் கொட்டுடனடங்கிய பின்னரென்றது..............

## உ௲ சிலப்பதிகாரம்

இதின் அந்தரக்கொட்டென்றும், முகமென்றும் ஒத்தென்றும் கூறுப. இந்த ஒத்து ஆடினபின்னரல்லது உருக்காட்டுதல் வழக்கல்லவென்ப ; என்னை ? ''முகமா மெதிரி யோகப் பொருட்டே'' என்றாராகலின்.

கசஅ - கூ. மீத்திறம் படாமை...

..................பண்மேலென்றது - மங்கலப்பண்ணாய் நரப்படைவுமுடைத்தாயிருக்கின்ற பாலைப்பண்ணை அளவுகோடா தபடி ஆளத்தியிலேவைத்து அதன்மேலேயென்க.

கரு௦ நான்கி னொரீஇய நன்கனமறிந்தென்றது -

மங்கலச்சொல்லின் புடைத்தாய் நாலுறுப்பும் குறைபாடில்லாத உருவுக்குச் சொற்படுத்தியும் இசைப்படுத்தியுமறிந்து பாட்டும் கொட்டும் கூத்தும் நிகழ்த்தியென்க.

நாலுறுப்பாவன :—உக்கிரம், துருவை, ஆபோகம், பிரகலையென்பன. ஈண்டு நாலுறுப்புக்களும் குறைபாடில்லாத உருவெனவேண்டியது, [1] மூன் றுறுப்பாலே வருவனவுமுளவாதலின். அவை இரண்டாமடியே ஈற்றடியாகப் பாடிமுடிவன. அவை மங்கலத்துக்குப் பொருந்தாவெனக்கொள்க.

கருக. மூன்றளந்தொன்று கொட்டியதனையென்றது - அதனை மூன்றொத்துடைய மட்டதாளத்திலே எடுத்து ஓரொத்துடைய ஏகதாளத்திலேமுடிந்தென்க.

கருஉ. ஐதுமண்டிலத்தாலென்றது - அழகிய மண்டிலநிலையாலென்க.

தேசிக்கூத்தெல்லாம் மண்டிலநிலையாதலின், ஐதுமண்டிலத்தாலென்றார். என்னை? "கொண்ட தேசிப் பகுதி யெல்லா, மண்டில நிலையின் வருதக வுடைத்தே" என்றாராகலின்.

கூடை போக்கியென்றது - தேசிக்கு ஒற்றித்தொத்தலும் இரட்டித்தலுமேயாகலின் அவற்றை ஆடி முடித்தென்க.

தொர்

இவைகளல்லது இரட்டிக்கிரட்டி வரப்பெறுதென்க.

கருரு. வந்தவாரம் வழிமயங்கியபின்றையென்றது வாரத்தினும் தேசிக்கூத்தெல்லாம் ஆடிமுடித்தென்க.

முதனடையினும்

முடிக்கை - பண்மாறு.

இனி மார்க்கம் கூறுகின்றது:—

கஞ௪. ஆறு..............போக்கியென்றது - பஞ்சதாளப்பிரபந்தமாகக்கட்டப்பட்ட வடுகிலொத்தையும் இரட்டியாக ஆடியென்க. தேசியிலொத்தைக்காட்டினாற்போல இரட்டிக்

கஞ௫ - ௬. கூறிய வைந்தின்....................................பின்றையென்பது - சொல்லிப்போந்த தேசியைப்போல வடுகும் மட்ட தாளமுதலாக ஏகதாளமீறாக வைசாகநிலையிலே ஆடிமுடித்தபின்னரென்க.

---

[1] தேவடியுமன் மூன்றென்பர் சுத்தானந்தப்பிரகாசமுடையார்; மூன்றுவன: உக்கிரம், தருவை, ஆபோகமென்பன. தருவையென்றது தருமையெனவும் ஆபோகமென்றது ஆபோகமெனவும் பிரதிகளில் வேறுபட்டிருக்கின்றன.

## ௩.—அரங்கேற்றுகாதை.

௨௯

என்னை? "வைசாக நிலையே வடுகிற்கும் வரையார்" என்றாராகலின்.

கஞ௭. பொன்னியல் பூங்கொடி புரிந்துடன் வகுத்தெனவென்றது - பொன்னானியன்றதோர் பூங்கொடி கூத்தாடித்தாற்போலவென்றவாறு.

கஞ௮ - ௯. நாட்டிய நன்னூல்.........ஆதலினென்றது - தாண்டவம் நிருத்தம் நாட்டியமென்னும் மூன்றுகூறுபாட்டினும் நாட்டியமென்றது புறநடத்தையாகலின், அதனை நூல்களிற்சொன்ன

முறைமை வழுவாமல் அவி நயித்துப் பாவகந்தோன்ற விலக்குறுப்புப் பதினுலின் நெறிவழுவாமல் ஆடிக் காட்டினளாதலானென்றவாறு.

அன்றி, நாட்டியநன்னூல்..........ஆதலினென்றதற்கு
இக்கலைதயிற் கூறிய முத்தமிழ்வகையையும்
காட்டினளாதலினென்றுமாம்.

கஉகூ - கூ0. காவல் வேந்தன்..... ....

......வழாமையென்றது - அர
சன், இம்மாதவியுடைய கூத்துக்கும் பாட்டுக்கும் அழகுக்குமேற்ற
யினல் ஒன்றும் வழுவாமலென்றவாறு.

முறைமை

என்சொல்லியவாறுமோவெனின்,—நாடகமகள் அரங்கேறக்கண்ட
அரசன் அவள்மேற் காமக்குறிப்புடையனுதலியஸ்பு. அங்ஙனம்
மாதவியாடல் பாடல் அழகென்னுமிவைமுதலிய கண்களிப்பக்கண்டும்
செவிகளிப்பக்கேட்டும்
நெஞ்சமகிழ்ந்து காமக்குறிப்புமீதூரவும் நாம் இவளை வரையின்
மென்பதுகருதி வரையானுயினு னென்பதாம்.

நவைபிறக்கு

இலைப்பூங்கோதையைத் தலைக்கோற்கு அடையாக்கினுமமையும். அன்றி,
இலைப்பூங்கோதை - அரசனுடையமாலை; அதனுல் தன்கூத்தும் பாட்டுமென்

னும் இவைமுதலியவற்றினியல்பின் ஒன்றும்நீங்காமலென்றுமாம்.
னின் - இயல்பினுல்.

இயல்பி கசுக. தலைக்கோலெய்தியென்றது -
கோற் பெயர்பெற்றென்றவாறு.
தன்வரிசைக்குத்தக்கபடியே தலைக்

தலையரங்கேறியென்றது-முன்னரங்குமுதலிய எல்லாமுதன்மையும் பெறு வதற்குக்காரணமாகிய தலையரங்கேறியென்றவாறு.

கசுஉ - ரு. விதிமுறை.........பெற்றனை
ளென்றது-இந்நாடகக்கணிகையர்க் குத் தலைவரிசை
ஆயிரத்தெண்கழஞ்சுபொன் பரிசம்பெறுகை நால்வழக்காத லின்
இவளும் அவ்வாயிரத்தெண்கழஞ்சுபொன் பரிசம்பெற்றாளென்றவாறு.

என்னை? "முட்டில் பாணரு மாடியன் மகளிரு, மெட்டொடு யிரம்பொன் பெறுப" என்றாராகலின்.

புணர்ந்தவா

ஒருமுறையாகப் பெற்றனள் - ஒருநாளைக்குப் பரிசமாகவென்று பெற்றனளென்க.
அரசனுற்

பெறுகை - நினைப்பிடுகையுமாம். ஆயிரம் பரிசத்துக்கும் மெய்ப்போகத்துக்குமாக நிச்சயித்தென்க.

எண்கழஞ்சு

கசுரு. அதுவேயென்றது - அன்றுதொடங்கி அதுவே பரிசமானதென்க.
கசு

கசுச. நூறுபத் தடுக்கி எட்டுக்கடைநிறுத்தவென்றது - நூற்றைம்பதின் மடங்காக அடுக்கி அதன்கடைக்கண்ணே எட்டைநிறுத்தினவென்றவாறு.

கசுரு - கூ. வீறுயர்பசும்பொன்... ........நிறுத்தவென்றது - வீறுபெற் றுயர்ந்த பசும்பொன்னை விலையாகப்பெறுவது இம்மாலை; இம்மாலைபெற்ற பொன்தந்து இதனை வாங்கிச்சூடுநர் மாதவிக்கு மணமகனுந்தலைமையுமென்று சொல்லி மான்போன்ற நோக்கினையுடையாளோர்கூனிகைக்கொடுத்து நகரியிற் பெருந்தெருவிலே வென்றவாறு.

விலைக்கு விற்பாரைப்போல்வதொரு பண்பினால் நிறுத்த இவளுக்குப்பரிசமென்னாது மாலைக்குப்பரிசமென்று மிகுத்துக்கூறினார். வீறுயர்பசும்பொன் - மாற்றான் உயர்ச்சிபெற்ற பசியபொன்; ஆவது ஓளிச்சிறை. மாலை - அரசன்பாற்பெற்ற பசும்பொன்மாலை. இது படிக்கட்டளை.

கஎ0 - எஉ. மாமலர்நெடுங்கண்.. ..................மணமனைபுக்கென்றது - திருமலரென்று சொல்லப்பட்ட தாமரைமலர் போன்ற கண்ணையுடைய மாதவியுடைய பரிசமாலையைக் கோவலனெனப்படும் வாணிகன்வாங்கிக் கூனியுடனே அவள்மனையிற்சென்றுபுக்கென்றவாறு.

வாங்கிப் புக்கென இயைக்க.

கஎஉ - ச. மாதவி தன்னோடு............ஆயினனென்றது - இங்ஙனம்புக்க கோவலன்மாதவிதன்னுடன் மணந்த அப்பொழுதே அயர்ந்தனனாய் மயங்கி அவளை நீங்குதல் கூடாதவிருப்பினையுடையனாயினனென்க.

வைகல் - ஈண்டு ஒருபொழுது. விடுதலறியா - விடாத; ஒருசொல்

களடு. வடுநீங்கு சிறப்பிற்றன் மனையக மறந்தென்றது-குற்றமற்ற கற்புச் சிறப்பினையுடைய மனைவியையும் மனையையுமறந்தென்க.

ஆடல் முதலியன காட்டல்வேண்டி ஆடலோனும் இசையோனும் இயற்புலவனும் தண்ணுமையோனும் குழலோனும் யாழோனுங்கூடி வகுத்தனர் கொண்டு தொழுதனரேத்த எழுதி வைத்து எடுத்து வகுத்து நாற்றிக் கிடந்த அரங்கத்துக் கொண்டு ஒழுக்கிப் போக்கி ஆகெனச் செய்து ஏந்தி அணிந்து கொண்டு இயம்ப ஆர்ப்பச் செய்து கொடுப்ப வைத்தபின் நிற்ப ஏறிப் பொருந் திச் சேர்ந்தமகளிரும் பொலிய நீங்கப் பாட இசைக்கும், கருவிகளெல்லாம். நின்றது; நின்றது; நின்றது; நின்றிசைத்தது; பதினொன்றுபோக்கி அம் முறைபோக்கி வகுத்தெனக் கடைப்பிடித்துக் காட்டினளாதலின், எய்தி ஏறிப் பெற்றனள்; பெற்று நிறுத்தக் கோவலன்வாங்கி மனைபுக்கு அயர்ந்து மயங்கி மறந்து விருப்பினனாயினனென்க.

பா, நிலைமண்டிலம்.

ரு.— அரங்கேற்றுகாதை முற்றிற்று.

---

## நான்காவது

# அந்திமாலைச்சிறப்புச்செய்காதை.



விரிகதிர் பரப்பி யுலகமுழு தாண்ட
வொருதனித் திகிரி யுரவோற் காணே
னங்கண் வானத் தணிநிலா விரிக்குந்
திங்களஞ் செல்வன் *யாண்டுளன் கொல்லெனத்
திசைமுகம் † பசந்து செம்மலர்க் கண்கண் முழுநீர் வார
முழுமெயும் பனித்துத் திரைநீ ராடை யிருநில
மடந்தை
[1] யரைசுகெடுத் தலம்வரு மல்லற் காலைக் கறைகெழு குடிகள்
கைதலை வைப்ப
வறைபோகு குடிகளொ டொருதிறம் பற்றி வலம்படு
தானை மன்ன ரில்வழிப்
புலம்பட விறுத்த விருந்தின் மன்னரிற்
றாழ்துணை ‡ துறந்தோர் தனித்துய ரெய்தக் § காதலர்ப்
புணர்ந்தோர் களிமகிழ் வெய்தக்

௨. திகிரி - தேராழி.

௫ - ௬. திசைமுகம் - திசையாகியமுகம். மலர்க்கண் - மலராகிய கண்; கண்ணீர்-கள்ளாகியநீர். பனித்தென்றார், மாலைக்காலத்துப் பனியுமுண்டாகலான்.

௮. அரசு - தன்கொழுநன்; என்றது ஆதித்தனை. ௯. கறை - கடமை.

௧௦ - ௧௩. அறைபோகு குடிகள் - கீழறுப்போன குடிகள்.

மன்னர் - வேற்றரசர் ; இன், போல. தாழ்தல் - தங்குதல்.

விருந்தின்

கறைகெழுகுடிகள் கண்ணகிமுதலான தாழ்துணை துறந்தோர்க்கு உவமை; விருந்தின்மன்னர் மாதவிமுதலான காதலர்ப்புணர்ந்தோர்க்குவமை.

[1] சிலப், உ௱ க௨௨., (பி - ம்.) * 'யாங்குளன்கொல்.' † 'பயந்து.' ‡ 'இழந்தோர்.' § 'காதலிற்புணர்ந்தோர்களிமகிழ்பெய்த.'



[1] குழல்வளர் முல்லையிற் கோவலர்தம்மொடு மழலைத் தும்பி
வாய்வைத் தூத
வறுகாற் குறும்பெறிந் தரும்புபொதி வாசஞ் சிறுகாற் செல்வன்
மறுகிற் றூற்ற
வெல்வளை மகளிர் மணிவிளக் கெடுப்ப மல்லன் மூதூர்
மாலைவந் திறுத்தெனை
* விளைய ராயினும் பகையரசு கடியுஞ்
செருமாண் டென்னர் குலமுத லாகலி
னந்தி வானத்து வெண்*பிறை தோன்றிப் புன்கண் மாலைக்
குறும்பெறிந் தோட்டிப்

கஎ - கூ. குழல்வளர்முல்லை............ஊத - கோவலருதம் குழலிலும்
ஈர்கின்ற முல்லையிலும் கோவலரும் தும்பியும் வாய்வைத்தூத; இது நிரல் நிறை; (பா ) அன்றிக் கோவலர்குழலினுண்டாகிய முல்லைப்பண்ணை............ பூவிலே தும்பி ஊதவென்றுமாம்.

கள - உ0. அறுகால்-ஆறுகாலையுடையவண்டு. குறும்பென்றூர், தென்றல் தளிர்ப்பித்தும் பூப்பித்துஞ்செய்யத் தான் நடுவே புகுந்து உண்டலான். சிறு காற்செல்வன் - மந்தமாருதமாகிய செல்வன். இறுத்தென - இறுத்ததாக

அ - உ0. அல்லற் காலையிலே பிரிந்தோர் துயரெய்தப் புணர்ந்தோர் மகிழ் வெய்தத் தம்பியூத வாசத்தைச் செல்வன் தூற்ற மகளிர் விளக்கெடுப்ப விருந்தின் மன்னரைப்போல மாலைவந்திறுத்ததென்க.

உச. மாலையைக் குறும்பென்றூர், *இடைபின்றகாலம்பார்த்து வருதலான்.
உகூ. மீனரசு - மீனுகிய அரசு; அரசனுலாளப்படயிடமும் அரசெனப் படும். வெள்ளிவிளக்கம் - வெண்மையாகிய ஒளி; நிலா.

[1] "குழல்வளர்.................................ஊத' என்புழிக் குழல்வளர்முல்லையென்று கூறிய பொழுதே ஆயருதுங்குழலிலே எழுந்த முல்லையென்னும் பண்ணையும் மயிரிலே கிடந்த முல்லையென்னும் பூவையும் ஒருகாலத்தே புலப்படுத்தி இரண்டற்கும் பிரிவில வாய் நின்றவாறுகாண்க. இஃது ஒருசொல் ஒருகாற் கூறுதற்கண் இரண்டுபொருளை உணர்த்துதல் வழுவேனுமமைகவென அமைத்தார்; இதனை உவமவியலுள், 'ஒரீஇக் கூறலும்' என்னுஞ்சூத்திரத்துச் செய்யுட்கு இலக்கணமாகக்கூறுமாறும் உணர்க. இங்ஙனம் சான்றோர் செய்யுட்களுட்பல விடத்தும் வருமாறுணர்க" (தொல். எச். சூ. கச - ந);"குழல்வளர்.........ஊத' இதுசொல்வேறுபடாது பொருள் வேறுபட்டது" (இ - கொ. சூ. கஉசு - உரை.)

[2] "இளைய தாயினும் கிளையரா வெறிய, மருதரை புருமிற் பொருநரைப் பொருஉச் செருமான் பஞ்சவர்" (புறநா. ௯அ) [3] கலித்தொகை, கக அ - அ.

(பி - ம்,) * 'பிறைத்தோன்றி'

## ச.— அந்திமாலைச்சிறப்புச்செய்காதை.

கஉ

பான்மையிற் றிரியாது பாற்கதிர் பரப்பி
மீனர சாண்ட வெள்ளி விளக்கத்
தில்வளர் முல்லையொடு மல்லிகை * யவிழ்ந்த
பல்பூஞ் சேக்கைப் பள்ளியுட் பொலிந்து
செந்துகிர்க் கோவை சென்றேந் தல்கு
† லந்துகின் மேகலை யசைந்தன வருந்த
[1] நிலவுப்பயன் கொள்ளு நெடுநிலா முற்றத்துக்
கலவியும் புலவியுங் ‡ காதலற் களித்தாங்
கார்வ நெஞ்சமொடு கோவலற் கெதிரிக்
கோலங் கொண்ட மாதவி யன்றியும்

குடதிசை மருங்கின் வெள்ளயிர் தன்னொடு
குணதிசை மருங்கிற் காரகி றுறந்து
வடமலைப் பிறந்த வான்கேழ் வட்டத்துத்
தென்மலைப் பிறந்த சந்தன மறுகத
தாமரைக் கொழுமுறித் தாதுபடு செழுமலர்க்

---

(உ௯) பிறை தோன்றி (உ௯) நீனரசானுதலாலுண்டாகிய விளக்கம்;

பிறை, மாலைக்குறும்போட்டிக் கதிர்பரப்பிச் சந்திரனுட்டையாண்ட விளக்கத்திலேயெங்க.

உ௮. சேக்கைப்பள்ளி - சேருமிடம்.

௩0. அந்துகின் மேகலை - புடைவைமேற் சூழ்ந்த மேகலை.

௩௩. கோவலற்கு எதிரி - கோவலனை எதிரேற்று; எனவே முயக்கம்கூறியது.

௩௪. கோலங் கோடல் - முயக்கத்தாற்குலைந்த ஒப்பனையைத் திருத்தல்.

(உ௯) வெள்ளிவிளக்கத்து (௩௧) நிலாமுற்றத்துப் (உ௮) பொலிந்து (௩0) அல்சந்தனவருந்தக் (௩௩) கோவலற்கெதிர்தலாற் பெயங்க.

௩௪)கோலங்கொண்டமாதவி

௩௫ - ௬. வெள்ளயிர் - புகைக்குங்கண்டுசருக்கரை; யோடு அகிலைப்புகைத்தல் மரபு.

கண்டுசருக்கரை

௩௭. வான்கேழ் வட்டம் - அழகுகெழுமிய சிலாவட்டம்.

௩அ. மறுக - தெய்த்தத்திமிர.

---

[1] "நிலவுப்பயன் கொள்ளு நெடுவெண் முற்றத்து" (நெடுநல். ௯௫); வின் பயன்றப்த்தும்" (பட். ௧௧௪.)

"வெள்ளிவில

[2] "வடவரை தந்த வான் கேழ் வட்டம்" (அகநா. ௧௪௦.)

(பி - ம்.) * 'மலர்ந்த' † 'ஐந்துகில்' ‡ 'காதலர்க்களித்தாஅங்கு' § 'மூதிரது



காமரு குவளைக் கழுநீர் மாமலர்ப்
பைந்தளிர்ப் படலை பருஉக்கா ழாரஞ்
[1] சுந்தரச் சுண்ணத் துகளொடு மளைஇச்
சிந்துபு பரிந்த செழும்பூஞ் சேக்கை
மந்தமா ருதத்து மயங்கினர் மலிந்தாங்
காவியங் கொழுந ரகலத் தொடுங்கிக்
காவியங் கண்ணுற் களித்துயி லெய்த
வஞ்செஞ் சீறடி * யணிசிலம் பொழிய
மென்றுகி லல்குன் மேகலை நீங்கக்
கொங்கை முன்றிற் குங்கும மெழுதாள்
[2] மங்கல வணியிற் [3] பிறிதணி மகிழாள்
கொடுங்குழை துறந்து வடிந்துவீழ் காதின
டிங்கள் வாண்முகஞ் சிறுவியர் பிரியச்
செங்கய னெடுங்க ணஞ்சன மறப்பப்
‡ பவள வாணுத திலக மிழப்பத்
தவள வாணகை கோவல னிழப்ப
மையிருங் கூந்த னெய்யணி மறப்பக்

கையறு நெஞ்சத்துக் கண்ணகி யன்றியுங்
§ காதலர்ப் பிரிந்த மாதர் நோதக
[5]ஊதுலைக் குருகி னுயிர்த்தன ரொடுங்கி

௩௧ - ௪௧. தாமரைக் கொழுமுறியினையும் அதன்மலரினையும் யும் கழுநீர்மலரினையுமுடைய படலைமாலை

குவளை

இவ்வகை விரவித்தொடுத்தமாலைக்குப் படலைமாலையென்றுபெயர்.

௪௧ - ௩. படலை ஆரம் இவை சிந்தி வேறுபட்ட. சுந்தரம் - அழகு.

(௩௪) மாதவியன்றியும் (௪௬) (பா) காவியங்கண்ணார் (௩௯) அகிற்புகை தறந்து (௪௪)மலிந்து மயங்கிக் (௪௬) களித்துயிலெய்தவென்க.

௪௭. சீறடியைச் சிலம்பொழிய. பிறவற்றிற்கும் இவ்வாறுரைக்க.

௫௦ - ௫௨. மங்கலவணி - இயற்கையழகு. குழையைத்துறந்து வடிந்த தாழ்ந்த காது. (பா) வியர்ப்பு இரிய - கூட்டமில்லாமையின் வியர்வுநீங்க.

௫௭. கையறுநெஞ்சம் - செயலறவினையுடைய நினைவு.

(௪௭) சிலம்புமுதலியன (௫௮) நீங்க (௫௬) செயலறவையுடையளான கண்ணகியென்க

நெய்யணிமறப்பச் (௫௭)

௫௮. காதலர்ப்பிரிந்தமாதர் - தங்கள் கொழுநரைப்பிரிந்த மகளிர். நோதக - கண்டார்க்கு நோவுதக.

---

[1] "சுந்தரச்சுண்ணத்து" (சிலப். இ: கஉ) [2] சிலப், ௨: ௬௧ - ௪; [3] மணி. ௨: ௪௩. (பி - ம்.) * 'அணிச்சிலம்பு' † 'பீலிதவியணியான்' ‡ 'அளகவாறுதல்' § 'காதலிற்'

# ௪.—அந்திமாலைச்சிறப்புச்செய்காதை.



வேனிற் பள்ளி மேவாது கழிந்து
கூதிர்ப் பள்ளிக் குறுங்க ணடைத்து
மலயத் தாரமு மணிமுத் தாரமு
மலர்முலை யாகத் தடையாது வருந்தத்
தாழிக் குவளையொடு தண்செங் கழுநீர்
வீழ்பூஞ் சேக்கை மேவாது கழியத்
[1] துணைபுண ரன்னத் தூவியிற் * செறித்த
விணையணை மேம்படத் திருந்துதுயில் பெறாஅ
துடைப்பெருங் கொழுநரோ டூடற் காலத்
திடைக்குமி ழெறிந்து கடைக்குழை யோட்டிக்
கலங்கா வுள்ளங் கலங்கக் கடைசிவந்து
விலங்கரிமிர் நெடுங்கண் புலம்புமுத் துறைப்ப
வன்ன மென்னடை நன்னீர்ப் பொய்கை
* யாம்ப லாறுந் தேம்பொதி நறுவிரைத்
தாமரைச் செவ்வாய்த் தண்ணறற் கூந்தற்

௬௧. அடைத்து - அடைப்ப.

௬௬. துணைபுணரன்னத்தூவியினென்றார்; "பலவன்னத்தூவி போலே" என்றமையால். அந்த அணைக்கிட்ட பஞ்சின்மென்மைக்கு......................

௬௮. தங்களையுடைய கொழுநரோடு ஊடுதலையுடைய காலத்து.

எ0. கலங்கா வுள்ளம் கலங்க - அவர் கலங்காவுள்ளம் அணையிலே கலங்க.

எக. புலம்பு - தனிமை. முத்து - கண்ணீர்த்துளி.

(ருஎ) கண்ணகியன்றியும் (ருஅ) பிரிந்தமாதர் (சுஎ) இணையணைமேம்படத் திருந்துதுயில்பெறாது (சுஅ) முன்பு ஊடினகாலத்து (எக) விலங்கிமிர்ந்த நெடுங்கண் இப்பிரிந்தகாலத்துப் புலம்பாலுண்டாகிய முத்துறைப்பவென்க.

எக. விலங்குபாடமாயின், பக்கமென்க.

எஉ - ச. அன்னமாகிய மென்னடையையும், ஆம்பலுறும் நறுவிரையையும் தாமரையாகிய செவ்வாயையும், அறலாகிய கூந்தலையுமுடைய பொய்கையாகிய பெண்.

[1] "துணைபுண ரன்னத்தின் றாவிமெல் லணையசை இ" (கலித்தொகை, எஉ.)

[2] 'ஆம்பலுறுத்..............செவ்வாய்' என்புழி, 'தேம்பொதி நறுவிரையாம் பலுறுந் தாமரைச்செவ்வாய்' என இளங்கோவடிகள் பாடிய அந்திமாலைச்சிறப்புச் செய்காதையிலும் கண்டவை யென்றுணர்க" (மாறனலங்காரம், சூ. கஙச-உரை.)"

(பி - ம்.) * 'சிறந்த'



எ[1] பாண்வாய் வண்டு [1] நோதிறம் பாடக்
* காண்வரு குவளைக் கண்மலர் விழிப்பப் [2] புள்வாய் முரசமொடு
பொறிமயிர் வாரணத்து முள்வாய்ச் சங்க † முறைமுறை யார்ப்ப
வுரவுநீர்ப் பரப்பி னூர்துயி லெடுப்பி
அ0 யிரவுத் தலைப்பெயரும் வைகறை காறு

மரையிருள் யாமத்தும் பகலுந் துஞ்சார் விரைமலர் வாளியொடு
கருப்புவில் லேந்தி மகர வெல்கொடி மைந்தன் றிரிதர
நகரங் காவ னனிசிறந் ததுவென்.

---

எரு - அ . வண்டாகிய பள்ளியுணர்த்துவான் புறநீர்மையென்னின் றபண் ணைப்பாட, குவளை கண்மலர்போல விழிப்ப. புள்வாயாகிட முரசம். முள் வாய் - கூர்த்தவாய.

எகூ. உ ரவுநீர்ப்பரப்பின் ஊர் - கடறபரப்பை ஒத்தவூர். துயிலெடுப்பி யென்றார், பிரிந்தார்க்கும் புணர்ந்தார்க்கும் துயிலாமை காமனல்வருதலால்.

அ0. இரவுத்தலை : தகரவொற்று விகாரம் ; தலை - இடம் ; இராத்திரியில்.

அக. பருக்கப்படுதலின், பகல். மதுரைக்காஞ்சியில், * "மற்றை யாமம்
பகலுறக் கழிப்பி" என்பதுமது; (பா) பகலுந்துஞ்சான் - எல்லாருந்துஞ்சும் அரையிருள்யாமத்தும் ஒருமாத்திரைப்பொழுதும்துஞ்சாமல்.

எரு - அ0. வண்டுபாடக் குவளைவிழிப்ப இரவு போம்வகைகறையென்க.

அக - ரு. இரவும்பகலுந்துஞ்சான் மைந்தன திரிதரவென்க.

(௬௪.) மாதவியன் றியும் (௬௫) காவியங்கண்ணார் களித்துயிலெயதவும் (௬௭) கண்ணகியன் றியும் (௬௮) பிரிந்தமாதர் (௬௯) உயிர்த்து ஒடுங்கிக் (௭௦) கழிந்து (௭௧) குறுங்கண் அடைத்து (௭௨-௩) ஆரம் முலைக்கண் அடையாதவருந்தக் (௭௪) கழுநீர் (௭௫) சேக்கையிலே மேவாதுகழியக் (௭௭) கண்டுயில்பெறுமல் (௭௧) உறைப்ப (எரு) வண்டுபாடக் (௭௬) குவளை விழிப்ப (௭௮) ஆர்ப்ப (௮௧) இரவுபோம் வைகறையளவும் (௮௧) யாமத்தும் பகலும்துஞ்சாளுகி (௮௩) மகரக்கொடி மைந்தன் (௮௨) வாளியொடு விஸ்லேயேந்தித் (௮௩) திரிதலானே (௮௪) நகர் காவல் சிறந்ததென்க.

---

¹ தோதிறமென்பதே சரியான வடிவமென்று தோற்றுகின்றது; பரி. ௧௪௦ பக்கம் பார்க்க.
- ஆம்

² கிஸ்ட். க: கலி - க. ³ 'மதுரைக்காஞ்சி,' ௬௮௯;

(பி - ம்.) * 'காமருகுவளை' † 'முறைபெழுந்தார்ப்ப'

## ௪.—அந்திமாலைச்சிறப்புச்செய்காதை.

௧௨௫

௧ - ௨. விரிகதிர் பரப்பி..............காணேன்

(இ - ள்.) விரிந்த கதிர்களைப்பரப்பித் தொக்க உலகமனைத்தையும் இவ்கிரியானுண்டவிளிவில்லாதோனை ஈண்டுக் காண்கின்றிலேனென்க.

௯௫

கதிர் - ஆரும், கிரணமும். முழுதுமென்னுமுற்றும்மை தொக்கது. ஒருதனித்திகிரி - ஒப்பற்ற ஒற்றைத்தேராழி; சக்கரமுமாயிற்று; சிலேடை. இவன் ஒருதேராழியான் எழுலகையுமாண்டானென்பது தோன்றத் தேராழியைத் திகிரி யென்றார். ஆண்ட திகிரியையுடைய உரவோனெனினுமமையும்.

௩ - ௪. அங்கண் வானத்து..........கொல்லென

(இ - ள்.) அழகிய இடத்தையுடைய வானின்கண் நல்லநிலாவை விரிக்கும் திங்களாகிய செல்வன் எவ்விடத்துள்ளானோகொலென்றென்க.

அத்து, அழனுருபின்கண்வந்த சாரியை. நிலா - ஒளி. அம், [1] புறனடையாற்கொள்க. இது பண்புத்தொகைக்கண்வந்தது. [2] திங்களஞ்செல்வன்: [3] "காலமுலகம்" என்னுஞ்சூத்திரத்துள், ஞாயிறுதிங்களென்பன உயர்திணை மேலனவாய்ப் பால்பிரிந்திசையாவெனவும், [4] "நின்றாங் கிசைத்த லிவணியல் பின்று" எனவே நின்றமுறையானேயன்றி ஈறுபெற்றுநின்று உயர்திணையாயிசைத்தல் இவணியல்பின்றெனவுங்கூறிய ஆசிரியர், [5] "இசைத்தலு முரிய வேறிடத்தான" எனக் காலமுதலாகியசொல் உயர்திணையாயிசைத்தலு முரிய, ஈறு திரிந்து வாய்பாடு வேறுபட்டவழியென்றாராகலின், இதுவும் ஈறுதிரிந்து திங்களஞ்செல்வனென்றாயிற்றென்க. மேலும் விதியென்க. கொல், ஐயம்.

இவ்வாறுவருவனவற்றிற்கும்இதுவே

௫ - ௬. திசைமுகம் பசந்து..................அல்லற் காலை

(இ - ள்.) கடலை ஆடையாகவுடைய பெரிய நிலமடந்தை தன்கொழுநனைக் காணாது திசையாகிய தன்முகநான்கும் பசப்பூரப்பட்டு மலர்க்கண்கள்நீர்வார மெய்ம்முழுதும்பனித்து நெஞ்சம் சுழல்கின்ற இடுக்கட்பொழுதிலென்க.

திசைமுகம் - திக்காகியமுகம். பசந்து - பொன்னிறங்கொண்டு. முழுமெய்யும் - மெய்முழுதுமென்றுமாறுக. பனித்து - நடுங்கி, பனிகொண்டு;

பனியென்பதொருநோயுமுண்டு ; அது குடநாட்டுவழக்கு ; பனி பெய்யப் பட்டு என்றபடி; அக்காலத்துப் பனிபெய்யுமாகலின். அரசு - தன்கொழுக ஞங்கியபகலோன்; அரசென்பதனை, [4] "குடிமையாண்மை" என்னுஞ் சூத்திரத்து 'நிலையின வாயினும்' என்பதனுன்முடிக்க. கெடுத்து - காணப்பெருது ; [7] "எற்கெடுத்திரங்கி" என்றாற்போல. அலம்வரும் - சுழலும். அல்லற்காலை - இடுக்கட்பொழுதில். பசந்தென்றூர், மாலைக்காலத்துப்பரந்த பச்சைவெயிலை;

[1] தொல்காப்பியம், புள்ளிமயங்கியல், சூ. ௧௧0.
[2] சிலப். அ: ௫௯ ஆம் அடியின் உரை.
[3] தொல். கிளவியாக்கம், சூ. ௫அ.
[4] " " " சூ. ௫௯.
[5] தொல். கிளவியாக்கம், சூ. ௬0.
[6] " " ௫௭.
[7] மணிமேகலை, ௫, ௧௯,





[1] "செல்சுடர்ப் பசுவெயிற் றேன்றி யன்ன" என்றார் மதுரைக்காஞ்சியினும். இக்காலத்து இதனைக் காடுகிழாள்வெயிலென்ப. செம்மலர்க்கண்கள் முழுநீர் வாரவென்பதற்குச் செம்மலரிடமெல்லாம் கள்ளாகியநீர் முழுதும் வாரவென வும், சிவந்த மலர்போலும் கண்களிரண்டும் நீர்வாரவெனவும் சிலேடைப் பொருண்மைகாண்க.

௯ - ௧௨. கறைகெழு குடிகள்..............மன்னரின்

(இ - ள்.) தம் பெயருக்குவருமிறைமைய றிந்து பொருந்தியிறுக்கும் இறைக்குடிகள் துயாமுற அங்ஙன மிறுத்து குறும்புசெய்யும் வில்லேருழவரை ஒருதலை யாகப்பற்றி

வெற்றிபொருந்திய தானை மன்னரில்லாத இடமறிந்து அவர்நில மெல்லாங்கெடும்படி புதிதாக வந்துவிட்ட குறுநிலமன்னரைப்போலவென்க.

கறை - கடமை; [1] "கறைபன் னீரா ண் டுடன்விடுமின்" என்றார் சிந்தாமணியினும். கெழு, [2] "முடிகெழுவேந்தர்" என்புழிப்போல் முடித்தாம். துயரு றுதலென்னும் பொருணிகழ்ச்சியைத் தலைமேற் கைவைக்கவென்னும் தொழி னிகழ்ச்சியாற் கூறினர் ; [4] "கைகால் வயிறதுக்குவார்" என்றாற்போல. அறைபோதல் - கீழறுத்தல். ஒடு, ஐ. வலம் - வெற்றி. இல்வழி - இல்லாதகாலத்தே ; இடப்பொருள் காலத்தோடு மயங்கிற்று. புலம்- அவர்நிலம். இறுத்த - வந்து விட்ட; [5] "சேனையிறுத்தவாய் போல" என்றாராகலின். விருந்து - புதுமை.

கரு - உ0.

தாழ்துணை துறந்தோர்.........மாலைவந் திறுத்தென

(இ - ள்.) தம்மனத்திற்றங்கிய கொழுநர்தம்மைப் பிரிந்திருக்கின்றமகளிர் கறைகெழுகுடிகளைப்போல ஒடுங்கித் துயராமுறத் தம் காதலரைப் புணர்ந்திருக்கின்றமகளிர் அறைபோகு குடிகளைப்போலத் தருக்கிமகிழ்ந்து இன்பமுறக் குழலிலேவளர்கின்ற முல்லையென்னும் பண்ணிலே கோவலரும் குழலிலே வளர்கின்ற முல்லைமலரிலே தும்பியும் வாய்வைத்தூத அரும்புகள் உள்ளடக்கிய வாசத்தை இடையிடையேபுக்கு வண்டுகளுண்ணும்படி கடிந்தோட்டித் தென்றலஞ்செல்வன் அதனை மறுகெல்லாந்தூற்ற ஒளிவளையையுடைய மகளிர் இருவகைவிளக்கு மெடுப்ப வளமிக்க மூதூர்க்கண்ணே விருந்தின்மன்னரைப்போல மாலையென்னுங் குறும்பு வந்துவிட்டதாகவென்க.

தாழ்தல் - தங்குதல். துணை - தோட்டுணையென்றுமாம். களிமகிழ்வு, வினைத்தொகை. குழல் - ஊதுங்குழலும், மயிரும்; முல்லை - மலரும், பண்ணும். முல்லையில், சாரியைநிற்பவுருபுதொக்கது. தும்பி - வண்டில் ஒருசாதி. ஊதுதல், கோவலர்க்கும் தும்பிக்கும் பொது. ஊதுங்குழலினும் முல்லையினும் கோவலரோடு தும்பி வாய்வைத்தூதவெனினுமமையும்; இது நிரனிறை. எல் - ஒளி. மல்லல் - வளன். அறுகாலைக் குறும்பெனறூர், தென்றல் தளிர்ப்பித்தும் பூப்பித்துஞ்செய்ய அவற்றைத் தான்புகுந்துண்டலான். சிறுகாற் செல்வனென்றதை [6] முற்கூறியவாற்றான்முடிக்க.

---

[1] மதுரைகாஞ்சி, ௪௧௧.
[2] சீவகசிந்தாமணி, ௯0௧.
[3] சிலப், பதிகம், ௬௪ - உரை.
[4] சீவகசிந்தாமணி. ௨௧௫.
[5] கலித்தொகை, ௯0அ.
[6] இப்புத்தகம், பக்கம்; ௧௨௬.

## ௬.—அந்திமாலைச்சிறப்புச்செய்காதை.

௯௨௧

அல்லற்காலை விருந்தின்மன்னரிற் றனித்துயரெய்தக் களிமகிழ்வெய்த வாய் வைத்துத மதுகிற்றாற்ற மணிவிளக்கெடுப்ப மாலை வந்திறுத்தெனவென்க.

௨௧ - ௬. இளைய ராயினும்....... ... ...வெள்ளி விளக்கத்து

(இ - ள்) தாம் பிராயத்தான் இளையராயினும் பகைவேந்தரை முற்றக்கூடிய வல்ல செருவின்மேம்பட்டதென்னர்குலத்திலே முதற்றோன்றுதலாலே அந்திப் பொழுதே செவ்வானிடத்தே வெண்பிறை, தான்தோன்றி வருத்தத்தைத் தரும் மாலையாகிய குறும்பை எறிந்து ஓட்டி அரசியலிற்றப்பாது தனது வெள் ளிய கதிராகிய புகழைப்பரப்பிச் சந்திரன் நாட்டையாண்ட வெண்மையை யுடைய விளக்கத்திலேயென்க.

தென்னர் குலமுதலாதலினென்பதற்குத் தென்னர்குலத்திற்கு முதலாகை யாலேயெனினுமமையும். சோமகுலத்தென்னரொன்று தென்னர்குலச்சோம னென்றார்; அவன், அளியினெத்து வலியினும் தெறலினும் ஒவ்வாமையானும் குறைவும் நிறைவும் மறுவுமுடைமையானும் இவர்க்கு அவை இன்மையானும் உயர்ச்சிநோக்கி. பிறை[1] தென்னர்குலமாதலின், வளவர் குலத்து இரவியாண்ட நிலமழிய வந்துவிட்ட மாலைக்குறும்பை எறிந்து ஒட்டி ஆண்டதென்க அன்றி ஒட்டித் தான் மீனிராச்சியத்தை ஆண்டதெனினுமமையும். அந்தி - மாலைப்பின் பொழுது. வாளாது வானத்துப்பிறையென்னாது வெண்பிறையெனப் பண்படுத் தமையான், [2] எடுத்தமொழி இனஞ்செப்பிச் செவ்வானத்து வெண்பிறைதோன்

றிய தென்பதாயிற்று. புன்கண் - வருத்தம்.

நின்றகாலத்துப் புகுந்து வருத்துதலின்.

மாலையைக் குறும்பென்றார்; இடை

குறும்பெறிந்தோட்டி - குறும்பை

அறுத்தோட்டி. பான்மையிற்றிரியாது - அரசியலின்வழாது. பாற்கதிர் - பால்போலுங்கதிர்; அதற்குப் புகழெனவும் ஒருபொருடோன்றும். மீனரசு - சந்திரன்; உடுபதியென்பவாதலின். அன்றி மீனிராச்சியமெனினுமமையும்.

உள - ரு௪.

இல்வளர் முல்லையொடு............மாதவி யன்றியும்

(இ - ள்.) முல்லையொடு மல்லிகையும் ஒழிந்த தாழிக்குவளைமுதலிய பல பூவும் அவிழ்ந்த பள்ளியிடத்தே பொலிவுபெற்று அழகேந்திய அஃகுறன்னிடத்தில் துகில்செல்லப்பட்டுச் செந்துகிற்கோவையாகிய மேகலை அலசந்தனவாய் இரங்காநிற்க நிலாவினது பயனைக் கொள்ளுதற்குக்காரணமாகிய உயர்ந்த நிலா முற்றத்தின்கண்ணே தன்காதலனுக்கு ஒருகாற் கலவியையும் மறுகாற் புலவியையும் மாறியளித்து அவ்விடத்து ஆர்வமிக்க நெஞ்சத்தோடு

கோவலனை எதிரேற்று மயங்கி அம்மயக்கத்தால் முன் குலைந்த ஒப்பனையைப் பின்னும் வேட்கை விளைக்குங் கோலமாகத் திருத்திய மாதவியன்றியுமென்க

இல்வளர் - மனைவளர். ஒடு, எண்ணொடு. சேக்கைப்பள்ளி - சேரும் சயனம். துகிர்க்கோவை - பவளக்கோவை. துகின்மேகலை - துகின்மேற்சூழ்ந்த

[1] "சேர்ந்தார் புறங்கொண்டு செந்நிலத் தன்றநின் டேர்மதித்துப், பேர்ந் தான் றனது குலமுதலாய பிறைக்கொழுந்தே" (இறை. சூ. சக - உரை - மேற்)

[2] தொல்காப்பியம், கிளவியாக்கம், சூ. கூக.



மேகலையென்பாருமுளர். அசைந்தன வருந்த நிலவுப்பயன் கொள்ளுமென இடக்கரடக்கிக்கூறினர். எதிரியெனவே மயக்கங்கூறினர். இனி, சென்று அகன்றனைச் செல்லுதலை அகறலாக்கி, அகன்றேந்தல்குலிடத்துத் துகின்மேற் சூழ்ந்தமேகலை அசைந்தனவாய் இரங்கவெனினுமமையும். மேகலை - பவளக் கோவை எட்டினுற் செய்தது; [1] "எண்கோவை மேகலை காஞ்சி யெழுகோவை" என்றாராகலின்; [2] "தவழும் புதல்வரை யொருகையாற் றழீஇப், பவழஞ் சேர்ந்த பல்கா ழல்குலர்" என்றார் கதையினும்.

விளக்கத்திலேபொலிந்து அவிந்து எதிரிக் கோலங்கொண்ட மாதவியென்க.

அவிழ்ந்த பூஞ்சேக்கையெனவே செவ்வியும், பொலிந்தெனவே அழகும் இளமையுங்கூறிற்று.

௬௫ - க. குடதிசை மருங்கின்..............காரகி றுறந்து

(இ-ள்) மேற்றிசையிடத்தண்டானவினமுரியோடே கீழ்த்திசையிடத்து உண்டான அகின்முதலியவற்றாற் புகைக்கும் புகையைத்துறந்தென்க.

குடதிசை அயிர் - யவனதேசத்து அயிர்; அயிர் - கண்டுசருக்கரை. குண திசையகில்; காரகில். குடதிசை, குணதிசை; வெள்ளயிர், காரகிலென்பனவற்றுட் செய்யுளின்பமும் அலங்காரமுமுணர்க. அகிலென்றது, ஆகு பெயராற் புகையை; * "இருங்கா ழகிலொடு வெள்ளயிர் புகைப்ப" என்றார் நெடுநல்வாடையினும். புகைபுறப்பு ஆறளவாகவும் தலைமைபற்றி இவ்விரண்டினையும் கூறினர்.

௬௭ - அ. வடமலைப் பிறந்த..............சந்தனமறுக

(இ - ள்.) வடதிசைக்கண்ணதாகிய இமயமலைக்கட்பிறந்த சிலாவட்டத் திலே தென்றிசைக்கண்ணதாகிய பொதியமலையிற்பிறந்த சந்தனம் சுழல வென்க.

வான்கேழ்வட்டம் - மிக்க ஒளியையுடைய சிலாவட்டம், * "வடவரைதந்த வான்கேழ் வட்டம்" என்றார், * நெடுநல்வாடையிலும். மறுக - சுழல; அரைக்கவென்றபடி. அகிறுறந்து சந்தனமறுகவென்க. இவற்றின் விரோதமு முணர்க.

௩௩ - ௪௯. தாமரைக் கொழுமுறி..........களித்துயி லெய்த

(இ - ள்.) தாமரைக்கொழுமுறியினையும், அதன் மலரினையும், குவளையையும், கழுநீர்மலரினையும், பச்சிலையுடனே கலந்தொடுத்த படலைமாலையுடனே கோவையுற்ற பருமுத்தமும் நிறத்த சுண்ணத்தோடு சிந்திக் கலந்துகிடந்த வளவிய பூஞ்சேக்கையிடத்து அங்ஙனம்புணர்ந்த உபகரணப்புணர்ச்சியிறுதியில்

---

[1] (பா) "கன்கோவைமேலைகாஞ்சிபெழுகோவை, பன்கொள்கலாபம்பதினெ அ - ண்கொள், பருமம் பதினெட்டு முப்பத் திரண்டு, விரிசிகை யென்றுணரற்பாற்று."

[2] பெருங்கதை, உஞ்சைக்காண்டம், ௪௩ - வரிபிட்டது, ௪௫௬-௭.

[3] நெடுநல்வாடை, ௬௩. [4] நெடுநல்வாடை, (பா) ௬௪.

(பி - ம்.) * 'பெருங் குறிஞ்சியிலும்'

# ௪.—அந்திமாலைச்சிறப்புச்செய்கதை.

௬௩-௭.

மயங்கியமகளிர் தென்றலான் மயக்கந்தீர்ந்து தம் காதன்மிகுதியான் மயங்கித் தமது ஆவிபோலுங்கொழுநர்மார்பிடத்தே காவிபோலும் கண்மலர்களைப் பொருந்தவைத்து இன்பக்களியான அனந்தல்கூடவென்க.

கொழுமுறி - இளந்தளிர். காமம்வருமென்பது விகாரத்தாற் காமருவென நின்று கண்டார்க்கு விருப்பம்வருமென்பதாயிற்று; காண்வரு பாடமாயிற் காட்சி வருமென்க. குவளை - நீலோற்பலம். மா - நிறம். பைந்தளிர் - பச்சிலை. படலை - இலைத்தொடை. பருஉக்காழாரம் - பருமுத்துவடம். சுந்தரம் - நிறம். அளைஇ - கலந்து. சிந்துபு அளைஇயென மாறுக. மயங்கினர்மலிந்து - மயங்கினராயக் காதன்மிக்கெனினுமமையும். ஆங்கு - அங்ஙனம். களித்துயில் - இன்பத்துயில்.

௪௭ - ௭௭.

அஞ்செஞ் சீறடி..................கண்ணகி யன்றியும்

(இ - ள்.) சீறடி தன்னையணியுஞ்சிறப்பைச் சிலம்பு பெறாதொழிய, அல்குல் தன்னையணியுஞ்சிறப்பை மேகலை பெறாதுநீங்க, முகம் தன்னையணியும் சிறப்பைச் சிறுவியர் பெறாது பிரிய, சிவந்து நெடிதான கயல்போலுங்கண் தன்னையணியுஞ்சிறப்பை அஞ்சனம் பெறாதுமறப்ப, நுதல் தன்னையணியுஞ் சிறப்பைத் திலகம்பெறாமலிழப்ப, தன்னைக்கூடினுநற்பெறுந் தவளவாணகையைக் கோவலன்பெறாது இழப்ப, தன்னை அணிந்தாற்பெறுங் கூந்தலின் மணத்தைப் புழுகுநெய் பெறாதுமறப்ப, இவை இங்ஙனமாம்படி தான் எழுதாளாய் மகிழாளாய்க் காதினளாயக் கையற்ற நெஞ்சத்தையுடையளாகிய கண்ணகியன்றியுமென்க.

துகில், அல்குற்கு அடை; [1]"துப்புறழ் தொண்டைச் செவ்வாய்" போல
நின்றது. மேகலை - எண்கோவை. கொங்கைமுன்றில் - முலைமுற்றம். மங்கல வணியிற்பிறிதணி - மங்கலவணியின் வேறானவணி. கொடுமை - வளைவு. வடிந்து வீழ்காதினளென்பது அணியாமையினும் பிறந்த அழகு கூறிற்று. வியர் பிரிய, விகாரம். அன்றி வியர்ப்பு இரியவெனினுமமையும்; இரிதல் - நீங்குதல். நெய - புழுகுநெய். ஒழிய நீங்கப் பிரிய மறப்ப இழப்பவென்பன பரியாய வாயபாட்டான்வந்து இழப்பவென்னும் பொருளவாயின. இவ்வினையெச்சங்களை எழுதாள் மகிழாள் காதினளென்னும் வினைப்பெயரான்முடித்து இப்பெயர்கட்குப் பண்பொட்டுவிரித்து இவற்றைக் கையற்றவென்னும் பெயரெச்சத்தோடுமுடித்து இப்பெயரெச்சத்தை நெஞ்சென்னும் பெயரோடுமுடித்து இதனையுடைய கண்ணகியென்க. இனித் தவளவாணகை கோவலனிழப்பவென்றதனால் அவன்பிரியவென்பதாம்; ஆகவே இவ்வுறுப்புக்கள் அவன்பிரிவுக்கு உடம்பட்டனவென்று முனிந்து ஒழிய நீங்கப் பிரிய மறப்ப இழப்ப இவற்றோடு குழையையுந் துறந்தகாதினள் எழுதாள் மகிழாளாதலான் இவையும் பயனிழப்பத் தானும் அழகும் இன்பமுமிழத்தலாற் கையற்றநெஞ்சினையுடைய கண்ணகியென உரைப்பினுமமையும்; [1]"அருங்கல.........அதக்கினள்" எனவும், [2]"மஞ்சுசூழ்.........சீறினள்" எனவும் சிந்தாமணியினுங்கூறினாராகலின்.

---

[1] சீவகசிந்தாமணி, ௪௦௭. [2] சீவகசிந்தாமணி, ௧௩௭௨, ௧௩௭௩.



௬௮ - ௭௧. காதலர்ப் பிரிந்த......
........புலம்புமுத்துறைப்ப

(இ - ள்.) அங்ஙனம் கையற்ற கண்ணகியேயன்றியும், தம் காதலரைப்பிரிந்த மாதர் பிரிவால் துன்பமுறுதலானே ஊடுகின்ற அருத்தியின் உலைமுக்குப்போல அழலை உயிர்த்தன ராய்ச் செருக்கடங்கி இவ்விளவேனிற்காலத்திற்கு அமைந்த நிலாமுற்றத்தில் மேவாதொழிந்து கூதிர்க்காலத்திற்கமைந்த இடைநிலத்து ஒடுங்கிஆண்டுத் தென்றலுநிலவும்புகாமற் சாளரக்கண்களையடைத்துச் சந்தனமும் முத்தும் ஆகத்துமுலையில் அடையப்பெறாது வருந்தக் குவளை செங்கழுநீர் முதலிய குளிர்ந்த மலர்கள் தாம் விரும்பிய பூஞ்சேக்கையிற் பள்ளித்தாமமாய் மேவப்பெறாமல் வருந்தத்தன் சேவலோடுபுணர்ந்த அன்னப்பேடை அப்புணர்ச்சியான் உருகியுதிர்த்த வயிற்றின்மயிர் எஃகிப்பெய்த பல்வகையணைமீதே மேன்மை பெறத் தம்கொழுநரகலத்தே துயிலும் களித்துயிலைப்பெறாமல் அவரோடு முன்பு ஊடியகாலத்து இடைநின்ற குமிழையெறிந்து கடைநின்றகுழையைச் சார்ந்து [1]பெருமையும் உரனுமுடைமையாற் கலங்காதநெஞ்சமும் கலங்கும்படி கடை சிவந்து குறக்கிட்டுப்பிறழும் நெடியகண்கள் அங்ஙனம்பிறழ்ந்து உவகை முத்தைச் சிந்தாது புலம்புமுத்தைச் சிந்தவென்க.

நோதக - கண்டார்க்கு நோவுதக. ஊதுலைக்குருகு - துருத்தி; வெளிப்படை. அலர்தல் - பரத்தல். ஆகத்துமுலையென்க; முலையாகமுமாம். கழிய வென்பது ஈண்டு வருந்தவென்பதாயிற்று. துணை - சேவல். தூவி - மயிர். இணையணை - பலவான துயில் - முற்கூறிய அணை; [2] "ஐந்துமூன்றடுத்த" என்முராகலின். திருந்து களித்துயில் உடைப்பெருங்கொழுநர் - தங்களையுடைய பெரியகொழுநர். ஊடற்காலத்து - முன் ஊடுங்காலங்களில். கலங்காவுள்ளம் - பெருமையும் உரனுமுடையவுள்ளம். விலங்கிநிமிர் - குறக்கிட்டுப்பிறழும். நிமிர்நெடுங்கண், வினைத்தொகை. புலம்புமுத்து - துன்பக்கண்ணீர்; உவகைக்கண்ணீருமுண்டாகலின்;

புலம்பு - தனிமையுமாம். உறைப்ப - உகுப்ப

கண்ணகியன்றியும் மாதர் ஒடுங்கிக் கழிந்து அடைத்து வருந்தக் பெறாது முத்துறைப்பவென்க.

கழியப்

எஉ - கூ. அன்னமென்னடை..............மலர் விழிப்ப

(இ - ள்.) அன்னமாகிய மென்னடையினையும் தேம்பொதிநறுவிரை ஆம்ப லூறும் தாமரையாகிய வாயினையும் தண்ணறலாகிய கூந்தலினையுமுடைய பொய்கை யென்பாள், பாண்தன்மையைத் தம்மிடத்தேயுடைய வண்டுகளாகிய பள்ளியுணர்த்துவார் புறநீர்மையென்னும் திறத்தாற் அழகுவரும் குவளையாகிய கண்மலர்விழிப்பவென்க.

பள்ளியெழுச்சிபாட,

ஆம்பல், வாய்க்கு அடை ; [1] "துப்புறழ் தொண்டைச் செவ்வாய்" போல;
பண்ணுமாம். நாறும் - தோன்றும் ;
எனச் சிந்தாமணியினும், "மரகத

[4] "அருமணி மரகதத் தங்க ணூறிய"
மணிக்கயத் தங்க ணூறிய, வழனிறப்

---

[1] தொல். களவு. கூ. எ. [2] சீவக. அக அ. [3] சீவக. கஎ;
[4] சீவக. கஅக.

# ச.—அந்திமாலைச்சிறப்புச்செய்காதை.

கசடு

பொன்னித ழாயிரம் விரித்த" எனக் ' கதையினும் கூறினாராகலின். தேம்-இனிமையும், தேனும். நறுவிரை - நல்லமணம். பாண் - பாண்சாதி. நோ திறம் - நோந்ததிறம் ; ஆவது புறநீர்மை. அது, பாலைப்பண்ணின் திறமைந் தன் ஒன்றெனக ; என்னை ? "தக்கராக நோதிறங் காந்தார பஞ்சமமே, தக்கங் கழிசோம ராகமே - மிக்கதிறற் - காந்தார மென்றைந்தும் பாலைத் திறமென் ருர், பூந்தா ரகத்தியனுர் போந்து" என்பவாகலின்.

குவளைக்கண்மலர் - குவளையாகிய கண்ணையுடைய மலர் ; குவளைக் கண்மலரு மாயிற்று. விழித்தல் - மலர்தலும், கண்விழித்தலுமாயிற்று

இனித் தேம்பொதி நறுவிரைத்தாமரையாகிய ஆம்பலுும் செவ்வாயெனி றுமமையும்.

இனிப்பெண்பாலாதலிற் பண்தோற்றும்வாயென வாய்க்கு அடையாக்கலு மொன்று. பாணைப் பாட்டாக்கி வண்டின்வாய்க்கு அடையாக்கினுமமையும்.

பாட விழிப்பவென இயையும். அன்னமென்றதுமுதல் விழிப்பவென் று ந்துணையுங்கூறியவிவை உருவகமேன் றுமலங்காரமென் றுணர்க.

எள - அச.

புள்வாய் முரசமொடு.......... ...நனிசிறந்தது.

(இ - ள். ) பொய்கை கண்மலர்விழிப்பப் புள்ளொலியாகிய முரசுடனே கோழியும் சங்குமும் முறைமுறையார்ப்பக் கடல்போலும் பரப்பையும் ஒலியையு முடைய ஊதைரத் துயிலெழுப்பி அல்லற்காலை வந்துபுக்க இருள் இவ்விடத்து

நின்று நீங்கும் வைகறையாமமளவும் முன்சென்ற அரையிருளினும் ஓர்யாமத்தினும் அரையாமத்தினும் ஒருகணப்பொழுதுந்துஞ்சாராம்படி காமன் ஏந்தித் திருதருதலானே இந்நகரம் மிகவும் காவல்சிறந்ததென்க.

[2] "நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான்" என்றார் புறத்தினும்; [3] "கைச் சிலை கணையோ டேந்திக் காமனிக் கடையைக் காப்பான்" என்றார் சிந்தாமணி யினும்.

முள்வாய் - கூர்த்தவாய். முறைமுறையார்ப்ப - தத்தம் இனமரபினுர்ப்ப; இன், உவமருபு. [4] "துயிலெடை" என்பவாகலின், எடுப்பியென்றார்; பிரிந்தார்க்கும் புணர்ந்தார்க்கும் துயிலின்மை காமனுல் வருதலின். இரவு தலைப்பெயருமென்பதனை இரவுத்தலையென்றார்; [5] "இளந்தவல்ல" என்னுமதிகாரப்புறனடையால்; "தடவுத்திரை" போல வல்லெழுத்துப்பெற்றது. தலை - இடம். பெயரும்-நீங்கும். காறும்-அளவும். அரையிருள் - இரண்டாம் யாமம்; யாமம்-ஓர்யாமம்; அரையிருள்யாமம் - உம்மைத்தொகை ; இருபெயர்க்கண் வந்தது. பகல் - அரையாமம். [6] "மற்றை யாமம் பகலுறக் கழிப்பி" என்றார் மதுரைக்

[1] கதை - உதயனன்கதை. [2] புறநானூறு, கஅக. [3] சீவகசிந்தாமணி, உ0கூ0.
[4] "சூத் ரேத்திய துயிலெடைநிலையும்", (தொல். புறத்திணை. சூ. கக;) "பயில்பூம் பள்ளித் துயிலெடை மாக்கள்" (பெருங்கதை, ௪: கனுவிறுத்தது.)
[5] தொல்காப்பியம், குற்றியலுகரப்புணரியல், சூ. எஅ. [6] மதுரைக்காஞ்சி, கஅக.



காஞ்சியுள்ளும்; பகுத்தலிற் பகலாயிற்று. நனி - மிகுதி.

ஆர்ப்ப எடுப்பித் தலைப்பெயரும் வைகறைகாறும் அஞ்சாராம்படி காமன்
ஏத்தித் திரிதருதலான் நகரம் காவல் மிகச்சிறந்ததென்க.

இனித் அஞ்சானென்றுபாடமோதி, [1] காமன் அஞ்சானாய்த் திரிதருத
லின், நகரம் காவல் சிறந்ததெனினுமமையும்.

என், அசை.

இது, முதல் நடு இறுதி அளவடியான்முடிதலின், நிலைமண்டில
ஆசிரியப்பா.

வெண்பா.

கூடினார் பாணிழலாய்க் கூடார்பால் * வெய்யதாய்க்
காவலன் வெண்குடைபோற் காட்டிற்றே - கூடிய
மாதவிக்குங் கண்ணகிக்கும் வானூர் மதிவிரிந்து
போதவிழ்க்குங் கங்குற் பொழுது.

௪.—அந்திமாலைச்சிறப்புச்செய்காதை
முற்றிற்று.

---

[1] "பூமென் கணையும்
சிலைப். இ: சக, அடிபார்.

பொருசிலையுங் கைக்கொண்டு, காமன் திரியுங் கருவூரா"
மேற்) (பி - ம்.) * 'வெய்தாய்த்தக்காவலன்'

## ஐந்தாவது

# இந்திரவிழவூரெடுத்தகாதை.



அலைநீ ராடை மலைமுலை யாகத்
தாரப் பேரியாற்று மாரிக் கூந்தற்
கண்ணகன் பரப்பின் மண்ணக மடந்தை
புதையிருட் படாஅம் போக நீக்கி
யுதைய மால்வரை யுச்சித் தோன்றி
யுலகுவிளங் கவிரொளி மலர்கதிர் பரப்பி
வேயா மாடமும் வியன்கல விருக்கையு
மான்கட் காலதர் மாளிகை யிடங்களுங்
கயவாய் மருங்கிற் காண்போர்த் தடுக்கும்
பயனற வறியா யவன ரிருக்கையுங்
கலந்தரு திருவிற் புலம்பெயர் மாக்கள்
கலந்திருந் துறையு மிலங்குநீர் வரைப்பும்

---

௧ - ௨. மலையாகியமுலையையுடைய ஆகத்துப் பேரியாறாகிய ஆரம்.
(௧) நீரை ஆடையாகவும், மலையை முலையாகவும், (௨) யாற்றை ஆரமாக வும், மாரியைக் கூந்தலாகவுமுடைய (௩)

மண்ணகமடந்தையுடைய (ச) இருளாகிய படாத்தை நீக்கியென்க.

௬. உலகுவிளங்குதற்குக்காரணமான ஒளி - ஆதித்தன்; கதிரைப்பரப்பு.

௭. வேயாமாடம் - தட்டோடிட்டுச் சாந்துவாரப்பட்டன; நிலாமுற்றமு மாம். கலவிருக்கை - பண்டசாலை.

௮. மான்கட்காலதர் - மான்கண்போன்ற சாளரம்.

௯. கயவாய் - புகார். ௧௦. யவனர் - சோனகர்.

௧௧. புலம்பெயர் மாக்கள் - கடலோடிகள்.

௧௨. இலங்குநீர்வரைப்பு - அவர்களிருக்கும் அலைவாய்க்கரை.

---

[1] "மணிமலைப் பணைத்தோள் மாநில மடந்தை, அணிமுலைத் துயல்வரூஉ மாரம் போலச், செல்புனல் அழுந்த சேய்வரற் கான்யாறு" (சிறுபாண். ௧-௩.)

[2] சிலப்பதிகாரம், ௬: ௧௬௦.





வண்ணமுஞ் சுண்ணமுந் தண்ணறுஞ் சாந்தமும்
பூவும் புகையு மேவிய விரையும்
௧௫ பகர்வனர் திரிதரு நகர வீதியும்
பட்டினு மயிரினும் பருத்தி நூலினுங்
கட்டு நுண்வினைக் காருக ரிருக்கையுந்
தூசுந் துகிரு மாரமு மகிலு

மாசறு முத்து மணியும் பொன்னு
மருங்கல வெறுக்கையோ டளந்துகடை யறியா
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகும்
பால்வகை தெரிந்த பகுதிப் பண்டமொடு
கூலங் குவித்த கூல வீதியும்
¹ காழியர் கூவியர் கண்ணொடை யாட்டியர்
மீன்விலைப் * பரதவர் வெள்ளுப்புப் பகருநர்
பாசவர் வாசவர் ‡ மைந்நிண விலைஞரோ
டோசுநர் செறிந்த வூன்மலி யிருக்கையும்

கரு. வண்ணம் - தொய்யிலெழுதுவன.

கச. புகை - மயிருக்குப் புகைக்கும் அகில் முதலாயின; - அவையாவன:— "அஞ்சனக் கட்டி யரியாசம் பச்சிலை, யார மகிலுறுப்போ ரைந்து."

விரையாவன:—"கோட்டம்.................விரை."

கஎ. காருகர் - நெய்வோர்; அச்சுக்கட்டிகள் முதலாயினோருமாம்.

உ0. அருங்கலம் - ஆபரணம். வெறுக்கை-அத்தம். அளந்துகடையறியா- இவ்வளவென முடிவறியாத.

உக. வளம் தலைமயங்கிய - பலவளங்களும் தலைமயங்கிய.

உஉ. பகுதிப்பண்டமொடு - இங்ஙனஞ்சொன்ன பலபண்டங்களுடனே.

உங. கூலம் - கருஞ்சரக்கு. கூலவீதி - அங்காடி.

உச. காழியர் - பிட்டுவிற்பார்; வண்ணருமாம் கூவியர் - அப்பம்சுடுவோர்.

உசு. பாசவர் - வெற்றிலைகட்டுவோர்; சூட்டிறைச்சிவிற்பாருமாம்.
வர் - பஞ்சவாசம் விற்போர்; அவை:—"தக்கோலம்...........ஐந்து:"
பன்வினை வில்லுநர் - ஆட்டுவாணிகர்.

வாச

உஎ. ஓசுநர் - பரவர்; மீகாமர், எண்ணெய்விற்பாருமாம்.

[1] இவ்வடிமுதலியவற்றுடன் "பன்மீன்விலைஞர்" (மணி. உ௮ - ஆம் காதை, அடி. கசு) என்பதும்தலியவற்றையொப்பிடுக.
(பி - ம்.) * 'பரவர்' † 'பன்வினை விலைஞர்', 'பைந்தினை விலைஞர்.'

# ரு.—இந்திரவிழவூரெடுத்தகாதை.

கஉரு

கஞ்ச காரருஞ் செம்புசெய் குநரு
மரக்கொல் றச்சருங் கருங்கைக் கொல்லருங்
ருo கண்ணுள் வினைஞரு மண்ணீட் டாளரும்
பொன்செய் கொல்லரு நன்கலந் தருநருந்
துன்ன காரருந் தோலின் றுன்னருங்
ருரு

கிழியினுங் கிடையினுந் * தொழில்பல பெருக்கிப்
பழுதில் செய்வினைப் பால்கெழு மாக்களுங்

குழலினும் யாழினுங் குரல்முத லேழும்
வழுவின் றிசைத்து வழித்திறங் காட்டு
மரும்பெறன் மரபிற் பெரும்பா ணிருக்கையுஞ்
சிறுகுறுங் கைவினைப் பிறர்வினை யாளரொடு

மறுவின்றி விளங்கு மருவூர்ப் பாக்கமுங்
கோவியன் வீதியுங் கொடித்தேர் வீதியும்
பீடிகைத் தெருவும் பெருங்குடி வாணிகர்
மாட மறுகு மறையோ ரிருக்கையும்

உஅ. கஞ்சகாரர் - வெண்கலம்விற்பார்; கன்னார்.
ஞர் - செம்பு கொட்டுவார்.
(111) செம்புசெய்ஞ்

உகூ. கருங்கை - வலியையுடைய கை

௩0. கண்ணுள்வினைஞர் - சித்திரகாரிகள். மண்ணீட்டாளர் - சுதையாற் பாவையுள்ளிட்டன பண்ணுவார்; மண் - சுதை; [1] "மண்ணீ டியைந்த மரத் தினையர்" என்றாராகலின்; குயவருமாம்.

௩க. (பா1) பொன்செய்புலவர் - உருக்குத் தட்டார்;
கலம்தருநர் - இரத்தினப்பணித்தட்டார்.

அரிப்பாருமாம். நன்

௩உ. துன்னகாரர் - பாணர். தோலின்றுன்னர் - செம்மார்.

௩௩. கிழி - சீலை. கிடை - கிடேச்சு.

௩௪. பழுதில்செய்வினைப்பால்கெழுமாக்கள் -

இவையிற்றாற்பொய்க்கொண் டை முதலியன செய்பவர்.

௩௬. வழித்திறம் - பண்வழிப்பிறக்குந்திறம்.

௩௭. பெரும்பாண் - குழலர்முதலோர்.

௩௮-௯. (பா) சிறுகுறு.........பரக்கமும் - இங்ஙனங்கூறின இவர் ஒழிந்த பிறதொழிலினையுடையவர்களோடும் விளங்கிய மருவூர்ப்பாக்கமுமென்க.

௪௦. கோவியன்வீதி - செண்டுவெளிப்புறத்தெரு ;

இராசமார்க்கமெனினு மாம.

௪௧-௨. வாணிகர் மாடமறுகு - வணிகர்குடியிருப்பு.

பஞ்சக்கிராமிகளிருப்பு.

மறையோரிருக்கை -

---

¹ திருக்குறள், ௲௬. (பி - ம்.) * 'கழிபலபெருக்கி,'



வீழ்குடி யுழவரொடு விளங்கிய கொள்கை
யாயுள் வேதருங் காலக் கணிதரும்
பால்வகை தெரிந்த பன்முறை யிருக்கையுந்
திருமணி குயிற்றுநர் சிறந்த கொள்கையொ
டணிவளை போழுந ரகன்பெரு வீதியுஞ்
சூதர் மாகதர் * வேதா ளிகரொடு
நாழிகைக் கணக்கர் நலம்பெறு கண்ணுளர்
காவற் கணிகைய ராடற் கூத்தியர்
பூவிலை மடந்தைய ரேவற் சிலதியர்
பயிறொழிற் குயிலுவர் பன்முறைக் கருவியர்
நகைவே ழம்பரொடு வகைதெரி யிருக்கையுங்
கடும்பரி கடவுநர் களிற்றின் பாகர்

## ௬௬ நெடுந்தே ரூருநர் கடுங்கண் மறவ
## ரிருந்துபுறஞ் சுற்றிய பெரும்பா யிருக்கையும்

சச. ஆயுள்வேதர் - கோயிலார். காலக்கணிதர் - எண்ணியிடுவோர்.

கணியர் ; காலத்தை

சசு. திருமணிகுயிற்றுநர் - முத்தக்கோப்பார்; வேகடிகருமாம்.

சஎ. வளைபோழுநர் - சங்கறுப்பார்.

சஅ. சூதர் - வைவாரிகள்; நின்றேத்துவார்.

பட்டிக்கள். வேதாளிகர் - வைதாளியாடுவோர்.

மாதகர் - இருந்தேத்துவார்;

சகூ. நாழிகைக்கணக்கர் - கடிகையார். கண்ணுளர் -

சாந்திக்கூத்தர்.

ருo. காவற்கணிகையர் - இராக்கடைவேசையர். ஆடற்கூத்தியர் கூத்துமுதலியன ஆடுவோர்.

- அகக்

ருக. பூவிலைமடந்தையர் - பரிசங்கொள்வார். ஏவற் சிலதியர் மகளிர்.

- குற்றேவன்

ளர்.

ருஉ. குயிலுவர் - தோற்கருவி துளைக்கருவி நரப்புக்கருவி உருக்குக்கருவியா பன்முறைக்கருவியர் - படைக்கும் விழவுக்கும் கொட்டுவோர்.

ருங. நகை வேழம்பர் - [சாரமாணிகள்.]

௫௪. பரிகடவுநர் - அசுவவாரியர்; பண்ணுவாருமாம்.
யானைப்பாகர்.
களிற்றின்பாகர் -
௫௫. தேருருநர் - தேர்ப்பாகர். மறவர் - வீரர்.
௫௬. பாயிருக்கை - பரந்தவிருப்பு.

---

(பி - ம்.) * 'வேதாவியர்.'

## ௫—இந்திரவிழவூரெடுத்தகாதை.

பீடுகெழு சிறப்பிற் பெரியோர் மல்கிய
பாடல்சால் சிறப்பிற் பட்டினப் பாக்கமு
மிருபெரு வேந்தர் முனையிடம் போல
விருபாற் பகுதியி * னிடைநில மாகிய
கடைகால் யாத்த மிடைமரச் † சோலைக்
கொடுப்போ ரோதையுங் கொள்வோ ரோதையு
நடுக்கின்றி நிலைஇய நாளங் காடியிற்

சித்திரைச் [1] சித்திரைத் திங்கள் சேர்ந்தென
[2] வெற்றிவேல் மன்னற் குற்றதை யொழிக்கெனத்
தேவர் கோமா னேவலிற் போந்த
காவற் பூதத்துக் கடைகெழு பீடிகைப்
[3] புழுக்கலு நோலையும் விழுக்குடை மடையும்

பூவும் புகையும் பொங்கலுஞ் சொரிந்து

௫எ. இவற்றையுடைய பீடுகெழுசிறப்பிற் பெரியோரென்க.

௫எ - அ. பெருமையையுடைய
பிற் பட்டினப்பாக்கமுமென்க.

பெரியோர்திரண்ட பாடலமைந்த சிறப்

௫௯ - ௬0. மருவூர்ப்பாக்கமும் பட்டினப்பாக்கமுமென இருவகைத்தாகிய ஊரின் நடுவிடத்தை முனையிடம்போலவென்றது, அவற்றிற்கு இடைநிலம் வெளிப்பட்டுப் பொதுப்படக் கிடத்தல்கருதி.

௬௧. கடை காலியாத்த - கடை ஒழுங்காகயாத்த. மிடைமரச் சோலை - மர நெருங்கின சோலை.

௬௧ - ௬௨. கடைகளின் மரத்தடியிலே கட்டப்பட்ட மரச்சோலையையுடைய நாளங்காடியென்க.

௬௪. (பா1) சித்திரைச்சித்திரைத் திங்கள் சிறந்தென - சித்திரைமாதத்துச் சித்திரைநாள் சிறந்ததென்கையால்; சித்திராபூரணையென்க.

௬௫. உற்றதை - இடையூற்றை.
௬எ. பூதத்துக்கடை - பூதவாசல். பீடிகை - பலிபீடிகை.

௬அ. புழுக்கல் - அவரை துவரை முதலியன. நோலை - விழுக்குடைமடை - மாங்கிசத்துடனே விரவினசோறு.

என்னுருண்டை.

[1] நன்னூல், மயிலை. சூ. ௩௭௭ - மேற்.    [2] சிலப்பதிகாரம், ௫: ௭௧.
[3] சிலப்பதிகாரம், ௬௨: ௩௪, . . (பி - ம்.) * 'இடையிலத்தாக.' †
'சோலையுள்.' [illegible]



துணங்கையர் குரவைய ரணங்கெழு நாடிப்
பெருநில மன்ன னிருநில மடங்கலும்
[1] பசியும் பிணியும் பகையு நீங்கி
வசியும் வளனுஞ் சுரக்கென வாழ்த்தி
மாதர்க் கோலத்து வலவையி னுரைக்கு
மூதிற் பெண்டி ரோதையிற் பெயர
மருவூர் மருங்கின் மறங்கொள் வீரரும்
பட்டின மருங்கிற் படைகெழு மாக்களு
முந்தச் சென்று முழுப்பலி பீடிகை
வெந்திறன் மன்னற் குற்றதை யொழிக்கெனப்
பலிக்கொடை புரிந்தோர் வலிக்குவரம் பாகெனக்
கல்லுமிழ் கவணினர் கழிப்பிணிக் கறைத்தோற்
பல்வேற் பரப்பினர் மெய்யுறத் தீண்டி
யார்த்துக் களங்கொண்டோ ராரம ரழுவத்துச்
சூர்த்துக் கடைசிவந்த சுடுநோக்குக் கருந்தலை

௭௦. துணங்கை - சிங்கி; என்னை?

" பழுப்புடை யிருகை முடக்கி யடிக்கத், தொடக்கிய நடையது

துணங்கை யாகும்." குரவை - கைகோத்தாடுதல்;
"குரவைக் கூத்தே கைகோத் தாடல்." அணங்கெழுந்தாடி - தெய்வமேறியாடி.

எக - ரூ. (பா) நிலமடங்கலும் பசியும் பிணியும் பகைபுநீங்கி மன்னனுக்கு வசியும் வளனும் சுரக்கவென வாழ்த்தி. வசி-வசீகரம்.

எச. மாதர்க்கோலம் - எல்லாரும் காதலிக்கப்பட்ட ஒப்பனை.
வலவை யின் - சமத்தால்; நாணிலிகள்போல வென்றுமாம்.

எரு. மூதிற்பெண்டிர் - மறக்குடிமகளிர். ஓதையின் -
ஆரவாரத்துடனே. பெயர - அவர் பலியிட்டுப் போனவளவிலே.

(கூ) அவிரொளி கதிர்பரப்பாநிற்பப் (கூஅ) புழுக்கல்முதலாயினவற்றைப் (கள) பீடிகையிலே (கக) சொரிந்து (எக) நிலமடங்கலும் (எஉ) பசியும் பிணி யும் பகைபுநீங்கி (எக) மன்னனுக்கு (எரு) வசியும் வளனும் சுரக்கவெனப் (எரு) பெண்டிர்நின்று (எரு) வாழ்த்திப் (எரு) பெயரவென்க.

எசு - கூ. வீரரும் மாக்களும் ஒருவரினொருவர்
பலி பீடிகையிற் பலிகொடுத்து ஒழிப்பாயாகவென்று

முற்படப்போய் முழூப்
பூதத்துக்குச்சொல்லி.

அ0. வலிக்குவரம்பாகெனல் - வலிக்கு எல்லையாகென
வஞ்சினங்கூறல்.

அக. கறைத்தோல் - கருங்கடகு.

அஉ. பல்வேற்பரப்பு - பலவேலையுமுடைய பரப்பு.

அரு. களங்கொண்டோர் - வென்றோர். அழுவம் - பரப்பு.

அச - கூ. ஆர்த்து..............வைத்து - அச்சத்தைச்செய்து

௬௦ட
வெந்த கண்ணிலேயுடைய தம்மை அமர்ந்த நற்பலிபீடிகையிலேவைத்தென்க.

¹ மணிமேகலை, ௪ ௭௦ - ௭௧ ரூ.

## ௫.—இந்திரவிழவூரெடுத்தகாதை.

கதை

வெற்றி வேந்தன் கொற்றங் கொள்கென
நற்பலி பீடிகை நலங்கொள வைத்தாங்
குயிர்ப்பலி யுண்ணு முருமுக்குரன் முழக்கத்து
மயிர்க்கண் முரசொடு வான்பலி யூட்டி

இருநில மருங்கிற் பொருநரைப் பெறாஅச்
செருவெங் காதலிற் ¹ திருமா வளவன்
வாளுங் குடையு மயிர்க்கண் முரசு
நாளொடு பெயர்த்து நண்ணார்ப் பெறுகவிம்
மண்ணக * மருங்கினென் வலிகெழு தோளெனப்
புண்ணிய திசைமுகம் போகிய வந்நா
ளசைவி லூக்கத்து நசைபிறக் கொழியப்
பகை†விலக் கியதிப் பயங்கெழு மலையென
விமையவ ருறையுஞ் சிமையப் பிடர்த்தலைக்
கொடுவரி ‡ யொற்றிக் கொள்கையிற்
மாநீர் வேலி வச்சிர நன்னாட்டுக்

பெயர்வோற்கு

கோனிறை கொடுத்த கொற்றப் பந்தரு
மகதநன் னாட்டு வாள்வாய் வேந்தன்
பகைபுறத்துக் கொடுத்த பட்டி மண்டபமு
மவந்தி வேந்த னுவந்தனன் கொடுத்த
நிவந்தோங்கு மரபிற் றோரண வாயிலும்

இனி அரசன்செய்தி கூறுகின்றது:—

௯௪. புன்னியதிசை - வடக்கு.

௯௫. நசைபிறக்கொழிய - என்னினைவு மேற்போகாது பின்னிட்டொழிய.

௯௬. பகை விலக்கியது - பகையாய்த் தடுத்தது.

௯௭. கொடுவரியொற்றி - புலியைப்பொறித்து. பெயர்வோற்கு - மீள்வோனுக்கு.

௬௦௦. இறைகொடுத்த - திறையாகக்கொடுத்த. பந்தர் - முத்தின்பந்தர்.

௬௦௨. பகைபுறத்து - பகையிடத்து; புறம் - இடம்; பகைப்புறமென்பதனைப் பகைபுறமென்றது விகாரம். கொடுத்த - முன்பகையாய்ப் பின்திறைவிட்ட. பட்டிமண்டபம் - ஓலக்கமண்டபம்.

௬௦௩. உவந்தனன்கொடுத்த - § மித்திரனாய்க்கொடுத்த.

௬௦௪. தோரணவாயில் - தோரணத்தையுடையவாசல்.

[1] பட்டினப்பாலை, ௨௧௧.

(பி - ம்.) * 'வரைப்பிலென்' † 'விலக்கியது' ‡ 'எழுதி', 'ஒற்றி' § 'மித்திரன்'

பொன்னினு மணியினும் புனைந்தன வாயினு
நன்னிறக் கம்பியர் காணா மரபின
துயர்நீங்கு சிறப்பினவர் தொல்லோ ருதவிக்கு
மயன்விதித்துக் கொடுத்த மரபின வினைதா
மொருங்குடன் புணர்ந்தாங் குயர்ந்தோ ரேத்து
மரும்பெறன் மரபின் மண்டப மன்றியும்
வம்ப மாக்க டம்பெயர் * பொறித்த
கண்ணெழுத்துப் படுத்த வெண்ணுப் பல்பொதிக்
கடைமுக வாயிலுங் கருந்தாழ்க் காவலு
முடையோர் காவலு † மொரீஇய வாகிக்
கட்போ ருளரெனிற் கடுப்பத் தலையேற்றிக்
கொட்பி னல்லது கொடுத்த லீயா
துன்னுநர்ப் பனிக்கும் வெள்ளிடை மன்றமுங்
கூனுங் குறளு மூமுஞ் செவிடு
மழுகுமெய் யாளரு முழுகின ராடிப்

---

௪௫-௬. இவைதாம் பொன்னாலும் மணியாலுஞ்செய்யப்பட்டனவாயினும் கம்மியராற் காணப்படாதன; இவர்களுடைய முன்னோர்செய்த உதவிக்குப் பிரதியுபகாரமாக மயன் நிருமித்துக்கொடுத்தன; இவை தனித்தனி இத்தன்மையவாயினும் தம்மிற்புணர்ந்து ஏத்தப்படுமென்க.

௫0. அன்றியும் - இன்னம் சொல்லப்படுமென்றிடமன்றியும்.

வம்பமாக்கள் - புதியோர்.

சுழல வந்து தொழுத்துயர் நீங்கு
நிழல்கா ணெடுங்க னின்ற மன்றமுந்
தவமறைந் தொழுகுந் தன்மை யிலாள
ரவமறைந் தொழுகு * மலவைப் பெண்டிர்
கஙௐ ரறைபோ கமைச்சர் பிறர்மனை நயப்போர்
† பொய்க்கரி யாளர் புறங்கூற் றாளரென்
கைக்கொள் பாசத்துக் கைப்படு வோரெனக்
காத நான்குங் கடுங்குர லெடுப்பிப்

---

---

கஉக. இலஞ்சி - மடு.

கஉஅ - உக. கூனர் குறளர் ஊமர் செவிடர் வியாதியாளர் செய்ய நன்னிறம்பெறும் இலஞ்சிமன்றமென்க.

மூழ்கலைஞ்

கஉஉ. வஞ்சமுண்டு - வஞ்சனைப்பட்டு. மயற்பகையுற்றோர் - மயக்கமாகிய பகையையுற்றோர்.

கஉச. அழுந்தினர் - அழுந்தப்பட்டோர். கஉஎ. நிழல் - ஒளி.

கஉஉ - எ. வஞ்சமுண்டு மயக்கமும் துயருமுற்று அழுந்திப் பட்டோர் சூழ்ந்து வணங்க நீங்கும் ஒளிகாலப்பட்ட கல்லுநின்றமன்றமென்க. கஉஅ. தவமறைந்தொழுகல் - குதல்.

தவத்திலே மறைந்து தவமின்றி ஒழு

கஉக. அவமறைந்தொழுகும் அலவைப்பெண்டிர் - மறைந்து அவமேயொழுகும் அலவைப்பெண்டிர்.

கஙo. அறைபோகமைச்சர்-இழுக்கும் அமைச்சர்.
பிறர்மனையஃப்போர் - பிறர்மனைவியை விரும்பினோர்.
கஙக. பொய்க்கரியாளர் - பொய்ச்சாட்சிக்காரர். புறங்கூற்றாளர் - கூறுவோர்.
புறம்
கஙஉ. பாசத்துக்கை - பாசத்திடத்து.
கஙங. காதநான்கும் - சூழ்ந்த நாற்காதவட்டமையும்.
(பி - ம்.) * 'அவைப்பெண்டிர்' † 'பொய்க்கரியாளர்'
கக



# சிலப்பதிகாரம்.

பூதம் புடைத்துணும் பூத சதுக்கமு
மரைசுகோல் கோடினு மறங்கூ றவையத்
துரைநூல் கோடி யொருதிறம் பற்றினு
நாவொடு நவிலாது நவைநீ ருகுத்துப்
பாவை நின்றழூஉம் பாவை மன்றமு
மெய்வகை யுணர்ந்த விழுமியோ ரேத்து
[1] மைவகை மன்றத்து மரும்பலி யுறீஇ
வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசங்
கச்சை யானைப் பிடர்த்தலை யேற்றி
வால்வெண் களிற்றரசு வயங்கிய கோட்டத்துக்
கால்கோள் விழவின் கடைநிலை சாற்றித்
தங்கிய கொள்கைத் தருநிலைக் கோட்டத்து
மங்கல நெடுங்கொடி வானுற வெடுத்து

கசுச. பூதசதுக்கம் - பூதம் நிற்கின்ற நாற்சந்தி.

கஉஅ - ௩௪ தன்மையிலாளர்முதல் ஆறுவகையாகிய இவர்களைப் பாசத்தி லகப்படுத்திப்பூதம் புடைத்துண்ணும் சதுக்கமென்க.

கநசு ஒருதிறம் - ஒருபக்கம்.

கநஎ. நாவொடு நவிலாது - நாவினாலுரையாமல். நவை - குற்றம். குற்றத்துக்காகக் கண்ணீருகுக்கையால் நவைநீரென்றார்; நவைநீரென்றுபாடமோதிப் புதியநீரென்பாருமுளர்.

கநஞ - அ. கோல்கோடினும் உரைநூல்கோடி வாரம்பற்றினும் வாய்

திறந்துசொல்லாமல் அழுதுகாட்டும் பாவையையுடையமன்றமென்க.

கநஎ - சுo இவ்வைந்துமன்றத்திலும் பலியிட்டென்க.

அச - கசo. பீடத்திலே தலையைவைத்து முரசு முழக்கி

வற்றிலும் மன்றங்களிலும் பலியிட்டென்க.

மண்டபமுதலிய

கசக. வச்சிரக்கோட்டம் - வச்சிராயுதமிருக்குங்கோயில்;

கிற முரசு.

இவ்விடத்திருக்

கசஉ. கச்சை - மேல்வயிற்றுக்கச்சை. பிடர்த்தலை - பிடராகியதலை.

கசந. கனிற்றரசுவயக்கியகோட்டம் - ஐராபதநிற்குங்கோயில்.

கசஞ. தருநிலைக்கோட்டம் - கற்பக நிற்குங்கோயில்.

கசக - சு. வச்சிரக்கோட்டத்திலிருந்தமுரசை ஐராபதநிற்குங்கோட்டத்திலே கொண்டுவந்து யானையிலேயேற்றி விழவின் முதலுமுடிவுமறிவித்துக் கற்பகநிற்கும் கோயிலிலிருந்தகொடியை வானிலேசெல்லவெடுத்தென்க.

¹ "பூதமுண்டது புடைத்தன்றும்"
(தொல். சொல். சூ. ௫௮ - இளம். சே. ந.)

(குறா. சுபம். சக); "பூதம்புடைத்தது"
² சிலப். கு: கள.

## ௬.—இந்திரவிழவூரெடுத்தகாதை.

ககஎ

மரகத மணியொடு வயிரங் குயிற்றிய
பவளத் திரள்காற் பைம்பொன் வேதிகை
நெடுநிலை மாளிகைக் கடைமுகத் தியாங்கணும்
கிம்புரிப் பகுவாய்க் கிளர்முத் தொழுக்கத்து
மங்கலம் பொறித்த மகர வாசிகைத்
தோரண நிலைஇய தோமறு பசும்பொற்
பூரண கும்பத்துப் பொலிந்த பாலிகை
பாவை விளக்குப் பசும்பொற் படாகை
தூமயிர்க் கவரி ¹ சுந்தரச் சுண்ணத்து
மேவிய கொள்கை வீதியிற் செறிந்தாங்
² ஐம்பெருங் குழுவு மெண்பே ராயமு
மரச குமரரும் பரத குமரருங்
கவர்பரிப் புரவியர் களிற்றின் றொகுதிய
ரிவர்பரித் தேரின ரியைந்தொருங் கீண்டி
யரைசுமேம் படீஇய வகனிலை மருங்கி

கசஎ. குயிற்றிய - செய்த.     கசஅ. காலையுடைய.

கசஎ - அ. மரகதமணியொடு வயிரத்தைக் குயிற்றிய திண்ணை.

கரு0. இம்புரிப்பகுவாய் - மகரவாய். இளர்மூத்து -

அதன்வாயினின் றும்
புறப்பட்டமுத்து.

கருக. மங்கலம்-அட்டமங்கலம்; [1]"செங்கய லிரட்டைதிரு வார்சுடர் கணுடி, பொங்கு கொடி வார்முரசங் கோட்டிபுணர் கும்பம், மங்கலங்க ளெட்டும்."

கசஎ - ருக 'மரகதமணியொடு' என்றதுமுதலாக
'மேவியகொள்கை என்றது' ஈருக வீதிக்குச்சிறப்பு.

கசக - ருக. கடைமுகமெல்லாம், இம்புரிப்பகுவாயினின் றும்

புறப்பட்ட
தாகப்பண்ணின முத்தொழுக்கத்தினையுடைய தோரணம் நிலைபெற்ற பொற்கும் பம் பாலிகை விளக்குப் படாகை கவரி சுண்ணம் இவற்றையுடைய வீதியென்க; சினையின்ஒழில் முதன்மேலேறிற்று.

கருஎ. ஐம்பெருங்குழுவுமெண்பேராயமும்:—"சாந்துபூக் கச்சாடை பாக்கிலை கஞ்சுகநெ, யாய்ந்த விவரெண்ம ராயத்தார் - வேந்தர்க்கு, மாசனம் பார்ப் பார்மருத்தர் வாழ்நிமித்த ரோடமைச்ச, ராசி லவைக்களத்தா ரைந்து."

---

[1] சிலப்பதிகாரம், ௬: ௪௨.

[2] மணிமேகலை, க: கஎ; பெருங்கதை, ௨: ௫.௧; தொல். சொல். ௫. ௭ - நச்.

[3] சிவகசிந்தாமணி, ௨௬௮௭.



துரைசான் மன்னன் கொற்றங் கொள்கென

மாபெரு ஞாலத்து மன்னுயிர் காக்கு
மாயிரத் தோரெட் டரசுதலைக் கொண்ட
தண்ணறுங் காவிரித் தாதுமலி பெருந்துறைப்
புண்ணிய நன்னீர் பொற்குடத் தேந்தி
மண்ணக மருள வானகம் வியப்ப
விண்ணவர் தலைவனை விழுநீ ராட்டிப்
[1] பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலு
மறுமுகச் செவ்வே ளணிதிகழ் கோயிலும்
வால்வளை மேனி வாலியோன் கோயிலு
நீல மேனி நெடியோன் கோயிலு
மாலை வெண்குடை மன்னவன் கோயிலு
[2] மாமுது முதல்வன் வாய்மையின் வழாஅ
நான்மறை மரபிற் றீமுறை யொருபா
[3] நூல்வகைத் தேவரு மூவறு கணங்களும்
பால்வகை தெரிந்த பகுதித் தோற்றத்து
வேறுவேறு கடவுளர் சாறுசிறந் தொருபா
லறவோர் பள்ளியு மறனோம் படையும்

கசுஅ. ஆட்டி - ஆட்ட.

புறநிலைக் கோட்டத்துப் புண்ணியத் தானமுந்
* திறவோ ருரைக்குஞ் செயல்சிறந் தொருபாற்
கொடித்தேர் வேந்தனொடு கூடா மன்ன
ரடித்தளை நீக்க வருள்சிறந் தொருபாற்
கண்ணு ளாளர் கருவிக் குயிலுவர்
பண்ணியாழ்ப் புலவர் பாடற் பாணரொ
டெண்ணருஞ் சிறப்பி னிசைசிறந் தொருபான்
முழவுக்கண் டுயிலாது முடுக்கரும் வீதியும்
விழவுக்களி சிறந்த வியலு ளாங்கட்
காதற் கொழுநனைப் பிரிந்தல ரெய்தா
மாதர்க் கொடுங்குழை மாதவி தன்னோ
டில்வளர் முல்லை மல்லிகை மயிலை
[1] தாழிக் குவளை † சூழ்செங் கழுநீர்
பயில்பூங் கோதைப் பிணையலிற் பொலிந்து

கஅ0. புறநிலைக்கோட்டம் - புறம்புள்ள திருக்கோயில்.

கஎக-அ0. (பா) அறவோர் பள்ளியிடத்து அறங்காத்தலையும், சத்திரமுதலான சாலைகளிலே புண்ணியதானங்களையும் நல்லோருரைக்கும் செயல்சிறந்தது ஒருபக்கமென்றுமாம்.

கஅரு. பாடற்பாணர் - புணர்க்கும் பாணர்.

கஅசு. இசைசிறந்தொருபக்கம்.

கஎஅ-அஅ. சிறக்க விழாநீராட்ட விழவுக்களிசிறந்த வியலுளெனக்கூட்டுக.

சிறக்கவென அடையத் திரிக்க.

கஅஅ. வியலுள் ஆங்கண் - அகன்றவூரிடத்து.

(கஅக) 'காதற் கொழுநனை' என்றது முதல் (ககக) 'நன்மொழி

தீர்த்து' என்றது இறுதியாகக் கோவலனொடு மாறுதற்கு ஒத்தபண்பு.

௧௮ - ௨௰. காதற்கொழுநனை...... ..........மாதவியென்றது

சிலேடை;

காதலிக்கப்பட்ட தன் கொழுநனைப் பிரிந்துவேறுபட்டு அலருறுத அழகிய வளைந்த மகரக்குழையையுடைய மாதவியென்றும், எல்லாரும் காதலிக்கும் கொழுவிய நனையார்தன்மையைவிட்டு முதிர்ந்து அலராகாத வளைந்த தளிரையுடைய குருக்கத்தியென்றுஞ்சொல்லுக.

மாதவி - குருக்கத்தி.

ரெய்தா மாதவியென்றார்.

கண்ணகி பிரிந்து அலரெய்தலாற் பிரிந்து, அல

குருக்கத்தி அலருறாமை செவ்வியழியாமை.

௨௨ - ௩. முல்லை, மல்லிகை, மயிலை, குவளை, கழுநீர் இவை கோதையாகிய பிணையல்.[1]

பயின்ற

[1] "தாழியுள் மலர்ந்த தண்செங் குவளை, பூமுத நறும்போ தொருங்குவைத் பிடித்து" பெருங்கதை, ௧: ௫. ௮௭ - ௮; "தாழிவாய்க்குவளை" (சீவக. ௮௧௯.)

(பி - ம்.) * 'தழவோர்' † 'தண்செங்கழுநீர்'



காமக் களிமகிழ் வெய்திக் காமர்
பூம்பொதி நறுவிரைப் பொழிலாட் டமர்ந்து
நாண்மகி ழிருக்கை நாளங் காடியிற்
பூமலி கானத்துப் புதுமணம் புக்குப்
புகையுஞ் சாந்தும் புலராது சிறந்து

நகையா டாயத்து நன்மொழி திளைத்துக்
குரல்வாய்ப் பாணரொடு நகரப் பரத்தரொடு
திரிதரு மரபிற் கோவலன் போல
இளிவாய் வண்டினொ டின்னிள வேனிலொடு
மலய மாருதந் திரிதரு மறுகிற்
கருமுகில் சுமந்து குறுமுய லொழித்தாங்
கிருகருங் கயலோ டிடைக்குமி ழெழுதி
யங்கண் வானத் தரவுப்பகை யஞ்சித்
திங்களு மீண்டுத் திரிதலு முண்டுகொ
னீர்வாய்த் திங்க ணீணிலத் தமுதின்
சீர்வாய் துவலைத் திருநீர் மாந்தி
மீனேற்றுக் கொடியோன் மெய்பெற வளர்த்த
வான வல்லி வருதலு முண்டுகொ
லிருநில மன்னற்குப் பெருவளங் காட்டத்
திருமகள் புகுந்ததிச் செழும்பதி யாமென
வெரிநிறத் திலவமு முல்லையு மன்றியுங்

ககஎ. பூவின்மிகுதிபற்றிக் கானமென்றார்.

ககரு - எ. பொழில்விளையாட்டு விரும்பி நாடோறும் மகிழ்ந்திருக்கும் இருப்பையுடைய நானங்காடியிற் பூவிற்குமிடங்களிற் செல்விமணத்திலேபுக்கு.

ககஅ. புலராது - புலராமை. ககக. ஆயத்து - ஆயத்தோடே.

உ௦௦. பரதர் - தூர்த்தர்.

கஅஅ - உ௦ரு. வியலுளாங்கண் மாதவிதன்னொடுபொலிந்து எய்தி அமர்ந்து புக்குச் சிறந்து திளைத்துப் பரத்தரொடு பாணரொடு திரிதரும் கோவலன் போல மாருதம் திரிதருமறுகென்க.

உகப. மெய் - வடிவு.

உ௦௨ - கப. திங்களாகிய நிலத்திலே அமுதமார்ந்தி மெய்பெறவென்க;

உகங. ஆமென - ஆமெனக்கூறி

உ௨௨ - ங. இப்பதியிலே திருமகள் புகுந்தகாரணம் மன்னனுக்கு காட்டவென்க.

வனம்

உகச. அன்றி - இமையையன்றி.

## ௫—இந்திரவிழவூரெடுத்தகாதை.

அடிகள்

உ௫௫ கருநெடுங் குவளையுங் குமிழும் பூத்தாங்
குள்வரிக் கோலத் துறுதுணை தேடிக்
கள்ளக் கமலந் திரிதரு முண்டுகொல்
மன்னவன் செங்கோன் மறுத்த லஞ்சிப்
[1] பல்லுயிர் பருகும் பகுவாய்க் கூற்ற
உ௨௦ மாண்மையிற் றிரிந்துத னருந்தொழி றிரியாது
நாணுடைக் கோலத்து நகைமுகங் கோட்டிப்
பண்மொழி நரம்பிற் றிவவியாழ் மிழற்றிப்
பெண்மையிற் றிரியும் பெற்றியு முண்டென
[2] அருவி லாள னொருபெருஞ் சேனை
உ௨௫ யிகலமு ராட்டி யெதிர்நின்று விலக்கியவ
ரெழுதுவரி கோல முழுமெயு முறீஇ
விருந்தொடு புக்க பெருந்தோட் கணவரொ

உடனுறைவு மரீஇ யொருக்கொடு புணர்ந்த
வடமீன் கற்பின் மனையுறை மகளிர்
மாதர்வாண் முகத்து மணித்தோட்டுக் குவளைப்
போதுபுறங் கொடுத்துப் போகிய செங்கடை
விருந்திற் றீர்ந்தில தாயின் யாவது

௨௧௬ - எ. உன்வரிக்கோலம் - இருத்திரிமவேடம். கோலத்து - கோலத்தோடே. உறுதுணை - திருமகள். தாமரையானது தன்வடிவொழிய வேறொரு வடிவுகொள்ளுதல்.

௨௨௨. பண்மொழி நரம்பின் - பண்ணைச்சொல்லுகின்ற யாழ்நரம்பு போல.

௨௨௩. உண்டுகொலென வேறோரிடைச்சொல் வருவிக்க.

௨௨௪ - ரு. (பா) ஒருபெருஞ்சேனை............விலங்கி - பரத்தையரை மாறுபட்ட பூசற்கண்ணே அலைத்து எதிரே நின்று தடுத்து. அன்றியும், விலங்கி விலக்கி; புலவியாலே கூடாதமகளிரைப் போகாம லெதிரே நின்று தடுத்து இங்ஙனம் புகழ்ந்து புலவியைத் தீர்த்தென்றுமாம்.

௨௨௫ - ௬. (பா) அவரெழுதுவரிக்கோலம் - தொய்யில். முழுமெய்யு முறுத்தியென்க. முழுமெய்யு முறுத்தியென்றது - புணர்ந்தென்பதாயிற்று.

௨௩0 - ௩௧. குவளைப்போது தான் தோற்றுப்போகிய.

௨௩௨. யாவதும் - சிறிதும்.

[1] சிலப்பதிகாரம், எ: ௪0. [2] சிலப்பதிகாரம், ௨: ௪௪.

மருந்துர் தருங்கொலிம் மாநில வரைப்பெனக்
கையற்று நடுங்கு நல்வினை நடுநா
ளுள்ளக நறுந்தா துறைப்ப மீதழிந்து
கள்ளக நடுக்குங் கழுநீர் போலக்
கண்ணகி கருங்கணு மாதவி செங்கணு
முண்ணிறை கரந்தகத் தொளித்துநீ ருகுத்தன
வெண்ணுமுறை யிடத்திலும் வலத்திலுந் துடித்தன
விண்ணவர் கோமான் விழவுநா ளகத்தென்.

---

௨௩௩. மாநிலவரைப்பு - பூமியிலுள்ளார். ௨௩௪. நல்வினை - விழா.

(௨௦௫) மறுவிடத்துத் (௨௦௭) திங்களுமுண்டோ; (௨௧௧) வல்லிவருதலு முண்டோ; (௨௧௭) கமலம் திரிதலுமுண்டோ; (௨௨௩) பெற்றியுமுண்டோ ராவெனச்சொல்லிச் (௨௨௪) சேணியாகிய பரத்தையரிடத்துப் போகாமல் (௨௨௫) விலங்கிப் பின்பு தம்மனைகளிலே புக்கு (௨௨௬) எழுதவரிக்கோலத் தைத் தம்மேனிமுழுவதும் உறவித்துப் பின்பு (௨௨௮) ஒழுக்கொடுபுணர்ந்த (௨௨௧) மனையுறை மகளிர் (௨௨௯) (பா) உடனுறைவு மருவுதற்கு (௨௨௭) விருந்தொடுபுக்க கணவர் (௨௩௪) கையற்றுநடுங்கும் நடுநாளென்க.

௨௩௫. (பா) நறுந்தாது எதிப்ப - தாது ஒளிவிட.

உ௬௭ - ௯. கருங்கணென்றது, கண்ணகிக்குப் புணர்ச்சியில்லாமையால்; நிறைகரந்து துன்பத்தாற் கண்கள் நீருகுத்தன; செங்கணென்றுரைத்தது, மாதவிக்குப் புணர்ச்சிவிதும்பலால்; அகத்து நிறைகரந்தொளித்த இன பத்தாற் கண்கள் நீருகுத்தன. கண்ணகிக்கு நிறைகரத்தல் - கற்பாற் பரிகாரப் பட்டதாதல்; ஆற்றுமை மிகுதி கூறிற்று. மாதவிக்கு.........நிறுத்தலைக்கரந்த காமத்தாலே நீருகுத்தன. கண்ணகிக்கு அழுகைக்கண்ணீர்; மாதவிக்கு உவகைக்கண்ணீர் ; எண்ணுமுறை - எண்ணினவடைவே. பின்பு கண்ணகிக்குக் கூட்டமுண்டாகையால் இடக்கண்டுடித்தன ; மாதவிக்குப் பின்பு பிரிவுண்டாகையால் வலக்கண் துடித்தன.



## ௫.—இந்திரவிழவூரெடுத்தகாதை.

உரை.

௧ - ௬. அலைநீ ராடை.................மலர்கதிர் பரப்பி

(இ - ள்.) கடலாகிய ஆடையினையும் மலையாகியமுலையினையும் அம்முலை யாகத்துப் பெரிய யாறாகிய ஆரத்தினையும் மாரியாகிய கூந்தலினையுமுடைய இட மகன்ற பரப்பினையுடைய அரசுகெடுத்தலம்வரும் நிலமடந்தை அல்லற்கா லைப் பசந்து வாரப் பனித்துப் போர்த்த இருளாகிய படாத்தைத் தன் கதிர்க்கை களாலீக்கி அவிரொளி உதயமால்வரையுச்சிக்கட்டோன்றி விரிந்தகதிர்களைப் பரப்பவென்க.

மலை - பொதியிலும், இமயமும். இவற்றைச் சாதியொருமையாற்கூறினுர்; ''பொதியிலு மிமயமும் புணர்முலை யாக'' என்றூர்கதையினும். ஆரப்பேரி யாறு, பேர்யாற்றுரமெனப்

பாடமாற்றுக; ஆரம் - முத்துவடம். மாரி - முகில். அகன்பரப்பு, வினைத்தொகை. புதைத்தல் - போர்த்தல்; மலைநாட்டு வழக்கு. போக - அகல. உலகுவிளங்கவிரொளி - உலகுவிளங்குதற்குக்காரணமாகத் தான் விளங்குமொளி; ஆவது ஞாயிறு. மலர்தல் - விரிதல். பரப்பி, பரப்பவெனத்திரிக்க. வாளாது மண்மடந்தையென்னுது கண்ணகன்பரப்பின் மண்ணகமடந்தையென்று மிகுத்துக்கூறினர், அத்தன்மையாளைப் போர்த்த நீலப்படாத்தைத் தன்தேசினுல் நீக்கிய ஒளியெனற்கு. எனவே செம்பியன் மரபுயர்ச்சி கூறியவாருயிற்று.

படாத்தைநீக்கித் தோன்றிப் பரப்பவென்க.

எ. வேயாமாடமும்—(இ - ள்.) நிலாமுற்றமும், வியன்கல விருக்கையும்—(இ - ள்.) வேற்றுமைப்பட்ட அணிகலம் பெய்த சரக்கறையும்,

வியல் - மிகுதியுமாம்.

அ. மான்கட் காலதர் மாளிகை யிடங்களும் - (இ - ள்.) மானின் கண்போலக் கோணஞ்செய்த சாளரங்களையுடைய மாளிகையிடங்களும்,

காலதர் - சாளரம்.

க - கா. கயவாய் மருங்கில்...........யவன ரிருக்கையும் (இ - ள்.) புகார்முகப்பக்கங்களில் தம்மைக்காண்போர்கண்களை மேற்போக விடாமற்றடுக்கும் பயன் தொலைதலையறியாத மிலேச்சரிருக்குமிடங்களும்,

கக - உ. கலந்தரு திருவின்......... ..இலங்குநீர் வரைப்பும்

(இ - ள்.) மரக்கலந்தரும் செல்வப்பொருட்டால் தாம்பிறந்த நிலத்தை விட்டுப்போந்த பரதேசிகள்பலரும் ஒருநிலத்தாரைப்போலக் கலந்து செறிந்திருக்கும் அலைவாய்க்கரையிருப்பும்,

கரு. வண்ணமும்—(இ - ள்.) தொய்யிற்குழம்பு முதலியவும்,

[1] இங்கே தந்துரைத்தவற்றை அந்திமாலைச்சிறப்புச்செய்காதை அ - ஆம் அடி முதலியவற்றிற் காணலாம். [2] சீவகசிந்தாமணி, உஉகூக - ஆ செய்.







எழுதுவண்ணமுமாம்.

சுண்ணமும்—(இ - ள்.) பூசுசுண்ணமும்,

தண்ணறுஞ் சாந்தமும்—(இ-ள்.) குளிர்ந்த நறியபசுங்கூட்டும்,

கச. பூவும்—(இ - ள்.) விடுபூத் தொடைப்பூக் கட்டுப்பூவென்னும் மூவகைப்பூவகையும்,

புகையும்—(இ - ள்.) புகையுறுப்பும்,

அவை: [1] "நேர்கட்டி செந்தே னிரியாசம் பச்சிலை, யாரமாறு" எனவிவை.

மகிழுறப்போ

மேவிய விரையும்—(இ - ள்.) தம்மிற்பொருந்திய விரையும்,

அவை: [2] "கொட்டந் துருக்கந் தகர மகிலார, மொட்டிய விரை" எனவிவை.

வைந்தும்

கரு. பகர்வனர் திரிதரு நகர வீதியும் - (இ - ள்.) வாராய்த் திரிதருதலைச்செய்யும் நகரத்தெருவு மென்க.

இவற்றை விற்ப

மாடமும், இருக்கையும், இடங்களும், இருக்கையும், வரைப்பும், வண்ண முதல் விரையீறுவுள்ளனவற்றை விற்பவராயத் தெருவுமென்க.

திரிதருதலைச்செயயும் நகரத்
கசு - எ. பட்டினு
மயிரினும்...........காருக ரிருக்கையும்

(இ - ள்.) பட்டுநூலானும எலிமயிரானும் பருத்திநூலானும் நுண்ணிய தொழில்களை ஊசியாற் பிணிக்கும் பட்டுச்சாலியரிருக்குமிடங்களும்,

* அச்சுக்கட்டிகளென்பாருமுளர். காருகத்தொழில் இருவகைத்து; [1] "பருத்திநூல் பட்டுநூலமைத்தாடை யாக்கலுஞ், சுமத்தலும் † பிறவுங் காருக வினைத்தொழில்" என்றாராகலின். இவற்றுள் ஈண்டுக் கூறியோர் முன்னையோர்.

கஅ - உக. தூசுந்துகிரும்........நனந்தலை மறுகும்

(இ - ள்.) பட்டும் பவளமும் சந்தனமும் அகிலும் குற்றமற்ற முத்தும் ஒழிந்தமணிகளும் பொன்னுமாகிய இவற்றைப் பொற்பணியோடே இலக்கங் காண்போர் ஓரெண்ணினும் எண்ணிக் கரைகாணவரிய வளம் தம்மிடந்தோறும மயக்கப்பட்டனவற்றையுடைய இடமகன்ற மறுகுகளும்,

உஉ - ரு. பால்வகை தெரிந்த..........கூல வீதியும்

(இ - ள்.) பகுதிவேறுபடத்தெரிந்த முதிரைமுதலிய பண்டத்தோடு எண் வகைக்கூலமும் குவித்துவிற்கும் கூலக்கடைத்தெருவும்,

---

[1] "நேர்கட்டி செந்தே னிரியாசங் கப்பூர, மார மகிலுமறட்போ னைக்காட்டுவேர் நச்சினார்க்கினியர் (சீவக. ௬௩௪.)

ரைந்து."

[5] பிங்கலந்தை ஐயர்வகை, எ௮. [6] திவாகரம் கட - வது.

(பி - ம்.) * 'அச்சக்கொட்டிகள்.' ‡ 'அஞ்சதுக்.'

## ரு—இந்திரவிழவூரெடுத்தகாதை.

கஙரு

என்வகைக்கூலமாவன : "நெல்லுப் புல்லு வரகுதினை சாமை, இறுங்கு * தோரையொடு கழைவிளை நெல்லே" எனவிவை. இனிக் கூலம் பதினெண் வகைத்தென்பர் கூத்தநூலாசிரியர் ; என்னை? [1] "பதினெண் கூலமு முழவர்க்கு மிகுக" என்றாராகலின் ; பலசரக்கென்பாருமுளர்.

உ௪. காழியர்—(இ - ள்.) பிட்டுவாணிகரும், வண்ணருமாம்; [2] "காழியர், கௌவைப் பாரப்பின் வெவ்வுவர்ப் பொழிப்ப" என்றார் அகப்பாட்டினும்.

கூவியர்—(இ - ள்.) அப்பவாணிகரும், [3] "காரகற் கூவியன் பாகொடு பிடித்த" என்றார் பெரும்பாணாற்றினும்.

கண்ணொடை யாட்டியர்—(இ - ள்.) கள்ளைவிற்கும் வலைச்சியரும், நொடை-விலை; [4] "பீனெடுத்து நெற்குவைஇ" என்றார் புறப்பாட்டினும்.

உரு.

மீன்விலைப்பரதவர்—(இ-ள்.) மீன்விலையையுடையபட்டினவரும்,

வெள்ளுப்புப்பகருநர்—(இ - ள்.) உமணரும் உமட்டியரும்; அளவருமாம்.

உ௬. பாசவர்—(இ - ள்) [5] இலையமுதிடுவாரும்,
அன்றிக் கயிறுதிரித்து விற்பாருமாம்; பச்சிறைச்சி
சூட்டிறைச்சி விற்பாருமாம்.

வாசவர்—(இ - ள்.) பஞ்சவாசம்விற்பாரும்,

அவை, "தக்கோலந் தீம்பூத் தகைசா லிலவங்கங், கப்பூரஞ் சாதியோ டைந்து" எனவிவை.

உ௬ - எ. மைந்நிண விலைஞரோடு.........இருக்கையும்
(இ - ள்.) ஆட்டுவாணிகருடனே பரவருஞ் செறிந்த ஊன்மிக்க இருப்பிடங்களும,

ஓசுநர் - எண்ணெய்வாணிகருமென்ப.

உ௮. கஞ்சகாரரும்—(இ - ள்.) வெண்கலக் கன்னரும்,

செம்புசெய்குநரும்—(இ - ள்.) செம்புகொட்டிகளும்,

உ௯. மரங்கொல்தச்சரும்—(இ - ள்.)
மரத்தைவெட்டுந்தச்சரும்,

கொல்லல் - வெட்டல்.

கருங்கைக் கொல்லரும்—(இ-ள்.) வலிய கையையுடைய கொல்லரும்,

---

[1] மதிவாணர் நாடகத்தமிழ்நூல்.
[2] அகநானூறு, அ௬.
[3] பெரும்பாணாற்றுப்படை, ககள.
[4] புறநானூறு, ககக.
[5] இலையமுது - வெற்றிலை.
(பி - ம்.) *

# சிலப்பதிகாரம்

கருங்கை இருவகைத்து; என்னே? "கொன்றுவாழ் தொழிலினும் வன்பணித் தொழிலினுங், கன்றிய தொழிற்கை கருங்கை யெனப்படும்' என்றாராகலின். ஈண்டு வலிய கையையுடைய கொல்லருமென்பதாயிற்று.

௩௰. [1] கண்ணுள் வினைஞரும்—(இ - ள்.) சித்திரகாரிகளும்,

மண்ணீட்டாளரும்—(இ - ள்.) சிற்பாசாரிகளும்.

அன்றிச் சுதையாற் பாவையுள்ளிட்டன பண்ணுவாரென்றுமாம்; குயவருமென்ப. மண் - ஈண்டுச் சுதை; [2] "மண்ணே டியைந்த மரத்தனையர்" என்றாராகலின்.

௩௧. பொன்செய் கொல்லரும்—(இ - ள்.) உருக்குத்தட்டாரும்,

நன்கலந் தருநரும்—(இ - ள்.) இரத்தினப்பணித்தட்டாரும்,

௩௨. துன்ன காரரும்—(இ - ள்.) [3] சிப்பியரும்,

தோலின் றுன்னரும்—(இ - ள்.) உறைகாரரும்,

பறம்பர் முதலாயினருமாம்.

௩௩ - ௪. கிழியினுங் கிடையினும்........பால்கெழு மாக்களும்

(இ - ள்.) கிழி கிடையென்பவற்றாற் புட்பம் வாடாமாலை பொய்க் கொண்டைமுதலிய உருப்பிறக்குந்தொழில்களை மிகுத்துக்காட்டிக் குற்றமற்ற கைத்தொழிலால் வேறுபட்ட இயல்பையுடையோரும்,

கிழி - சீரை. கிடை - கிடேச்சு.

இனி, இழியாற் படிமை படமுதலியவும், இடையால் விலங்கு பூ பூங்கொத்துமுதலியவும் அமைப்போருமாம்.

பறவை

௬௫ - எ. குழலினும் யாழினும்.........இருக்கையும்

(இ - ள்.) துளைக்கருவியானும் நரப்புக்கருவியானும் குரன்முதலாயுள்ள எழிலிசையினையும் சரிகமபதநி யென்னும் ஏழெழுத்தினையும் மூவகைவங்கியத் திலும் நால்வகையாழினும் பிறக்கும் பண்களுக்கு இன்றியமையாத மூவேழு திறத்தையுங்குற்றமின்றாக இசைத்துக்காட்டவல்ல பெறுதற்கு அரிய இசை மரபையறிந்த குழலர் பாணர்முதலாய பெரிய இசைக்காரரிருக்குமிடங்களு மென்க.

உம்மையால் எழுத்துக்களுங்கொள்ளப்பட்டன.

௬௮ - க. சிறுகுறுங் கைவினை.........பாக்கமும்

(இ - ள்.) ஒழுக்கத்திற்சிறியராய்ச் சிறுதொழிலைப் பிறர்க்குச்செய்து அதனுன்வரும் பொருளையுண்ணும் கைவினையாளரோடே முற்கூறிய யவனர் முதல் பெரும்பாணிருயுள்ளாரோடு குற்றமின்றிவிளங்கும் மென்க.

மருஊர்ப்பாக்கமு

---

[1] கன்னுண்வினைஞரென்பதற்கு நோக்கினர் கண்ணிடத்தே தந்தொழில நிற த்துவோரென்பர் நச்சினர்க்கினியர்; (பத். பக். உகக.)

[2] திருக்குறள், ௯௭௯. [3] சிப்பியர் - தையற்காரர்.

# ரு.—இந்திரவிழவூரெடுத்தகாதை.

சங. கோவியன் வீதியும்—(இ - ள்.) இராசப்பெருந்தெருவும், செண்டுவெளிப்புறத்தெருவென்பாருமுளர்.

கொடித்தேர் வீதியும்—(இ - ள்.) கொடியணிந்த தேரோடும் வீதியும்,

விழா

சக. பீடிகைத் தெருவும்—(இ - ள்.) கடைத்தெருவும்,

சக - உ. பெருங்குடி வாணிகர் மாட மறுகும் (இ - ள்.) [1] பெரிய குடிப்பிறப்பையுடைய வாணிகரது மாடமாளிகைத்தெருவும்,

சஉ. மறையோ ரிருக்கையும்—(இ - ள்.) பஞ்சக்கிராமிகளிருக்கு மிடமும்,

சங - ரு. வீழ்குடி யுழவரொடு............இருக்கையும் (இ - ள்.) உழவின்மேல்விரும்பும் குடிகளோடும் உழவரோடும் மருத்துவ நூலோரும் சோதிடநூலோரும் வேறுவேறு வகைப்படத்தெரிந்த பன்முறைமை யோடிருக்கும் இருப்பிடங்களும்,

வீழ்குடி - காணியாளர்; [2] "பகடு புறந்தருநர் பார மோம்பிக், குடிபுறந் தருகுவை யாயின்" என்றார் பிறரும்; யாவரும் விரும்புங்குடியென்றுமாம். [3] "உழுதுண்டு......செல்பவர்" என்பதனாற் கொள்க; குடியொடும் உழவரொடு மெனக; அன்றி உழவில்விரும்புங்குடியெனவுமாம்; [4] "உழவின்கட் காமுற்று வாழ்தல்" என்றாராகலின்; வேளாண் [5] சாமந்த ரென்பாருமுளர்.

சசு. திருமணி குயிற்றுநர்—(இ - ள்.) முத்துக்கோப்பாரும்,

[வரிசையான] வேகடிகளுமாம்.

சகூ - எ. சிறந்த கொள்கையொடு.........அகன்பெரு வீதியும்

(இ - ள்.) தமக்குச்சிறந்த கோட்பாட்டால் அழகிய வாழ்கின்ற அகன்ற பெரிய வீதியும்,

வளைகளையறுப்பாரும்

வளைபோழுநரென்றது-சங்கறுப்பாரை. அணிவளை, வினைத்தொகையுமாம்.

வீழ்குடிமுதல் போழுநரீறாயுள்ளவர் மிக்க செருக்கோடிருக்கும் வீதியுமெ னினுமமையும்.

சஅ. சூதர்—(இ - ள்.) நின்றேத்துவார்,

மாகதர்—(இ - ள்.) இருந்தேத்துவார்,

வேதாளிகரொடு—(இ - ள்.) வைதாளியாடுவாரென்று சொல்லப் பட்ட இவரோடே,

---

[1] பெருங்குடி வாணிகர் - மூவகைவாணிகருள் ஒருபாலார்; "பெருங்குடி கன் பெருமட மகளே" என்றார் முன்னும்; சிலப். உ: எசு.

வாணி

[2] புறநானூறு, கடு.

[3] திருக்குறள், ௬0கக.

[4] திரிகடுகம், சஉ.

[5] சாம்ந்தர் - சித்றாசர்.

[மிட்டையகண்டருமென்ப.]

சகூ. நாழிகைக் கணக்கர்—(இ - ள்.) [1]கடிகையார்,

அவர் அரசனுக்குச் சென்றநாழிகைக்குக் கவிசொல்லுவார்; "பூமென் கணையும் பொருசிலையுங் கைக்கொண்டு, காமன் திரியுங் கருவூரா - யாமங்க, ளொன்றுபோ யொன்றுபோ யொன்றுபோய நாழிகையு, மொன்றுபோ யொன்றுபோ யொன்று" என; நாழிகைவட்டிலிடுவாருமென்ப; [2] "சூதர்வாழ்த்த மாகதர் றுவல, வேதா ளிகரொடு நாழிகை யிசைப்ப" என்றார் பிறரும்.

நலம்பெறு கண்ணுளர்—(இ - ள்.) தாம் கொண்ட கோலத்தானும் கூத்தானும் நலம்பெறும் சாந்திக்கூத்தர்,

என்னை? "வாசிகை வைத்து மணித்தோ டணியணிந்து, மூசிய அண்ண முகத்தெழுதித் - தேசுடனே, யேந்துசுடர் வாள்பிடித்திட் டீசனுக்குங் காளிக்குஞ், சாந்திக்கூத் தாடத் தகும்." என்பதனுனறிக; மதங்கரென்பாரு முளர்.

ருo. காவற் கணிகையர்—(இ - ள்.) களத்தாடுங் கூத்திகள்,

* இராக்கடைப் பெண்டுகளென்பாரு முளர்.

ஆடற்கூத்தியர்—(இ - ள்.) அகக்கூத்தாடும் பதியிலார்,

ருக. [3] பூவிலை மடந்தையர்—(இ - ள்.)

அற்றைப்பரிசங்கொள்வார்,

ஏவற் சிலதியர்—(இ - ள்.) மடைப்பள்ளியாரடியார்,

ருஉ. பயிறொழிற் குயிலுவர் - (இ - ள்.) தோற்கருவி

இசைப்பார்,

பன்முறைக் கருவியர்—(இ - ள்.) படைக்கும்

உற்சவத்துக்குங்

கொட்டுவார்,

யாழ்முதலாகிய நரப்புக்கருவிகளையுடையாருமென்ப.

ருஈ. நகைவேழம்பரொடு— (இ - ள்.)

[சாரமாணிகளோடே,]

சிரிக்கும்பரியாசகருடனுமென்ப.

வகைதெரி யிருக்கையும்—(இ - ள்.) சூதர்முதல் வேழம்பரீறாக எண்ணப்பட்ட இவர்கள் தத்தம் இனத்தின்வகைதெரிந்த இருப்பிடங்களுமென்க.

ருச. கடும்பரி கடவுநர்—(இ - ள்.) கடிய பரிகளைக்

† அச்சுவவாரியர்,

கடவுவாராகிய

களிற்றின் பாகர்—(இ - ள்.) யானைப்பாகர்,

இன் - சாரியை.

ருரு. நெடுந்தே ரூருநர்—(இ - ள்.) தேர்ப்பாகர்,

---

[1] "கடிகையர்கவிதைபோதை" கம்ப. எழுச்சி. எக.

[2] மதுரைக்காஞ்சி, ௬௭௦ - ௭௧.

---

[3] சீவகசிந்தாமணி, ௨௭௩௫ - ந. மேற்.

(பி - ம்.) * 'இராக்கிடை' † 'அச்சுவவாதியர்'

## ரு.—இந்திரவிழவூரெடுத்தகாதை.

கடுங்கண் மறவர்-(இ-ள்.) சினக்கண்ணையுடைய காலாட்படைத்தலைவர்,

கடுமை - சினம். இனி முன்னர்க்கூறிய முப்படைக்கும் புடைய வீரரென்றுமாம்.

தறுகண்மைய

௫௬. இருந்துபுறஞ் சுற்றிய பெரும்பா யிருக்கையும் - (இ - ள்.)
என்று கூறப்பட்ட வீரர்கள் அரசன்கோயிலைச் சூழவிருக்கும் பெரியபரந்த
இருப்புக்களுமென்க.

௫௭ - அ. பீடுகெழு சிறப்பின்..........பாக்கமும்

(இ - ள்.) கோவியன் வீதி முதலாக இருக்கையிறுதியாகிய இருப்பிடங்களை
யுடைய பெருமையமைந்த சிறப்பினையுடைய பெரியோர்திரண்ட பாடலமைந்த
சிறப்பினையுடைய பட்டினப்பாக்கமுமென்க.

௬௧ - ௬௭ இருபெரு வேந்தர்........கடைகெழு பீடிகை

இதில், (௬௬) "சித்திரைச் சித்திரைத் திங்கள் * சேர்ந்தென" என்பதனைப் புழுக்கன்முதலிய சொரிந்தென்பதனோடு முடிக்க.

(இ - ள்.) பெரியவேந்தரிருவர் போர்குறித்து வந்துவிட்ட பாசறையிருப்புக்கு நடுப்பட்டநிலம் போர்க்களமானாற்போல முற்கூறிய மருவூர்ப்பாக்கமும் பட்டினப்பாக்கமுமென இரண்டுகூறுபட்ட ஊர்க்குநடுப்பட்ட பொதுநிலமாகிய நாளங்காடி ; அஃது எத்தன்மையதாகிய நாளங்காடியெனின், நிரைபடச்செறிந்த சோலையின்மரங்களிற் கால்களே தூணாகக் கட்டப்பட்ட கடைகளையுடைய கொடுப்போர் கொள்வோரோதை இடையறாது

நிலைபெற்ற நாளங்காடியென்க. அந்நாளங்காடித்தெருவின்கண்ணே பூதத்து வாயிற் பீடிகையென்க. அஃது எத்தன்மையதாகிய பூதமெனின், வெற்றிபொருந்திய வேலையுடைய முசுகுந்தனென்னும் மன்னனுக்குவரும் இடையூற்றை ஒழிப்பாயெனத் தேவர்கோன் ஏவுதலானே அத்தேவருலகினின்றும் போந்து அந்நாண்முதலாகப் பலிகொண்டு போதும்[1] பூதமென்க. அப்பூதத்து நாளங்காடிக்கட்

யென்க.

பலிபீடிகையிடத்தே

அல்லங்காடியுமுண்டாதலின், இதனை நாளங்காடியென்றார்.

சுஅ - எரு. புழுக்கலு நோலையும்........ஓதையிற் பெயர

(இ - ள்.) சித்திரைமாதத்துச் சித்திரைநாளிலே நிறைமதிசேர்ந்ததாக அந்நாளிலே நாணிலிகளைப்போல வாய்சோர்ந்துரைக்கும் மாதர்க்கோலத்து மறக்குடிப்பெண்டிர் அப்பீடிகைக்கண்ணே புழுக்கல்முதலியவற்றையுகுத்து எம்மன்னனுடைய நிலமுழுதும் பசிமுதலியனநீங்கி வசிமுதலியனசுரக்கவென வாழ்த்தித் துணங்கையராய்க் குரவையராய் அணங்கெழுந்தாடிப் போடே பெயரவென்க.

கொக்கரிப்

[1] இந்தப்பூதம் முசுகுந்தன்பொருட்டுத் தேவருலகினின்றும் இந்திரனேவலால் இந்நகரில் வந்துபலியுண்டிருந்ததை, இந்நூல், சு - ஆம் காதை எ - ஆம் அடிமுதலியவற்றாலும் அவற்றின் உரையாலுமுணர்க. (பி - ம்.) * 'சேர்த்தெனவந்தான்.'



புழுக்கல் - முதிரைப்பண்டம்; அவரை துவரை முதலியன; "புழுக்குவ புழுக்கல்" என்றாராகலின். நோலை - * எட்கசிவு. விழுக்குடைமடை - நிணச்சோறு; பொங்கல் - கள்ளு ; பொங்கற்சோறுமென்ப. துணங்கை - துணங்கைக் கூத்து; என்னை? [1] "முடக்கிய விருகை பழுப்புடை யொற்றித் -

தடக்கிய நடை யது துணங்கை யாகும்" என்றாராகலின். இதனைச் சிங்கியென்பாருமுளர் குர லை-கைகோத்தாடுங்கூத்து. அணங்கெழுந்தாடி-தேவரேறியாடி. பகை-உட்பகை. வசி - மழை ; [3] " வசித்தொழி லுதவ மாதிரங் கொழுப்ப." என்றார் பிறரும் ; வசியுமாம். மாதர்க் கோலம் - கண்டு எவருங்காதலிக்கப்படும் ஒப்பனை. வல வையின் - நாணிலிகளைப்போல ; [4] வலவைக ளல்லாதார்" என்றார் வல்லபத்தாலென்பாருமுளர். மூதிற்பெண்டிர் - மறக்குடிமகளிர்.

பிறரும் ;

சேர்ந்ததாக அந்நாள் ஒளி கதிர்பரப்பாநிற்பப் புழுக்கல் முதலியன பீடிகை யிலே சொரிந்து பெண்டிர் வாழ்த்தி ஆடிப் பெயரவென்க.

இவர் அரசன்கோயில் அகப்பரிசாரமகளிர்.

எக - அஅ. மருவூர் மருங்கின்......... .....வான்பலி யூட்டி

(இ - ள்.) அந்த முசுகுந்தன் இருவகைப் பாக்கத்தோரும் அக்காலத்துப் பூதத்திற்குப் பலிகொடுப்பதற்கு முன்பினென்று தந்தமில் முந்துகூற வலிய
வரவோர் நெருங்கிச்சென்று தம்மைத் தாமேயிடும்பலியை உண்ணும் பீடிகை யிலே மன்னற்கு உற்றதை ஒழிப்பாயாகெனப் பூதத்திற்குச்சொல்லிப் பலிகொடுத்தலைப் புரிந்தோர் அப்பலிக்கும் வலிக்கும் வரம்பாகக்கடவரென அவ்வரசன்குழுவும் ஆயமும் அக்காலத்தே நிருமித்தலாலே இக்காலத்து வீரரும் மாக்

களும் கவணினராய்த்தோலோடு வேற்பரப்பினராய் அமர்க்களப்பரப்பிலே உடற் கரித்து ஆர்த்துக் களங்கொண்டவீரர் பார்த்தோரை அச்சமுறுத்துக் கடை சிவந்த சுடுங்கொள்ளிபோலும் பார்வையையுடைய தமது பசுந்தலை வேந்தன் கொற்றங்கொள்கெனப் பேசும்படி அரிந்து ஒப்பித்துப் பீடிகையிலேவைத்த அப்பொழுதே அக்குறையுடல்கள் தமக்கு வாயின்மையின் தத்தந்தோளிற் பூண்ட மயிர்க்கண்முரசின்வாயால் உயிர்க்கடன்தந்தோம்; கொண்மினென்று நின்று பலியூட்டியென்க.

கழி - ஊன். பிணி - பிணித்தல். கறை - கறுப்பு. தோல் - பரிசை; [1] "மழை யென மருளும் பஃறோல்" என்றாராகலின்; கருங்கடகென்பாருமுளர். மெய் புறத்தீண்டி - உடற்கரித்து அழுவம் - பரப்பு. சூர்த்து - அச்சமுறுத்து. என்றது [5] "நீண்டபலி பீடத்தி லறுத்து வைத்த நெறிக்குஞ்சித் தலையைத்தன் வினமென் றெண்ணி, யாண்டலைப்புள் ளருகணைந்து பார்க்கு மாலோ வலைதலு மச் சிரமச்ச முறுத்துமாலோ" என்றாற்போல்வரும்; [விருத்திச்செய்யுள்;] சுழன்றென்பாருமுளர். சுடுநோக்கு - சுடுவதுபோலுநோக்கு; என்றது கொள்ளிக்கண்; [6] "கண்ணுட் டீயாற் சுட்டுநோக்கி" என்றார் பிறரும். கருந்தலை -

[1] திவாகரம், ஒன்பதாவது.
[3] மணிமேகலை, கச: இஎ.
[3] நாலடியார், நன்றியில்செல்வம், அ.
[4] புறநானூறு, கஎ.
[5] கலிங்கத்துப்பரணி, கோயில் பாடியது, கசு.
[6] சீவகசிந்தாமணி. அ௦எ.
(பி - ம்.) [2] 'எட்கி.'

## ரு.—இந்திரவிழவூரெடுத்தகாதை.

[illegible]

பசுந்தலை. நலங்கொளவைத்தென்றது - தமது அரிந்த தலையிற் குலைந்தமயிரையும் கோதிமுடித்துக் குருதித்திலதத்தையும் நுதலிலே அணிந்துவைத்தென்றவாறு; என்னை? "மோடி முன்றலையை வைப்பரேமுடி குலைந்த குஞ்சியை முடிப்பரே, யாடி நின்றுகுரு திப்பு துத்திலத மம்மு கத்தினி லமைப்பரே" என்பது; (கலிச் சக்கரவிருத்தி.) உருமு -

இடி. மயிர்க்கண்முரசம் - புலியைப்பொருது கொன்றுநின்று சிலைத்துக் கோட்டுமண்கொண்ட ஏறு இறந்துழி அதன் உரிவையை மயிர்சீவாமற் போர்த்தமுரசு; என்னை? [1] "புனிமருப் பழுந்தக் குத்திப் புலியொடு பொருது வென்ற, கனைகுர லுருமுச் சீற்றக் கதழ்விடை யுரிவை போர்த்த, தனைகுரன் முரசத் தானைத் தோன்றலைத் தம்பி னென்று, னணிமல ரலங்கற் கண்ணி நந்தனுந் தொழுது சேர்ந்தான்" எனவும், [2]"கொல் லேற்றுப் பசுந்தோல் சீவாது போர்த்த, மயிர்க்கண் முரச மோவில கறங்க" எனவும் சொன்னார் பிறரும்.

முரசொடுவான்பலியூட்டி - முரசத்தால் உயிர்ப் பலியூட்டி; என்றது [3] "அடிக்கழுத்தி னுடன்சிரத்தை யரிவ ராலோ வரிந்த சிர மணங்கின்கைக் கொடுப்ப ராலோ, கொடுத்தசிரங் கொற்றவையைத் துதி க்குமாலோ குறையுடலங் கும்பிட்டு நிற்குமாலோ" எனவும், "மண்ணிரு ளற வறுத்த தங்கடலை வைத்த பீடிகை வளங்கொள, விண்ணி னுயகிதன் யாக சாலதொறு மீள வுஞ்சிலர் மிறைப்பரே" எனவும்வரும்; இவற்றாற்சொல்லி யவை, [4] அவிப்பலியென்னும் புறப்பொருட்பகுதியும், காப்பியத்துக்கு அங்க மான நவச்சுவையுள் வீரச்சுவையவிநயமுமெனக.

வரம்பாகெனக் கவணினர் பரப்பினராய்த் தீண்டிக் கொண்டோர் கருந்தலை கொள்கென வைத்து ஊட்டவென வினைமுடிக்க.

ஊட்டவெனத்திரிக்க.

இனி, முன்னாட் கரிகாலன் செய்தசெயல் கூறுவார்:—

**அகூ - கூசு.** இருநில மருங்கில்...........போகிய வங்நாள்

(இ - ள்.) தமிழ்நாட்டெல்லையுள் தன்னோடு எதிர்த்துப்

பொருமரசரை
இரண்டுதிசையினும்பெருத கரிகாலன் போரிலே பேராசையுடையவனாதலின், வடதிசை பெருந்திசையாதலிற் பகைபெறலாமெனக்கருதி ஆண்டுச்சேறற்கு விரும்பி வாளும் குடையும் முரசும் நாளோடுபெயர்த்து என்வலிகெழுதோள் இத்திசையிலாயினும் நணுநரைப் பெறுவதாகவேண்டுமென்று தான் வழிபடு தெய்வத்தை மனத்தான்வணங்கி அவ்வடதிசையைநோக்கிப் போகிய அங்காளிலென்க.

பொருநரை இருநிலமருங்கிற் பெறு வளவன் பெயர்த்துப் பெறுக என் தோளெனப் போகிய அங்காளிலென்க.

இருநிலமருங்கினென்றது - இவன் ஆளும் நிலவெல்லைப்புறத்தென்பதாயிற்று; ஆகவே மேற்கும் தெற்குமெனக்கொள்க; என்றது சேர பாண்டியருடையநாடுகளை.

[1] சீவகசிந்தாமணி, உ௫௪௬.
[2] மதுரைக்காஞ்சி, எக௨ - க.
[3] கலிங்க. கோயில். கஅ.
[4] பு - வெ. வாகைப்படலம், கO.

உக



இனி இருநிலமருங்கிலென்றதற்குத் தமிழ்ப்பூமி இருகூற்றிலெனினுமமையும். வாளும்குடையும் முரசும்பெயர்த்தல் - வாணாட்கோள், குடைநாட்கோள் முரசநாட்கோ ளென்பன; இவை நாட் கொண்டுபெயர்த்தல். இவற்றுள், வாணாட்கோடல்:—[1]"செற்றார்மேற் செலவமர்ந்து,கொற்றவா ணாட்கொண்டன்று."

வரலாறு : "அதிர்வ ராய்ந்தகா ளாழித்தேர் மன்ன, னெதிர்நிலங் கொள்வா

னியக்க-மதிர்திகலிப், பின்பகலேயன்றியும் பேணு ரகாட்டு, நன்பகலுங் கூகை கரும்." குடைநாட்கோட்லென்றது:—[1] "பெயதாமஞ் சுரும்பிமிரப் பெரும்புல
-வர் புகழ்பாடக், கொய்தார் மன்னவன் குடைநாட் கொண்டன்று."
வரலாறு:
"முன்னர் முரசிரங்க மூரிக் கடற்றானை, தன்னருந் துப்பிற் றொழுதெழா -
மன்னை, ருடைநா ளுலந்தனவா லோதநீர் வேலிக், குடைநா ளிறைவன் கொள."
முரசுநாட்கோடலென்றது : [2] " மாசற
விசித்த..........ஈங்கிதுசெயலே."
பிறவும்
யதிலைச
வந்த வழிக்காண்க. மண்ணகமருங்கின் - இந்நிலவெல்லையுள். புண்ணி
- வடதிசை. முகம் - இடம்.

கடு - அ. அசைவி லூக்கத்து..........பெயர்வோற்கு

(இ - ள். ) அங்ஙனம் பொருவாரைப்பெறவேண்டி
வடதிசைநோக்கிப் போகின்றநாளிலே இமையவருறையும் இமயமலை
பகையாகக் குறுக்கிட்டு விலக் கிற்றலின்,மனஞ்சலித்து
மீளுகின்றவன்,மடிதலின்றிமேலுஞ்செல்லமுயலும் என்னுசை
பின்னிட்டொழிய இம்மலை எனக்குப் பகையாகக் குறுக்கிட்டு விலக்
கிற்றென முனிந்து அதன்பிடரிடத்தே தனதுபுலியைப்பொறித்துத்
தான் வேட்டதுபெறுத கோட்பாட்டால் மீள்கின்ற கரிகாலற்கென்க.

அசைவு - மடிதல். ஊக்கம் - மனவெழுச்சியும் முயற்சியுமாம். பிறக்கு -
பிருதக்கென்னும் வடமொழிச்சிதைவென்க ; வேறாகவென்றபடி. பிடர் - புறக்
கழுத்து. தலை - இடம் ஒற்றி - பொறித்து. பிடர்த்தலையொற்றியென்றது-தன்
ஞேடு எதிர்த்துவிலக்குதலின் அதனைப் புறங்காண்டற்கும்
அதன்வடபாலும் தனது ஆணைசேறற்கும் சாத்தனருளால் தான்பெற்ற
செண்டினாலே அதனை அடித்துத் திரித்துப் பொறித்து மதித்து

நிறுத்தானெனவுணர்க; என்னே?

[1] "செண்டு கொண்டுகரி காலனொரு காலி லிமையச் சிமைய மால்வரை திரித் தருளி மீள வதனைப், பண்டு நின்றபடி நிற்கவிது வென்று முதுகிற் பாய்பு லிப் பொறி குறித்தது மறித்தபொழுதே" எனவும், "கச்சி வளைக்கைச்சி காமக் கோட் டங்காவன், மெச்சி யினிதிருக்கு மெய்ச்சாத்தன் - கைச்செண்டு, கம் பக் களிற்றுக் கரிகாற் பெருவளத்தா ன், செம்பொற் கிரிதிரித்த

வும் கூறினாராகலின்.

செண்டு" என

---

[1] புறப்பொருள் வெண்பாமாலை, வஞ்சிப்படலம், ௪.

[2] " " " ரு.

[3] புறநானூறு, ௯௦.

[4] கலிங்க. இராச. ௩; "இலங்கு வேற்கரி காற்பெரு வளத்தோன், வன்றி றற்புலி யிமயமால் வரைமேல் வைக்க வேகுவோன்" என்றார்; பெரிய. திருக்குறிப்பு. ௮௫.

# ரு.—இந்திரவிழவூரெடுத்தகாதை.

[illegible]

௯௯ - ௧௦௦. மாநீர் வேலி....................பந்தரும்.

(இ - ள்.) கடலை அரணாகவுடைய வச்சிரநாட்டுக்கோன் தான் முறைமையில் திறையாகவிட்ட அவனது முத்தின்பந்தரும்,

இடக்கடவ

வேலி - அரண். வச்சிரநாடு - [1] * சோணைக்கரை. இறை - திறை.

கொற் றப்பந்தர் - அவன்றனக்குக் கொற்றத்தான்வந்த பந்தர்; அது மேற்கூறுப. அன்றி அக் கொற்றவன்முன்னர் நிற்கும்பந்தரெனினுமமையும். இவன் [3]உதயசேனன்.

கoக - உ.

மகதநன் ஞட்டு..............பட்டிமண் டபமும்

(இ-ள்) வாட்போர் வாய்ப்புடையனுகிய மகதவேந்தன் பகையாற் பொருது தாங்கமாட்டாது அப்பகையிடத்துத் தரப்பட்ட பட்டிமண்டபமும்,

[4] பட்டிமண்டபம் - வித்தியாமண்டபம்; ஒலக்கமண்டபமுமென்ப. புறம் - இடம். இவன் சத்துரு.

கoந - ச. அவந்தி வேந்தன்..................வாயிலும்

(இ - ள்.) அவந்திநாட்டுவேந்தன் உவந்தனனுய்க் கொடுத்த மிகவுயர்ந்த தொழின்மரபையுடைய வாயிற்றோரணமும்,

அவந்தி - உஞ்சை. தொழின்மரபு; "குலப்புடைவை" என்றாற்போல நின்றது. இவன் மித்திரன்.

கoரு - கo.

பொன்னினு மணியினும்.............மண்டபம்

னும்

(இ. - ள்.) இப்பந்தரும் மண்டமும் தோரணமுமென்னுமிவை பொன்னு மணியானுஞ்செய்யப்பட்டனவாயினும் நண்ணிய தொழில்வல்ல கம்மியராற்பண்ணப்படாதன; ஆயின் இவை யாராற்

பாய்த்தள், தேரைப்பாய்த்துளென்பதுபோல.

---

[1] சிலப். அரங்கேற்றுகாதை, ௨ - ௬.
[2] தொல்காப்பியம், வினையியல், ௬. ௪௫.
[3] " எச்சவியல், " ௭௨.
[4] பொருநராற்றுப்படை, ௨௭௬ - ௭.
[5] பாய்த்தள் - பாய்தல்.



படப்பை - தோட்டக்கூறு. புகார், ஆகுபெயர். மணிவிழாப் அழகிய விழாவென்க. காண்போன், தொழிற்பெயர்

பாடமாயின்,

௧௫. மாயோன் பாணியும்—(இ-ள்.)

திருமாலைப்பரவுந்தேவபாணியும்,

இனிப் பதினோராடல் கூறுவான் எடுத்துக் கொண்டார்; கொடுகொட்டியென்பது இத்தன்மைத்தென்கின்றது.

அவற்றுள்,

மாயோன் - திருமால். பாணி - தேவபாணி. பாணியென்றது - பாட்டு.

அது தேவர்ப்பராவுதலாயிற்று ; என்னை? [1] "ஏனை யொன்றே, தேவர்ப் பராவு தன் முன்னிலைக் கண்ணே" என்றாராகலின். அது முத்தமிழ்க்கும்

பொது.

அஃது இயற்றமிழில்வருங்கா்ற் கொச்சகவொருபோகாய வரும். வரும்வழியும் பெருந்தேவபாணி, சிறுதேவபாணியென இருவகைத்தாய வரும். என்னை? "கூறிய வுறுப்பிற் குறைபா டின்றித், தேறிய விரண்டு தேவ பாணியும்" என்றாரகலின். அங்ஙனம் வரும் [2] தரவினை நிலையெனவடக்கி முகத்திற்படுந் தரவினை முகநிலையெனவும், இடைநிற்பனவற்றை இடைநிலையெனவும், இறுதியினிற்பனவற்றை முரிநிலையெனவும் பரவுதற்பொருண்மையாற் பெயர்கொடுத்தார் செய்யுளியலின்கண்ணுமெனக் கொள்க

இனி, இசைத்தமிழில்வருங்கால், முகநிலை கொச்சகம் முரியென்ப ஒருசாராசிரியர். அன்றி இசைப்பா, இசையளவுபாவென்னும் இருபகுதியுள் இஃது இசைப்பாவின் பகுதியெனப. அது பஃதுவகைப்படும்: செந்துறை,

வெண்

டுறை, பெருந்தேவபாணி, சிறுதேவபாணி, முத்தகம்,

வரி, கானல்வரி, விரிமுரண், தலைபோகுமண்டிலமென

பெருவண்ணம், ஆற்று

என்னை? "செந்துறை

வெண்டுறை தேவபா ணியிரண்டும், வந்தன முத்தகமே வண்ணமே - கந்தருவத், தாற்றுவரி கானல் விரிமுரண் மண்டிலமாத், தோற்று மிசையிசைப்பாச் சுட்டு" என்றார் இசைநுணுக்கமுடைய சிகண்டியாரென்க

இன்னும் சுத்தம் சாளகம் தமிழென்னும் சாதியோசைகள் மூன்றினுடனும் [2] கிரியைகளுடனும் பொருந்தும் இசைப்பாக்கள் ஒன்பதுவகையென்ப; அவை:—சிந்து, திரிபதை, சவலை, சமபாதவிருத்தம், செந்துறை, வெண்டுறை, பெருந்தேவபாணி, சிறுதேவபாணி, வண்ணமெனவிவை. என்னை? "செப்ப ரியசிந்து திரிபதை சீர்ச்சவலை, தப்பொன் றுமில்லாச் சமபாத-மெய்ப்படியுஞ், செந்துறை வெண்டுறை தேவபாணி வண்ணமென்ப, பைந்தொடியா

யின்னி
சையின் பா'' என்றார் பஞ்சமரபுடைய அறிவனாரென்னுமாசிரியரென்க.

இனி, நாடகத்தமிழில் தேவபாணிவருங்காற் பெருந்தேவபாணி பலதேவரையும், சிறுதேவபாணி வருணப்பூதரையும் மூவடிமுக்கால் வெண்பாவால் துதிக்கின்றவழி, அவரணியும் தாரும் ஆடையும் நிறனும் கொடியுந்துதித்து அவராற் பெறவேண்டுவனவுந் துதிக்கப்படும்; என்னை? "திருவளர ரங்கிற்

---

1 தொல்காப்பியம், செய்யுளியல், சூ. கஅ.
2 ,, ,, கஅ - பேர். உரை.

---

3 கிரியை - தாளக்கிரியை; படித்தல் முதலியன.



சென்னி தேறிப், பரவுந் தேவரைப் பரவுங் காலே, மணிநிகழ் நெடுமுடி மாணிபத் திரனே, யணிநிகழ் பளிங்கி னொளியினை யென்றும், கருந்தா றுடுத்த கடவுளை யென்று, மிரும்பனைத் தனிக்கொடி யேந்தினை யென்றும், கொடுவாய் நாஞ்சிற் படையோ யென்றும், கடிமலர் பிணைந்த கண்ணியை யென்றுஞ், சேவடி போற்றிச் சிலபல வாயினு, மூவடி முக்கால் வெண்ணிலையின் மொழிப'' என்றார் மதிவாணனாரென்க. இவை ஈண்டுரைப்பிற் பெருகும். பிறவும் வந்த வழிக் காண்க.

இனி, முற்கூறிய பதினோராடற்கும் முகநிலையாகிய தேவபாணி மாயோன் பாணி. அது வருமாறு: ''மலர்மிசைத் திருவினை வலத்தினி லமைத்தவன் மறிதிரைக் கடலினை மதித்திட வடைத்தவ, னிலகொளித் தடவரை கரத்தினி லெடுத்தவ னிளநிரைத் தொகைகளை

யிசைத்தலி லழைத்தவன், முலையுணத் தருமவ னலத்தினை முடித்தவன் முடிகள்பத் துடையவ னுரத்தினை யறுத்தவ, னுலகனைத் தையுமொரு பதத்தினி லொடுக்கின னெளிமலர்க் கழறரு வதற்கினி யழைத்தமே.''
இஃது எண்சீரான்வந்த கொச்சகவொருபோகு. பண் - கௌசிகம். தாளம் - இரண்டொத்துடைத் தடாரம் சிறுதேவபாணி ஈண்டுக்கூறிற் றிலரெனினும் இனம்பட்டுவருதலிற் கூறல்வேண்டுவதாயிற்று. அது வருமாறு: ''வண்ணமலர்ச் சரங்கோத்து மதனவேண் மிகவெய்யக், கண்ணளவோர் புல
னல்லாக் கனல்விழியா லெரித்தனையா, லெண்ணிறந்த தேவர்களு மிருடிகளு மெழுந்தோட, வொண்ணுதலான் பாகங்கொண் டொருதனியே யிருந்தனையே''
என்பது.

இதனுள் இறைவனை முற்கூறாது மாயோனை முற்கூறியதென்னையோவெ னின், மாயோன் காவற்கடவுளாய் அருளை அருத்தலானென்க.

௩௫ - ௬. வருணப் பூதர் நால்வகைப் பாணியும்—(இ - ள்) வரு ணப்பூதர் நால்வரையும்பரவு ம் நால்வகைத் தேவபாணியுமென்றவாறு.

அவை வருமாறு : ''அந்தணர் வேள்வியோ டருமறை முற்றுக, வேந்தன் வேள்வியோ டியாண்டுபல வாழ்க, வாணிக ரிருநெறி நீணிதி தழைக்க, பதி னெண் கூலமு முழவர்க்கு மிகுக, வரங்கியற் கூத்து நிரம்பிவினை முடிக, வாழ்க நெடுமுடி கூர்கவென் வாய்ச்சொலென், றிப்படிப் பலிகொடுத் திறைவனிற் றெருக்குச், செப்பட வமைத்துச் செழும்புகை காட்டிச், சேவடி தேவரை யேத் திப் பூதரை, மூவடி முக்கால் வெண்பா மொழிந்து, செவியிழுக் குறுமை வேந் தனை யேத்திக், கவியொழுக் கத்து நின் றழி வேந்தன், கொடுப்பன கொடுப்ப வடுக்கு மென்ப'' என்றார் மதிவாணனாரென்க.

"அல்லியம் கொட்டி......ஆடி"; "அடிகடையம்........ஞர்து" என்பவாகலின்.

௬௧ - ௪௩. பாரதி யாடிய.........கொடுகொட்டி யாடலும்

பாரதி - பைரவி; அவளரங்கம் - சுடுகாடு ; அவளாடுதலாற் பெற்றபெயர்.

(இ- ள்.) தேவர் புரமெரியவேண்டுதலால் வடவையெரியைத் தலையிலே யுடைய பெரியவம்பு வல்கேட்டவளவிலே அப்புரத்தில் அவுணர் வெந்து விழுந்த வெண்பலிக்குவையாகிய பாரதியரங்கத்திலே உமையவள் ஒருகூற்றின ளாய் நின்று பாணி தூக்குச் சீரென்னும் தாளங்களைச் செலுத்தத் தேவர்யாவ ரினுமுயர்ந்த இறைவன் சயானந்தத்தாற் கைகொட்டிநின்று ஆடிய கொடு கொட்டியென்னுமாடலும்.

முகம் - தலை. பேரம்பு - பரமபுருடன். வல்கேட்பு - சுட்டவளவிலே திரிபுரம் தீமடுத்தெரியக்கண்டு இரங்காது கைகொட்டிநின்று ஆடுதலிற் கொடு மையுடைத்தாதனோக்கிக் கொடுகொட்டியென்று பெயர்கூறினர்.

"கொட்டி.........நான்காமெனல்."

௪௪ - ௫. தேர்மு னின்ற.........பாண்டரங்கமும்

(இ - ள்.) வானோராகிய தேரில் நான்மறைக் கடும்பரிபூட்டி நெடும்புற மறைத்து வார்துகின்முடித்துக் கூர்முட்பிடித்துத் தேர்முனின்ற திசைமுகன் காணும்படி பாரதிவடிவாய இறைவன் வெண்ணீற்றை அணிந்தாடிய பாண்ட ரங்கக்கூத்தும்,

'நின்று' பாடமாயிற் காண நின்றாடியவென்க; மெனல்."

"பாண்டரங்கம்......ஆறு

சசு - அ. கஞ்சன்.....................தொகுதியும்

(இ - ள்.) அஞ்சனவண்ணன் ஆடியஆடல்பத்துள், கஞ்சன்வஞ்சத்தின் வந்த யானையின்கோட்டை ஒசித்தற்கு நின்றாடிய அல்லியத்தொகுதியென்னுங் கூத்தும்,

---

[3], [3], [4], [5] சிலப்பதிகாரம், பக். அக.

[6] கொடுங்கொட்டி கொடுகொட்டியென விகாரமாயிற்றென்பர் ; (கலி. கடவுள்.) நச்சினார்க்கினி

## சா.—கடலாடுகாதை.

[illegible]

தொகுதியென்றார், முகம் மார்பு கை கால்களின் வட்டனை அவிநயமுதலியன விருத்தும் தொழில்செய்யாதாகிற்றலின்; "ஆட லின்றி நிற்பவை யெல்லாமாயோ னாடும் வைணவ நிலையே" என்றார்; அல்லியமென்பதனை அலிப்பேடென்பாருமுளர் ; [1] "அல்லியம்..............ஆறு மெனல்."

சஅ - கூ. அவுணற் கடந்த மல்லி னாடலும் - (இ - ள்.) வாணனுகிய அவுணனை வேறற்கு மல்லனாய்ச் சேர்ந்தாரிற்சென்று அறைகூவி உடற்கரித்தெழுந்த அவனைச் சேர்ந்தவளவிலே சடங்காகப்பிடித்து உயிர்போகநெரித்துத் தொலைத்த மல்லாடலும்,

அவுணற்கடந்த - அவுணனெண்ணத்தைக் கடந்த; [2] "கொடியவன்.......... ழுந்தாம்."

சக - ருக. மாக்கட னடுவண்.........ஆடிய துடியும்

(இ - ள்.) கரிய கடலினடுவுநின்ற சூரனது வேற்றுருவாகிய வஞ்சத்தை யறிந்து அவன்போரைக்கடந்த முருகன் அக்கடனடுவண்

திரையே அரங்கமாக நின்று துடிகொட்டியாடிய துடிக்கூத்தும்,
கீர்த்து - கேரொத்து ; [2] "துடியாடல்........ஐந்தாம்."

௬௨ - ௩. படைவீழ்த் தவுணர்.........ஆடிய குடையும்

(இ - ள்.) அவுணர் தாம் போர்செய்தற்கு எடுத்த படைக்கலங்களைப் போரிற்கு ஆற்றாது போகட்டு வருத்தமுற்றவளவிலே முற்கூறியமுருகன் தன் குடையை முன்னே சாய்த்து அதுவே ஒருமுகவெழினியாக நின்றாடிய குடைக்கூத்தும்,
பையுளொபத ஆடியவெனவியையும்; [3] "அறுமுகத்தோன்.........னல்."

௬௪ - ௫. வாணன் பேரூர்.........ஆடிய குடமும்

(இ - ள்.) காமன்மகன் அநிருத்தனைத் தன்மகள் உழைகாரணமாக வாணன் சிறைவைத்தலின், அவனுடைய சோவென்னும் நகரவீதியிற்சென்று நிலங் கடந்த நீனிறவண்ணன் குடங்கொண்டாடிய குடக்கூத்தும்,

இது பஞ்சலோகங்களாலும் மண்ணாலும் குடங்கொண்டாடினது; [4]"குடத் தாடல்..................ஆய்ந்து." இது விநோதக்கூத்து ஆறினுளொன்றென் றுணர்க ; என்னை? "பரவிய சாந்தி யன்றியும் பரதம், விரவிய விநோதம் விரிக் குங் காலைக், குரவை கலிநடங் குடக்கூத் தொன்றிய, கரணநோக்குத் தோற்பா வைக்கூத், தென்றிவை யாறு நகைத்திறச் சுவையும், வென்றியும் விநோதக் கூத்தென விசைப்ப" என்றாராகலின்.

௬௬ - ௭. ஆண்மை..........பேடி யாடலும்

(இ - ள்.) ஆண்மைத்தன்மையிற்றிரிந்த பெண்மைக்கோலத்தோடு காம னாடிய பேடென்னுமாடலும்,

[1, 2, 3, 4, 5] சிலப்பதிகாரம், பக். ௮௬.

ஆண்மைத்தன்மையிற் றிரிதலாவது விகாரமும் வீரியமும் நாணும்பெற்றி யும் புந்தியும் பிறவுமின்றாதல்; ஆண்மை திரிந்தவென்பதனால் தாடியும், பெண்மையின்மையுந்தென்பதனால் முலைமுதலிய பெண்ணுறுப்புப் பலவுமுடையது ஆண்பேடென்று பெயர்பெறுமெனக்கொள்க; என்னை? [1] "அரியற் றூடி மருள் படு பூங்குழற், பவளச் செவ்வாய்த் தவள வொண்ணகை, யொள்ளரி நெடுங் கண் வெள்ளிவெண் டோட்டுக், கருங்கொடிப் புருவத்து மருங்குவளை பிறை நுதற், காந்தளஞ் செங்கை யேந்திள வனமுலை, யகன்ற வல்கு லந்நுண் மருங்கு, லிகந்த வட்டுடை யெழுதுவரிக் கோலத்து, வாணன் பேரூர் மறுகிடை நடந்து, நீணில மளந்தோன் மகன்முன் னாடிய, பேடிக் கோலத்துப் பேடுகாண் குநரும்" என்றாராகலின்.

இது தனதுமகன் அநிருத்தனைச் சிறைமீட்டுக் காமன் சோநகரத்தாடியது; [2] "காமனதாடல்...............நான்கு."

௫அ - கூ. காய்சினவவுணர்.........[3] மரக்கா லாடலும்

(இ - ள்) காயுஞ்சினத்தையுடைய அவுணர் வஞ்சத்தாற்செய்யும் கொடுந் தொழிலைப் பொறாளாய் மாயோளால் ஆடப்பட்ட மரக்காலென்னும் பெயரையுடைய ஆடலும்,

மாயவள் - துர்க்கை. அவுணர் உண்மைப்போரால் வேறலாற்றாது வஞ்சத்தான் வேறல்கருதிப் பாம்பு தேள் முதலியவாய்ப் புகுதலையுணர்ந்து அவள் அவற்றை உழக்கிக் களைதற்கு மரக்கால்கொண்டு ஆடுதலின், மித்து; [4] "மாயவளாடல்.........நான்கு."

மரக்காலாடலா

கூ0 - கூக. செருவெங் கோலம்.........ஆடிய பாவையும்

(இ - ள்.) அவுணர் வெவ்விய போர்செய்தற்குச் சமைந்த

போர்க்கோலந் தோடு மோகித்துவீழும்படி கொல்லிப்பாவைவடிவாய்ச் செய்யோனாகிய திருமகளால் ஆடப்பட்ட பாவையென்னுமாடலும்,

கோலங்கவென்றார், அதற்கேற்பப் பொராது அஞ்சி யவிதலின்; [3] "பாவை ........ஒன்று."

கூ உ - ரு. வயலுழை.........ஆடிய கடையமும்

(இ - ள்.) வாணனுடைய மூதூராகிய பெரியநகரின் வடக்குவாயிற்கண் உளதாகிய வயலிடத்தேநின்று அயிராணியென்னுமடந்தை ஆடிய கடையமென்னு மாடலும்,

அயிராணி - இந்திராணி. கடையம் - கடைசிக்கூத்து; [4] "கடையம்...... ஆறு."

கூ ச - ஏக. அவரவ ரணியுடன்.........விஞ்சைய னன்றியும்

(இ - ள்.) அங்ஙனங்கூறப்பட்ட அவரவருடைய அணிகளுடன் அவரவருடைய கொள்கையாற் பொருந்தி நின்றாடலும் வீழ்ந்தாடலுமாகிய அவரவரை

---

[1] மணி. ௧: ௧௧௧-௨௫. [2,3,4,5] சிலப்பதிகாரம், ப. ௯௦. [6] "மாயஞ்செய் வாளவுணர் வீழ நங்கை மரக்கால்மேல் வாளமலை யாடும் போதும்" என்பர்பின்னும்; சிலப். ௬௨.

# ௩.—கோடலாகோதை.

அவை

நீங்காத மரபினையுடைய பதினொருவகைப்பட்ட ஆடலும் அவ்வாடல்கட்கேற்ற பாடல்களின் வேறுபாடும் அவற்றிற்குவிதித்த மாட்சிமைப்பாட்டோடு அவற்றைப் புலப்படக் காண்பாயாக; அன்று கள்ளவிழ்பூம்பொழிற்கண்ணேயிருந்து நின்னொடு யான் கூறப்பட்ட மாதவிமரபின்வந்த மாதவி இவள்காணென்று தன் காதலிக்குச் சொல்லித் தானுங்கண்டு மகிழ்ச்சிமிக்க மேம்பாடுதக்க மரபினையுடைய விஞ்சையனும், அவனன்றியும்,

எஉ - ஓ. அந்தரத் துள்ளோர்........இருந்தோ னுவப்ப

(இ - ள்.) சுவர்க்கத்திலுள்ளாராகிய தேவரெல்லாம்

உள்வரிகொண்டு
வந்து காணப்படும் இந்தவிழவும் மாதவியாடலும் அவ்வாடற்குச் சமைந்த கோலமும் ஆடுதலாற்பிறந்தவழகும் முடிதலின் அதனாற்பிறந்த வெறுப்போடிருந்த கோவலனுவக்கும்படி,

அந்தரத்துள்ளோர் - விச்சாதரருமாம். மானிடர் தம்மைக்காண்டல் பொருமையின் அறியாமரபினென்றார். இனி, இவளாடலும் கோலமும் தனது அறிவு நிறை ஓர்ப்புக் கடைப்பிடிகளைக் கைக்கொண்டு விடுதலாலே பிறக்கும் இவ்வாறுமென்றும் வெறுப்போடிருந்தானெனினுமமையும். ஊடலோடென்றது கோலமோடென்றார், மனத்தினிகழ்ந்த ஊடலை முகம் காட்டுதலின்.

எசு - ஆ. பத்துத் துவரினும்........நலம்பெற வாட்டி

(இ - ள்.) வாசசெய்யுரைத்த மணங்கமழும் கரிய கூந்தலைப் பத்துவகைப்பட்ட துவரினாலும் ஐந்துவகைப்பட்ட விரையினாலும் முப்பத்திருவகைத்தாகிய ஓமாலிகையானும் ஊறிக்காயப்பட்ட நன்னீராலே நிறம்பெறவாட்டியென்க.

இருமை - கருமை. பத்துத்துவராவன :—"பூவந்தி திரிபலை புணர்கருங் காலி, நாவலோடு நாற்பான் மரமே." ஐந்துவிரையாவன:—[1] "கொட்டம்...... விரை." முப்பத்திருவகை ஓமாலிகையாவன : "இலவங்கம் பச்சிலை கச்சோல மேலம், குலவிய நாகணங் கோட்டம் - நிலவிய, நாக மதாவரிசி தக்கோல நன்

ஞரி, வேகமில் வெண்கோட்ட மேவுசீர் - போகாத, கத்தூரி வேரி யிலாமிச்சங் கண்டில்வெண்ணெ, யொத்தகடு நெல்லி யுயர்தான்றி - தத்தமொடு, வண்ணக் கச் சோல மரேணுக மாஞ்சியுட, னென்னுஞ் சயிலேக மின்புழுகு - கன்னு நறும், புன்னைநறுந் தாது புலியுகிர் பூஞ்சரளம், பின்னு தமாலம் பெருவகு ளம் - பன்னும், பதுமுக நுண்ணேலம் பைங்கொடு வேரி, கதிர் நகையா யோ மாலி கை" என்றுமிவையெனக்கொள்க ; என்னை ? "ஓரை விரையிறு மீரைந் தவரிது, மாறைந்தின் மேலிரண் டோமா லிகையிறு, நாறைந் கதப்பி ஞனமு நன்குரைஇ, யூறின நன்னீ ருவர்தன னாட்டி" என்றாராகலின்.

அ௦ - அக. புகையிற் புலர்த்திய..........சேறாட்டி

(இ - ள்.) அன்னமாகிய கீரனுட்டிப் பொலிவினையுடைய
புகையிற் புலர்த்திய கூந்தலை ஐந்துவகைபெறவகுத்த வகைதோறும் மான்மதத்தின் கொழுவிய சேற்றை யூட்டியென்க.

¹ சிலப்பதிகாரம், பதி. கக.அ.



மான்மதச்சேறு - கத்தூரிக்குழம்பு ; சவாதுமாம்.

அஉ - ங. அலத்தக மூட்டிய........நல்லணி செறீஇ

(இ - ள்.) செம்பஞ்செழுதிய அழகிய சிவந்த சிறடிக்கேற்ற நலத்தகும் மெல்லிய விரலிடத்தே செறிக்கப்படும் நல்லணிகளைச்செறித்து,

விரலணி - மகரவாய்மோதிரம், பீலி, கான்மோதிரமுதலியன.

அச - ரு. பரியகம்..............அணிந்து

(இ - ள்.) பாதசாலமும் சிலம்பும் பாடகமும் சதங்கையும் காற்சரியு மென்னும் இவற்றைக் காலுக்குப் பொருத்தமுறும்படி அணிந்தென்க.

பரியகமாவது - "பொன்னிதழ் பொதிந்த பன்னிற மணிவடம், பின்னிய தொடரிற் பெருவிரன் மோதிரந், தன்னொடு தொடக்கித் தமனியச் சிலம்பின்,
புறவாய் சூழ்ந்த புணரவைப் பதவே." என்னே? "அவ்வாய் மகரத் தணிகிளர் மோதிரம், பைவாய் பசும்பொற் பரியக நூபுர, மொய்ம்மணி நாவின் முல்லை யங் கிண்கிணி, கௌவிய வேனவுங் காலுக் கணிந்தாள்" என்றார்.

அசு. குறங்கு செறிதிரள் குறங்கினிற் செறித்து - (இ - ள்.) குறங்குசெறியென்னும் பணியைத் திரண்ட குறங்கிடத்தே செறித்தென்க.

குறங்குசெறி - கவான் ஆபரணம்.

அஎ - அ. பிறங்கிய..........உடீஇ

(இ - ள்.) பருமுத்தக்கோவை முப்பத்திரண்டாற்செய்த விரிசிகையென் னுங்கலையை நீலநிறங்கிளரும் பூத்தொழிலையுடைய உடுத்தென்க.

நீலச்சாதருடையின்மீதே

என்னே ? "குறங்கு செறியொடு கொய்யலங் கார, நிறங்கிளர் பூந்துகி லீர்மையி னுடீஇப், பிறங்கிய முத்தரை முப்பத் திருகா, மறிந்த தலைமவர வல் சூழ் கணிந்தாள்" என்றார்.

அக - கூ௦. காமர் கண்டிகை.............அணிந்து

(இ - ள்.) காமஞ்செய்யும் மாணிக்க வளையுடன் நீங்காமற் ராற்பிணித்த முத்தவளையைத் தோளுக்கு அணிந்தென்க.

பொற்றொடு

காமம், கா மரென விகாரம். தூமணி - முத்து. என்னை ?
"ஆய்மணி கட்டி யமைந்தவிலைச் செய்கைக், காமர் கண்டிகைக் கண்டிரண் முத்திடைக், காமர்பொற் பாசங் கொளுத்திக் கவின்பெற, வணிந்தாள்" என்றார்.

வேய்மருள் மென்றோள் விளங்க

கூக - ச. மத்தக மணியொடு............அணிந்து

(இ - ள்.) முகப்பிற்கட்டிய மாணிக்கத்தோடே பத்திகளில் வயிரங்களழுத் தப்பட்ட சித்திரத்தொழிலையுடைய சூடகமும் செம்பொன்னாற்செய்த வளையும்

வைரத்தினவளையும் சங்கவளையும் பவழவளைகளும் என்னுமிவற்றை மயிரையுடைய முன்கைக்குப் பொருத்தமுற அணிந்தென்க.

ஐந்தான

கூ.—கடலாடுகாதை. ககூஎ

பரியகம் - சரியுமாம்.
கைவடமுமாம். என்னை ?

வாஸ்வளை - வெள்ளிவளையுமாம். பவழப்பல்வளை -
"புரைதபு சித்திரப் பொன்வளை போக்கி, வெரிய விர் பொன் மணி யெஸ்லென் கடகம், பரியகம் வாஸ்வளை பாத்தில் பவழ, மரி மயிர் முன்கைக் கமைய வணிந்தாள்" என்றார். அரியகை முன்கைக்கென்ப

தூஉம் பாடம்.

கூ௦ - அ. வாளைப் பகுவாய்...........அணிந்து

(இ - ள்.)
பும் சிவக்தஒளி

வாளமீனின து அங்காந்தவாயை வணங்குகவுறவிக்குநெளி
உச்சமாகக் கதிராரும் மாணிக்கப்பீடமும் பக்கத்தேவளைந்து
திரையும் ஒளியையுடைய வயிரஞ்சூழ்ந்த மரகதக் கடைசெறியும்
பிறவுமாகிய இவற்றைக் காந்தள் மலர்போலும் மெல்லிய விரல்கள்
மறையும்படியணிந்து,

பருவாய்மோதிரமுமாம்; ஒப்பினுகியபெயர். கேழ்கிளர்மணி, அஃது, எக்கேழெனிற் செங்கேழ்கிளர்மணியென்க. வாங்குவில் - வளைந்துக்கொள்ளும் ஒளி.

கக - கoo. சங்கிலி............அணிந்து

(இ - ள்.) வீரசங்கிலியும் நேர்ஞ்சங்கிலியும் பூணப்படுஞாணும் என்னுமிவற்றேடு கைபுனையப்பட்ட தொழில்களையுடைய சவடி சரப்பளிமுதலாபுள்ள பிறவற்றையும் அழகிய கழுத்திடத்தே முத்தாரத்தோடணிந்தென்க.

கoக - உ. கயிற்கடை..........மறைத்தாங்கு

(இ - ள்.) முற்கூறிய சங்கிலிமுதல் ஆரமீருபுள்ள அணிகட்கெல்லாம், நல்லொன்ருய்க் * கொக்குவாய்ப் படுகண்தொடக்கிய பன்மணிக்கோவையால் ஆக்கமாகச் செய்யப்பட்ட பின்றலியாற் சிறுபுறத்தை மறைத்தென்க.

கயிற்கடை - கொக்குவாய். ஒழுகியகோவையென்க. சிறுபுறம் - பிடர்;

"சங்கிலி நுண்டொடர் பூண்ஞாண் புனைவினைத், தொங்க லுருத்தித் திருத்துங் கயிலணி, தண்கடன் முத்தின் றகையொரு காழெனக், கண்ட பிறவுங் கழுத்துக் கணிந்தான்" என்றார். ஆங்கு, அசை.

கoந - ௫. இந்திர நீலத்து...........அணிந்து

(இ - ள்.) முகப்பிற்கட்டின இந்திரநீலத்திடையிடையே பயிலக்கட்டின வயிரங்களால் அழகுபெற்ற நீலக்குதம்பையை வடிந்த காதினிடத்தே அழகு மிகும்படி அணிந்தென்க.

என்னை ? "நூலவ ராய்ந்து நவலருங் கைவினைக், கோலங் குயின்ற குணஞ்செய் கடிப்பிணை, மேலவ ராயிறு மெச்சும் விறலொடு, காலமை காதிற் கவின்பெறப் பெய்தான்" என்றார்.

௧0௭ - ௮. தெய்வ வுத்தியொடு..............அணிந்து

(பி - ம்.) * 'கொக்கிவாய்' : கோக்குவாய், மூன்றே.

கொக்கிவாயென்னும் படித்தற்கு இட [illegible]

சிலப்பதிகாரம்.

(இ - ள்.) சீதேவியாரென்னும் பணியுடனே வலம்புரிச்சங்கும் பூரப்பாளையும் தென்பல்லி வடபல்லியென்னுமிவையும் தம்மில் தொடர்ந்த ஒன்றான தலைக்கோலத்தைக் கரிய பெரிய ஓதிக்கு அழகுறும்படி யணிந்தென்க.

செழுநீர், வலம்புரிக்கு அடை. என்னை ? "கேழ்கிளர் தொய்யகம் வாண்
முகப் புல்லகஞ், சூளா மணியொடு பொன்னரி மாலையுந், தாழ்தரு கோதையுந் தாங்கி முடிமிசை, யாழின் கிளவி யரம்பைய ரொத்தாள்" என்றார்.

ஊடற்கோலமோடிருந்தோனுவப்ப ஆட்டி ஊட்டிச் செறீஇ அணிந்து செறித்து உடீஇத் தோளுக்கணிந்து வுமைவுறவணிந்து கரப்பவணிந்து ஆரமோடணிந்து சிறப்புறமறைத்து அழகுறவணிந்து மாண்புறவணிந்தென்க.

௧0௯ - ௧0. கூடலும்..............இருந்தோள்

(இ - ள்.) கூடலையும் பின்னர் ஊடலையும் கோவலற்களித்துப்

படுக்கை யமைந்த சேரும்பள்ளியிடத்தே இருந்தவனென்க.

பின்னர் ஊடலளித்தலாவது,

எண்ணில்காமமெரிப்பினுமேற்செலாப் பெண்மையும் நாணும் அழிந்துவந்து குறையுற்றுக் கூடுந்துணையும் நீயிர் பிரிவாற்றியிருந்தீர் ; அன்பிலீரென ஊடுவது. ஊடலையளித்தல் - துன்பத்தை யளித்தல்.

அதனான்வருந்

கககக - ச. உருகெழு மூதூர்..........வேண்டின ளாகி

(இ - ள்.) விழவிற்குக் கொடியெடுத்தநாண்முதல் நாலேழ்நாளும் விழவு நடந்த பிற்றைஞான்று கொடியிறங்கி விழாவாற்றுப்படுத்த பிற்றைஞான்று உவாத் தலைவந்ததாக மாநகரார்க்கு உட்குதலைப் பொருந்துவிக்கும் மூதூரின் நம் கடற்கடைக்கண் இடம்பிடிக்க விரைந்துசெல்லுமாக்களோடு தானும் மடலவிழாநின்ற கைதை புன்னைமுதலியவற்றையுடைய கழிக்கானல்பொருந்திய கடல்விளையாட்டைக் காண்டலை விருப்பத்தோடே வேண்டினளாகியென்க.

பெருநீர் - கடல். இரியல் - விரைவு. காண்டல் - நீர்ப்போரில் வெற்றி தோல்விகாண்டல். வேண்டினள் - காண்டற்குத் தானும்போகக் கோவலனை வேண்டிக்கொண்டாள்; எனவே அவனும் உடம்பட்டமை உணர்த்திற்று.

ககரு - உ0. பொய்கைத் தாமரை........வைய மேறி

(இ - ள்.) அங்ஙனம் வேண்டி அவனும் உடம்பட்டவளவிலே பொய்கையினில் தாமரைப்பூஞ்சேக்கையில் துயில்கின்ற புட்கள் அச்சேக்கையை நீங்குதலான் வாய்விட்டுப் புலம்பாநிற்ப வைகறைப்பொழுதென்பதனை வாரணங்கள் அறிவிக்க

வைகறைக்காலத்துச் செறிந்தவிருளை வெள்ளியவிளக்கம் கடியாநிற்க அக்காலத்தே மதாணிமுதலிய பேரணிகலங்களையணிந்த மூகில்போலும் வண்மையையுடைய கோவலன் இராசவாகனமாகிய அத்திரியேற அத் தாரணிமார்பனொடு போதற்கு மானின் பார்வைத்தன்மைபொருந்திய நோக்கினையுடையாளும் வையத்தின் ஏறியென்க.

[1] "எள்ளலில் காம மெரிப்பிறு மேற்செலாட்,
தில்லையே" (சீவக. கக-அ.)

பெண்ணின் மிக்கது பெண்ணுல

# ரு.—கடலாடுகாதை.

விளக்கம்

புலம்பக் காட்டக் கடியவென்னும் செயவெனெச்சங்கள் ஏற ஏறியென்னும் வினைகொண்டுமுடிந்தன. வாளாது வாரணமென்றமையால் [1] இருவகை வாரணமுங்கொள்க. அத்திரி-கோவேறுகழுதை. வையம்- [2] கொல்லாப்பண்டி.

கஉக - எ. கோடிபல வடுக்கிய.....செவ்வனங் கழிந்து

(இ - ள்.) கோடியென்னுமிலக்கத்தைப்

பலகோடிமேலடுக்கப்பட்ட வளவிய நிதித்திரளையுடைய மாடங்கண்மலிந்த மறுகினையுடைய பீடிகைத்தெருவின்கண் மலரணிதற்குக் காரணமாகிய மைவிளக்கோடே மாணிக்கவிளக்குக்களையுமெடுப்ப அவ்விடத்தே தாசியர் மலரையும் அறுகையும் நெல்லையும் மங்கலமாகச் சிந்தி இருமருங்கினிடத்தும் தம் கலனொலிப்பத்

திரிந்துபெயர்தலைச்செய்யும்

திருமகளுக்கு இருப்பிடமாகிய அவ்விடத்தை வேறாகக்கழிந்தென்க.

குப்பை - குவியல். மாடம் - சரக்கறைகள். மறுகு - வீதித்தெரு.

மணி-

அழகுமாம். கொடி. அறுகுக்கு அடை. அலருமென்னுமும்மை தொக்கது.

மங்க
லம் - அழகுமாம். அங்காடியின் செல்வமிகுதிகூறுவார் திருமகளிருக்கையென் றார். கழிதற்கருமையிற் கழிந்தென்றார்.

தாசியர் கலனொலிப்பத் திரிவனர்பெயருமிருக்கை யென்க.

க௨௮ - ௯. மகரவாரி...........போகி

(இ - ள்.) கடலின வளத்தைக் கொணர்தலான் உயர்ச்சிபெற்ற நகரத் தெருவினூடே போயென்க.

கடல்வளம் - முத்தும் பவளமும் சங்குமுதலியன.

க௩௦ - ௩௩. கலந்தரு திருவின்...........சென்றெய்தி

(இ - ள்.) மரக்கலங்கள் தந்த திருவினையுடைய தமதுதேசங்களைவிட்டுப் போந்த பரதேசிகள் திரைகளிட்ட வெண்மணலையுடைய அலைவாயிருப்பிற் பல வகைக்கூலமுங் குவித்தமறுகில் இன்ன சரக்கு ஈண்டுளதென்று கொடிகளெடுத் தச்சொல்லும் ஒழுங்குபட்ட சேரிகளைப்போய் நெய்தலங்கானலை யெய்தி யென்க.

வாலுகம் - வெண்மணல். வேலை விரிதிரைப்பரப்பின் வாலுகத்தையுடைய மறுகென்க. எடுத்துரவலும் - எடுத்தலாற்சொல்லுமென்றுமாம்.

க௩௪ - ௫. வண்ணமும்..........விளக்கமும்

(இ - ள்.) எழுதவண்ணமும் சாந்தும் மலரும் சுண்ணமும் பண்ணிகார வருக்கங்களுமென்னும் இவற்றை விற்போர்வைத்த விளக்குக்களும்,

க௩௬. செய்வினைக் கம்மியர் கைவினை விளக்கமும்

(இ - ள்.) திண்ணகத்தாற் செய்யுந்தொழில்களைவல்ல பணித்தட்டார் பணிபண்ணுமிடங்களில்வைத்த விளக்கங்களும்,

---

இருவகை வாரணம் - சங்கு, கோழி; (சிலப். ௬: ௭௭ - ௮.)

பி - ம்.) * 'கோவாலவண்டி.'



௧௫௭. காழியர் மோதகத் தூழுறு விளக்கமும்

(இ - ள்.) பிட்டுவாணிகர் பிட்டுவிற்றற்கு முறைமுறையாகவைத்த விளக்குக்களும்,

மோதகம் - ஈண்டுப் பிட்டு.

௧௫௮. கூவியர் காரகற் குடக்கால் விளக்கமும்

(இ - ள்.) காரகலையுடைய அப்பவாணிகர் குடத்தண்டில்வைத்த விளக்குக்களும்,

௧௫௯. நொடைநவின் மகடூஉக் கடைகெழு விளக்கமும்

(இ - ள்.) பலபண்டமும் விற்கும் மிலேச்சமகளிர் தம்கடைகளில்வைத்த விளக்குக்களும்,

௧௬0. இடையிடை மீன்விலை பகர்வோர் விளக்கமும்

(இ - ள்.) இடையிடையே மீன்விற்போர் விளக்குக்களும்,

௧௬௧. இலங்குநீர் வரைப்பிற் கலங்கரை விளக்கமும்

(இ - ள்.) பாடைவேறுபட்டதேயத்து நிலையறியாது ஓடுங்கலங்களை அழைத்தற்கு இட்ட விளக்குக்களும்,

௧௬௨. விலங்குவலைப் பரதவர் மீன்றிமில் விளக்கமும்

(இ - ள்.) மீன்களைக் குறுக்கிட்டு மறித்துப்படுக்கும் வலையையுடைய பரதவர் திமிலில்வைத்த விளக்குக்களும்,

[1] "முந்நீர் ளாப்பட் டிமிற்சுடர் போலச், செம்மீ னிமைக்கு மாக விசும் பின்" என்றார் பிறரும்.

௧௬௩. மொழிபெயர் தேத்தோ ரொழியா விளக்கமும்

(இ - ள்.) பாடை வேறுபட்டதேயத்து மிலேச்சர்

பிறதுறைகளிற்போகா மற் பிணைகளைக் காலாகாட்டி அதன்மீதே மண்ணிட்டெரிக்கும் தீராவென்னும் விளக்குக்களும்,

கசச. கழிபெரும் பண்டங் காவலர் விளக்கமும்

(இ - ள்.) மிக்க பெரிய பண்டங்களையுடைய பண்டசாலைகாப்போரிட்ட விளக்குக்களும்,

கசரு - ருO.

எண்ணுவரம் பறியா........நெய்தலங் கானல்

(இ - ள்.) வரம்பறியப்படாவாய் இச்சொல்லப்பட்ட விளக்குக்களெல்லாம் எண்ணுதற்கியைந்த ஒன்றிமிகுதலாலே இடியைக்கலந்தாலொத்த மணலின்மீது இட்டவெண்சிறுகடுகும் புலப்படக்காணுங் காட்சியையுடையதாகிய, மிக்க சீர்ப்பரப்பில் விரைமலர்த்தாமரையை வேலியாகவுடைய மருதநிலத்தினும், அழகுறத்தோன்றும் கைதையை வேலியாகவுடைய நெய்தனிலத்தில் கழிக்கானற்கண்ணேயென்க.

---

[1] புறநானூறு, சுO.

## சா.—கடலாடுகாதை.

உ.0௬

எண்ணுவரம்பு - எண்ணின்பெருமைக்கு வரம்பு. ஈண்டுதல் - மிகுதல். இடி - மா. இடிக்கலப்பென்னார், தென்னாதமாலை. ஈரயிர் - மிகவும் நுண்ணிய மணல். வீங்குநீர்ப்பரப்பில் தாமரைவேலிமருதத்திற்றோன்றும் கைதைவேலி நெய்தலங்கானலென்க

கறுக. பொய்த லாயமொடு பூங்கொடி பொருந்தி

(இ - ள்.) அங்ஙனமாகிய கானலிடத்தே தனது விளையாட்டுமகளிருடனே பூங்கொடிபோல்வாள் விளையாடச்

சென்றுபொருந்தியென்க.

கஉ௨ - ச. நிரைநிரை...........கலவிருக்கை

(இ - ள்.) நிரைநிரையாகக் குவித்த குற்றமற்ற காட்சியையுடைய மலை தரும் பலபண்டமும் கடல்தரும் பலபண்டமுமாகிய வளம் இடந்தோறும் மயங் கிக்கிடக்கின்ற கலங்களைசகின்ற பிடத்தே,

கடற்றுறைமுகங்களிற் சோலைசூழ்ந்த இருப்

துளங்குதல் - அசைதல்.

கஉ௫ - அ. அரசிளங் குமரரும்...........மருங்கில்

(இ - ள்.) அரசகுமாரரும் அவருடைய உரிமைச்சுற்றமும் பரதகுமாரரும் அவருடைய பல்வேறுவகைப்பட்ட ஆயமகளிரும் ஆடன்மகளிரும் பாடன்மகளிரும் தொகுதிகொண்ட இடங்கடோறும்,

வணிககுமரர்க்கு உரிமையென்றது அவர் புனலாடல் மரபன்மையின்.

பரிசனமகளிரும் சிலதியர்முதலாயினோருமென்பார் பல்வேறாயமென்றார். ஆடு களம் - அரங்கு; பாடுகளம் - கண்டம்; இவை அடை. தோடு - தொகுதி; இதழையுடைய பொழிலிடத்தெனவுமாம்.

கஉஅ - ௬௨. சூழ்தர லெழினியும்........தோன்றி

(இ - ள்.) சூழ்தருதலையுடைய எழினியும் மூற்கூறிய தொகுதியும் வேறு வேறுகோலமும் வேறுவேறு கம்பலையும் விண்ணிலேசென்றுபொரும் பெரிய புகழையுடைய இக்கரிகாலவளவன் புதப்புனல்விழவுகொண்டாடும் நன்னாட் போலே இவ்விழவினிறுதிக்கட் புனலாடிடங்களும் வீறுபெறத்தோன்றாநிற்க வென்க.

தோடு கம்பலையும், எழினி கோலமும்தோன்றவென எதிர்நிரனிறை; எழி னிக்கோலம் - உருக்கள். தோன்றி, தோன்றவெனத்திரிக்க.

கக௫ - ௭. கடற்கரை...................ஒலிப்ப

(இ - ள்) அவையயன் றிக் கடலினது கரையைக் குத்தியிடிக்கும் காவேரிப் புகார்முகமென்னும் வழிதிடமின்றாகச் சேரநெருங்கிய: நால்வகைவருணத்தி அன்னாருடைய அடக்கப்படாத கம்பலையெல்லாங்கூடி ஓரோசையாய் நின்றொ லிப்பவென்க.

கசுக - எச. கடற்புலவு..........மாதவி தானென்.

உக



(இ - ள்.) அன்னைக்தோன்ற ஒலியாநிற்ப, கடலினது புலால் நாற்றத்தைக் கெடுத்த மடலவிழும் பூவையுடைய தைதையாற் சிறையாகச்சூழப்பட்ட நடுவே ஒளவாகிய புன்னைநீழலில் அழுக்கற்ற மணல்பரந்தவிடத்தே சித்திரத்திரையை வளைத்து மேற்கட்டிக்கட்டியிடப்பட்ட வெண்கால் அமளிமிசையே, வருந்தி நின்ற வயந்தமாலைகையதாகிய கல்யாழை வாங்கிப் பெரிய மலர்போலும் நெடுங்கண்ணையுடைய மாதவி கோவலன்றன் னொடும் சேரவிருந்தாளென்க.

வெண்கால் - மருப்புக்கால். திரு ந்துகோன ல்யாழ் - இன்பத்தைவிளைத் தற்குக் காரணமாகிய கோலையுடைய யாழ்; எனவே, மேல் துன்பத்தை விளை விக்குமென்பது கருத்து. செவ்வனம்வாங்கியென்றார், பின்னர் ஊடலோடு வாங்குதலின்.

வெள்ளிமால்வரைச்சேடிக்கண் விருந்தாட்டயரும் விஞ்சைவீரன் இட னுங்காண்கும்; அமைதியுங்காண்குதும்; ஆடலுங்காண்குதும்; வணங்குதும் யாமெனக்காட்டிப் பின்னர்ப் புகார்மருங்கெய்திக் காட்டிக் காண்போன், காணாய்; மாதவி இவளைவரைந்து மகிழ்வெய்திய அவ்விஞ்சையனன்றியும் அந்தரத் துள்ளோர் வந்துகாண்குறூஉம் விழவும் ஆடலும் கோலமும் அணியும்

கடைக் கொள இருந்தோளுவப்ப ஆட்டி ஊட்டிச் செறீஇ அணிந்து செறித்து உடஇத் தோளுக்கணிந்து அமைவுறவணிந்து கரப்பவணிந்து ஆரமோடணிந்து இறுபுற மறைத்து அழகுறவணிந்து மாண்புறவணிந்து அளித்து இருந்தோள் உவவுவத் தென வேண்டினளாகப் புலம்பக் காட்டக் கடிய அணிந்து ஏற ஏறிச் செவ் வனக்கழிந்து நடுவட்போகி மருங்குசென்றெய்திப் பொருந்தி வாங்கிக் கோவ லன்றன்னொடும் மாதவி வெண்காலமணிமிசை இருந்தனளென வினைமுடிக்க.

இது, நிலைமண்டிலவாசிரியப்பா.

வேலை மடற்றாழை யுட்பொதிந்த வெண்டோட்டு
மாலைத் துயின்ற மணிவண்டு—காலைக்
களிநறவந் * தாதூதத் தோன்றிற்றே காமர்
தெளிநிற வெங்கதிரோன் றேர்.

௬.—கடலாடுகாதை முற்றிற்று.

---

(பி - ம்.) * 'தாதுநிர்ப்பத்'

# ஏழாவது
# கானல்வரி.

கட்டுரை.

க. சித்திரப் * படத்துட் புக்குச் செழுங் † கோட்டின் மலர்புனைந்து
மைத்தடங்கண் மணமகளிர் கோலம்போல் வனப்பெய்திப்
பத்தரும் கோடு மாணியு நரம்புமென்
நீத்திறத்துக் குற்றநீங்கிய யாழ்கையிற் றொழுது
பண்ணல் பரிவட்டணை யாராய்த றைவரல்

வாங்கிப்

க. சித்திரப்படம் - உறை. கோடு - யாழ்க்கோடு.

மணமகளிர் - கலியாணமகளிர்.

முன்பிற்காதையில் * "யாழ் செவ்வனம் வாங்கி" என்று வைத்து இக் காதையிலும் 'யாழ்கையிற்றொழுதுவாங்கி' என்றது கதைத்தொடர்பு அறிவித்தற்கும், யாழின் அலங்காரம் கூறுதற்குமென்க

குற்றமாவன :—ஆதவவாதவயசாவையென்பன; என்னே? னும், * "நோய் நான்கு நீங்கி" என்றார்.

சீந்தாமணியி

இசையெழுவும் எண்வகையாவன:—பண்ணல்முதலாயின ;

அவற்றுள்,—

பண்ணலாவது :—"வலக்கைப் பெருவிரல் குரல்கொளச் சிறுவிரல், விலக் கின் றிளிவழி கேட்டும்..., இணைவழி யாராய்ந் திணைகொள முடிப்பது, வினைப்

பரு மரபிற் பண்ணலாகும் ", "பரிவட் டணையி னிலக்கண‌ந் தானே, மூவகை நடையின் முடிவிற் றாகி,வலக்கை யிருவிரல் வனப்புறத் தழீஇ, யிடக்கை விரலி னியைவ தாகத், தொடையொடு தோன்றியுந் தோன்று தாகியு, நடையொடு தோன்று நயத்த தாகும்.", "ஆராய்த லென்ப தமைவரக் கிளப்பிற், குரன்முத லாக விளிவழி கேட்டு, மிளையி லாவழிப் பயனொடு கேட்டுந், தாரமு முழையுந் தம்மிற் கேட்டுங், குரலும் விளியுந் தம்மிற் கேட்டுந், தத்தமும் விளரியுந் தன்னொடு கேட்டும், விளரி கைக்கிளை விதியுளிக் கேட்டுந், தளரா தாகிய தன்மைத் தாகும்.", "வடிவ லென்பது சாற்றுங் காலை, மையறு சிறப்பின் மன

[1] "மணங்கமழ் மாதரை மண்ணி யன்ன" (பொருந. கஅ.)

[2] இ-கு. 'பாடற்றொழில்களாவன:—யாழின்கண் வார்தல்முதலிய வெட்டும் பண்ணல்முதலிய எட்டும்' (குறள். ௪௭௩ - பரிமேல்); 'கலைத்தொழில்களாவன:—பண்ணல் ...... குறும்போக்கென்ற எட்டும்' (சீவக. கஉ௭ - ந.)

[3] சிலப்பதிகாரம், ௩: ௧௪௬. [4] சீவகசிந்தாமணி, ௭௨௦.

(பி - ம்.) * 'படாம்' † 'கோட்டுமவர்' ‡ 'இத்திறத்துக்குறும்'



கண்ணிய செலவு விளையாட்டுக் கையூழ்
கண்ணிய குறும்போக் கென்று நாட்டிய
வெண்வகையா லிசையெழீஇப்
பண்வகையாற் பரிவுதீர்ந்து
[1] மரகதமணித் * தாள்செறிந்த மணிக்காந்தண் மெல்விரல்கள்
பயிர்வண்டின் கிளைபோலப் பன்னரம்பின் † மிசைப்படர
வார்தல் வடித்த லுந்த லுறழ்தல்

சீருடை யுருட்டடெருட்ட லள்ள

மகிழ்வெய்தித், தொடையொடு பட்டும் படாஅ தாகியு, நடையொடு தோன்றி யாப்புடை யின்றி,யோவாச் செய்தியின் வட்டணை யொழுகிச்,சீரேற் றியன்ற மியலா தாகியும்,சீர வாகுநிறைய தென்ப.", "சேலவேணப் படுவதன் செய்கை தானே, பாலை பண்ணே திறமே கூடமென, நால்வகை யிடத்து நயத்த தாகி, யியக்கமு நடையு மெய்திய வகைத்தாய்ப்,பதினோ ராடலும் பாணியு மியல்பும், விதிநான்கு தொடர்ந்து விளங்கிச்செல் வதுவே.", "விளையாட் டென்பது

விரிக்குங் காலைக்,கிளவிய வகையி னெழுவகை யெழாது, மனவிய தகைய தாகு மென்ப.", "கையூ ழென்பது கருதுங் காலை, யெவ்விடத் தானு மின்பமுஞ் சுவையுஞ்,செவ்விதிற் றோன்றிச் சிலேத்துவர லின்றி, நடைநிலை திரியாது நண்ணித் தோன்றி, நாற்பத் தொன்பது வனப்பும் வண்ணமும், பாற்படத் தோன் றும் பகுதித் தாகும்." , "குள்ளற் கண்ணுங் குடக்குத் துள்ளுநந், தள்ளா தாகிய வுடனிலைப் புணர்ச்சி, கொள்வன வெல்லாங் குறும்பே 1க் காகும்." இவை யெல்லாம் ஈண்டு விரித்துரைப்பிற் பெருகும்.

பண்வகையாற் பரிவுதீர்ந்து - பண்கூற்றிற் குற்றந்தீர்ந்து.

மரகதமணி......போல - மரகதமணி மோதிரங்கள் செறிந்த விரல்கள் பாடுகின்ற வண்டின் கிளைகளை யொப்ப.

வார்தல் வடித்தல்...........செவியினோர்த்து:—வார்தலென்றது - சுட்டு விரற்செய்தொழில்; வடித்தலென்றது - சுட்டுவிரலும் பெருவிரலுங்கூட்டி நரம்பை அகமும் புறமும் ஆராய்தல்; உந்தலென்றது - நரம்புகளை உந்தி வலிவிற்பட்டதும் மெலிவிற்பட்டதும் நிரல்பட்டதும் நிரலிழிபட்டதுமென் றறிதல்; உறழ்தலென்றது - ஒன்றிடையிட்டும் இரண்டிடையிட்டும் ஆராய்

தல்; உருட்டலென்றது - இடக்கைச்சுட்டுவிரல் தானேயுருட்டலும் வலக்கைச் சுட்டுவிரல் தானேயுருட்டலும் சுட்டொடு பெருவிரற்கூட்டியுருட்டலும் இருபெருவிரலும் இயைந்துடனுருட்டலுமெனவரும்; "தெருட்டலென்பது செப்புங் காலை, யுருட்டி வருவ தொன்றே மற்ற, வொன்றன் *பாட்டு மடையொன்ற நோக்கின், வல்லோ ராய்ந்த நூலே யாயினும், வல்லோர் பயிற்றுங்

[1] "மரகதத் தாள்செறி காந்தள் மெல்விரல் காட்டவணிந்து" (சிலப். கூ: கஎ-அ.)

[2] "வாரியும் வடித்து முந்தியு முறழ்ந்தும்" (பொருந. உக.)

(பி - ம்.) * 'தாள்செறித்த' † 'விசைப்படாத வார்தல்'



லேருடைப் பட்டடையென விசையோர் வகுத்த
வெட்டு வகையி னிசைக்கர ணத்துப்
* பட்டவகைதன் செவியினோர்த்
தேவலன் † பின் பாணியாதெனக்
கோவலன் கையாழ் நீட்ட வவளுங்
காவிரியை நோக்கினளுங் கடற்கானல் வரிப்பாணியு
மாதவிதன் மனமகிழ வாசித்த றொடங்குமன்.

வேறு.

உ.

[1] திங்கண்மாலைவெண்குடையான்சென்னிசெங்கோலதுவோச்சிக்
கங்கை தன்னைப் புணர்ந்தாலும் புலவாய் வாழி காவேரி

கட்டுரை யாயினும், பாட்டொழிந் தலங்கி

லொழிந்த செய்கையும், வேட்டகு
கொண்டு விதியுறநாடி" எனவரும்.........இவை இசைத்தமிழ்ப்
பதினறுபடலத் துட் காணவோத்துட்காண்க.

கோவலன்கை யாழ்நீட்ட: யாழைத்திருத்தித் தான்
முற்படவாசியாதே அவன் தலைமைதோன்ற கொடுத்தாள்.

ஏவலன் பின்பாணியாதெனவென்றது-இப்பொழுது
இதனைவாசியென்று விதிக்கின்றேனல்லேன்; வாசிக்குந்தாளமியாதென்
று யான் அறியலுறுகின்றே னென்பாள்போலக் கொடுத்தாளென்க;
ஏவலன், தன்மையொருமை.

பட்டவகை தன் செவியினோர்த்து நீட்டவென்க.

இனி வரிப்பாடலாவது :—பண்ணும் திறமும் செயலும் பாணியும் ஒரு
நெறியன்றி மயங்கச் சொல்லப்பட்ட எட்டனியல்பும் ஆறனியல்பும்பெற்றுத்

தன் முதலும் இறுதியும்கெட்டு இயல்பும் முடமுமாகமுடிந்து கருதப்பட்ட
சந்தியும் சார்த்தும் பெற்றும் பெறுதும்வரும். அதுதான், தெய்வஞ்சுட்டி
யும் மக்களைப்பழிச்சியும்வரும்.

அவற்றுள், தெய்வஞ்சுட்டிய வரிப்பாட்டுவருமாறு:— "அழலணங்கு
தாமரை யருளாழி யுடையகோ னடிக்கீழ்ச்சேர்ந்து, நிழலணங்கு முருகுயிர்த்து
நிரந்தலர்ந்து தோடேந்தி நிழற்றும் போலும், நிழலணங்கு முருகுயிர்த்து நிரந்
தலர்ந்து தோடேந்தி நிழற்றுமாயிற், றொழலணங்கு மன்புடையார் சூழொளி
யும் வீழ்கரியுஞ் சொல்லா வன்றே." இது கூடைச்செய்யுள்; "கூடை யென்

பது கூறுங் காலை, நான்கடி யாகி யிடையடி மடக்கி,
முரித்தே.", "வார மென்பது வகுக்குங் காலை,

நான்கடி யஃகி நடத்தற்கு
நடையினு மொலியினு
மெழுத்தினு நோக்கித், தொடையமைந் தொழுகுந் தொன்மைத்

தென்ப.'' இவை அடிவரையிட்டன.

இனி மக்களைச்சுட்டிய வரிப்பாட்டு வருமாறு :—[1]''திங்கள் மாலை.. ....... காவேரி'' என்பதுபோல வருவது.

[1] '' திங்கள்......காவேரி'' என்பது, நடைமிகுத் தேத்திய குடைநிழன்மரபிற்கு செங்கோலிற்கும் மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. ௩௬ - ந.

(பி - ம்.) * 'பட்டைவகை செவிபோர்த்து' † 'பின்புளியாகேளக்'



கங்கை தன்னைப் புணர்ந்தாலும் புலவாதொழிதல் கயற்கண்ணாய்
மங்கை மாதர் பெருங்கற்பென் றறிந்தேன் வாழி காவேரி. (௧)
மன்னு மாலை வெண்குடையான் வளையாச் செங்கோ லதுவோச்
கன்னி தன்னைப் புணர்ந்தாலும் புலவாய் வாழி காவேரி [சிக்
கன்னி தன்னைப் புணர்ந்தாலும் புலவாதொழிதல் கயற்கண்ணாய்
[1] மன்னு மாதர் பெருங்கற்பென் றறிந்தேன் வாழி காவேரி.(௨)
[2] உழவ ரோதை மதகோதை யுடைநீ ரோதை *தண்பதங்கொள்
விழவ ரோதை சிறந்தார்ப்ப நடந்தாய் வாழி காவேரி
விழவ ரோதை சிறந்தார்ப்ப நடந்த வெல்லாம் வாய்காவா
மழவ ரோதை வளவன்றன் வளனே வாழி காவேரி. (௩)

வேறு.

௩.

* கரியமலர்நெடுங்கட்காரிகைமுன் கடற்றெய்வங்காட்டிக்காட்டி
யரியசூள்பொய்த்தார றனிலரென்றேழையம்யாம்* கறிகோமைய

உ. கயலாகியகண்ணையுடையாய்; புலவாதொழிந்தது மாதர்
கற்பு; அதனை நானறிந்தேன்.
பெருங்

௩. கன்னி - குமரி

௪. தண்பதங்கொள் விழவர் - புதப்புன லாடுவார்.
வாய்காவாமழவர் - [எதி ஆங்குத் தானென்று] நாயகனை நெருங்கும்
வீரர்.

இவை மூன்றும் ஆற்றுவரி. வண்ணம், ஒழுகுவண்ணம்.

இனி வரியாவது:—முகமுடைவரி, முகமில்வரி, படைப்புவரியென
மூன் று வகைப்படும். வரிப்பாட்டுக்கு முகமாக நிற்றலின்,
முகமெனப்படும்; என்னை? "நிலைமுத லாகிய வுலகியல் வரிக்கு, முகமாய்
நிற்றலின் முகமெனப் படுமே"
என்றாராகலின். அம்முகமுடைவரி மூன்றடிமுதலாக ஏழடியீறாக வரும்;
"சிந்த நெடிலுஞ் சேரினும் வரையார்." முகமில்வரியாவது - முகமொழிந்த
ஏனையுறுப்புக்களான் வருவது. படைப்புவரியாவது - எல்லாவுறுப்பும் ஒன்
றானும் பலவானும் வெள்ளையானும் ஆசிரியமானும் கொச்சகம்பெற்றும்
பெறாதும் வேறுவேறாகி.........வருவது.

இவற்றுள், "திங்கள்மாலை" முதலாயினமூன்றும்
கண்டன கூறிற்றாக யாழினிட்டபாட்டு.

முகமுடை வரி. இவை
[றெண்க.

ஞ. பொய்த்தாரென்றது, முன்னிலைப் படர்க்கை; காட்டிப்பொய்த்தா

[1] 'மன்' மிகுதிப்பொருளில் வந்ததற்கு இவ்வடி மேற்கோள்; நன். சூ. சகக-மயிலை; இ - வி. சூ. உகக. (சூ. உ.)

[2] இது, குறில்மெல்லிசை யேந்திசை வண்ணத்திற்கு மேற்கோள், யா-வி. ஒழிபு.

[3] "தண்டதக்கொள்ளுந் தலைநாள்" சிலப். க: ககo.

[4] இ - எ. "கரியமலர்........புகாரேயெம்மூர்"—இதுமுதலிய மூன்றும் புகாரிற் சிறப்பெடுத்துக் கூறியவாறு காண்க; (தொல். புறத்திணை. சூ. கஉ-ந); "கரியமலர்...... நிலைமுன்..' எனச்செய்யுட்கட் பலதொகையும் விராய்வந்து ஒருசொன்னடைய ராய்த் தம்மை முடிப்பனவற்றோடு முடிந்தன." (தொல். எச்ச. சூ. உச - ந.)

(பி - ம்.) * 'அறிகோமைய'

## எ.—கானல்வரி. 

விரிகதிர்வெண்மதியுமீன் கணமுமாமென்றேவிளங்கும்வெள்ளைப்
புரிவளையுமுத்துங்கண் * டாம்பல்பொதியவிழ்க்கும்புகாரேயெம்மூர்.

கூ. காதல ராகிக் கழிக்கானற் கையுறைகொண் டெம்பின் வந்தா
ரேதிலர் தாமாகி யாமிரப்ப நிற்பதையாங் † கறிகோமைய
மாதரார் கண்ணு மதிநிழனீ ரிணைகொண்டு மலர்ந்த
நீலப்
போது ‡ மறியாது வண்டூச லாடும் புகாரே யெம்மூர்.

(உ) எ.

[1]மோதுமுதுதிரையான்மொத்துண்டுபோந்தசைந்தமுரல்வாய்ச்சங்க
மாதர் வரிமணன்மேல் வண்ட லுழுதழிப்ப மாழ்கியைய
கோதைபரிந்தசையமெல்விரலாற்கொண்டோச்சுங்குவளைமாலைப்
போது § சிறங்கணிப்பப்போவார்கண்போகாப்புகாரேயெம்மூர்.

௬. எம்பின்வந்தார் ப்திஸர் தாமாகியென முன்னிலையைப் படர்க்கை வாய்ப்பாட்டாற் கூறினர்.

எ. பரிந்து - அறுத்து. அசையக் கொண்டோச்சுமெங்க. குவளைமாலைப் போது சிதறினவை சிறங்கணித்துப் பார்த்தாற்போலக் கிடக்க அவ்வூரி லுள்ளார்கண்கள் கண்ணென்று ஐயுற்றுப் போகாத புகாரென்க. அன்றிக் கடைக் கணிக்கவென்றது - குவளையானது மாலைக்காலம்பகையாதலால் அஞ்சிப் பார்க்கப் போவார்கண் போகாது இங்குவாழ்வாரைச் சிறங்கணித்த கண்ணென்று தம் பேதைமையாற் பார்த்து நிற்றலான் நாங்களும் பேதையமென் றுமாம்.

இவைமூன்றும் தோழி தலைமகன் முன்னின்று வரைவுகடாயவை; கையுறைமறையெனினுமமையும்.

இவை சார்த்துவரி:—"பாட்டுடைத் தலைவன் பதியொடும் பேரொடுஞ், சார்த்திப் பாடிற் சார்த்தெனப் படுமே" இங்குப்பாட்டுடைத் தலைவன் - சோழன். அதுதான் முகச்சார்த்து முரிச்சார்த்து கொச்சகச்சார்த்தென மூவகைப்படும். அவற்றுள், முகச்சார்த்து:—மூன்றடி முதல் ஆறடியீறாக வரும்; இடை நான் கடியானும் ஐந்தடியானும்வரும். முரிச்சார்த்தாவது :—"முரிதவற........, குற்றெழுத்தியலாற் குறுகிய கடையாற், பெற்ற வடித்தொகை மூன்று மிரண் டேன், குற்ற மில்லெனக் கூறினர் புலவர்." கொச்சகச்சார்த்து :—கொச்சகம் போன்றமுடியும்.

இவற்றுள், இவை மூன்றும் முகச்சார்த்து.

[1] இச்செய்யுளின்பின், "கரியமலர் நெடுங்கண்", "காதலராகி" பிரதிகளில் முறையே காணப்படுகின்றன.
என்பவை இ--

(பி - ம்.) * 'கும்பன்மல்கும் புனரே' † 'அறிவோமை' ‡
§ 'புறங்கனிப்ப'
'அறியாமல் வன்' உ௦அ



# வேறு.

அ. ¹துறைமேய்வலம்புரி தோய்ந்து மணலுழுத தோற்ற மாய்வான்
பொறைமலிபூம்புன்னைப்*பூவுதிர்ந்து நுண்டாது போர்க்குங்கான
† னிறைமதி வாண்முகத்து நேர்கயற்கண் செய்த
வுறைமலியுய்யாநோயூர்சுணங்குமென்முலையே தீர்க்கும்போலும்

ஆ. ²இணங்கொள் ‡ புலாலுணங்கனின்றுபுள்ளோப்புத
§ றலைக்கீடாகக்
கணங்கொள்வண்டார்த்துலாங் * கன்னிநறுஞாழல்
|| கையிலேந்தி
மணங்கமழ் பூங்கானன் மன்னிமற் றுண்டோ
ரணங்குறையு மென்ப தறியே னறிவேனே
லடையேன்மன்னோ ௪௦. ³ வலைவாழ்நர் சேரி வலையுணங்கு
முன்றின் மலர்கை யேந்தி
விலைமீனுணங்கற்பொருட்டாகவேண்டுருவங்கொ
ண்டுவேறோர்
கொலைவே னெடுங்கட் கொடுங்கூற்றம் வாழ்வ
தலைநீர்த்தண் கான லறியே னறிவேனே லடையேன்
மன்னோ.

அ. மணலிலேதோய்ந்து. உறைமலி - மலியுறையால்; உறை

உய்யாநோய் -

மருந்தாற்போக்கமுடியாதநோய். போலும், ஒப்பில் போலி.

இது, குறியிடத்துச்சென்ற பாங்கன் தலைமகளது

னறிந்து கூறியது.

காதன் மிகுதி குறிப்பினு

இது முகமில்வரி.

க. தலைக்கீடு - ஒருவியாசம். இது கழற்றெதிர்மறை.

௰. இதுவுமது.

இவை கானல்வரி.

---

[1] இச்செய்யுள், தலைவியின்கண்ணுதுண்டாகிய நோய்க்குக் கண்ணேமருந்தாம் (திருச்சிற். கஅக) என்பதற்கும், தலைவ[illegible]வியந்துரைத்தபாங்கன் பின்னர்ச் சிந்தித்தற்கும் (இறை. சூ. ௩-உரை), பாங்கன் தலைவியை வியத்தற்கும் (நாற்கவி. களவு. சூ. உச உரை; இ - வி. சூ. ௪0௫-உரை) மேற்கோளாக வந்துள்ளது; தக்கயாகப்பரணி, கடை திறப்பில், உஎ-ஆம் தாழிசையுரையிலும் மேற்கோளாகக் காட்டப்பெற்றுள்ளது.

[2] இச்செய்யுள், இயலிடங்கூறலென்னுந் துறைக்கும் (இறை. சூ. ௩ - உரை), இடையடி குறைந்து வந்ததற்கும் (தொல். செய். சூ. கடுசு - பேர்), ஈற்றயலடி குறைந்து வந்ததற்கும் (டி டி டி கடுடு - ந) மேற்கோள்;

[3] 'கன்னிநறுஞாழல்': தொல். களவி. சூ. உள - சே. ந. மேற்.

[4] "பல்லுயிர் பருகும்......உண்டென" (சிலப். ௭: உகசு - உக) என்பதும், "கன்னி நீர் ஞாழல் கமழ்பூங் கானல் யான்கண்ட, பொன்னங் கொடியை யின்றே நில்ல போதுமால், மன்னன் காக்கு மண்மேற் கூற்றம் வரவஞ்சி, பின்னை தொன்று படைத்ததாயி னெவன்செய்கோ" என்னும் பழம்பாட்டும் இச்செய்யுளுடன் ஒப்புநோக்கற்பாலன.

(பி - ம்.) * 'பூவுதிர்துண்' † 'நிறைமதிவாண்முகத்துநீள் கயற்கண்' ‡ 'பழ மையாதுணைவிட்பூர்' 'புலாதுணைக்கு முன்றிலின்று' § 'தலைக்கீடாக்கணைக்கொண்ட கையினன்றி'

வேறு.

கக. கயலெழுதி வில்லெழுதிக் காரெழுதிக் காமன்
செயலெழுதித் தீர்ந்தமுகந் திங்களோ காணீர்
திங்களோ காணீர் திமில்வாழ்நர் சீறூர்க்கே
யங்கணேர் வானத் தரவஞ்சி வாழ்வதுவே.

(க)

கஉ. எறிவளைக * ளார்ப்ப விருமருங்கு மோடுங்
கறைகெழுவேற் கண்ணோ கடுங்கூற்றங் காணீர்
கடுங்கூற்றங் காணீர் கடல்வாழ்நர் † சீறூர்க்கே
மடங்கெழுமென் சாயன் மகளா யதுவே.

(உ)

க௩. புலவுமீன் வெள்ளுணங்கற் புள்ளோப்பிக் கண்டார்க்
‡ கலவநோய் செய்யு மணங்கிதுவோ காணீ
ரணங்கிதுவோ காணீ ரடும்பமர்தண் கானற்
பிணங்குநே ரைம்பாலோர் பெண்கொண் டதுவே.

(௩)

வேறு.

கச. பொழிதரு நறுமலரே புதுமணம் விரிமணலே
பழுதறு திருமொழியே பணையிள வனமுலையே
முழுமதி புரைமுகமே முரிபுரு வில்லிணையே
§ யெழுதரு மின்னிடையே யெனையிடர் **செய்தவையே.

* அவை
†† வீ



* மருவிரி புரிகுழலே மதிபுரை திருமுகமே
பிருகய லிணைவிழியே யெனையிடர் † செய்தவையே. (உ)

கக. வளைவளர் தருதுறையே மணம்விரி தருபொழிலே
தளையவிழ் நறுமலரே தனியவ டிரியிடமே
முளைவள ரிளநகையே முழுமதி புரைமுகமே
‡ யிளையவ ளிணைமுலையே யெனையிடர் செய்தவையே.

(ங)

வேறு.

கஎ. ¹ கடல்புக் குயிர்கொன்று வாழ்வர்நின் னையரு
முடல்புக் குயிர்கொன்று வாழ்வைமன் னீயு
மிடல்புக் கடங்காத வெம்முலையோ பாரம்
§ மிடர்புக் கிடுகு மிடையிழவல் கண்டாய்.

(க)

கஅ. கொடுங்கண் வலையா || லுயிர்கொல்வா னுந்தை
நெடுங்கண் வலையா ** லுயிர்கொல்வை மன்னீயும்
வடங்கொண் முலையான் †† மழைமின்னுப் போல
‡‡ நுடங்கி யுகுமென் னுசுப்பிழவல் கண்டாய்.

(உ)

கக. * ஓடுந் திமில்கொண் §§ டுயிர்கொல்வர் நின்னையர்

கச - கூ. ஏகாரம், எண்ணேகாரம்.

இவைமூன்றும் தலைமகன் பாங்கன்கேட்ப உற்றதுரைத்தவை.

இவைமுரிவரி; "எடுத்த வியலு மிசையுந் தம்மின்,முரித்துப் முரியெனப் படுமே."

பாடுதல்

/ கஎ. மிடல்புக்கு - வலியிலே புக்குநின்று. இடர்புக்கு - இடரிலேகிடந்து. இடையிழவல் - இடையிழவாதேகோள்; என்றது நின்தமரும் நீயுஞ்செய்கிற கொடுமையாலே இடை முரியவுங்கூடும்; அதற்கு உட்பகையாய்த் துணைக் காரணமாகிய முலைகளுமுளவாதலால் இடையைப் பரிகரியென்றவாறு; என் வருத்தத்தைத் தீரென்பதாம். இவை மூன்றற்குமொக்கும்.

கக. பீடு பிறரெவ்வம்பார்த்தல் - உனக்குப் பெருமையாவது பிறரெவ்வம் பார்த்தல்; 'பாரா' எனப் பாடமாயின், தான் பெருக்கமுறுமதனுற் பிறரெவ்வ மும்பாராத முலையென்றும்; எவ்வமுமென் னுமும்மை தொக்கது.

[1] பொய் பாராட்டற்கு இச்செய்யுள் மேற்கோள்; இச்செய்யுள்முதலிய மூன்றும் சாயல்வரியென்று சில தப்பெற்றன. (தொல். களவு. சூ. கக - ந.); மூலப்பிரதிகளில் மட்டும் எழு

[2] இரந்துபின்னிலை நிற்றற்கு இது மேற்கோள்; நாற்கவி. சூ. கூஎ -

உரை:
(பி - ம்.) * 'மருவிரி தருகுழலே' † 'செய்தவிலையே' ‡ 'இளையாரிளமுலையே வெளிவிடர் செய்தவிலையே' § 'இடர்புக்குருமின்னிடையே' || 'உயிர்கொள்வா துந்தை' ** 'உயிர்கொள்வை நீயும்' †† 'மறைமின்' ‡‡ 'துடங்குமினமென்றுசெப்பு' §§ 'உயிர் கொள்வர்' |||| 'உயிர்கொள்வை நீயும்'



பிடும் பிறசெவ்வம் * பாராய் முலைசுமந்து
வாடுஞ் சிறுமென் மருங்கிழவல் கண்டாய். (௯)

## வேறு.

௨௰. பவள வுலக்கை கையாற் பற்றித்
தவள முத்தங் குறுவாள் செங்கண்
தவள முத்தங் குறுவாள் செங்கண்
குவளை யல்ல கொடிய கொடிய.
௨௧. புன்னை நீழற் புலவுத் திரைவா
யன்னை நடப்ப நடப்பாள் செங்க
ணன்னை நடப்ப நடப்பாள் செங்கண்
கொன்னே வெய்ய கூற்றங் கூற்றம்.
௨௨. கள்வாய் நீலங் கையி னேந்திப்

புள்வா யுணங்கல் கடிவாள் செங்கண்
புள்வா யுணங்கல் கடிவாள் செங்கண்
வெள்ளே வல்ல வெய்ய வெய்ய.

## வே ஙு.

உ௯. சேரன் மடவன்னஞ் சேர னடையொவ்வாய்
சேரன் மடவன்னஞ் சேர னடையொவ்வா

இவைமூன்றும் புணர்ச்சிநீட இடைச் சுற்றப்பாட்டிற் புணர்தலுறுவான் ஆற்றாமைக் கூறியவை.

உ0. குவளையல்ல - நிறம்பற்றிக் குவளையென்னவேண்டா.

உக. அன்ன நடப்ப - அன்னம் இந்நடையைப்பார்த்து நடக்கும்படி; அன்றி, நடைக்கு அஞ்சி ஓடவென்றுமாம். கொன் - மிகுதியும் கூர்மையும். நீழனடப்பாள் கண்கள் மிகவெய்ய; ஆகலாற் கூற்றமென்க.

உஉ. புள்வாயுணங்கல் - உணங்கலிடத்துப்புள்.

இவைமூன்றும் குறியிடத்துக்கண்ட பாங்கன்சொல்லியவை; புணர்ந்து நீங்குவான் விடுத்தலருமையான் ஆற்றாமைத் தன்னெஞ்சிற்குச் சொல்லியவையுமாம்.

உ௩. விளையாட்டு விருப்பினால் ஓடுவாளைக்கண்டு நின்னடையுடனொக்கு மென்று சொல்லுவர் புலவராயினும் இவள் விளையாட்டொழிந்த தன்னியல் .........னியொவ்வாய்; அதனாற் சேராதேகோள்.

இது காமஞ்சாலா இளமையோள்வயின் ஏமஞ்சாலா யோன் சொல்லியது.

இடும்பையெய்தி

¹ இச்செய்யுள்முதலிய மூன்றும் திணைவரியென்றும், கானல்வரியென்றும், கானலோசையென்றும் மூலமட்டுமுள்ள சிலபிரதிகளில் எழுதப்பெற்றுள்ளன.

² தொல்காப்பியம், அகத்திணையியல், சூ. ௪௦. (பி - ம்.) * 'பாரமுலை'

(ச)

([illegible])

(கூ)



* பூர்திரைநீர் வேலி யுழக்கித் திரிவாள்பின்
† சேரன் மடவன்னஞ் சேர வடைபொவ்வாய்.

கட்டுரை.

உச. ‡ ஆங்குக், கானல்வரிப் பாடல்கேட்ட மானெடுங்கண் மாதவியு
மன்னுமோர் குறிப்புண்டிவன் றன்னிலை மயங்கினனெனக்
§ கலவியான் மகிழ்ந்தாள்போற் புலவியால் யாழ்வாங்கித்
தானுமோர் ‖ குறிப்பினள்போற் கானல்வரிப் பாடற்பாணி
நிலத்தெய்வம் வியப்பெய்த நீணிலத்தோர் மனமகிழக்
கலத்தொடு புணர்ந்தமைந்த ¶ கண்டத்தாற் பாடத்தொடங்குமன்

வேறு.

உரு. மருங்கு வண்டு சிறந்தார்ப்ப மணிப்பூ வாடை யதுபோர்த்துக்
கருங்க யற்கண் விழித்தொல்கி நடந்தாய் வாழி காவேரி
கருங்க யற்கண் விழித்தொல்கி நடந்தவெல்லா நின்கணவன்

திருந்து செங்கோல் வளையாமை யறிந்தேன்வாழி காவேரி. (க)

உ௩. பூவர் சோலை ** மயிலாலப் புரிந்து குயில்க ளிசைபாடக்

காமர் மாலை !! யருகசைய நடந்தாய் வாழி காவேரி

காமர் மாலை !! யருகசைய நடந்த வெல்லா மின்கணவன்

நாம வேலின் றிறங்கண்டே யறிந்தேன் வாழி காவேரி. (உ)

உ௪. வாழி யவன்றன் வளநாடு மகவாய் வளர்க்குந் தாயாகி

யூழி யுய்க்கும் பேருதவி யொழியாய் வாழி காவேரி

---

கஎ - உ௩. இவையேழும் நிலைவரி.

உ௪. ஆங்கு - அவ்விடத்து.

கோவலன் வாசித்த உருக்கள் களவில் தலைமகன் கூற்றுதலால் இவள் தன்மேல் அன்பிலனென உட்கொண்டு புலந்து அது தோன்றாமல் மனமகிழ்ந்தாள்போலத் தன்பக்கல் வேறுகுறிப்பிலளாயினும் வேறுகுறிப்புடையாள் போல இவனுக்குத் தோன்றத் தானும் கானல்வரிப்பாணி பாடத்தொடங்கினாளென்க. கலம் - யாழ். கண்டம் - மிடறு.

உ௫. ஒல்கி - பெண்மையாலேயொதுங்கி. வளையாமையேயெனத் தேற்றேகாரம் வருவிக்க; (உ௩ - எ) மற்றைய வேகாரங்களும் இன்னவெனக்கொள்க. அறிந்தேனென்க.

உ௬. வேலின் றிறங்கண்டென்றது, பிறரால்வருத்தம் இல்லையென்றவாறு.

உஎ. பகல்வெய்யோனென்றது, * சூரியவம்சத்தவனாதலால்; விரும்புவானென்றுமாம். இவை மூன்றும் ஆற்றுவரி.

நடுவை

கதிகோமைய

வண்டா திரையழிப்பக் கையான் மணன்முகந்து மதிமேனீண்ட

புண்டோய்வே னீர்மல்க மாதர் கடனூர்க்கும் புகாரே யெம்மூர்.

உஅ. மணிமுறுவல் - நல்லமுறுவல். செவ்வாயமுறுவலெவ்வாவேனும். வாங்கும் - கொள்ளும். மான்மகன்போல் - மயங்கின மகன்போல; காமன் போலென்பாருமுளர். வீங்கோதம் வெண்முத்தத்தைத்தந்து கொண்டு; ஓதம், எழுவாய.

பூங்கோதையைக்

இது கையுறைமறை.

உக. மறையின்மணந்தாரை - அப்படிமணந்த மடவாரை. அன்னம் அரும்பிப்பூத்த புன்னையிலே ஏதியிருக்க நிறைமதியும் மீனுமெனக்கருதி ஆம்பல் மலருமென்க. வண்டு ஊதுமெனவே மலர்தல்பெற்றும். இங்ஙனம்கூறிற்று, மதிகண்டு ஆம்பல் மலருமாதலால்; [1] "உடைதிரை முத்தஞ் சிந்த வோசனிக் கின்ற வன்னம்......ஆம்பல்" என்றார் பிறரும்.

மதியும் மீனுமென்று கண்டார்கருதப் புன்னையிலே வண்டு ஆம்பலூதுமென்க.

அன்னமேறிற்ற

௩0. உண்டாரை வெல் நறு - உண்டவர்களைக் கிமைசெய்யு நறு. வியா - உண்டவூணமறையாத; [இன்றியொளியாத.]

ஊறெ

௯௧. ஆடும் - விளையாடும். உணர்வொழிய - உணர்வு தன்னைவிட. சேர்ப்பன் வண்ணம்.

இஃது, அறியேனென்று வலிதாகச்சொல்லிக் குறைநயப்பித்தது.

௯௨. விட்டாரோ: ஓகாரம், ஒழியிசை. தண்ணளியும் தாமும் தேருமெனப் பின்பு சிலசொல்லப்புக்கு அதனைக் காதன்மிகுதியாற் கலங்கி விட்டாரென்றான். உயர்திணையையும் அஃறிணையையுமெண்ணி உயர்திணையான்முடித்தார் தண்ணளியும் தேரும்விடுக; அவற்றிற்கு என்ன உறவுண்டு. மறக்கமாட்டேமென்றது ஒருசொல்.

௯௩. துயிலல் - மொட்டித்தல். இன்கள்வாய் நெய்தாலென்றான், தன்கண் துயிலாதவருந்த அது கவற்சியின்றித்துயிறலின். கள்ளுண்டுமயங்குயாத லாற் கேட்டும் சொல்ல மாட்டாயாயினும். எயதுங் கனவினுமென்றான், உறங்குவார்க்குக் கனவுமுண்டென்று.

---

[1] இது, வன்மொழியாற் கூறல்முதலியவற்றிற்கு மேற்கோள்; (இறை. சூ. ௪. உரை; தொல். களவு. சூ. ௨௧ - இளம். ந.) " நீ கண்டனையெனின் " (திருச்சிற். அ௪) என்பதும், "பாலேஞ்சிறை வண்டே" (இறை. சூ. ௪ - உரை. மேற்) என்பதும் இச்செய்யுளுடன் ஒப்புநோக்கற்பாலன.

[2] திணைமட்பொருளையும் திணைமயில்பொருளையுமெண்ணித் திணைமட்பொருள் வினையால் முடித்ததற்கும் (தொல். சொல். சூ. ௫௧ - சே; பிர. ௪௯ - உரை; இ - வி. சூ ௨௪அ - உரை), கோனதனைவற்றைக் கேட்பனபோலக்

கூறியதற்கும் (தொல். செய். சூ. உ00 - ந.) இதுமேற்கோள்.

² தொல். களவு. சூ. கசு - ந; இறை. சூ - கா - உரை; நாற்கவி. சூ. கசு மேற்கோள்.

- உரை

(பி - ம்.) * 'வணரோலியைப்பாலாய்' † 'விட்டனரே' ‡ 'இன்கவினாய்'



ஙச. ¹ * புள்ளியன்மான் றேராழி போன வழியெல்லாந்
தெள்ளுநீ ரோதஞ் சிதைத்தாய்மற் றென்செய்கோ
தெள்ளுநீ ரோதஞ் சிதைத்தாய்மற் றெம்மோடீங்
குள்ளாரோ டுள்ளா † யுணராய்மற் றென்செய்கோ.

(௪)

ஙரு. ² நேர்ந்தநங் காதலர் ‡ நேமி நெடுந்திண்டே
ரூர்ந்த வழிசிதைய வூர்கின்ற வோதமே
பூந்தண் பொழிலே புணர்ந்தாடு மன்னமே
யீர்ந்தண் டுறையே யிதுதகா தென்னீரே.

(ரு)

ஙசு. ³ நேர்ந்தநங் காதலர் ‡ நேமி நெடுந்திண்டே
ரூர்ந்த வழிசிதைய வூர்ந்தாய்வாழி கடலோத
மூர்ந்த வழிசிதைய வூர்ந்தாய்மற் றெம்மொடு
தீர்ந்தாய்போற் றீர்ந்திலையால் வாழி கடலோதம்.

(௬)

வேறு.

ஙஎ.

¹ தொல்காப்பியம், செய்யுளியல், சூ. ௨௦௦ - இளம். ந. மேற்.
² இறையனாரகப்பொருள், சூ. ௭ - உரை, மேற்.
³ தொல்காப்பியம், களவியல், சூ. ௰௧.

(பி - ம்.) * 'புள்ளிமான்றேர்' † 'உணர்ந்தாய்' ‡ 'நேமிபொறித் தின்றேடீர்' § 'நலஞ்சால்' || 'அள்ளிக்கொள்ளில்'



௧௮. வாரித்தரள நகைசெய்து வண்செம்பவள வாய்மலர்ந்து
சேரிப்பரதர் வலைமுன்றிற் றிரையுலாவு கடற்சேர்ப்ப
¹ மாரிப்பீரத் தலர்வண்ண மடவாள்கொள்ளக் கடவுள்வரைந்
² தாரிக்கொடுமை செய்தாரென் றன்னையறியி னென்செய்கோ.

௧௯. புலவுற்றிரங்கி யதுநீங்கப் பொழிற்றண்டலையிற் புகுந்துதிர்ந்த
கலவைச்செம்மண் மணங்கமழத் திரையுலாவு கடற்சேர்ப்ப
பலவுற் †றொருநோய் துணியாத படர்நோய்மடவா டனியுழப்ப
வலவுற்றிரங்கி யறியாநோ யன்னையறியி னென்செய்கோ. (௫)

வேறு.

௨௦. இளையிருள் பரந்ததுவே யெற்செய்வா னறைந்தனனே
களைவாரும் புலம்புநீர் கண்பொழீஇ யுகுத்தனவே
தளையவிழு மலர்க்குழலாய் தணந்தார்நாட் டுளதாங்கொல்
வளைநெகிழ வெரிசிந்தி வந்தவிம் மருண்மாலை.

சக. எதிர்மலர் - செவ்விமலர்; எதிர்த்துப் பிணைத்த மலரென்றுமாம்; தோற்றுவின்றமலரென்றுமாம்.

---

[1] "மாரிப் பீரத் தலர்சில கொண்டே" குறுந். கஅ.
(பி - ம்.) * 'ஞாயிற்கொடுநோய்செய்தார்' † 'ஒருசீர்'
§ 'புரைபுக்கன' || 'புணர்ந்தார்நாட்டு'

‡ 'கள்பொழி'



சஉ. பறவைபாட் டடங்கினவே * பகல்செய்வான் மறைந்தனனே
நிறைநிலா நோய்கூர நெடுங்கணீர் ருகுத்தனவே
துறுமல ரவிழ்குழலாய் துறந்தார்நாட் டுளதாங்கொல்
[1] மறவையா யென்னுயிர்மேல் வந்தவிம் மருண்மாலை. (௧)

## வேறு.

சங. கைதை வேலிக் கழிவாய் வந்தெம்
பொய்த லழித்துப் போனா ரொருவர்
பொய்த லழித்துப் போனா ரவர்நம்
மையல் மனம்விட் டகல்வா ரல்லர்.

சச. கானல் வேலிக் கழிவாய் வந்து

- பொய்யாக் கனவாதலால்
காணிற் கனு" என்றாராத

௬௨. தீக்குற்றம் - கொடியகுற்றம்; அஃதாவது

மூலிருடியெறிதல்.

௬௩. உறவன் - மீக்கோன்; என்றது கோவலனை.

௬௪. நற்றிறம் - இருவரும் தேவலோகம்புகுதவுள்ள நன்மை.

நகையாகு மென்றாள், அதன்மிகுதிநோக்கி. எனவென

ஒருசொல்வருவிக்க.

௬௫. கைத்தல் - அவனால் வெறுக்கப்படுதல்.

௬௬. உய்த்து - சேரயுய்த்து.

சச - ௬௬. என்றது: நீசொன்னபடியே கஷ்டம்பெறுவேன்; ஆயினும் உரையுமுண்டு, கண்டகனவாலேயென்று கண்ணகிசொல்ல, நீகண்டகனக் கொண்டு வருத்தவேண்டா; நீ அவனால் வெறுக்கப்பட்டாயுமல்லை.

[1] பழமொழி, ௪௨௨. (பி - ம்.) * 'மதுபிறப்பித்'

† 'நின்றிலைக்கும்'

## ௯—கனாத்திறமுரைத்தகாதை.

உசாடு

மடலவிழ் நெய்தலங் கானற் றடமுள
சோமகுண்டஞ் சூரிய * குண்டந் துறைமூழ்கிக்
௬௦ காமவேள் கோட்டந் தொழுதார் † கணவரொடு

தாமின் புறுவ ருலகத்துத் தையலார்
போகஞ்செய் பூமியினும் போய்ப்பிறப்பர் யாமொருநா
‖ ளாடுது மென்ற வணியிழைக்கவ் வாயிழையாள்
§ பீடன் றெனவிருந்த பின்னரே நீடிய
காவலன் போலுங் கடைத்தலையான் வந்துநங்
கோவல னென்றாளோர் குற்றிளையாள் கோவலனும்
பாடமை சேக்கையுட் புக்குத்தன் பைந்தொடி
வாடிய மேனி வருத்தங்கண் ‖ டியாவுஞ்
சலம்புணர் கொள்கைச் சலதியொ டாடிக்
குலந்தரு வான்பொருட் குன்றந் தொலைந்த
[1] விலம்பாடு நாணுத் தருமெனக் கென்ன

---

ருஅ - க. சோமகுண்டமும் சூரியகுண்டமுமென்னும் பேரையுடையன ; முற்று.

ருரு - கூக. முற்பிறப்பிற் கணவன்காரணமாக ஒருநோன்பு தப்பினும் ; அதற்குப் பரிகாரமாவது இந்தக்குண்டம் படிந்தாடிக் கோட்டந்தொழுதல் ; தொழுவார் கணவரொடுகூடி இன்புறுவரென்றுசொல்ல, கண்ணகியும். கூச. பீடன்றெனவிருந்த – பீடன்றென இருந்தகாலை.

பின்னர் - குலத்திற்பிறந்தார்க்குப் பெருமை

கூரு - கூ. காவலன்போலும் கோவலன் கடையிடத்தானென்று மாதிரியுரைக்க; அன்றித் தூரத்தே பார்த்து ஐயுற்று நங்காவலன்போலுமென்று அவன் அணுகினவிடத்து ஐயந்தீர்ந்து கோவலனென்றாளெனினுமாம்; கோவலன்வந்து நங்கடைத்தலையான் ; அவன்றான் நெடுங்காலம் நம்மை நீங்காக் குறிப்பினையுடையனென்றாளெனினுமமையும்.

௬௯ - ௭. சிலதிகூறுதலும் கோவலன் உட்புகுந்து.

(௪) கொடியிடையார்தாம் கோலங்கொள்ளாதிருக்க, கோவலன் (௬௭) பாடமைசேக்கையுட்புக்கென்க.

அக்காலத்தே (௬௯)

௬௯. சலம் - பொய். சலதி - பொய்ச்சி. ஆடி - அநுபவித்து.
௭0. குலந்தருவான்பொருள் - தாயத்தாரால் தரப்பட்டபொருள்.
௭௧. இலம்பாடு - வறுமை.

¹ தொல். புள்ளி. சூ. ௨௪ - ந; டி. உரிச். சூ. ௬௨ - ந; நி - வி. சூ. ௨அ௪ - உரை, மேற்.

௨௯௬

* (பி - ம்.) 'குளாடத்துறை'  † 'கலாவொடு'
§ 'பீடன்றெனவுரைத்தபின்னரே'  ‖ 'யாதும்'

‡ 'ஆடுதமோவென்ற'  ௨௯௩.

# சிலப்பதிகாரம்

சலங்கெழு முறுவ லகைமுகங் காட்டிச்
* சிலம்புள கொண்மெனச் சேயிழை கேளிச்
சிலம்பு முதலாகச் சென்ற கலனோடு
† உலந்தபொரு ளீட்டுத லுற்றேன் மலர்ந்தசீர்
மாட மதுரை யகத்துச்சென் றென்னோடிங்
கேடலர் கோதா ‡ யெழுகென்று நீடி

வினைகடைக் கூட்ட வியங் § கொண்டான் கன்குற்
கனைசுடர் கால்சியா முன்.

---

வெண்பா.

காதலி கண்ட கனவு கருநெடுங்கண்
மாதவிதன் சொல்லை ‖ வறிதாக்க—மூதை
வினைகடைக் கூட்ட வியங் ¶ கொண்டான்
கனைசுடர் கால்சியா முன்.

கன்குற்

---

எஉ. நகை - ஒளி.

எச. சிலம்பு முதலாகவென்றான், வாணிகஞ்செய்வதற்கு; முதலீடென்பாராகலான். சென்றகலன் - முன்பு வாங்கியழித்த ஆபரணம்.

எரு. உலந்தபொருள் - கெட்டபொருள்.

(எகூ) மதுரையிடத்துச்சென்று (எரு) ஈட்டுதலுற்றேனென்க.

எஎ. நீடி - நெடுங்காலநின்று.

எஅ. வியங்கொண்டான் - வினையினது ஏவலைக் கொண்டான்.

எஎ - அ. எழுகென்று வியங்கொண்டானென்க.

எஅ - கூ. கன்குலை இடத்துநின்றும் என்றது, இருளிலேபோதல்பற்றி.

மதாணியுமுதலிய அணி யும் இரட்டையங்கண்ணி பிணையன்முதலிய
பணியுங்களைந்து கொய்யனவே புனைந்தும் பூண்டும்
முடித்துஞ்செய்தல். அகனகர் - பட்டினப்பாக்கமெனி லுமமையும்.
நிகர் - ஒளி; "நீர்வார் நிகர்மலர் கடுப்ப" என்றார் கதையினும்.
பகல், ஆகுபெயர். மாய்தல் -
என்றாற்போல. மணிவிளக்கம்,

மறைதல்; "களிதுமாய்க்கும் கதிர்க்கழனி"
உம்மைத்தொகை; இருபெயர்க்கண்வந்தது;

மணி - அழகுமாம். கோலம் - ஒப்பனை;
போர்க்கோலமுமாயிற்று. தாம் - அங்ஙனம்

தமது கொழுநரோடெதிர்க்கும்
துவியமகளிர்தாம். "தெல்லு
மலருந் தூட்க் கைதொழுது, மல்ல லாவண மாலை யயர" என்றார்
வாடையினும்.

நேடுநல்

௪ - ௬. மேலோர்நாள்...........பாலகன் றன்சோர

(இ - ள்.) முன்னொருநாளிலே மாலதியென்பாள் ஒருபார்ப்பனி தனது
மாற்றாள் குழவிக்குத் தன்முலைசுரந்தபாலைச் சங்காலூட்ட அப்பால் விக்குத
லாலே தன் கையிலே அக்குழவி மரிக்கவென்க.

பால் - அன்பாலுமாம். பாலகனென்பது காலவழக்கு.
சோர்தல்-மரித்தல்.

௬ - அ. மாலதியும்..........மகக்கொண்டு

(இ - ள்.) அங்ஙனம் பாலகன் மரித்தலானே, அம்மாலதியும் பார்ப்பானோடு அவன் மனைவியும் என்மேல் அடாப்பழிகூறுதலொழித்து ஏற்பனகூறாதலால் இதற்கு என்செய்கேனென்றேங்கி அம்மகவைக்கொண்டென்க.

உம்மை, இழிவுசிறப்பு. ஒடு, எண்ணொடு. படாதன - அடாதன. ஒழிந்து.

விட்டு-

௯. அமரர்தருக்கோட்டம்—(இ - ள்.) தேவர்தருவிற்குக்கோயில்,

வெள்யானைக்கோட்டம்—(இ - ள்.) ஐராவதத்திற்குக்கோயில்,

௧௦. புகர்வெள்ளைநாகர்தம் கோட்டம்—(இ - ள்.) அழகினையுடைய பலதேவர்கோயில்,

புகர் - அழகு. வெள்ளைநாகர் - பலதேவர்.

[1] இத்தவாக்கியம், அகநானூறு, ௧௧ - ஆம் பாடலில் ௯ - ஆம் அடியாகவும் காணப்படுகின்றது.

[2] மதுரைக்காஞ்சி, ௨௪௪. [3] நெடுநல்வாடை, ௬௯ - ௭.



௧௦ - ௧௧. பகல்வாயிலுச்சிக்கிழான்கோட்டம்— (இ - ள்.) திசையிற்றோற்றுகின்ற சூரியன்கோயில்,

கீழ்த்

பகல்வாயில் - பகற்குறூற்றுநிறவாயில்; ஆவது மேற்றிசை. உச்சிக்கிழான் - பகற்பொழுதிற்குரியோன்; இனிப் பகற்பொழுதிற்கு வருவாயாயுள்ளவனென்று மாம்; குரியன்கோயிலென்றபடி.

கக. ஊர்க்கோட்டம்—(இ - ள்.) இறைவனூராகிய

கோயில்,

கைலாயத்திற்கும்

வேற்கோட்டம்—(இ - ள்.) முருகவேளிற்குங்கோயில், வேல், ஆகுபெயர்.

கஉ. வச்சிரக் கோட்டம்—(இ - ள்.)

வச்சிரப்படைக்குக்கோயில்,

[1] புறம்பணையான் வாழ்கோட்டம்—(இ-ள்.)

சாதவாகனன்கோயில்,

புறம்பு அணைந்தவிடம் புறம்பணையாயிற்று; [2] "புறம்பணை மேவைச" என்றார் சிந்தாமணியினும்.

யியம்பு

கரு. நிக்கந்தக் கோட்டம்—(இ - ள்.) அருகன்கோயில்,

என்னை? "துக்கந் துடைக்குந் துணை நூ காட்சிய, நிக்கந்த வேடத் திருடிகணங்களை, யொக்க வடிவீழ்ந் தலியல் செய்தபி, னக்கதை யாழ்கொண் டவா வரப் பண்ணி" என்றார் வினையாபதியினும்.

நிலாக்கோட்டம்—(இ - ள்.) சந்திரன்கோயில்,

இவை செவ்வெண்.

மகாசாத்திர னென்பது அவற்குப் பெய ராயிற்று. சாத்தற்கு, உருபுமயக்கம்; இது, [1] "மணற் கேற" என்றாற்போலின்றது. கிடந்தானுக்கு - கிடந்தானை; இயல்புமாம். இப்பொருட்கு ஆகிலாயென்றுசொல்லியென ஒருசொல் வருவிக்க.

கக - உஉ. ஏசும்படியோர்..........மகவை

(இ - ள்) சுடுகாட்டுக்கோட்டத்து இடுபிணத்தினும் ஏசும்படி ஓரிளங்கொடியாய்த் தூங்கிருளிற்சென்று அங்குப்

இடாகினிப்பேய்
பாடுகிடந்தானை
சோக்கி ஒன்றினும் குற்றமற்றவனே, கேளாய்; முற்பவத்தில் தவஞ்செய்யாதோர்க்குத் தேவரும் வரங்கொடார்; ஈது பொய்யன்று; மெய்யெனச்சொல்லி அங்ஙனம்பட்ட பின் பிள்ளைப்பிணத்தைப்பார்த்துத் தந்தகாணெனச்சொல்லாநின்று பறித்து அவன்வாங்கி மடியகத்திட்டாளென்க.

ஏசல் - பழித்தல். படி - வடிவு. பிறரைப்பழிக்கும் வடிவையுடையதொரு பெண்வடிவுமாம். சுடுகாட்டுக்கோட்டம் - [2] சக்கரவாளக்கோட்டம். தூங்கிருள்-செறிந்தவிருள்; யாவரும் அஞ்சமிருளுமாம். இடுபிணம் - குழியிலிடுபிணம். மடி - வயிறு; [3] "படியை மடியகத் திட்டான்" என்பதனானுமுணர்க. மடியகத்திட்டாள் - விழுங்கினாள். மக, [4] "குழவியு மகவு மாயிரண் டல்லவை, கிழவ வல்ல மக்கட் கண்ணே" என்பதனாற் கூறப்பட்டது; பாலகனென்பது காலவழக்கு.

உஉ - அ. இடியுண்ட...........தையலாள்

(இ - ள்.) இடிக்குரல்கேட்ட மயில் அகவுமாபோல ஏங்கியழுகின்ற தையலாளுக்கு அச்சாத்தன் அன்னாய், நீசெல்கின்ற வழிமுன்னர்ப் பொதும்பிடத்து உயிரோடுகிடக்கின்ற குழவியைக் காண்கின்றிலையோவென, அவன் அது செய்ய, ஏங்கி அழுகின்றாய்!

கனாவோடு - கனாவினை.

௪௪ - ௫௪. பெறுகேன் ................ நகையாகும்.

(இ - ள்.) செறிதொடீஇ, நீ இன்னகையுறுதலாற் பெறுவேனாயினும் என் னெஞ்சம் ஐயுறுகின்றதுகாண்; அஃது எற்றாலெனின், நெருநற் கண்டுற் கனவின்கண் என்கொழுநன் என்னைக் கைப்பற்றிக் கொண்டுபோக யாங்கள் ஒரு பெரிய பதிக்கட் புக்கோம்; அங்ஙனம் புக்க பதியிடத்தே எங்கட்கு ஏலாததோர் பழித்துரையை அவ்வூரார் இடுதேளிடுமாறுபோல என்மேலிட்டனர்; அங்ஙனம் அவரிடப்பட்ட அப்பழிமொழியுற் கோவலற்கு ஓர் தீங்குற்றதென்று பிறர் சொல்லக் கேட்டு அதுபொறாது அவ்வூரரசன் முன்னர் சென்றேன்சென்று வழக்குரையாதேன் வழக்குரைத்தேன்; ஆதலால் அவ்வரசனோடு அவ்வூர்க்கும் உற்றதோர் தீங்குண்டு; ஆனாலும் அவை தீக்கனாவாதலான் நினக்குரையேன்; இங்ஙனம் தீவினையுற்ற என்னோடு பொருந்திய மிக்கோனுடனே யான்பெற்ற நற்றிறங்களை நீ கேட்பாயாயின் அது நினக்கு நகையைத் தருமென்று சொல்லவென்க.

கடுக்கும் - ஐயுறும்; கடியென்னுமுரிச்சொல் ஈறுதிரிந்தது; [1] "போற்றி யரியவை போற்றல் கடுத்தபின், தேற்றுதல் யார்க்கு மரிது" என்றாற்போல. அது, [2] "ஐயமுங் கரிப்பு மாகலு முரித்தே" என்பதனான் முடிந்தது. கனவினும் கடுக்குமெனினுமமையும்.
இடுதேளிடுதல் - தேளிடப்படுவார் காணுமே தேளல்லாததொன்றை மறையக் கொடுவந்து மேலேயிட்டு அவரைக் கலக்கப்பண்ணுதல்; பாய்ச்சுத்தேளென்பாருமுளர். என்றன்மேல்: தன், அசை. என்றன்மேலென்றாள், பெண்பாற்றன்மையான்; அன்றி இப்பழியைத் தான் சுமந்தாற்றினானெனினுமமையும். தீங்கென்று அது கேட்டு - தீங்கென்றுசொல்ல அதுகேட்டு; சொல்லவென ஒருசொல்வருவிக்க. ஒடு, எண்ணொடு; வேறுவினை ஒடுவுமாம்;

ஆவது காவலன் மரணமும் வரைதீப்பாடும். உம்மை, இறந்ததுதழீஇயவெச்சவும்மை. உரையாடேனென்றான்; [3] "உரையா சிறித்தக்க காணிற் கனு" என்பது பழமொழியாகலின். தீக்குற்றம் - கடிதானகுற்றம்; ஆவது மூலிருவியெறிதல். நற்திறம் - இருவரும் சுவர்க்கம்புகுதல். நகையாகுமென்றான், இது பட்டாத தொன்றாகலின். எனவென என்பதும் ஒருசொல் வருவிக்க.

---

[1] திருக்குறள், [illegible]

[2] தொல்காப்பியம், உரிச்சொல்லியல், சூ. [illegible]

[3] பழமொழி, [illegible]



## [illegible] - [illegible]. பொற்றொடீஇ..........பின்னரே

(இ-ள்.) பொற்றொடீஇ, நீகண்டகனாக்கொண்டு வருந்தவேண்டா; நீ அவனால் வெறுக்கப்பட்டாயுமல்லை; நின்கணவன்காரணமாக ஒருநோன்பு முற்பிறப்பிலே தப்பினாய்; அதனால் உள்ளதீங்குமிக்கன; அத்தீங்கும் கெடுவனவாக; காவிரி தன்னீரைக்கொண்டுசென்று கடலோடெதிர்த்து அலைக்கும் சங்குமுகத் துறையாகிய பூவிரிதழவிழும் நெய்தற்கானலிடத்து இரண்டு தடாகமுள்ளன; அவை யாவையெனிற் [1] சோமகுண்டம் சூரியகுண்டமென்னும் பெயரையுடையன; அவற்றின்
தொழுதாராயின்,

துறைகளின்மூழ்கிக் காமவேள்கோட்டத்திற்புக்கு அவனைத்
அவர் இப்பிறப்பிலுள்ள நாளெல்லாம் தம்கணவரோடும் பிரி
வின்றியிருந்து இவ்வுலகத்து இன்பமுறுவர்; மறுமைக்கும்
போகபூமியிலேயும் போய்ப்பிறந்து கணவரோடும் பிரிவின்றி
முன்றுபல்லங்காலம் இன்புறுகர்வ ராதலான் அவற்றை யாமும்
ஒருநான்று ஆடக்கடவேமென்று சொன்ன தேவந்திக்குக் கண்ணகி

# க—கனாத்திறமுரைத்தகாதை.

ஃ (8)

பாடு - படுக்கையுமாம். சலம் - பொய். சலதி - பொய்த்தி. ஆடுதல் - உடனாதல். குலந்தருவான்பொருள் - தொன்றுதொட்டுவருகின்றபொருள் - இன்று நாளைத்தருமென்றது. 'கெட்டால் மதிதோன்றும்' என்னும்வழக்கு.

எஉ - ஈ. நலங்கேழ்............கொண்மென

(இ - ள்.) இவ்வாறு அவன் தன்னைப்போற்றி இலம்பாடு நாணுத்தருமென்றதனை மாதவிக்குக்கொடுக்கும் பொருட்குறைபாட்டால் தளர்ந்து கூறினானாகக் கருதி ஒளிபொருந்தியமுகத்தே நலம்பொருந்திய சிறிய முறுவலைவிளைத்து இன்னும் சிலம்பு உளிலாயுள; அவற்றைக் கொண்மினென்றாளென்க

சிலம்புளவென்றாள், இவையொழிந்த கலனெல்லாம் தொலைதலால் இவை அணியாதிருத்தலின் அவனறியானாகக்கருதினும் அவன் தளர்ச்சிகூறுதலால் தான் இவையுண்மையுணர்ந்து கூறினாளென்க. புலந்து கூறினாளன்றி கற்பின் றன்மையன்றும்.

' எஈ - க. சேயிழை கேள்............கால்சிலம் முன்.

(இ - ள். ) இங்ஙனம் கருதியசேயிழாய்! கேள்; நீசொன்ன இச்சிலம்பை நான் வாணிகமுதலாகக்கொண்டு முன்பு நான் வாங்கியழித்தகலனையும் கெட்ட பொருளையும் தேடித்தொகுத்தலைத் துணிந்தேன்: அஃது எவ்விடத்தே சென்

றெனின், விரிந்த புகழையுடைய மதுரையென்னுநகரிடத்தேசென்று; ஆதலால், கோதாய்! அதற்கு நீ இப்பொழுதே இங்குநின்றும் என்னொடு எழுவாயாகவென்று சொல்லி முற்பவத்திற் றானசெய்த தீவினை தெய்வங்காலநின்று நெஞ்சை ஒருப்படுத்துதலானே அவ்வினையினது பலனைக்கொண்டான்; எப்பொழுது போதற்கெனிற் கங்குலே அவ்விடத்தினின்றும் சுடர் யென்க.

போக்குவதன்முன்னே

சேத்தல் - விளக்குதல். சிலம்புமுதலா .........உற்றேனென்பதற்குக் கலனைச் சிலம்பாலும் பொருளை முதலாலும் சுட்டுதலுற்றேனென்றானெனினு மமையும்

இது, களவென்னும் பொருளையேகருதாது மாலதிகதையையும் தேவந்தி கதையையும் கலந்துகூறிற்றேனும், உறுப்பழிவின்றி நடந்ததேனும் முச்சீரான் கடியினிறந்துவருதலான் நெடுவெண்பாட்டாகாது கலிவெண்பாட்டாதலுணர்க.

---

### வெண்பா.

காதலிகண்ட............கால்சீயாமுன்.

இவட்கு மேற்கூட்டமின்மையாற் [1] கருநெடுங்கண்ணென்றார்; கனவு சொல்லவதிதாக்க வினைகடைக்கூட்ட வியங்கொண்டானென்க. சொல்லவதிதாக்குதல் - வேனிற்காதையிற் காலைகாண்குவமென்றசொல்லைப் பயனின்றாக்குதல்.

## கூ.—கனாத்திறமுரைத்தகாதை முற்றிற்று.

---

[illegible]

## பத்தாவது.

# நாடுகாண் காதை.



வான்கண் விழியா வைகறை யாமத்து
மீன்திகழ் விசும்பின் வெண்மதி நீங்கக்
காரிரு ணின்ற கடைநாட் கங்கு
லூழ்வினை கடைஇ யுள்ளந் துரப்ப
௫. வேழகத் தகரு மெகினக் கவரியுந்
தூமயி ரன்னமுந் துணையெனத் திரியுந்
* தாளொடு குயின்ற தகைசால் சிறப்பி
னீளொடு வாயி னெடுங்கடை கழிந்தாங்
கணிகிள ராவி னறிதுயி லமர்ந்த
௧௦. † மணிவண்ணன் கோட்டம் வலஞ்செயாக் கழிந்
பணையைந் தோங்கிய பாசிலைப் போதி

---

௧. வான்கண் - ஆதித்தன. விழித்தல் - விளங்குதல்

௨ வெண்மதி நீங்க - வெண்மதி நீங்கின அளவிலே.

௩. காரிருணின்ற கடைநாள் - காரிருள் கடையிலே நின்றநாள்; பூருவபக்கம்.
ஒவது

௪. ஊழ்வினை கடாவுதலால் உள்ளந்தன்னைத் துரப்ப; நெஞ்சை ஓட்ட வெனவுமாம்.

யணிதிகழ் நீழ லறவோன் திருமொழி
யந்தர சாரிக ளறைந்தனர் சாற்று
மிந்திர விகார மேழுடன் * போகிப்
கஎ. [1] புலவூண் டுறந்து பொய்யா விரதத்
தவல நீத்தறிந் † தடங்கிய கொள்கை
மெய்வகை யுணர்ந்த விழுமியோர் ‡ குழீஇய
வைவகை நின்ற வருகத் தானத்துச்
§ சந்தி யைந்துந் தம்முடன் கூடி
உ0. வந்து தலைமயங்கிய வான்பெரு மன்றத்துப்
¶ பொலம்பூம் பிண்டி நலங்கிளர் கொழுநிழ
னீரணி ‖ விழவினு நெடுந்தேர் விழவினுஞ்
சாரணர் வருஉந் ‖ தகுதியுண் டாமென
வுலக நோன்பிக ளொருங்குட னிட்ட

கட. திருமொழி - தருமம்.

கங. அந்தரசாரிகள் - ஆகாயசாரிகள். அறைந்தனர்
சொல்லி விளங்கப் பொருள் சொல்லுதல்.

சாற்றல்-ஆகமத்தைச்

கச இந்திரவிகாரம் - இந்திரன் நிருமித்தது. ஏழுடன்போகி
என்றது - இவர் அன்று கழிந்தபடியாலே அவற்றோடனேவே
கழிந்துபோயென்றவாறு.

கரு (1) புலையூண் - மச்சமாமிசம்.

கரு - எ. (1) விரதத்தாலே அடங்கிய. கொள்கையையுடைய
விழுமியோரென்க.

¹ உலக * விடைகழி யொருங்குட னீங்கிக்
கலையி லாளன் காமர் வேனிலொடு
மலய மாருத † மன்னவற் கிறுக்கும்
பன்மல ரடுக்கிய நன்மரப் பந்த
² ரிலவந் திகையி னெயிற்புறம் போகித்
தாழ்பொழி லுடுத்த தண்பதப் பெருவழிக்
காவிரி வாயிற் ‡ கடைமுகங் கழிந்து
குடதிசைக் கொண்டு கொழும்புனற் காவிரி
வடபெருங் கோட்டு மலர்ப்பொழி னுழைந்து
காவதங் கடந்து § கவுந்திப் பள்ளிப்
பூமரப் பொதும்பர்ப் பொருந்தி யாங்க
ணிருங்கொடி நுசுப்போ டினைந்தடி வருந்தி
நறும்பல் கூந்தல் குறும்பல வுயிர்த்து

---

(௨0) இம்மன்றிற் (௨௧) பிண்டிநிழலிலே (௨௪)
மென்க.

---

இட்ட (௨௫) சிலாதல

௨௬ - ௭ வாயிலுக்குவமம் அல்ல; தெருவுக்குவமம்
கழி - உலகத்தாரெல்லாரும் போகலான வூர்வாயில்; இடையே கழிதலால் இடைகழி.

யாறு. உலகவிடை
தெருவொழுக்கு

௨௮. கலை - சரீரம்; அன்றிக் கலையிலாளனென்றது, காமனென்றவாறுமாம்.
கலைகளினின்றான்

வாறைங் காதகம் மகனுட் டும்பர்
நாறைங் கூந்த லணித்தெனை நக்குத்
தேமொழி தன்னொடுஞ் சிறையகத் திருந்த
காவுந்தி யையையைக் கண்டடி தொழலு
முருவுங் குலனு முயர்பே ரொழுக்கமும்
பெருமகன் றிருமொழி பிறழா நோன்பு
முடையீ ரென்னே யுறுக ணாளிற்
கடைகழிந் திங்ஙனங் கருதிய வாறென
வுரையாட் டில்லை யுறுதவத் தீர்யான்
மதுரை மூதூர் வரைபொரு ணேட்கையேன்
பாடகச் சீறடி பரற்பகை யுழவா
காடிடை யிட்ட நாடுநீர் கழிதற்
கரிதிவள் செவ்வி யறிகுநர் யாரோ

---

௪௨. ஆறைங்காதம் - முப்பதுகாதம்; ஆறைங்காதமென்றான், அறுகாதம் ஐங்காதமென்றாற்போலத் தோன்ற.

அவட்கு

௪௩. கூந்தல், பெயர். நக்கு - நகைத்து; தொக்கதாற்பிறந்த விகாரம்

ருதல் சோக கருணைதகை

௪௪. சிறையகம் - ஸ்ரீகோயிலின் ஒருபக்கத்தே டள்ளியகம்.

௪௭. பெருமகன் - அருகதேவன்.

௪௮. உறுகணாளில் - துன்பமுறும் பாவமுடையார்போல; ளரைப்போலவென்றுமாம்.

மிடியான

காவுந்தி யையையைக் கைதொழு தேத்தி
யடிக ணீரே யருளுதி ராயினித்
தொடிவளைத் தோளி துயர்தீர்த் தேனெனக்

கோவலன் காணாய் கொண்டவிந் நெறிக்
கேதந் தருவன யாங்கும்பல கேண்மோ
வெயினிறம் பொறாஅ மெல்லியற் கொண்டு
பயில்பூந் தண்டலைப் ; படர்குவ மெனினே
* மண்பக வீழ்ந்த கிழங்ககழ் குழியைச்
சண்பக நிறைத்த ¶ தாதுசோர் பொங்கர்
பொய்யறைப் படுத்துப் போற்றா மாக்கட்குக்
கையறு துன்பங் காட்டினுங் காட்டும்
முதிர்பூஞ் செம்மலி னொதுக்கினர் கழிவோர்
முதிர்தேம் பழம்பகை முட்டினு முட்டும்
மஞ்சளு மிஞ்சியு மயங்கரில் வலயத்துச்

இஅ - க. மதுரைக்கு ஒன்றியவென்றதற்குப் போகவென வருவிக்க.

ஒருசொல்

கக. என - என்று கோவலன் சொல்ல.

கச. காணாய் - பாராய். கொண்டநெறி - வழிக்கொண்ட நெறியிடத்து; இந்நெறி - காவிரி வடகரைவழி.

கரு. யாங்கும்பலவுள - யாங்கும் மிகவுள்ளன.

கஎ. (பா) படர்குவமாயினென்றான், தன்னையும் உளப்படுத்தி.

கஅ - எக. சண்பகம் குழியைநிறைத்த பொங்கர். போற்றா மாக்கள் - பரிகரித்துப்போகாதமாக்கள்.

குறுநரிட்ட குவளையம் போதொடு
பொறிவரி வண்டினம் பொருந்திய கிடக்கை
நெறிசெல் வருத்தத்து நீரஞ ரெய்தி
யறியா தடியாங் கிடுதலுங் கூடு
எறிநீ ரடைகரை யியக்கந் தன்னிற்
பொறிமா ணலவனு நந்தும் போற்றா
தூழடி யொதுக்கத் துறுநோய் காணிற்
றாழ்தரு துன்பந் தாங்கவு மொண்ணா
வயலுஞ் சோலையு மல்ல தியாங்கணு
மயல்படக் கிடந்த நெறியாங் கில்லை
நெறியிருங் குஞ்சி நீவெய் யோனொடு
குறியறிந் தவையவை குறுகா தோம்பெனத்

௭௭. யாற்றங்கரையைவிட்டு வயல்வழியேபோதல்.
௭௯. நீர்நாய், எழுவாய். ௮௰. விலங்க - குறுக்காக.
௮௪. வேட்கை - தண்ணீர்த்தாகம். அறிவஞரெய்தி - அறிவுமயங்கி.
௮௫. குறுதல் - பறித்தல்.
௯௰. எறிநீரடைகரை - நீர்க்கரை; கடற்கரையென்பாருமுளர். ௯௩. துன்பம் - நமக்கு வருந்துன்பம்.
௯௧-௯௩. அலவனையும் நந்தையையும் போற்றாது முறையாகவிழிற அடியொதுக்கத்தினாலே உறுநோய அவைகளிற்றுக்கு உண்டாமாயின், அப்பாவம் தாங்கவொண்ணா......தடியால் கடற்கரைவழியன்று.
௯௫. அயல்பட - வேறுபட. ௯௭. ஓம்புகவெனச்சொல்லி

தோமறு * கடிகையுஞ் சுவன்மே லறுவையுங்
காவுந் தியையைப் பீலியுங் கொண்டு
மொழிப்பொருட் டெய்வம் வழித்துணை யாகெனப்
பழிப்பருஞ் சிறப்பின் வழிப்படர் புரிந்தோர்
கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும்
விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினுங்
கால்பொரு நிவப்பிற் கடுங்குர லேற்றொடுஞ்
சூன்முதிர் கொண்மூப் பெயல்வளஞ் சுரப்பக்
குடமலைப் பிறந்த கொழும்பஃ றாரமொடு
கடல்வள னெதிரக் கயவாய் நெரிக்குங்
காவிரிப் புதுநீர்க் கடுவரல் வாய்த்தலை
யோவிறந் தொலிக்கு மொலியே † யல்ல
தாம்பியும் கிழாரும் வீங்கிசை யேத்தமு
மோங்குநீர்ப் பிழாவு மொலித்தல் செல்லாக்
கழனிச் செந்நெற் கரும்புசூழ் மருங்கிற்
பழனத் தாமரைப் பைம்பூங் கானத்துக்
[1] கம்புட் கோழியுங் கனைகுர னாரையுஞ்
செங்கா லன்னமும் பைங்காற் கொக்குங்
கானக் கோழியு நீர்நிறக் காக்கையு
முள்ளு மூரலும் புள்ளும் புதாவும் கஅ.

அறுவை - தோளிலிடும் உறி.

400. மொழிப்பொருட்டெய்வம் - மொழியாகிய தெய்வம்; மொழி - உபதேசமந்திரம்; பஞ்சமந்திரம்.

கழாஅமயிர் யாக்கைச் செங்கட் காரான்
சொரிபுற முரிஞ்சப் புரிஞெகிழ் புற்ற
குமரிக் கூட்டிற் கொழும்பல் லுணவு
கவரிச் செந்நெற் காய்த்தலைச் சொரியக்
கருங்கை வினைஞருங் களமருங் கூடி
யொருங்குநின் றார்க்கு மொலியே யன்றியுங்
கடிமலர் களைந்து முடிநா றழுத்தித்
தொடிவளைத் தோளு மாகமுந் தோய்ந்து
சேறாடு கோலமொடு வீறுபெறத் தோன்றிச்
செங்கய னெடுங்கட் சின்மொழிக் கடைசியர்
வெங்கட் டொலைச்சிய விருந்திற் பாணியுங்
கொழுங்கொடி யறுகையுங் குவளையுங் கலந்து
விளங்குகதிர்த் தொடுத்த விரியல் சூட்டிப்
பாருடைப் பணைபோற் பழிச்சினர் *கைதொழ
வேரொடு நின்றோ ரேர்மங் கலமு
மரிந்துகால் குவித்தோ ரரிகடா வுறுத்த
[1] பெருஞ்செய்ந் நெல்லின் முகவைப் பாட்டுந்
தெண்கிணைப் பொருநர் செருக்குட னெடுத்த
மண்கணை முழவின் மகிழிசை யோதையும்

கஉ0. உழாறண்டொளி - தானேபட்டசேறு. கஉக. காரான் - எருமை.

கஉஉ. சொரிபுறம் - தினவையுடைய முதுகு.

கஉ௩. குமரிக்கூடு - அழியாக்கூடு. கொழும்பல்லுணவு -

பலவர்க்குத் துணைவு; அவரை துவரையுள்ளிட்டன.

௯௫. கருங்கைவினைஞர் - பள்ளர், பறையர். களமர் - உழுகுடிவேளாளர்.

௧௩௨ - ௫. அறுகையும் குவளையையுங்கலந்து கதிரோடு தொடுத்தமாலையை ஏரிலே சூட்டிப் பாருடைப்பனர்போல் ஏரொடுநின்றோர்; சூட்டு - கண்ணி; ஏரிலே சூட்டியென்றுமாம்.

௧௩௬. அரி - அரிந்திடு சூடு.

௧௩௭. முகவைபாடுதல் - பொலிபாடுதல்; முகவையென்றார், முகந்துகொடுக்கப்படுதலாலே; [1] "புகர்முகமுகவை" போல.

செல்லு

1

*

'பெருஞ்செய்ந்நெல்லின்: புறநா. [illegible]; நற். [illegible]. புறநானூறு, [illegible]. (பி - ம்.) * 'கைதொழுது'; † 'பெருஞ்செந்நெல்லின்'



௧௫௦. பேர்யாற் றடைகரை நீரிற் கேட்டாங்
கார்வ நெஞ்சமோ டவலங் கொள்ளா
ருழைப்புலிக் கொடித்தே ரூரவோன் கொற்றமொடு
மழைக்கரு வுயிர்க்கு மழற்றிக ழட்டின்

மறையோ ராக்கிய * வாவுதி கறும்புகை
கசடு. பிறையுயர் மாட மெங்கணும் போர்த்து
மஞ்சுசூழ் மலையின் மாணத் தோன்று
மங்கல மறையோ ரிருக்கை யன்றியும்
பரபபுநீர்க் காவிரிப் பாவைதன் புதல்வ
¹ ரிரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமு
கசுo. முழவிடை விளைப்போர் பழவிற லூர்களும்
பொங்கழி யாலைப் புகைபொடும் பரந்து
மங்குல் வானத்து மலையிற் றோன்று
மூரிடை யிட்ட நாடுடன் கண்டு
காவத மல்லது கடவா ராகிப
கசுக. பன்னாட் டங்கிச் சென்னா ளொருநா
ளாற்றுவீ யரங்கத்து ¹ வீற்றுவீற் றிருக்

கசo. யாற்றடைகரைகளிலே இவ்வோசைகளை முறையிற்கேட்டு.
நீரின் - நீர்மையுடனே; உருவக் கேட்டுப்போதலையுமாம்.
கசக கேட்ட உவகையால் அவலங்கொள்ளாராய.
கசஉ. உழைப்புலிக்கொடி - புலியை இடத்திலேயுடையகொடி.
கசந. மழைக்குக் கருப்பமாவது தூமம் அட்டில் - மடைசாலை.
கசஉ - ந. கொற்றத்துடனே மழைக்கருவையும் தோற்றுவித்து
விலே விளங்கிய சாலையென்க.

அவ்வள

கசச. (பா) வானவருள் - சோதருவி; அவியிடுகிற ஆவி.
கசடு. இறை - இறப்பு.
கசஅ. காவிரிப்பாவைதன்புதல்வர் - வேளாளர்.

(கருப) வினைப்போரான (கசஅ) புதல்வர்
கசக. புரப்போர் - காக்குமரசர்.

(கரு0) பழவிறலூர்களும்.

கருக. பொங்கழி - தூற்றாப் பொலி. பரந்து - பரக்க.
கருஉ. மல்குல் - இருட்சி
(கசஎ) மறையோரிருக்கையும் (கரு0) பழவிறலூர்களும் (கருஉ) ளொன்றும் (கருங) நாடெடர்க.
மலையிற்
(காக) வழிப்படர்புரிந்தோர் (கருரு) செல்லுநாளுள் ஒருநாளென்க.
கருசு. ஆற்றுவீயரங்கம் - ஆற்றை மறைக்குமரங்கம்; ஆவது துறை; அது சேரங்கம்; ஆற்றவியென்பாருமுளர்.

[2] திருக்குறள். கூகச - பரி. மேற்.
(பி - ம்.) * 'வானவிதழம்புகை.' † 'வித்தவேறுக.'

## 50.—நாடுகாண் காதை.

உகூக.

குரங்கமை யுடுத்த மரம்பயி லடுக்கத்து
வானவ ருறையும் பூநா ரொருசிறைப்
பட்டினப் பாக்கம் விட்டனர் நீங்காப்
ககo. பெரும்பெய ரைய ரொருங்குட னிட்ட
விலங்கொளிச் சிலாதல மேலிருந் தருளிப்
பெருமக னதிசயம் பிறழா வாய்மைத்
தருமஞ் சாற்றுஞ் சாரணர் தோன்றப்
பண்டைத் தொல்வினை பாறுக வென்றே

கண்டறி கவுந்தியொடு காலுற வீழ்ந்தோர்
வந்த காரணம் வயங்கிய கொள்கைச்
சிந்தை விளக்கிற் றெரிந்தோ னாயினு
மார்வமுஞ் செற்றமு மகல நீக்கிய
வீர னாகலின் விழுமங் கொள்ளான்
கழிபெருஞ் சிறப்பிற் கவுந்தி காணு
[1] யொழிகென வொழியா தூட்டும் வல்வினை
யிட்ட வித்தி னெதிர்ந்துவந் தெய்தி
யொட்டுங் காலை யொழிக்கவு மொண்ணா
கடுங்கா னெடுவெளி யிடுஞ்சுட ரென்ன
வொருங்குட னில்லா வுடம்பிடை யுயிர்க
ளறிவ னறவோ னறிவுவரம் பிகந்தோன்
செறிவன் சினேந்திரன் சித்தன் பகவன்
றரும முதல்வன் றலைவன் றருமன்
பொருவன் புனிதன் புராணன் புலவன்
சினவரன் றேவன் சிவகதி நாயகன்
பரமன் குணவதன் பரத்தி லொளியோன்

க௫எ. மரம்பயில் அடுக்கம் - மரச்செறிவு; அடுக்கம் அரங்கத்துக்கு அடுத்தவிடமுமாம்.

க௫௯. ஒருசிறை - ஒருபக்கத்திலே.

க௬0. ஐயர் - முன்சொன்ன உலகநோன்பிகள்.

க௬௧. முன்புசொன்ன சாரணர்தோன்ற.

ஐயர் [2] பட்டினப்பாக்கத்திலிட்ட சிலாதலத்திருந்து தருமஞ்சாற்றுதல் சாரணர்க்கு அடையாகி அவர்

கொன்றிய மாதவ ருயர்பிசை யோங்கி
இவர்தாங் கொருமுழ நீணில நீங்கிப்
பவந்தரு பாசங் கவுந்தி கெடுகென்
றந்தர மாருப் படர்வோர்த் தொழுது
பந்த மறுகெனப் பணிந்தனர் போந்து
காரணி பூம்பொழிற் காவிரிப் பேர்யாற்று
நீரணி மாடத்து நெடுந்துறை போகி
மாதருங் கணவனு மாதவத் தாட்டியுந்
தீதுதீர் நியமத தென்கரை யெய்திப்
போதரும் இடக்கையோர் பூம்பொழி லிருந்துழி
[1] வம்பப் பரத்தை வறுமொழி யாளனொடு
[2] கொங்கலர் பூம்பொழிற் குறுகினர் [3] சென்றோர்
காமனுந் தேவியும் போலு மீங்கிவ
ராரெனக் கேட்டீங் கறிகுவ மென்றே
நோற்றுணல் யாக்கை நொசிதவத் தீருட
னாற்றுவழிப் பட்டோ ராரென வினவவென்
மக்கள் காணீர் மானிட யாக்கையர்
பக்க நீங்குமின் பரிபுலம் பினரென
வுடன்வயிற் றோர்க ளொருங்குடன் வாழ்க்கை
கடவது முண்டோ கற்றறிந் தீரெனத்

உ0௯. உயர்பிசை - சிலாவட்டம். ஓங்கி - எழுந்திருந்து.

உ௧௩. பந்தம் - ஸம்ஸாரம்.

உ௧௫. நீரணிமாடம் - பள்ளியோடம்; போகி - அதனாலேபோந்து.

வன்.

உகக. வம்பப்பரத்தை: வம்பு - புதுமை; பரத்தைத்தன்மைக்குப்
வறுமொழியாளன் - பயனில்சொல்லுவான்.

புதிய

உஉக - உ. காமனும் தேவியும்போலும் இவராரெனக்கூறி; ஒப்பில்போலி.

போலும்,

உஉங. சோற்றுணல் - பட்டினிவிட்டுணல்.

உஉச. ஆற்றவழி - நெறியிடத்து.

உஉரு. மானிடயாக்கையரென்றது - நீங்கள் நினைத்த காமனும் மல்லரென்றவாறு.

தேவியு

உஉகூ. பரிபுலம்பினர் - செலவால் வருந்தினர்.

---

[1] சிலப்பதிகாரம், கக: கஉ. [2] தொல். முதற்சூத்திரவிருத்தி, மேற். (பி - ம்.) [3] 'சென்றழி'





# சிலப்பதிகாரம்

நீமொழி கேட்டுச் செவியகம் புதைத்துக்
காதலன் முன்னர்க் கண்ணகி நடுங்க
வெள்ளுரை போலுமில வென்பூங் கோதையை
முள்ளுடைக் காட்டின் முதுநரி யாகெனக்
கவுந்தி யிட்ட தவந்தரு சாபம்
கட்டிய தாதலிற் பட்டதை யறியார்

௨௩௫. குறமகள் கொடுங்குரற் கூவிளி கேட்டு
நறுமலர்க் கோதையு நம்பியு நடுங்கி
நெறியி னீங்கியோர் நீரல கூறினும்
அறியா மையென் றறியல் வேண்டுஞ்
செய்தவத் தீர்நுந் திருமுன் பிழைத்தோர்க்
௨௪௦. குய்திக் கால முரையீ ரோவென
அறியா மையினின் றிழிபிறப் புற்றோர்
உறையூர் நொச்சி யொருபுடை யொதுங்கிப்
பன்னிரு மதியம் படர்நோ யுழந்தபின்
முன்னை யுருவம் பெறுகவீங் கிவரெனச்
௨௪௫. சாபவிடை செய்து தவப்பெருஞ் சிறப்பிற்
காவுந்தி யையையுந் தேவியுங் கணவனும்
[1] முறஞ்செவி வாரண முன்சம முருக்கிய
புறஞ்சிறை வாரணம் புக்கனர் புரிந்தென்.

---

௨௨௧ - ௩௦. புதைத்து ஏங்கநிற்ப.

௨௩௪. பட்டதையறியாமையினத்தில் இவர் (கவுந்தியடிகள்) ளால் அறிந்திலர்.
நினைத்தற்கு

௨௩௫ - ௪௦. பின்பு அறிந்தபடி: அவர் தம்முன்னே அறியாமையினாலும், பொல்லாங்கு கூறினமையாலும், அவ்விடத்து இவரல்லது வேறு சாபமிட வல்லாரில்லையாகலானும், இச்சாபம் இவராலே வந்ததென்று இவர் (கோவலனும் கண்ணகியும்) அறிந்தார்; அறிந்து உய்திக்காலம் உரையீரோவென்றார்.

௨௪௨. நொச்சி - மதில்; பதணமுமாம்; என்றது காவல்வேண்டாத அரணென்றவாறு.

உசசு. படர்நோய் - உறழ்ச்சியாலுண்டான நோய்.

உசஎ - அ. முறம் - சுளகு. வாரணம் - யானை, கோழி; புறத்தே சிறையையுடைய கோழி - உறையூர்; வாரணம், ஆகுபெயர். யானையைக் கோழிமுருக்கலால் கோழியென்று பெயராயிற்று. யானையைச் சயித்த கோழி தோன்றினவிடம் வலியுடைத்தென்று கருதி அவ்விடத்து அதன்பெயராலே சோழன் ஊர்காண்கின்றபொழுது சிறையும் கழுத்துமாக ம்பே சிறையையுடைய கோழியென்றாயிற்று

ஆக்கியவதனால் புற

[1] முறஞ்செவி வாரணம்: கலி. சஉ.

# க.ம—நாடுகாண்காதை.

உசுள

## கட்டுரை.

முடியுடை வேந்தர் மூவ ருள்ளுந்
தொடிவிளங்கு தடக்கைச் சோழர்குலத் துதித்தோ
ரறனு மறனு மாற்றலு மவர்தம்
பழவிறன் மூதூர்ப் பண்புமேம் படுதலும்
ரு. விழவுமலி சிறப்பும் விண்ணவர் வரவு
மொழியா வின்பத் தவநுறை காட்டுக்
குடியுங் கூழின் பெருக்கமு மவர்தந்
தெய்வக் காவிரித் தீதுதீர் சிறப்பும்
பொய்யா வானம் புதுப்புனல் பொழிதலு

இணைகிளைவரி - அல்லாத......கிளைவரி முதலாயின.

கரு. (பா.) யாழின்பகுதி - வேனிற்காதையிற்சொன்ன கைக்கிளை" (கூஉ) முதலாயின.

கச. (பா.) இடைநிலைப்பாலை-"கோடிவிளரி மேற்செம் பாலை" முதலாயின; "உழைமுதற் (சிலப். ௩: அஅ.)

(பி - ம்.) * 'ஒழியாவின்பத்தலருடை' † 'சத்திய' ‡ 'பிளைநிலை'



தாரத் தாக்குமுன் தான்றெரி பண்ணு
மூரகத் தேரு மொளியுடைப் பாணியு
மென்றிவை யனைத்தும் பிறபொருள் வைப்போ
டொன்றித் தோன்றுந் *தனிக்கோ ணிலைமையு
மொரு பரிசா நோக்கிக் கிடந்த
புகார்க்காண்டம் முற்றிற்று.

---

வெண்பா.

காலை யரும்பி மலருங் கதிரவனு
மாலை மதியமும்போல் வாழியரோ—வேலை
யகழா லமைந்த வவனிக்கு மாலைப்
புகழா லமைந்த புகார்.

கரு. தாரத் தாக்குமர் தான்றெரி பண்ணும் : "புறத்தொரு பூக்கொடி மயக்கி" என்றது முதலாயின; (சிலப். அ: சச.)

பாணியிற்

கசு. ஊரகத்தேர் - இந்திரவிழவூரெடுத்தகாதையிற்சொன்ன ஊரின் வண்ணம்.

ஒளியுடைப்பாணி - "வெங்கட்டொலைச்சிய விருந்திற் பாணி" முதலாயின;—(சிலப். கo: கருக.)

கஎ. பிறபொருள்வைப்பு - ...........முதலாயின.

முதலாவது
புகார்க்காண்டம் அரும்பதவுரையுடன் முற்றிற்று.

---

(பி - ம்.) * 'தன்கோனிலைமையும்'

## கூo.—நாடுகாண் காதை.

உரை

க - டு. வான்கண் விழியா.........கடைநாட் கங்குல்
(இ - ள்.) உலகிற்குக் கண்ணாகிய ஆதித்தன் தோன்றிவிளங்காத வைகறை யென்னும் யாமத்திடத்து மீனோடு அழகுபெறவெழுகும்

வெண்மதியானது விசும்பினின்றும் நீங்கிற்றாகக் கரிய இருள் லென்க.
கடைக்கணின்ற கங்குற்பொழுதி

என்பது வந்தச் சித்திரைத்திங்கட் புகுதி நாள் - சோதி, திதி - மூன்றாம் பக்கம், வாரம் - ஞாயிறு இத்திங்களிருபத்தெட்டிற சித்திரையும் பூரணையுங் கூடிய சனிவாரத்திற் கொடியேற்றி [1] "நாலேழ் நாளினும்" என்பதனுன் இரு பத்தெட்டுநாளும் விழாநடந்து கொடியிறக்கி வைகாசி இருபத்தெட்டினிற் பூருவபக்கத்தின் பதினமூன்றாம் பக்கமும் சோமவாரமும்பெற்ற அனுடத்தில் நாட்கடலாடி ஊடுதலின வைகாசி இருபத்தொன்பதிற் செவ்வாயக்கிழமையும்
கேட்டையும் பெற்ற நாசயோகத்து நீறைமதிப் பதினாலாம்பக்கத்து வைகறைப் பொழுதினிடத்து நிலவுபட்ட அந்தரத்திருளிலேயென்றவாறு. அது பூருவ பக்கமென்பது தோன்றக் 'காரிருணின்ற கடைநாட் கங்கு' லென்றார்; [2] "குண முதற் றோன்றிய வாரிருண் மதியிற், றேயவன கெடுகநின றெவ்வ ராக்கம்", என இருண்மதியென்றார் மதுரைக்காஞ்சியுள்ளும். கண் -
இறைவன் கண்
ணென்பாருமுளர். விழித்தல் - விளங்குதல்; அது செயயாத வைகறை, ஆகுபெயர்; வைகல் - தயிறல்; அறல் - அறையாயிறது; [3]"பொறியறை" போல.[4]

௪. ஊழ்வினை கடைஇ யுள்ளந் துரப்ப:—(இ - ள்.) முன்செய்த தீவினை முறையானேவந்து இவனுள்ளத்தைச் செலுத்துதலானேயென்க.

கடைஇ - செலுத்தியெனறுமாம்.

௫ - அ. எழகத் தகரும்...........நெடுங்கடை கழிந்து

(இ - ள்.) எழகமாகிய தகரும் எகினமாகியகவரியும் தூய மயிரினையுடைய அன்னமுமாகியவிவை ஒன்றோடொன்று

இனமல்லவாயினும் இனம்போலே விடாது திரியும் தாளோடுகூடப் பண்ணப்பட்ட பெருமைபொருந்திய சிறப்பினையுடைய மிகவும் பெரிய கதவையுடைய இடைகழியைக் கழிந்தென்க.

நெடுவாயிற்கடை - பெரிய கதவையுடைய தலைக்கடை. தகர்முதலியன இவள் வளர்த்தனவாகலின், இவளைத் தம்மினமென்றுகருதித் திரியுமெனவுமாம்; வாயிற்கணெழுதினவற்றை இனமெனக்கருதித்திரியுமெனவுமமையும். தாளொடுகுயின்றவென்றார், போர்க்கதவாகலின் இனியிளகாமற் பண்ணுகின்ற விபாதே கூடப்பண்ணுதலான். எழுகத்தகர்முதலியன இருபெயரொட்டுப் பண்புத்தொகை. வாயில் - கதவு. கடைகழிந்தென்றார், மனையின்பெருமையும் காவன்மிகுதியுந்தோன்ற. இனி, இவள் அன்று கழிந்தாளெனினுமமையும்.

[1] மணிமேகலை, ௫: அ. [2] மதுரைக்காஞ்சி, ௪௯௫ - ௬.

[3] திரிகடுகம், ௪௰.

[4] இவ்விசேடவுரையிலுள்ள காலவரையறை பொருந்தாததுபோல் தோற்றுகிறது; ஆயினும் பிரதிகளிலுள்ளவாறே பதிப்பிக்கப்பட்டது.



# சிலப்பதிகாரம்

## அ - ௯. ஆங்கு.........வலஞ்செயாக்கழிந்து

(இ - ள்.) அங்ஙனம் வாயில்கழிந்தபொழுதே அரவணையின்மீதே அறிதுயில்கொள்ளும் மணிவண்ணனென்னும் திருநாமத்தையுடைய திருமால் கோயிலை வலஞ்செய்து கழிந்தென்க;

ஆவது வலத்திட்டேகுதல். அணி - அழகு.

மணிவண்ணன், பெயர்.

அறிதுயில் - யோகநித்திரை.

௧௧ - ௪. பணையைத் தோய்கிய........எருடன் போகி

(இ - ள்.) ஓங்கிய ஐந்துபனையினையும் பசிய இலையினையுமுடைய [1] மா போதி நிழலிலெழுந்தருளிய அறவோனாகிய புத்தன அருளிச்செய்த ஆகமத்தை ஆகாயசாரிகள் மனமுவந்து சாதி யாவர்க்கும் விளங்கப்பொருளுணர்த்தப்படும் [2] இந்திரனிருமிக்கப்பட்ட விகாரங்களேழினையும் அடைவேகண்டு அவற்றைக் கழிந்துபோயென்க.

அவை அவ்வூரப் [1] புத்தசைத்தியத்து இந்திரன நிருமித்தனவாகிய ஏழ ரங்கு. மாபோதி ஐந்துபனையது... .. இயல்பு. திருமொழி - ஆகமம். அறை ந்து சாற்றுதல் - [2] பாடமோதிப் பொருளுரைத்தல்
யாற்பண்ணுது மனத்தால் நிருமித்தல்.

விகாரம் - கையாற் கருவி

கூ - உகு. புலவூண்டுறந்து......தொழுது வலங்கொண்டு

(இ - ள்.) புலாலாகிய ஊணைத்துறந்து பொய்கூறுமை யாகிய விரதத்தோடு பொருந்தி [3] அழுக்காறு அவாமுதலிபவற்றைக் கைவிட்டு அறநூன்முதலியவற்றையறிந்து ஐம்புலனையுமடக்கிய கோட்பாட்டையுடையராய் உண்மைவகை யுணர்ந்த சிரியோர்திரண்ட ஸ்ரீகோயிலில் பஞ்சபரமேட்டிகள் நிலைபெற்ற ஐந்து சந்தியுங்கூடிவந்து தலைமயங்கியிருக்கின்ற மிக்க பெரிய மணதிற பூவையுடைய பிண்டியினது அழகுகிளரும் நிழற்கண்ணே விழுஆயனுதிகளினும் விழவுகளினும் ஆகாயசாரிகள் வரத்தகுமென்று சாவகரெல்லாம் கூடியிடப்பட்ட விளங்காகின்ற ஒளியையுடையசிலாவட்டத்தை இவள்தொழுது வலங்கொண்டென்க.

புலவூண் - புலாலோடே உண்ணுமூணுமாம்.

புலையூண் பாடமாயிற் புலையருணணுமூணெனக. விரதத்து - விரதத்தோடே. அவலம் - அழுக்காறு அவாமுதலியன. அறிந்து - அறியப்படும் அறநூல்களை அறிந்து. -

பஞ்சபரமேட்டிகளாவார்:—அருகர், சித்தர், உபாத்தியாயர், ஆசிரியர், சாதுக்களெனவிவர்.

இனி, ஐவகை நின்ற வருகத் தானத்துச்சந்திமன்றென்பதற்கு ஐந்து ஸ்ரீகோயிற்சந்திகூடிய மன்றென்பாருமுளர் பொன் பொலிவாதலன்றிப்

[1] மாபோதி = மஹாபோதி; கௌதமபுத்தருக்கு ஞானோதயமானவிடத்துள்ள அரசமரம்; "போதிமூலம்" (மணி. க0 : க0) என்பதன் குறிப்பைப்பார்க்க.

[2] சிலப். உள. கஉ.

[3] புத்தசைத்தியம் - பௌத்த வித்தியாசாலை; புத்தருலையமுமாம.

[4] பாடமோதல் - மூலத்தை விளங்கச்சொல்லுதல்.

[5] "அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொ னான்கு, மிழுக்கா வியன்ற தறம்" குறள், கடு.

திருக்

## க0.—நாடுகாண் காதை.

உகக

பொலம் பொலிவாகாமையின் அருகனுடையான் எப்பொழுதும் பொற்பூவைப் பூக்கும் பிண்டியென்க. சிலாதலம் - சந்திரகாந்தக்கல்லாற் படுத்தது. சீரணி விழவு - அபிடேகவிழவெணினுமமையும்.

உகூ - எ. மலைதலைக் கொண்ட........ஒருங்குட னீங்கி

(இ - ள்.) மலையிடத்தே தலையையுடையதோர் பெரியயாறுபோலும் உலகி லுள்ளோராயவர் போக்குவரவு செய்தற்கு அமைந்த ஊர்வாயிலை அக்காலத்துப் போவாரோடு கலந்துபோய் அதனைவிட்டுநீங்கியென்க.

உலகவிடைகழி - ஊர்வாயில். இடையேகழிதலின், அவ்வாயில் இடைகழி யாயிற்று கோயிற்கோபுரத்தை மலையாகவும் அதனோடு மணந்துகிடந்ததெரு வை ஆறாகவும் உவமித்தார்.

உ-அ - கூக. கலையி லாளன்........யிற்புறம் போகி

(இ - ள்.) மன்னவர்க்குக் காமன் வேனிலோடு தென்றலையும்

திசையாக
இடுதற்குப்பொருந்திய பலமலர்களை நிரைத்த நல்ல மரநிழலையுடைய திசையினது எயிற்குப் புறத்திலேபோயென்க.

இலவந்

கலையில்லாளன் - அநங்கன்; கலை - சரீரம். காமர் - அழகு. பந்தர் - நீழல். இலவந்திகை - நீராவியைச்சூழ்ந்த வயந்தச்சோலை. அஃது அரசனும் உரிமையு மாடுங் காவற்சோலை; [1] "இலவந் திகையி னெயிற்புறம் போகி, ஞலக மன்னவ னுழையோ ராங்குளர்" என்றார் மணிமேகலையிலும்.

௩௨ - ௩. தாழ்பொழி லுடுத்த ........கடைமுகங் கழிந்து
(இ - ள்.) இருமருங்கும் சோலைசூழ்ந்த புதுப்புன லாடப்போம் பெரிய வீதியையுடைய காவிரிக்கரையில் திருமுகத்துறைகழிகின்ற வாயிலையும் கழிந்தென்க.
கடைமுகங்கழிந்தென்றார்; காலையில் நாசீராம்வோர் பிறர்முகநோக்காது போதற்கு மறைந்துகழிவர்; இவரும் அவ்வாறுகழிந்தாரென்றற்கு.
௩௪. குடதிசைக்கொண்டு:—(இ - ள்.) மேற்றிசையை நோக்கிக் கொண்டு,
௩௪ - ௫. கொழும்புனற் காவிரி........பொழி லுழைந்து
(இ - ள்.) வளவிய புனலையுடைய காவிரியினது பெரிய வடகரையிற் பொழிலைக்கழிந்தென்க.
கோடு - கரை. நுழைதல் - கழிதல் ; அன்றி இளமரக்காவாதலால் தாழ்ந்த கோட்டிடை நுழைந்துபோயெனவுமாம்.

ரு - சக. காவதங் கடந்து.................வினவ

(இ - ள்.) நதிய ஐவகைக் கூந்தலையுடையாள் அங்ஙனம் காதமென்று
சொல்லப்படும் எல்லையைக்கடந்துசென்று கவுந்தியடிகளிருக்கின்ற பள்ளிக்கு

1 மணிமேகலை, க: சஓ - சு.



அயலதோர் பொலிவினையுடைய செறிந்த இளமரச்சோலையளவுஞ்சென்று பொருந்தி அவ்விடத்தே இனி இஃது இறுமெனத்தக்க கொடிபோலும் இடையும் அடியும் மிகவும்வருந்தி மேல் இளைப்பாற் குறுகவுயிர்த்து முற்றாத மழலை மொழியாலே கூர்த்த எயிறிலங்க மதுரையென்னுமூதூர் யாதாரென்று கேட்பவென்க.

காவதம் - காதம் ; பகுதிப்பொருள்விகுதி. பொதும்பர் - மரச்செறிவு ; கோடரமென்றுமாம்.

சஉ - ரு. ஆறைங் காதம்.......................நக்கு

(இ - ள்.) நீ கூறிய மதுரை நம் அகன்றநாட்டிற்குமேல் ஆறைங்காவதங் காண், இனி அண்ணிதென்று கூறி நக்கென்க.

யாதென்றவட்கு முப்பதென்னும் பொருள்மறைந்து காதம் ஆறு காதம் ஐந்தென்றாற்போலிருத்தற்கு ஆறைங்காதமென்றான். நகுதல் - 1 துன்பநகை.

கூந்தல், விளி.

சச - இ. தேமொழி....................தொழலும்

(இ - ள்.) அம்மனம்விளவின தேமொழிதன்னுடுசென்று ருந்த கவுந்தியடிகளைக்கண்டு அடிதொழுதலுமென்க.

தவவேலிக்கணி

சிறை - பள்ளியென்றுமாம்; ஸ்ரீகோயிலின் ஒருபக்கமுமாம்.

அ - சரு. கழிந்து கழிந்து போகிக் கொண்டு நீங்கிப் போகிக் கழிந்து நுழைந்து கடந்து பொருந்தி நக்குக் கண்டு அடிதொழலுமென்க.

சசு - ஆ. உருவுங் குலனும்........கருதிய வாறெனை

(இ - ள்.) இவர்கள் தொழுதார்களாக, அழகும் குடிப்பிறப்பும் ஒழுக்கமும் இறைவனூலிற்கூறிய விரதந்தப்பாமையுமென்னும் இவற்றையெல்லாம் ஒரு தலையாகவுடைய நீங்கள் தீவினையாளரைப்போல நுமதிடத்தைக்கழிந்து வருவதற்குக் கருதியதென்னேவென்று கேட்பவென்க.

பெருமகன் - அருகதேவன். திருமொழி - அவனருளிச்செய்த ஆகமம். உறுகணாளர் - மிடியாளரென்பாருமுளர். கடைகழிதல் இவர்க்கு மரபன்மை இவ்வும்மைகள் எண்ணுக்குறித்தனவெனினும் சிறப்புப்பொருண்மை தோன்றநின்றன. பிற் கழிந்தென்றார்.

ருo - இக: உரையாட்டில்லை..............வேட்கையேன்

(இ - ள்.) மிக்க தவத்தினையுடையீர், இவ்வினாவிற்கு ஓருத்தரமில்லை; ஆயினும் யான் கருதியதொன்றுண்டு; அதுயாதெனின், மதுரையாகிய மூதூரிற் சென்று நிருமித்தபொருளைத் தேடக்கடவோமென்னும் வேட்கையையுடையேனாயினேனென்று சொல்லவென்க.

[1] "தடவருகுல வாண, அரும்பொருள் பெறுநரின் விருந்தெதிர் கொண்டு, கருந்தடங் கண்ணியொடு கடிமனைப் படுத்துவ, ருடைப்பெருஞ் செல்வர் மனைப்புகு மனவு, மிடைக்குல மடந்தைக் கடைக்கலந் தந்தேன்" எனவும், [2] "தாயு நீயே யாகித் தாங்கு" எனவும், [3] "மிகப்பே ரின்பந் தருவது கேளாய்" எனவும் ஒருபொழு திற்கு இத்துணை ஒப்படையெல்லாம் கூறவேண்டாவாகலானும் இவர்க்குத் தவப் பயனாலே சமிந்தலன்றிக் காலவுணர்ச்சியின்மைபுணர்க.

**௫௬ - ௬௫.** மறவுரை நீத்த........தீர்த்தேனென

(இ - ள்.) மறவுரைகளை

வர்தம் நூலைக்கேட்டு அந்த

நீத்திருக்கும குற்றமற்ற பொருட்பயனையுடைய

ஆகமப்படியே அறிவினையேத்துதற்குத் தெற்கின்

கணுள்ள தமிழ்நாட்டின்கண்ணதாகிய குறறந்தீர்ந்த மதுரைக்குப்போதற்கு முன்னே ஒருப்பட்ட உள்ளமுடையேனாதலின், யான்போதுவேன்; நீரும் போது மினென்ற கவுந்தியடிகளைக் கையாற்றொழுது காவானேந்தி, அடிகளே! நீரே இங் ஙனம் அருள்செயவீராயின், இவ் வளைபொருந்திய தோளினையுடையாளுடைய துயரெல்லாம் இப்பொழுதே போக்கினேனன்றோவென்று சொல்லவென்க.

நீயிரே இதுசெயவீராயினென்றது ஒரு வழக்கு. யகாரத்தை இசைநிறை யாக்கலுமொன்று. தொடி - வளைவு; [5] "தொடிக்கட் பூவை" என்றாராகலின்.

[1] சிலப். உஎ: எக - அக. [4] சிலப். கஇ: கஐ0.

[2] „ கஇ: கஉக - கூ0. [5] சீவகசிந்தாமணி, கூகக.
[3] „ „ கதக.

நாடு
தற்கு
கும்

நிலனேக்கி ஒதுங்கிச்செல்வோரை முற்றிப் பழுத்து விண்டு தேனொழு பலாப்பழங்கள் தாழ்ந்தகோட்டின் கணிருந்து பகைபோல முட்டுதலைச் செய்யினுஞ் செய்யுமென்றாரென்க.

இனித் தேமென்பதனை இனிமையாக்கித் தெங்கம்பழம் முட்டுமெனினு மமையும்; பழம்பகையாயெனப் பண்பொட்டுவிரிக்க.

முட்டினுமுட்டுவரென்றது பாடமாயின், கழிவோர்செய்யினுஞ்செய்வா ரென்க; உம்மையை ஐயவும்மையாக்கிப் பொருளுரைக்க. பட்ர்குவமெனினே யெனக் கழிவோர்கருத்தைக் கொண்டு கூறினர், உலகியலாகலான்.

எச - ம். மஞ்சளுமிஞ்சியும்........பகையுறுக்கும்

(இ - ள்.) அவ்வாறன்றி வெள்ளிடைப் போவோமெனின், ஆண்டு மஞ்சள் முதலியன தம்மிற் றலைமயங்கிய பிணக்கத்தையுடைய தோட்டங்களிற் பாத்தி தோறும் பலவின் செஞ்சுளைகளினுள்ள வெண்காழாகிய பருக்கைகள் இவள் மெல்லடிக்குப் பகையாய் உறுத்தலைச் செய்யுமென்றாரென்க.

வலயம் - பாத்தி. வலயத்தோடு பரலும் பகையாயுறுக்குமெனினுமமை யும்; உறுக்கும் - உறுத்தும்.

[1] சிலப்பதிகாரம், வேட்டுவவரி, "செம்பொன்வேங்கை"

கூ.—நாடுகாண்காதை.

வரும்

உள்ளு - உள்ளான். ஊரல் - குளுவை; நீர்மேலூர்தலினால், ஆகுபெயர். புள்ளு-கணந்துட்புள். போதா - பெருநாரை, மரக்காளுரை; புதா, விகாரம். வெல்போரும், முனையிடமும் வினைத்தொகை. குழுஉக்குரல் - பலவாயொன்றான ஓசையுமாம.

கஉ0 - உச. உழாஅ நுண்டொளி. . . . . . காய்த்தலைச் சொரிய

(இ-ள்.) உழவரா லுழப்படாத சேட்டுக்குழியிற் சேற்றினுட்புக்கு அழுந்திய கழுவாதமயிரையுடைய யாக்கையையும் சிவந்தகண்ணையுமுடைய எருமை தன் தினவையுடையமுதுகை உரிஞுதலாலே புரிதேய்ந்து அற்றுச்சரிதலுற்ற அழிவற்ற புரிக்கூட்டினின்ற வளவி ப பலவருக்கத்துநெல்லுக் கவரித்தொங்கல்போல விளைந்துகிடக்கின்ற செந்நெற்கதிர்த்தலையிடத்தே சொரியவென்க.

தொளி - சேறு.

கஉரு - சு. கருங்கை..............ஒலியே யன்றியும்

(இ - ள்.) அங்ஙனம் நெற்சொரிதலானே வினைஞரும் ஒன்றுபட நின்றொலிக்கும் ஒலியும், அதுவேயன்றியுமென்க.

களமருங்கூடி . கருங்கை - வலியகை. வினைஞர் - பறையர், பள்ளர் உழவர்கீழ்க்குடிமக்கள். கருங்கை இருவர்க்கும்பொது.

முதலாயினர். களமர்-

கஉஎ - ௩க. கடிமலர் களைந்து............விருந்திற் பாணியும்

(இ - ள்.) காலையின் முடித்த பூக்களைந்து முடித்தமுடியிலே முடியினுற்றை நறுக்கிச் சூடிக்கொண்டு வளைந்தவளையையுடைய தோளும் முலையாகமுந்தோய்ந்து சேருடுகோலத்தொடு அழகுபெறத்தோன்றிச் சிவந்த கயல்போலும் பெரிய கண்ணையும் சிறியமொழியையுமுடைய கடைசியர் கடுகமயக்கும் கள்ளை உண்டு தொலைத்ததனுலுண்டான பண் நிறத்திற்சேர்ந்து பழகிப்போதாத பாட்டுமென்க.

என்றது, மதுமயக்கத்தாற் பஞ்சலித்து மயங்கப் பாடினுரென்றபடி. இனிக் கடிமலர்களைந்து முடிநாறழுத்தியென்பதற்குப் போகாப்புல்லாகிய கழுநீர்முதலைப்பறித்து மறித்து அதன்மீதே முடியினுற்றைப் பகுந்துநட்டெனினுமமையும். தோளும் ஆகமும் தோய்ந்துசேருடுதல் - களித்து ஒருவர்மேல் ஒருவர் சேற்றை இறைத்துக்கோடல். வீறுபெறத்தோன்றலாவது - முலைமேற்றெறித்த சேறு கோட்டுமண் கொண்டாற்போன்றிருத்தல்; * "வாரிய...... கொள்ளா முலை" என்ருற்போல. சின்மொழி - இழிந்தமொழி; சிலவான்மொழியுமாம்.

* முத்தொள்ளாயிரம்: "வாரிய பெண்ணை வருகுரும்பை வாய்த்தனபோ, லேரிய வாயினு மென்செய்யும்—கூரிய, கோட்டானைத் தென்னன் குளிர்சாந் தணியகலங், கோட்டுமண் கொள்ளா முலை"

## ௬௦.—நாடுகாண்காதை.

உ-ள்.

விருந்திற்பாணி - தம் இசையிற் புதுமையுண்டாகப்பாடும் பாட்டெனினுமமையும்; இதனைப் பெருமுளையென்பாருமுளர்.

௧௩௨ - ௫. கொழுங்கொடி.........ஏர்மங்கலமும்

(இ - ள்.) செங்நெற்கதிரோடே அறுகையும் குவளையையும்

கலந்து தொடுத்தமாலையை மேழியிலேசூட்டிப் பாரை இரண்டாகப் பிளப்பாரைப் போலப் போற்றுவார்தொழப் பொன்னேர்பூட்டிநின்றோர் ஏரைப்பாடும் ஏர் மங்கலப்பாட்டுமென்க.

சூட்டித் தொழ நின்றோர் பாடும் ஏர்மங்கலமுமென்க.

கஅ௬ - எ. அரிந்துகால்........முகவைப் பாட்டும்

(இ - ள்.) நெல்லையரிந்து போரிட்டார் சூட்டைக் கடாவிடுதலானுண்டான முகவைப்பாட்டும்;

ஆவது பொலிபாடுதல். முகக்கக் கொடுத்தலின், முகவையாயிற்று.

கஅ௮ - கூ. தெண்கிணைப் பொருநர்... ...மகிழிசை யோதையும்

இது களவழிவாழ்த்து; என்னை? [1] "தண்பணை வயலுழவனைத், தெண்கிணை வன் றிருந்துபுகழ் கிளந்தன்று." வரலாறு: "பகடுவாழ் கென்று பணிவயலு ளாமை, யகடுபோ லங்கட் டடாரித்—துகடுடைத்துக், குன்றுபோற் போர்விற் குருசில் வளம்பாட, வின்றுபோ மெங்கட் கிடர்" எனவரும். கிணை - தடாரி; புட் பறையென்பதுங்கொள்க.

(இ - ள்.) தெளிந்த ஓசையையுடைய கிணைப்பொருநர் செருக்குதலோ டெடுத்த மார்ச்சனையையுடைய திரண்டமுழவின து கேட்டோர்மகிழும் இசையின தொலியும்,

கஉ0 - ௨க. பேர்யாற்று......அவலங் கொள்ளார்

(இ - ள்.) பெரிய யாற்றடைகரையிலே இவ்வோசைகளை முறையிற்கேட்டு நெஞ்சம்விரும்புதலாலே வழிநடத்தலினுண்டான வருத்தத்தை நெஞ்சிற் கொள்ளாராயென்க.

பரந்தவோதையும் ஆர்க்குமொலியும் விருந்திற்பா ணியும் ஏர்மங்கலமும் முகவைப்பாட்டும் மகிழிசையோதையுமென்னுமிவற்றைப் பேர்யாற்றடைகரைக் கண்ணே நீர்மைபெறக்கேட்டலா லுண்டான

விருப்பத்தானே நெஞ்சில் அவலங் கொள்ளாராயென்க.

கசஉ - எ. உழைப்புலிக்கொடி.........இருக்கை யன்றியும்

(இ - ள்.) புலியைத் தன்னிடத்தேயுடைய கொடியையுயர்த்த தேரை யுடைய உரவோனாகிய கரிகாலனது கொற்றத்துடனே மழைக்கும் கருப்பத் தைத் தோற்றுவிக்கும் அழலை விளக்குகின்ற சாலையினுண்டான மறையோரா லாக்கப்பட்ட தேவருணவின் ஆவி இறையுயர்ந்த மாடமாகிய அகங்களெங்கும்

[1] புறப்பொருள்வெண்பாமாலை, வாகைப்படலம், கஉ.



போர்த்தலானே மஞ்சுசூழ்ந்த மலைபோல மாட்சிமைப்படத்தோன்றும் மறையோரிருப்பிடங்களும், அவையன்றியும்,

மங்கல

கசஅ - ஙு. பரப்புநீர்.........சென்றொருநாள்

(இ - ள்.) இரப்பவர்சுற்றத்தையும் புரப்பவர்கொற்றத்தையும் தம் உழவி னிடத்தே விளைப்போருடைய பழைய வலிபொருந்திய ஊர்களுமாகிய இவ்விரு வகையூர்களையும் இடையிட்ட நாடெல்லாங்கண்டு நடக்குநாட் காதமென்னும் எல்லையல்லது நடந்து தொலைக்கமாட்டாராய்ப் பலநாட்டங்கி நடக்கின்ற நாளிலே ஒருநாளென்க.

தூற்றுப்பொலி ஆலையிற் பாகுகாய்கின்ற புகையாற் பரக்கப்பட்டு இருட்சி யையுடைய முகிறவழ்ந்த மலைபோலத்தோன்றும் பழவிறலூர்களுமென்க.

கொற்றத்தையும் கருவையும், சுற்றத்தையும் கொற்றத்தையும் உழவினும் விளைப்போராது இருக்கையும் ஊர்களுமென்க.

அழலினும்

[1] காவிரிநீர் கங்கைநீராதலிற் கங்கையின்புதல்வரைக் காவிரியின் புதல்வ ரென்றார்; அன்றியும் [2] "மகவாய் வளர்க்குந் தாயாகி" என்பதனானுங்கொள்க. தோன்றுமிருக்கையும் தோன்றூர்களுமென வினையும். அவ்வூர்களை இடையிட்ட நாடென்க. உடன்கண்டென்றார், இந்நாட்டுச்சிறப்பெல்லாம் கண்டு தொலைத்துக் கழிதலருமையின். புதல்வராகி உழவிடைவிளைப்போரென்க.

கஙசு - சுரு. ஆற்றுவீ யரங்கத்து.........சாரணர் தோன்ற

(இ - ள்.) ஆற்றை மறைக்கும் அரங்கத்தில் வேறிடத்தில்லாத தன்மைத் தாய் விளைந்த மூங்கின்முள்ளால் வளைக்கப்பட்ட வேலியையுடைய மரம்பயின்ற செறிந்தசோலையில் தேவருறைதற்கொத்த பூப்பொருந்தியதொருபக்கத்தே பட்டினப்பாக்கத்து [3] வான்பெருமன்றத்துப் பிண்டிநீழற்கண்ணே உலகநோன்பிக ளிடப்பட்ட சிலாதலத்தின்மேலிருந்தருளிப் பெருமகனாற்செய்யப்பட்ட அதி சயங்கள்மூன்றுந் தப்பாத ஆகமநாலினுண்மைத்தன்மையையுடைய தரும வொழுக்கத்தை யாவருங்கேட்கும்படி அருளிச்செய்யும் [4] சாரணர் அப் பட்டி னப்பாக்கத்தைவிட்டு நீங்கிவந்துதோன்றவென்க;

அதிசயமூன்றாவன: சகசாதிசயம், கர்மக்ஷயாதிசயம், தெய்வீகாதிசய மென்பன.

வீற்றுவீற்றாகி உடுத்த ஒருசிறைச் சாரணர்தோன்றவென்க.

[1] 'கங்கையாருழைச்சென்று காவிரியாரை வாங்கி' என்று
யரும்; தொல்காப்பியப், பாயிரவுரையிற்காண்க.
கூறினர் நச்சினார்க்கினி

[2] சிலப்பதிகாரம், எ: உஎ.

[3] வான்பெருமன்றமென்பதுமுதலாக இங்கே தந்துரைத்தவற்றை, உ0-ஆம் அடி முதலியவற்றிற்காண்க.

இக்காதை

[4] சாரணர்-சமணமுனிவர். அவர், தலசாரணர் சலசாரணர் பலசாரணர் புட்பசாரணர் தந்துசாரணர் சதுரங்குலசாரணர் சங்கசாரணர் ஆகாசசாரணரென எண்வகையர்; இவ்விருவராகச்சென்று தருமோபதேசஞ்செய்தல் அவர்கட்கு இயல்பென்க.

## கo.—நாடுகாண்காதை.

உரை

கஙச - க. பண்டைத் தொல்வினை......கொள்ளான்

(இ - ள்.) முன்செய்த பழவினையெல்லாம்
கெட்டோடுகவென்று உட்கொண்டு அவர்வந்தமையைக் கண்டறிந்த
கவுந்தியடிகளுடனே சென்று அவரடியிலே தலையுறவீழ்ந்தார்;
அங்ஙனம்வீழ்ந்தவர் ஈண்டுவந்தது தனது விளங்
கிய கோட்பாட்டையுடைய [1] அவதிஞானத்தால் தெரிந்தவனாயினும் ஆர்வமும் செற்றமும் தன்னைவிட்டுப்போம்படி நீக்கிய [2] வீரனருளாலே இவர்க்குவருந் துன்பத்திற்குத் தான்வருந்தானாய் என்க.

[1] கண்டறிகவுந்தியென்பதனானும் காலவுணர்ச்சியின்மையுணர்க.

ஒடு, ஒரு வினையொடு.

கஎ(1) - எக. கழிபெரு......................வல்வினை

(இ - ள்.) மிக்க பெரிய தவச்சிறப்பையுடைய கவுந்தி, யாவரானும்

ஒழிக்க ஒழியாததாய் நுகர்விக்க வந்துநிற்கின்ற தீவினையைக் காணுயென்ருரென்க.

காணுய் - பாராய். ஒழிகெனவொழியாதெனபதற்கு. நீ * 'உரிய தன்றீங் கொழிக' எனவும் ஒழியாது ஊட்டுந்தீவினையையெனினுமமையும்.

களஉ - ந. இட்ட வித்தின்..........ழுண்ணு

(இ - ள்.) விளைநிலத்திட்ட வித்துப்போலப் பயனெதிர்ந்து கண்கூடாக நல்வினைவந்து நுகர்விக்குங்காலத்தும் ஒழிக்கவொண்ணு ; ஒழிக்க வொழியாதென்ருரென்க.

அதுபோல இதுவும்

[5] "உறற்பால... .........தணிப்பாருமில்" என்ருராகலின், னையேகூறினுமமையும். உம்மை, எச்சவும்மை.

தீவினைதன்

களச - ரு. கடுங்கால்..............உடம்பிடை யுயிர்கள்

படி

(இ-ள்.) கடியகாற்றையுடைய நெடியவெளியிலிடப்பட்ட விளக்கென்னும் மாயினல்லது கூடி உடனில்லா, உடம்பினின்ற உயிர்களுமென்ருரென்க.

நல்வினை தீவினைப்பயனுகிய இன்பமும் துன்பமும் வருங்கால் யாவரானும் ஒழிக்கவொண்ணுவென்பதூஉம், யாக்கைநிலையாமையும் இவர்தம்பால் உறுவது

கண்டு கவுந்தியடிகட்குச் சாரணர்கூறினுரெனவுணர்க.

நினைவற அழிவதற்கும், புக்குழிப் புலப்படாமைக்கும்.

விளக்கு உவமித்தார்;

களசு - ..க.

அறிவ னறவோன்.........பொதியறை யோரென

[1] அவதிஞானம் - அதீதகதமானபரிஞ்ஞானம்; அஃதாவது தன்னுடைய முற்பிறப்பையறியுமறிவு.
[2] வந்தசாரணரிருவருள், உபதேசிப்போர் மூத்தோரேயாதலின், வீரனென ஒருமையாற்கூறினர்.
[3] இஃது, 'உரிய தன்றீங் கொழிகென வொழியீர்' (இக்காதையில் அடி) என்பதன் உரையிற்கூறியதை வற்புறுத்தற்கு.

இ௯ - ஆம்

[4] சிலப்பதிகாரம், ௧0: இ௯. [5] நாலடியார், பழவினை, ௪:





௧௭௯. அறிவன்—(இ - ள்.) எல்லாப்பொருளையுமறியும் அறிவையுடையோன்,

அறவோன்—(இ - ள்.) அறஞ்செய்தலையே தொழிலாகவுடையோன்,

அறிவுவரம்பிகந்தோன்—(இ - ள்.) யாவருமறியப்படும் அறிவெல்லையைக் கடந்தோன்,

கஎஎ. செறிவன்—(இ - ள்) எல்லாவுயிர்கட்கும்

இதனுயுள்ளவன் ;

சலியாதவனென்றுமாம்.

சினேந்திரன்—(இ - ள்.) எண்வகைக் கன்மங்களையும்

தவன்,

சயித்

அவையாவன [1] ஞானவரணீயம், தரிசனவரணீயம், வேதநீயம், மோகனீயம், ஆயுஷ்யம், நாமம், கோத்திரம், அந்தராயமெனவிவை.

சித்தன்—(இ - ள்.) கிருதகிருத்தியன் =

செய்யவேண்டுவன

வற்றைச்செய்துமுடித்தவன்,

கன்மங்களைச் கழுவினவனுமென்ப.

பகவன்—(இ - ள்.) [2] கேவலஞானி,

கஎஅ. தரும முதல்வன்—(இ ள்) தருமங்களுக்கு

அடியாயுள்ளவன்,

தலைவன்—(இ - ள்.) எல்லாத்தேவர்க்கும் தலைவனாக

பட்டவன்,

எண்ணப்

தருமன்—(இ - ள்.) தருமமாயுள்ளவன்,

கஎகூ. பொருளன்—(இ - ள்.) ஆகமத்தின

பொருளாயுள்ளவன் ;

உண்மைப்பொருளாயுள்ளவனெனவுமாம்.

புனிதன்—(இ - ள்.) சுத்தன்; புதியவனுமென்ப.

புராணன்—(இ - ள்.) பழையவன்,

புலவன்—(இ - ள்.) எல்லார்க்கும் அறிவாயுள்ளவன்,

கஅ௦. சினவரன்—(இ - ள்.) சினத்தைக் கீழ்ப்படுத்தியவன்,
தேவன்—(இ - ள்.) தேவர்களுக்கு ஆதியாகிய தேவன்,

[1] ஞானவரணீயமுதலியவெட்டும் காதி அகாதியென இருவகைப்பட்டு, நூற்று நாற்பத்தெட்டாக விரியுமென்பர்.

[2] கேவலஞானம் - ஐந்துஞானத்துள்ளுஞ்சிறந்தது. ஐந்து ஞானங்களாவன :— க. மதிஞானம் - சுபாவபுத்தி; உ. சுருதஞானம் - நூலுணர்ச்சி; ங. அவதிஞானம் - தன்னுடைய முற்பிறப்பையறியுமறிவு ; ச. மனப்பரியயஞானம் - தன்னுடைய முற் பிறப்பையும் பிறருடைய முற்பிறப்பையும் அறியுமறிவு ; ரு. கேவலஞானம் - திரிகால வுணர்ச்சி.

## க௦.—நாடு காண் காதை.

உழுத

சிவகதி நாயகன்—(இ-ள்.) வீட்டுலகிற்கு

நாயகனுயுள்ளவன்,

கஅக. பரமன்—(இ - ள்.) மேலானவன்,
குணவதன்—(இ - ள்.) குணத்தையுடையவன்; வதம் - முமாம்.

[1] விரத

பரத்தி லொளியோன்—(இ-ள்) மேலாய உலகிற்கு யுள்ளவன்,

விளக்கா

கஅஉ. தத்துவன்—(இ - ள்.) தத்துவங்களையுடையோன்,
சாதுவன்—(இ - ள்.) ஒடுங்கினவன்,
சாரணன்—(இ - ள்.) ஆகாசவாசி,
காரணன்—(இ - ள்.) எல்லாவற்றிற்கும்

காரணமாயுள்ளவன் = காரணபூதன்,

கஅரு. சித்தன் — (இ-ள்.) எண்வகைச்

சித்திகளையுமுண்டாக்கினவன்,

பெரியவன் — (இ - ள்.) எல்லாவற்றுனும் பெரியவன்,

செம்மல் — (இ - ள்.) நாயகமூர்த்தி,

திகழொளி — (இ - ள்.) விளங்கும் ஒளியாயுள்ளவன்,

கஅச. [2] இறைவன் — (இ - ள்.) எப்பொருளினும்

தங்குகின்றவன்,

குரவன் — (இ - ள்.) குருமூர்த்தியாயுள்ளவன்,

இயல்குணன் — (இ - ள்.) இயல்பையே

குணமாகவுடையவன்,

எங்கோன் — (இ - ள்.) எம்முடையசுவாமி,

கஅரு. குறைவில் புகழோன் — (இ - ள்.) நிறைந்த

யோன்,

புகழையுடை

குணப்பொருட் கோமான் — (இ - ள்.) குணங்களைச்

சம்பத்

தாகவுடையவன்,

கஅசு. சங்கரன் — (இ - ள்.) சுகத்தைப்பண்ணுகின்றவன்,

ஈசன் — (இ - ள்.) ஐசுவரியவான்,

சயம்பு — (இ - ள்.) தானேதோன்றினவன்,

சதுமுகன் — (இ - ள்.) நான்குமுகன் =

முகன்,

அதிசயத்தோடுநான் ——————

---

[1] விரதம் - அணுவிரதம், குணவிரதம், சிக்ஷாவிரதமென மூன்றுவகைப்படும்; அவற்றுள், குணவிரதம்:—திக்குவிரதம், தேசவிரதம், அநர்த்ததண்டவிரதமென மூன்றுவகைப்படும்,

[2] இறை - தங்குதல்.



கஅஎ. அங்கம் பயந்தோன்—(இ - ள்.) [1] அங்காகமத்தை யுண்டாக்கினவன்,

அருகன்—(இ - ள்.) பூச்சியன்,

அருண்முனி—(இ - ள்.) சிவபா மூர்த்தி.

கஅஅ. பண்ணவன்—(இ - ள்) கடவுள்,

எண்குணன்—(இ - ள்.) எட்டுக்குணங்களையுடையோன்,

எண்குணமாவன:-அநந்தஞானம், அநநதவீரியம், அநந்ததரிசனம், அநந்த சுகம், நிர்நாமம், நிர்க்கோத்திரம், நிராயுஷ்யம், அழியாவியல்பெனவிவை

பாத்தில் பழம்பொருள்—(இ - ள்) பகுத்தற்கரிய புராணப்பொருளாயுள்ளவன்; ஒட்டமறற பொன்னேயொப்பானென்றுமாம்.

கஅகூ. விண்ணவன்—(இ - ள் ) சுவர்க்கவாசி,

வேத முதல்வன்—(இ - ள்.) [2] ஆகமமூன்றிற்கும் முதலாயுள்ளவன,

விளங்கொளி—(இ-ள்.) அஞ்ஞானவிருணீங்க விளங்குமொளி,

ககய - கக. ஓதிய வேதத்து ......பொதியறை யோரென (இ - ள்.) இந்நாமங்களையுடையோனுலோதப்பட்ட ஆகமமாகிய

விளக் கொளியைப் பெறுறபோகதே றுவதல்லது யாவரும் பிறவியாகிய சிறையினின றும் போகமாட்டாரெனறுரென்க.

[3] பொதியறை - துவாரமில்லாத கீழறை.

கக௨ - ரு. சாரணர்..............மேற்கொண்டு

(இ - ள்.) இங்ஙனம சாரணரருளிச்செய்த உண்மைமொழியைக்கேட்டுத் தவத்திறகு முதல்வியாகிய கவுநதியடிகளும தமது கைகளைத் தலைமேல்வைத்துக் கொண்டு நின்றுகூறுவார :—

கக௪ - ரு. ஒருமூன்று............செவியகந் திறவா

(இ - ள்.) எனதுசெவிகள் காமவெகுளிமயக்கங்களைக் கெடுததவனு

லோதப்பட்ட ஞானபாதமாகிய திருமொழியைக்கேட்டறகுத

பிறிதொன் றற்குத் திறபபன வல்லவென றுரெனக.

திறப்பினல்லது

அவித்தல் அடக்குதலுமாம்.

---

[1] அங்காகமம், க௨ பகுப்புடைத்து. அவைவருமாறு:—க. ஆசாராங்கம், உ. சூத்திரகிருதாங்கம், ௩. ஸதாஞங்கம், ௪. ஸமவாயாங்கம், ரு. வியாக்கியாப் பிரஜ்ஞப்த்யங்கம், ௬. ஞாத்ருகதாங்கம், எ. உபாஸகாத்தியயஞங்கம், அ. அந்தக்கிருததசாங்கம், ௯. அநுத்தரோபபாதிகதசாங்கம், க0. பிரசசிநவியாகரணங்கம், கக. விபாகசூத்திராங்கம், க௨. திருஷடிவாதாங்கம்.

[2] ஆகமமூன்றவன: அங்காகமம், பூர்வாகமம், பகுசுருதியாகமமெனபன.

[3] இது புழுக்கறையெனவும் வழங்கும்; மணி. ௩: ௬௫; உ௩: ௬0.

க0.—நாடுகாண் காதை.

உ௬ரு

கருகரு - எ. காமனை.....................நவிலா தென்று

(இ - ள்.) என்நாவும் காமன்செயலை வென்றவனுடைய ஆயிரத்தெட்டு வகைப்பட்ட நாமம் நவிலினல்லது பிறிதொன்றனை நவிலாதென்றுரென்க.

ககஅ - க. ஐவரை வென்றோன் .....காணு வென்கண்

(இ - ள்.) எனதுகண்களும் ஐவகைப்பட்ட இந்திரியங்களையும் வென்றவனுடைய அடியிணைகளைக் காணினல்லது பிறிதொரு தேவரடியிணைகளைக் கையகத்தேகாணினும் காணுவென்றுரென்க.

ஐவர், செறலின்கண் திணைமயக்கம். இனிக் கைவரைகாணினும் பாட மாயின், கைவரைகாணல் கண்விழித்தலாக்கி விழித்திருப்பினும் காணுவென்க.

உ00 - உ0க. அருளறம் பூண்டோன்.........பொருந்தாது

(இ - ள்.) எனது பயனற்றயாக்கை அருளால் அறத்தைப்பூண்டோனுடைய திருமேனிப்பொருட்டுப் பூமியிற்பொருந்தினல்லது பிறிதொன்றற்குப் பொருந்தாதென்றுரென்க.

அருளறம், உம்மைத்தொகையுமாம்.

உ0உ - ந. அருகரறவன்..........................குவியா

(இ - ள்.) எனது இருகையும் அருகர்க்கு அறத்தைக்கூறுவோனாகிய அறிவன்பொருட்டு என்சிரத்தின்மிசையே குவியினல்லது பிறிதொரு தேவர்பொருட்டுக் குவியாவென்றுரென்க.

அருகர் - இருடிகள்.

உ0ச - ௫. மலர்மிசை...........................பொறாஅது

(இ - ள்.) எனது தலையினுச்சியும் பூவின்மீதே நடந்தோனுடையமலரடி யாகிய அணியை அணியப் பொறுப்பினல்லது பிறிதொன்றனையும் அணியப் பொறுதென்றுரென்க.

உ0௬ - எ. இறுதியி லின்பத்து...................பெயராது

(இ - ள்.) என்மனமும் ஈறிலின்பமாகிய அநந்தசுகத்தையுடைய இறைவனருளிச்செய்த ஆகமமாகியமொழியை உருவேற ஓதிப் புடைபெயரினல்லது பிறிதொருமொழியையோதிப் புடைபெயராதென்றாரென்க.

மறுதர - மீளவும்.

உ0அ - கக. என்றவ னிசைமொழி......பணிந்தனர் போந்து

(இ - ள்.) தம் கையைத் தலைமேற்கொண்டுநின்று, கவுந்தியடிகள், திறவா; நவிலாது; காணு; பொருந்தாது; குவியா; பொருது; பெயராதென்றுகொண்டு அவன்புகழ்மொழிகளை ஏத்தக் கேட்டு அதற்குப் பொருந்தியசாரணர் அவ்விடத்திட்டப்பட்ட சிலாவட்டத்தினின்றுமெழுந்து அதற்கு ஒருமுழவுயரம் மேலாநின்று பிறப்பைத்தரும்பாசம் கவுந்திக்குக் கெடுவதாகவென்றுகூறி அந்தரவழியாக விரைந்துசெல்கின்றவரைநோக்கித் தொழுது பாசங்கள் அறுகவென்று பணிந்தனராய்ப் போந்தென்க.

உ அகூ

## சிலப்பதிகாரம்

உகச - அ. காரணி பூம்பொழில்......பூம்பொழி லிருந்துழி

(இ - ள்.) முகிலையணிந்த பொழிலையுடைய காவிரியாகிய பெரியயாற்றிற்கு மாதரும் கணவனும் கவுந்தியடிகளும் பள்ளியோடத்தேறிப்போய்த் தென்கரையைச்சென்றெய்திப் போதுகள் சூழ்ந்துகிடக்கின்றதோர் பொலிவினையுடைய பொழிலிடத்தே சென்றிருந்தபொழுதிலென்க.

உகக - உ0.

வம்பப் பரத்தை....................சென்றோர்

(இ - ள்.) [1]இடக்கழிகாமத்தளாகிய குண்டக்கணிகையொருத்தியும் ஒருவனுங்கூடி இவர்களிருக்கின்ற மணம்பரந்தசோர் பொழிலிடத்தே அணுகினராய்ச் சென்றவரென்க.

வம்பப்பரத்தை - புதிய பரத்தைத்தன்மையையுடையாள்; குண்டமென்றபடி. இனி மனவெழுச்சியால தோன்றினபடி சொல்லித்திரியும் பரத்தை யென்றுமாம். வறுமொழியாளன் - பயனில்சொல்லாளன்; விடனென்றபடி.

உஉக - உ. காமனுந் தேவியும்........அறிகுவ மென்றே

(இ - ள்.) இவ்விடத்துவந்திருக்கின்ற காமனையும் இரதியையுமொக்கு மிவர்களை யாரென றுகேட்டு அறியக்கடவோமென்று சொல்லியென்க.

இனி, இவ்விடத்துவந்தவிவர் காமனும் தேவியுமே; அல்லராயின், யாரெனக் கேட்டறிகுவமென்றுரெனினுமமையும். இப்பொருட்குப் போலி ஒப்பில் போலி. ஈங்கிவர்: ஈங்கு - இவவிடத்து. கேட்டீங்கு: ஈங்கு - இப்பொழுது.

உஉ௩ - ச. நோற்றுணல் யாக்கை..............வினவ

(இ - ள்.) [2] உவாமுதலிய விரதநாட்களிற் பட்டினிவிட்டுண்டலான் மெலிந்தயாக்கையையும் நுண்ணிய தவத்தையுமுடையீர்! நும்மொடுகூடி வழிவந்த இவர் யாரென று வினவவென்க.

ஆற்றுவழிப்பட்டோர் வழியிற் கூடிவந்தோர்.

உஉச - சு. என்மக்கள்..............[3] பரிபுலம் பினரென

(இ - ள்.)

அவ்விருவரும் இவ்விருவரையும் வினவுதல்கண்ட கவுந்தியடிகள் இவர் என்மக்கள்காணும; நீர்சொன்ன காமனும் தேவியுமல்லர்; மானிடயாக்கையர்; வழிவரும் வருத்தத்தால் மிகவும் வருந்தினர்; அவருழைச்செல்லாதே விடப்போமினென்றுரென்க.

பரி - மிகுதி; பரிபுலம்பினர், ஒருசொல்லுமாம்.

௨௨எ - அ. உடன்வயிற்றோர்கள்......... ..கற்றறிந்தீரென

(இ - ள்.) நூல்களையுங்கற்று அதன்பயனையுமறிந்தவரே! ஒருவயிற்று உடன்பிறந்தோர் கொழுநனும் மனைவியுமாயக் கூடிவாழக்கடவதென்று நீர் கற்றநூல்களிற் சொல்லிக்கிடப்பதுமுண்டோ? உண்டாகிற் சொல்லுமென்றாரென்க

---

[1] இடங்கழிகாமம் - மிக்ககாமம்; மணிமேகலை க௮ - வது காதை, ககக.

[2] "ஓவா திரண்வேவு மட்டமியும் பட்டினிவிட்டு" சீவகசிந்தாமணி, ௯௫௪௯.

[3] "பரிபுலம் பினனிவன், றுனே தமியன் வந்தனன்" மணி. கக : ௭எ - அ.

## ௫௦.—நாடுகாண் காதை.

௨௮எ

கற்றறிந்தீரென்றது இகழ்ச்சி; இவ்வாறு நீர் கற்றனவுமென்பதாம்.

௨௨௯ - ௩0. நீமொழி கேட்டு.........

.....உரையீரோவென

(இ - ள்.) இங்ஙனம் இவரிகழ்ந்தமொழியைக் கேட்டலாற் செவியைப் புதைத்துக் கண்ணகிநடுங்க, என்பூங்கோதைபோல்வாளை இவரிகழ்கின்றனர்; இவ்விகழ்ச்சியால் துடக்குமுட்களையுடையகாட்டில் நுழைந்துதிரியும்

முதுநரி
யாகக்கடவரெனக் கவுந்தியடிகளிட்டசாபம் தவத்தின்விளைவாகிய
சாபமாதலால்
அவர்ச் சென்று பூண்டதாதலின், அங்ஙனம்
விளைந்தபடியையறியாராகிய
கோதையும் நம்பியும் குறியநரியினது நெடியகுரலாகக்கூவும் விளியைக் கேட்டு
நடுங்கிச்சென்று ஒழுக்கநெறியினின்றும் நீங்கியோர்
நீர்மையல்லாதனவற்
றைச்சொல்லினும் இஃது அவர் அறிவின்மையாற்
கூறியதன்றேவென்று
உயர்ந்தோர் தமதறிவான் உணரவேண்டும்; செய்தவத்தீர், உம்
முடைய திரு முன் பிழைத்த இவர்க்கு இனிச் சாபநீங்கி
தருளீரென்றுகூறவென்க.
உய்தலுடைத்தாங்காலத்தை உரைத்
போலும், ஒப்பில்போலி. முதுநரி.- ஓரி. நடுங்கியென்றார்,
தம்பொருட் டாகவிளைதலின். ஓகாரம், இசைநிறை. அடிகள் மனத்தால்
நினைத்திட்டசாப மாதலாற் பட்டதையறியாரென்றார். இங்ஙனம்
அறியாதவர்கள் அவர்சொன்ன இகழ்ச்சியாலும் இதற்கு இவரல்லது
வேறு சபிக்கவுரியாரின்மையானும் உய்திக்காலமுரையீரென்றார். விளி -
ஓரிக்குரல். 'நெறியி னீங்கியோர் நீரல
கூறினு, மறியா மையென் றறியல் வேண்டும்' என்னுந்துணையும்
கோள். பின்னந்த அடிகட்குக் கூறினார்.

அவருட்

உசுக - ரு. அறியாமையினின்று..........சாபவிடை
செய்து

(இ - ள்.) தமது முப்பொறிகளான்வரும் துன்பமென்பதனை அறிந்து கூருமையானே இன்று இழிபிறப்பையுற்றவிவர் உறையூர் மதிற்புறமாகிய காவற்காட்டிற்றிரிந்து பன்னிரண்டுதிங்கள் இங்ஙனம் துன்பமுழந்தபின்னர் முன்னைப்பிறப்பைப் பெறுவாராகவெனச் சா விடைசெய்தென்க

இன்று இழிபிறப்புற்றேரென்றது நெடுங்காலம் தவஞ்செய்துபெற்ற மக்கட்பிறப்பை ஒருவார்த்தையினிழந்து இழிபிறப்புற்றரென்றவாறு; எனவே [1] யாகாவாராயினும் நாகாத்தல் வேண்டுமென்பதாயிற்று; "ஆக்கப்படுக்கும்......

வெல்லுமாறே" என்பதூஉமாயிற்று. நொச்சியொருபுடையென்றது வேறு அரண்வேண்டாமை விளக்கிற்று ; [2] "நொச்சி வேலித் தித்த னுறந்தை" என்றதுமது. இழிபிறப்பு - விலங்கின்பிறப்பு. முன்னையுருவம் - வம்பப்பரத்தையும் வறுமொழியாளனுமெனவுமாம்.

உசரு - அ. தவப்பெருஞ் சிறப்பின்........புக்கனர் புரிந்தென்.

(இ - ள்.) தவத்தான்மிக்க சிறப்பையுடைய கவுந்தியடிகளும் தேவியும் கணவனும் முறம்போலுஞ்செவியையுடைய யானையைச் சமரிடத்துக்கெடுத்த

1 திருக்குறள், கஉஎ.

2 "ஆக்கப் படுக்கு மருந்தனைவாய்ப் பெய்விக்கும், போக்கப் படுக்கும் புலைநரகத் தாய்ப்பிக்கும், காக்கப் படுவன வித்திய மைத்தினு, நாக்கல்ல தில்லை நனிவெல்லு மாறே" (வளையாபதி.) 3 அகநானூறு, கஉஉ.



புறத்தே சிறையையுடைய கோழியென்னுநகரின் கண்ணே

புக்கரென்க.
விருப்பத்தோடு

வாரணம் - கோழி ; ஆவது உறையூர். முற்காலத்து ஒருகோழி யானையைப் போர்தொலைத்தலான் அந்நிலத்திற்செய்த நகர்க்குக் கோழியென்பது பெயராயிற்று. அந்நகர் காண்கின்றபொழுது சிறையுர் கழுத்துமாக ஆக்கிய

வதனாற் புறம்பே சிறையையுடைய கோழியென்றாயிற்றென்பாருமுளர் ; அற்றன்று; புறஞ்சிறைவாரணமென்பது சிலேடை: புறத்தே சிறையையுடைய கோழியும், புறஞ்சேரியையுடைய உறையூரும் ; [1] "புறஞ்சிறைப் பொழிலும்" என்ப மேலுமாகலின்.

பணிந்தனர்போந்து எயதி இருநதுழிச் சென்றோர் வினவப் பரிபுலம்பின ரெனக் கடவதுமுண்டோ கறறறிந்தீரெனச் செவியகம்புதைத்து நடுங்க முது நரியாகெனக் கட்டியதாதலின் உரையீரோவெனப் பெறுக ஈங்கிவரெனச் சாபவிடைசெயது கவுந்தியும் தேவியும் கணவனும் புரிந்துபுக்காரென்க.

இஃது எல்லாவடியு ந கம்முளொந்துமுடிதலின் நிலைமண்டிலவாசிரியப்பா.

## கம.—நாடுகாண்காதை முற்றிற்று.

---

## கட்டுரை.

க - உ. முடியுடை.........உதித்தோர்—மூவேந்தருள்ளும் சோழர் குலத்து உதித்தோருடைய ; மூவர் - சோழர் பாண்டியர் சேரர்.

ரு. அறன்—"அறனேம்பட" என்றது ; [இந்திர. களசு.] தருமாசனமென்பாருமுளர்.

மறன்—"இமையவ ருறையுஞ் சிமையப் பிடாத்தலைக்,

கொடுவரி யொற்றி" என்றது; [இந்திர கூள - அ]

ஆற்றல்—"கோநகர் காத்த" என்றது; [கடலாடு. அ.)

ச. மூதூர்ப்பண்பு மேம்படுதல்—" புகாரேயாயினும் "
[மங்கல. கசு.]

என்றது ; ரு. விழவுமலிசிறப்பு —"விண்ணவர் தலைவனை
றது; [இந்திர. கசுஅ.]

விண்ணவர வரவு—' அநதரத் துள்ளோ
விழசீ ராட்டி" என் குஊஉம் வானவன் விழவு" என்றது; [கடலாடு.

ரதியா மரபின, வந்து காண்
எஉ - கூ.] •

எ. குடி—' இரடபோா சுறறமும புரபபோர் கொறறமு,
விளையபோர்" என்றது; [நாடுகாண். கசகூ - ரு .]

முழவிடை

சிலப்பதிகாரம், கச: க.

## க௦.—நாடுகாண்காதை.

உ அக

கூழின்பெருக்கம்— "குமரிக் கூட்டிற் கொழும்பல்
அணவு, கவரிச் செந்நெற் காய்த்தலைச் சொரிய" என்றது; [நாடுகாண்.
கஉரு - ச.]

எ - அ. அவர்தம் தெய்வக்காவிரித் தீதுதீர்சிறப்பு— "
கரியவன் ............ஒலிக்கும்" என்றது; [நாடுகாண் க0உ - க.]

க. பொய்யா வானம் புதுப்புனல்
பொழிதல்—"மழைக்கரு வுயிர்க்கு மழற்றிக முட்டின் மறையோர்"

என்றது; [நாடுகாண். கசரு - ச.]

கo. அரங்கு—"நூனெறி மரபி னரங்கம்" என்றதும், "தோற்றிய வரங்கில்" என்றதும். [அரங்கேற்று. கூகூ, கoரு.]

ஆடல்—"ஆடலும்" என்றது; [அரங்கேற்று. கரு.]

தூக்கு—"தூக்கும்" என்றது; [ „ கரு.]

வரி—கண்கூடுவரிமுதல் எடுத்துக்கோள்வரியிறுதியாகவுள்ள எட்டு வரியும்; [வேனிற். எச - கoஅ.]

கக. பாரதி விருத்தி—நாடகவுறுப்பாகிய பாரதிவிருத்தி; அது கடலாடுகாதையிற் கூறப்பட்டுள்ள பதினோராடலும்; [கடலாடு. ருகூ - கூரு.]

கஉ. திணைநிலைவரி—"கடல்புக்கு" என்னுங் கவிமுதல் "சேரன் மடவன்னம்" என்பதிறுதியாகவுள்ள எழும்; [கானல். கஎ - உரு.]

இணைநிலைவரி—சார்த்துவரி முதலாகிய [கானல்வரியிற்காண்க] பலவரிகளால்வருவன.

கரு. யாழின்றொகுதி—"சித்திரப்படம்" முதல், "பட்டடை" ஈறுக வுள்ளன; [கானல்வரி, க.]

கச. ஈரேழ்சகோடம்—"ஈரேழ் தொடுத்த செம்முறைக் கேள்வி" என்றது; [அரங்கேற்று. எ0.]

இடநிலைப்பாலை—"குரல்வா யிளிவாய்க் கேட்டனள்" [வேனிற். ருடு.] என்றது;

கரு. தாரத்தாக்கம்—"குரலீருகவும்" என்பதனுல், தாரம் குரலாகிய விளரிப்பாலைபிறக்குங்கால் தாரம் ஆக்கம்பெறுதல்காண்க; [வேனிற். ௩௯.]

தான்றெரிபண்—அகநிலைமருதம், புறநிலைமருதம், அருகியன்மருதம், பெருகியன்மருதமென்னும் பண் நான்கும் தெரியுந்திறன்; [வேனிற். ௩௯ - ௪௦.]

கசு. ஊரகத்தேர்—"மகர வாசிகை...........வீதி" என்றது; [இந்திர. ௧௫௯ - ௬.]

ஒளியுடைப்பாணி—"சீரியல் பொலிய" என்றது; [அரங்கேற்று. ௧௩௫.]

௬௭



கஎ. என்றிவையனைத்தும்—என்றுசொல்லப்பட்ட இவைகள் யாவும்,

கஎ - அ. பிறபொருள்...................

சொல்லாதொழிந்த பிறபொருள்கள்வைத்த வைப்போடே தோன்றும் ஒப்பற்ற முறைமை நிலைபெறலும், பொருந்தித்

கக - ௨௦. ஒருபரிசா நோக்கிக்கிடந்த புகார்க்காண்டம் றிற்று—ஒருபடிப்பட நோக்கிக்கிடந்த புகார்க்காண்டம் முற்றியது.

முதலாவது
புகார்க்காண்டத்தின்
அடியார்க்குநல்லாருரை முற்றிற்று.

---

இரண்டாவது

# மதுரைக்காண்டம்.

## கக.—காடுகாண்காதை.

திங்கண்மூன் றடுக்கிய திருமுக் குடைக்கீழ்ச்
செங்கதிர் ஞாயிற்றுத் திகழொளி சிறந்து
கோதைதாழ் பிண்டிக் * கொழுநிழ லிருந்த
வாதியி றோற்றத் தறிவனை வணங்கிக்

† கந்தன் பள்ளிக் கடவுளர்க் கெல்லா
மந்தி லரங்கத் தகன்பொழி லகவயிற்
சாரணர் கூறிய தகைசா லன்மொழி
மாதவத் தாட்டியு மாண்புற மொழிந்தாங்
கன்றவ ருறைவிடத் தல்கின ரடங்கித்
தென்றிசை மருங்கிற் செலவுவிருப் புற்று
வைகறை யாமத்து ‡ வாரணங் கழிந்து
வெய்யவன் குணதிசை விளங்கித் தோன்ற

---

க. திங்கள்மூன்றடுக்கிய - மூன்றுதிங்களை அடுக்கினாலொத்த.

௪. அறிவனென்றது - உறையூர் ஸ்ரீகோயில் நாயனாரை.

உ - ௪. (பா) ஞாயிற்றைப்போல ஒளிசிறந்த, அறிவன்; யெனக்கூட்டினுமாம்.

சிறந்தகோதை

ரு. கந்தன்பள்ளி - உறையூர் ஸ்ரீகந்தன்பள்ளி.

௬. அந்தில், அசைநிலை. அரங்கம் - திருவரங்கம்; ஆற்றின்குறையென் பாருமுளர்.

௯. அல்கினரடங்கி - விட்டு அங்குத் தங்கி. க௪. இருக்கை - இருப்பிடம்.

(௬) அரங்கத்திற்கண்ட (எ) சாரணர்சொன்ன தருமவுரையைக் (ரு) கடவுளர்க்கு (அ) மொழிந்து (கக) வாரணங்கழிந்துவழிக்கொண்டு (க௪) இளமரக்கானத்துப் புக்குழியென்க.

(பி - ம்.) * 'குளிர்நிழல்' † 'கந்தம்பன்னி' ‡ 'வாரணங்காட்டவெம்மவன்'



வளநீர்ப் பண்ணையும் வாவியும் பொலிந்தோ
ரிளமரக் கானத் திருக்கை புக்குழி
வாழ்க வெங்கோ மன்னவர் பெருந்தகை
யூழிதொ * றூழிதொ றுலகங் காக்க
‡ வடியிற் றன்னள வரசர்க் † குணர்த்தி
வடிவே லெறிந்த வான்பகை பொறாது
‡ பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் ‡ கோடுங் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கையு மிமயமுங் கொண்டு
தென்றிசை யாண்ட தென்னவன் வாழி
திங்கட் செல்வன் றிருக்குலம் விளங்கச்
செங்கணா யிரத்தோன் றிறல்விளங் காரம்
பொங்கொளி மார்பிற் பூண்டோன் வாழி
முடிவளை யுடைத்தோன் முதல்வன் சென்னியென்
றிடியுடைப் பெருமழை § யெய்தா தேகப்
பிழையா ‖ விளையுட் பெருவளஞ் சுரப்ப
மழைபிணித் தாண்ட மன்னவன் வாழ்கெனத்
தீதுதீர் சிறப்பிற் றென்னனை வாழ்த்தி
மாமுது மறையோன் வந்திருந் தோனை
யாது நும்மூ ரீங்கென் வரவெனக்

கோவலன் கேட்பக் குன்றுச் சிறப்பின்
மாமறை யாளன் வருபொரு ளுரைப்போ
(ச) வணங்கி (அ) மொழிந்து (கச) கானத்திருக்கை

புக்குழியென்க.

கஎ.[1] அடியில் தன்னளவு அரசர்க்கு உணர்த்தி - கடலினளவை அடியாலே இன்ன அளவினது இதுவென்று அரசர்க்குக்காட்டி; அன்றி அடியினுலே தன்பெருமையை அரசர்க்கு அறிவித்தென்பாருமுளர்.

கஅ. வேலாலுமெறிந்தபகை.

கக. பஃறுளியாறு - குமரிப்பக்கத்ததோர் யாறு.

[ளுலே.

உ0. கோடு - கரை. கொடுங்கடல்கொள்ள -

வளைந்தகடல்கொள்ளுகையி

உக. முதல்வன் - இந்திரன்; இந்திரன்சென்னிமுடியிலே

வளையுடைத் தோனென்க.

---

[1] கஎ - உஉ: "மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வௌவலின், மெலிவின்றி மேற்சென்று மேவார்நா டிடம்படப், புலியொடு வின்னீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்

டை, வலியினன் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்" கலித்தொகை, கoச.

[2] பஃறுளியாறு: புறநானூறு, உ.

(பி - ம்.) * 'ஊழியுலகம்' † 'உணர்த்திய' ‡ 'கோடுகொடுங்' § 'விளையுள்'

'பெய்யாதே'

## கக.—காடுகாண் காதை.

உகூ.

நீல மேக நெடும்பொற் குன்றத்துப்
பால்விரிந் தகலாது படிந்தது போல
வாயிரம் * விரித்தெழு தலையுடை யருந்திறற்
பாயற் பள்ளிப் பலர்தொழு தேத்த
விரிதிரைக் காவிரி வியன்பெருந் † துருத்தித்
திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்
வீங்குநீ ரருவி வேங்கட மென்னு
மோங்குயர் மலையத் துச்சி மீமிசை
விரிகதிர் ஞாயிறுந் திங்களும் விளங்கி
யிருமருங் கோங்கிய விடைநிலைத் தானத்து
மின்னுக்கோடி யுடுத்து விளங்குவிற் பூண்டு
நன்னிற மேக நின்றது போலப்
பகையணங் காழியும் பால்வெண் சங்கமுந்
தகைபெறு தாமரைக் கையி னேந்தி
நலங்கிள ரார மார்பிற் பூண்டு
பொலம்பூ ‡ வாடையிற் பொலிந்து தோன்றிய
செங்க ணெடியோ னின்ற வண்ணமு
மென்கண் காட்டென் றென்னுளங் கவற்ற
வந்தேன் குடமலை மாங்காட் டுள்ளேன்
றென்னவ னாட்டுச் சிறப்புஞ் செய்கையுங்
கண்மணி குளிர்ப்பக் கண்டே னாதலின்
வாழ்த்திவந் திருந்தே னிதுவென் வரவெனத்
தீத்திறம் புரிந்தோன் செப்பக் கேட்டு
மாமறை § முதல்வ மதுரைச் செந்நெறி

கூறு நீயெனக் கோவலற் குரைக்கும்
கோத்தொழி லாளரொடு கொற்றவன் கோடி
வேத்திய லிழந்த வியனிலம் போல

ருஉ. (பா) கண்கள் என்னுள்ளத்தைக்கலக்குதலாலே; கண், எழுவாய்.

ருஎ. தீத்திறம் - அக்கினிகாரியம். கூ0. தொழிலாளர் - மந்திரிகள்.

[1] "மின்னவிர் சுடர்மணி யாயிரம் விரித்த, கவைநா வருந்தலைக் காண்பின் சேக்கைத், துளவுஞ் சூடிய வறிதுயி லோனும்" பரி. கங.

[2] சக - ருக. "பருவம் திலக்கம் போல, நேமியும் வாய்த்தவி னிருவிசும் பணிந்த, விருவேறு மண்டிலத் வளையும் மேந்திய கையாற், கருவி மின்னவி ரிலங்கும் பொலம்பூ ணருவி புருவி னுரமொ டணிந்தநின், திருவரை யகலம்." பரி. கங.

(பி - ம்.) * 'விரிந்ததலை' † 'தருத்தியுட்டிருவமர்' ‡ 'ஆடைபொலிந்துதோன்றிச்' § 'முதல்வன்'



வேனலங் கிழவனொடு வெங்கதிர் வேந்தன்
றானலந் * திருகத் தன்மையிற் குன்றி
[1] முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து
† நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப்
பாலை யென்பதோர் படிவங் கொள்ளுங்
காலை யெய்தினிர் காரிகை ‡ தன்னுட

னறையும் பொறையு மாரிடை மயக்கமு
நிறைநீர் வேலியு முறைபடக் கிடந்தவிந்
நெடும்பே ரத்த நீந்திச் சென்று
கொடும்பை நெடுங்குளக் கோட்டகம் புக்காற்
பிறைமுடிக் கண்ணிப் பெரியோ னேந்திய
வறைவாய்ச் சூலத் தருநெறி கவர்க்கும்
வலம்படக் கிடந்த வழிநீர் துணியி
§ னலறுதலை மராஅமு முலறுதலை யோமையும்
பொரியரை யுழிஞ்சிலும் புன்முளி மூங்கிலும்
வரிமரற் றிரங்கிய கரிபுறக் கிடக்கையு
நீர்நசைஇ வேட்கையின் மானின்று விளிக்குங்
கானமு மெயினர் கடமுங் கடந்தா
லவன வெண்ணெலு || மறைக்கட் கரும்புங்
கொய்பூந் தினையுங் கொழும்புன வரகுங்

---

௬௩. நலந்திருக - நலம்வேறுபட.

௬௮. அறை - கற்பாறை. பொறை - பொத்தைமலை; சிறுமலை.
அருவழி.
ஆரிடை -

௬௯. நிறைநீர் வேலி - நிறைந்த நீர்க்கு வேலியான ஏரிகரை.

௭௧. கொடும்பை - கொடும்பாளூர்; அவ்வூரிலே
நெடுங்குளக்கரைக்கு உள்ளாகப்புக்கால்.

௭௩. அறைவாய் - அற்றவாய்; சூலம்போலக் கவர்க்கும்.

௭௫. அலறுதலை - விரிந்ததலை.

௭௬. புல்முளி மூங்கில் - தண்டுலர்ந்த மூங்கில். ௭௯. கடம் - வழி.

௮௦. அறுத்தலையுடைய கண்ணையுடையகரும்பு.

¹ ௧௭ - ௯: மதுரை. ௯௧௭ - ௮; தொல். அகத்திணை. சூ. ௨௦ - இளம்; ௬௬ ,சூ. ௨ - ௮; தொல். முதற் சூத்திரவிருத்தி, மேற்; கருத்து: சீவக. ௨௯௦௬.

(பி - ம்.) * 'திருவி' † 'நல்லியல்பழிந்து', 'நல்லியல்பிறந்துநடுக்குறுபருவத்து' ‡ 'தன்னுமேமையும்' § 'அலர்தலை', 'அலந்தலை' || 'அறைகட்'

## ௧௧.—காடுகாண் காதை



காயமு மஞ்சளு மாய்கொடிக் கவலையும்
வாழையுங் கமுகுந் * தாழ்குலைத் தெங்கு
மாவும் பலாவுஞ் † சூழடுத் தோங்கிய
தென்னவன் சிறுமலை ‡ திகழ்ந்து தோன்று
மம்மலை வலங்கொண் டகன்பதிச் செல்லுமி
னவ்வழிப் § படர்கு ராயி னிடத்துச்
செவ்வழிப் பண்ணிற் சிறைவண் டரற்றுந்
தடந்தாழ் வயலொடு || தண்பூங் காவொடு
கடம்பல கிடந்த காடுடன் கழிந்து
திருமால் குன்றத்துச் செல்குவி ராயிற்
பெருமால் கெடுக்கும் பிலமுண் டாங்கு
விண்ணோ ரேத்தும் வியத்தகு மரபிற்

புண்ணிய சரவணம் ¶ பவகா ரணியோ
டிட்ட சித்தி யெனும் பெயர் போகி
விட்டு நீங்கா விளங்கிய பொய்கை
முட்டாச் சிறப்பின் மூன் றுள வாங்குப்
புண்ணிய சரவணம் பொருந் துவி ராயின்
விண்ணவர் கோமான் விழுநூ லெய்துவிர்
** பவகா ரணிபடிந் தாடுவி ராயிற்
†† பவகா ரணத்திற் பழம்பிறப் பெய்துவி
ரிட்ட சித்தி யெய்துவி ராயி

---

அஉ. காயம் - வெள்ளுள்ளி.

அரு. சிறுமலையென்றது - ஒருமலை.

அசு. வலங்கொண்டு - வலத்திட்டு. அகன்பதி - மதுரை.

அஎ. இடத்து - இடப்பக்கத்து. கூ. கடம் - பாலைநிலத்துவழி.

கூக. திருமால்குன்றம் - அழகர்திருமலை. கூஉ. ஆங்கு - அப்பிலத்துவாய்.

கூசு. விட்டுநீங்கா - தம்மினீங்கா.

கூஎ. சிறப்பு - விசேடம்; இந்தவிசேடம் எக்காலத்துமுள, மூன்றுள - மூன்றுபொய்கையுள.

கூஅ. பொருந்துதல் - ஆடுதல்.

கூகூ. விழுநூல் - ஐந்திரவியாகரணம். எய்துவிர் - உணர்விர்.

(பி - ம்.) * 'சூழ்குலைத்' † 'குழூஉத்தோங்கித்' ‡ விடைத்தகுசெவ்' || 'தண்பெருங்கா' ¶ 'பவகாரணிய ** 'பவகாரணியம்படிந்தாடுவிர்' †† 'பவகாரணத்துப்' 'திகழுத்' § 'படிஇராயி மிட்டசித்தியெனப்பெயர்'

னிட்ட சித்தி யெய்துவிர் * நீரே
யாங்குப் பிலம்புக வேண்டுதி ராயி
னோங்குயர் மலையத் தயர்ந்தோற் றெழுது
சிந்தையி லவன்றன் சேவடி வைத்து
வந்தனை மும்முறை மலைவலஞ் செய்தா
னிலம்பக வீழ்ந்த சிலம்பாற் றகன்றலைப்
பொலங்கொடி மின்னிற் புயலைங் கூந்தற்
கடிமல ரவிழ்ந்த கன்னிகா ரத்துத்
தொடிவளைத் தோளி யொருத்தி தோன்றி
யிம்மைக் கின்பமு மறுமைக் கின்பமு
மிம்மையு மறுமையு மிரண்டு † மின்றியோர்
செம்மையி னிற்பதுஞ் செப்புமி ‡ னீயிரிவ்
§ வரைத்தாள் வாழ்வேன் வரோத்தமை யென்பே
னுரைத்தார்க் குரியே னுரைத்தீ ராயிற்
றிருத்தக் கீர்க்குத் திறந்தேன் கதவெனுங்
கதவந் திறந்தவள் ‖ காட்டிய நன்னெறிப்
புதவம் பலவுள ¶ போகிடை கழியன
வொட்டுப் புதவமொன் றுண்டத னும்பர்
வட்டிகைப் பூங்கொடி வந்து தோன்றி
யிறுதியி லின்ப மெனக்கீங் ** குரைத்தாற்

க0எ. வந்தனை - வந்தனையோடே.

௧0அ. சிலம்பாறென்றது - ஓராறு. அகன்றலை - அகன்றவிடம்.

௧0௯ - ௧௧. பொற்கொடிபோன்ற ஒளியினையும், புயல்போலும் ஐங்கூந்த லையுமுடைய தொடிவளைத்தோளாள் ஒருத்தி கன்னிகாரம்போலத் தோன்றி;

'கன்னிகாரம்போல' என்றார், மதாணியணிந்திருத்தலின். கோங்கடியிலே தோன்றியென்றுமாம்,

௧௧௨. இம்மைக்கின்பம் - பொருள். மறுமைக்கின்பம் - புண்ணியம்.

௧௧௩ - ௪. இரண்டுமின்றிச் செம்மையினிற்பது - வீடுபேறு.

௧௧௬. உரியேன்-தொழில்செய்வேன். ௧௧௭. திறந்தேனென்றது, விரைவு.

௧௧௯. போகிடைகழியன - நீண்ட இடைகழியிலுள்ளன.

௧௨0. ஒட்டுப்புதவம் - இரட்டைக்கதவம்.

௧௨௧. வட்டிகையிலெழுதிய கொடிபோல்வாள்.

௧௨௨. இறுதியிலின்பம் - வீடு.

(பி - ம்.) * 'நீரென' † 'இன்றிச்செம்மை' ‡ 'நீவிர்' § 'வரைத்தாழ்' டியலந்தெற்றிப்' ¶ 'போகிடைகழியின' ** 'உரைத்தீர்'

|| 'காட்

## ௧௧—காடுகாண் காதை.

௨௩௭

பெறுதிர் போலுநீர் பேணிய பொருளெனு

முறையீ ராயினு முறுகண் செய்யே
னெடுவழிப் புறத்து நீக்குவ னும்மெனு
முரைத்தா ருளரெனி னுரைத்த மூன்றின்
கரைப்படுத் தாங்குக் காட்டினள் பெயரு
மருமறை மருங்கி னைந்தினு மெட்டினும்
வருமுறை யெழுத்தின் மந்திர மிரண்டு
மொருமுறை யாக வுளங்கொண் டோதி
வேண்டிய தொன்றின் * விரும்பினி ராடிற்
காண்டகு மரபின வல்ல மற்றவை
மற்றவை நினையாது † மலைமிசை நின்றோன்
பொற்றா மரைத்தா ளுள்ளம் பொருந்துமி
னுள்ளம் பொருந்துவி ராயின் மற்றவன்
[1] புள்ளணி ‡ நீள்கொடி புணர்நிலை தோன்றுந்
தோன்றிய பின்னவன் றுணைமலர்த் தாளிணை
யேன்று துயர் கெடுக்கு § மின்ப மெய்தி
மாண்புடை மரபின் மதுரைக் ‖ கேகுமின்
காண்டகு பிலத்தின் காட்சி யீதாங்
கந்நெறிப் படரீ ராயி னிடையது
செந்நெறி யாகுந் தேம்பொழி லுடுத்த

---

கஉ௧. பேணியபொருள் - மூன்றினுளொன்றாய் நினைத்தகாரியம்.

கஉரு. நெடுவழிப்புறம் - நீங்கள்போகின்ற பெருவழியிடம்.

கஉஅ. ஐந்தும் எட்டுமாவன:—பஞ்சாக்கரம், அட்டாக்கரம்.

கஙக - உ. வேண்டியதொருபொய்கைக்கண் ஆடினால்
ஏனையவிரண்டும் தோன்றும் மரபினவல்ல.

கஙச. உள்ளம்பொருந்துமின் - நினையுங்கோள்.

கஙகூ. புள்ளணிநீள்கொடி நின்ற நிலைமைதோன்றும்; கொடிமரநிற்கும் திருவாசலுமாம்.

கொடிபுணர்நிலை -

கஙஎ. (பா) துணைமலர்த்தாமரை - திருவடி.

கஙஅ. கெடுக்குமென்றது, முற்று; கெடுத்தலால் சொல் வருவிக்க.

இன்பமெய்தியென ஒரு

கசஉ. செங்நெறி - செவ்வியவழி.

[1] திருமுருகாற்றுப்படை, கூகூ

(பி - ம்.) * 'விரும்பினராயின்' † 'மலர்மிசை' § 'இன்புமெய்துவிர்' || 'எய்துமின்'

‡ 'நீள்கொடிப்புணர்நிலை

கூஅ



ஊரிடை யிட்ட காடுபல கடந்தா
லாரிடை யுண்டோ ராரஞர்த் தெய்வ
நடுக்கஞ் * சாலா நயத்திற் றோன்றி
யிடுக்கண் செய்யா தியங்குநர்த் தாங்கு
மடுத்துடன் கிடக்கு மதுரைப் பெருவழி
நீணிலங் கடந்த நெடுமுடி யண்ண
றூடொழு தகையேன் போகுவல் யானென
மாமறை யோன்வாய் வழித்திறங் கேட்ட
† காவுந்தி யையையோர் கட்டுரை சொல்லு

நலம்புரி கொள்கை நான்மறை யாள
பிலம்புக வேண்டும் பெற்றியீங் கில்லை
கப்பத் திந்திரன் காட்டிய நூலின்
மெய்ப்பாட் ‡ டியற்கையின் விளங்கக் காணு
[1] யிறந்த பிறப்பி னெய்திய வெல்லாம்
பிறந்த பிறப்பிற் காணு யோநீ
வாய்மையின் வழாது மன்னுயி § ரோம்புநர்க்
கியாவது முண்டோ வெய்தா வரும்பொருள்
காமுறு தெய்வங் கண்டடி பணிய
நீபோ யாங்களு நீணெறிப் ‖ படர்குது
மென்றம் மறையோற் கிசைமொழி யுணர்த்திக்
குன்றாக் கொள்கைக் கோவலன் றன்னுட
னன்றைப் பகலோ ரரும்பதித் தங்கிப்
பின்றையு மவ்வழிப் பெயர்ந்து**செல் வழிநாட்
கருந்தடங் கண்ணியுங் கவுந்தி யடிகளும்
†† வருந்துசெல் வருத்தத்து வழிமருங் கிருப்ப

---

கசச. ஆரஞர்த்தெய்வம் - வருத்துந்தெய்வம்.

கசரு. (பா) இயக்குநர்த்தடுக்கும் - வழிபோவாரைப் போக்குவிலக்கும்.

கசஎ. இவ்வகைச்சென் றுகிடக்கும்.

கருச. கற்பம் கப்பமென நின்றது; பிராகிருதம்.

கருரு. மெய்ப்பாட்டியற்கை - பரமாகமம்; பரமாகமத்தில் நூலினைக் காணலாம்.

இந்திரன்

[1] "இறந்த பிறப்பிற்குஞ் செய்த வினையைப், பிறந்த
செய்யும் வினையா லறிக வினிப்பிறந், தெய்தும் வினையின்

பிறப்பா லறிக-பிறந்திருந்த,
பயன்" அறநெறி. ௯௧.

(பி - ம்.) * 'சாரா நலத்திற்' † 'காவுந்திகையோர்' ‡ 'இயற்கை' §
'ட்டர்குவம்' ** 'செல்வுழிநாட்' †† 'வருந்துசெல்'

'ஓம்பினர்க்கு'

## ௧௧.—காடுகாண் காதை.

உ௬௯

விடைநெறிக் கிடந்த * வியவுகொண் மருங்கிற்
புடைநெறிப் போயோர் பொய்கையிற் † சென்று
௧௭௦. நீர்நசை வேட்கையி னெடுந்துறை நிற்பக்
கானுறை தெய்வங் காதலிற் சென்று
நயந்த காதலி னல்குவ னிவனென
‡ வயந்த மாலை வடிவிற் றோன்றிக்
கொடிநடுக் குற்றது போல வாங்கவ
௧௭௫. னடிமுதல் வீழ்ந்தாங் கருங்கணீ ருகுத்து
வாச மாலையி னெழுதிய மாற்றந்
தீதிலேன் பிழைமொழி செப்பினை யாதலிற்

கோவலன் செய்தான் கொடுமையென் றென்முன்
மாதவி மயங்கி வான்றுய ருற்று
கசுo. மேலோ ராயினு நூலோ ராயினும்
பால்வகை தெரிந்த பகுதியோ ராயினும்
பிணியெனக் கொண்டு பிறக்கிட் டொழியுங்
கணிகையர் வாழ்க்கை கடையே போன்மெனச்
செவ்வரி யொழுகிய செழுங்கடை மழைக்கண்
கசுரு. வெண்முத் துதிர்த்து வெண்ணிலாத் திகழுந்
தண்முத் தொருகாழ் § தன்கையாற் பரிந்து
|| துனியுற் றென்னையுந் துறந்தன ளாதலின்
மதுரை மூதூர் மாநகர்ப் ¶ போந்த
ததிர்வழிப் பட்டோ ரெனக்காங் குரைப்பச்—

---

கசுஅ. இடைநெறி
யிடையிலேயென் றுமாம்.

- முன்சொறறவழிமூன்றினுர் நடுவில்வழி; நெறி
இயவுகொள் - செலவுகொண்ட

களஉ. நயந்தகாதலுடையனுதலால், யானசொல்லுகின்றவதற்கு
இவன் நல்குவானென.

களரு - எ. யான் மாற்றம் தீதிலேன்; நீபிழைக்கச்செப்பினுய்.

கசு0. மேலோர் - அருந்தவர். நூலோர் - கற்ருேர்.

கசுக. பால்வகைதெரிந்தபகுதியோர் - ஓதாது
நன்மைதீமையறிவோர்; ஞானிகளில் உயர்ந்த கூற்றேரென் றுமாம்.

கசுஉ. பிறக்கிடுகை - பின்னிடுகை; என்றது முகம்பாராமை

கஅ0-அரு. அவர்கள் இது பிணியெனக்கருதிக் கழிந்துபோம் கணிகையர்

---

(பி - ம்) * 'இயவுக்கொள்' † 'பொருந்தி' ‡ 'வசந்த' 'துனிவுற்று' ¶ 'போத்தீங்கு' § 'தன்மையிற்'



சாத்தொடு போந்து தனித்துய ருழந்தேன்
பாத்தரும் பண்பநின் * பணிமொழி யாதென
மயக்குந் தெய்வமிவ் வன்காட் டுண்டென
வியத்தகு மறையோன் விளம்பின னாதலின்
வஞ்சம் பெயர்க்கு மந்திரத் தாலிவ்
வைஞ்சி லோதியை † யறிகுவென் யானெனக்
கோவல னாவிற் கூறிய மந்திரம்
பாய்கலைப் பாவை மந்திர மாதலின்
வனசா ரிணியான் மயக்கஞ் செய்தேன்
புனமயிற் சாயற்கும் புண்ணிய முதல்விக்கு
மென்றிற முரையா தேகென் றேகத்
தாமரைப் பாசடைத் தண்ணீர் ‡ கொணர்ந்தாங்
கயர்வுறு மடந்தை யருந்துயர் தீர்த்து
மீதுசெல் வெங்கதிர் வெம்மையிற் றொடங்கத்
தீதியல் கானஞ் செலவரி தென்று
கோவலன் றன்னொடுங் கொடுங்குழை மாதொடு
மாதவத் தாட்டியு மயங்கத ரழுவத்துக்

குரவமு மரவமுங் கோங்கமும் வேங்கையும்
விரவிய பூம்பொழில் விளங்கிய விருக்கை
யாரிடை யத்தத் தியங்குந ரல்லது
மாரி வளம்பெறு § வில்லே ருழவர்
கூற்றுறழ் || முன்பொடு கொடுவி லேந்தி
வேற்றுப்புலம் ¶ போகிநல் வெற்றங் கொடுத்துக்
கழிபே ராண்மைக் கடன்பார்த் திருக்கும்
விழிநுதற் குமரி விண்ணோர் பாவை
**மையறு சிறப்பின் வான நாடி
யையைதன் கோட்ட †† மடைந்தன ராங்கென்.

---

ககக. பாத்தரும்பண்ப - பகுத்தலரியபண்பனே! என்றது, பிறர்க்கில்லாத, பண்டையாயென்றபடி.

ககரு. அறிகுவெனென்றுகருதி. உ0ரு. ஒடு, எண்ணொடுவுமாம்.

உ0க - க0. ஆரிடையத்தத்தியங்குநருடைய வளமல்லது மழைவளம் பெறுமறவர்.

உ0அ - கக. பொழில் விளங்கிய இருக்கையிடத்து

ஐயைகோட்டமென்க.

(பி - ம்.) * 'பழிமொழி' † 'அறிகுவெனென்று' ‡ 'கொணர்ந்துவயாவுறுமடந்தைக்கு வருத்துயர்' § 'வல்லேருழவர்' || 'மொய்ம்பொடு' ¶ 'போகில்வெற்றங்' ** 'மறுவறு' †† 'உறைந்தனரங்கென்'

## கக.—காடுகாண் காதை.

ரு0க

க - சு. திங்கண்மூன்று..................அறிவனை வணங்கி

(இ-ள்.) கோதைகள் தாழ்ந்த பிண்டியினது வளவிய

நிழற்கண்ணே மூன்று
திங்களையடுக்கினாற்போலும் திருமுக்குடையினது நீழ் இளநாயிற்றினது ஒளி
யினும் ஒளிசிறப்பவிருந்த அறிவனை வணங்கியென்க.
திங்கண்முதலிய [1] மூன்றெனினுமாம். முக்குடையாவன: சந்திராதித்தம்
நித்தியவிநோதம், சகலபாசனமென்பன. இன்னுருபு தொக்கது; பொருவாம் பொருண்மை தந்தது. திகழ்தல் - விளங்குதல். சிறந்து - சிறப்ப. 'கோதைதாழ்
பிண்டி' என்றார்; [2] அவன்பிண்டி கடவுட்டன்மையான் எஞ்ஞான்றும் மாலை
யாகப் பூக்குமாதலின். ஆதியி றோற்றத் தறிவனென்றது ஆதியின்மையைத்
தோற்றமாகவுடையனென்றதாம்; எனவே இனஞ்செப்பி அந்தமின்மையை முடிவாகவுடையனென்பதூஉமாம்; ஆகவே ஆதியும் அந்தமும் இல்லாதவனென்றவாறும்; எனவே தனக்குப் பிறிதொருவர் முதலாதலில்லாதவனென்பதாம். இன்னும் இதற்கு யாவர்க்கும் தானே முதலாயவனென்றுரைப்பினு மமையும்.
ஆதியிற்றோற்றம் பாடமாயின், ஆதிக்காலத்தினும் முற்றோன்றிய வனென்க. என்றகருத்து காலத்தின்முற்றோன்றும்பொருள்கள் யாவுமின்மையின், அதனினும் முற்றோன்றியவனென்பதாம். அறிவன் - உறையூரிலருகன். வணங்கி - முதனூட் (௧௦: உ௬அ) புரிந்து புக்கவர் வணங்கியென்க.

௫ - அ. கந்தன் பள்ளி..........மாண்புற மொழிந்து

(இ - ள்.) முற்கூறிய நிக்கந்தனுடைய பள்ளியிடத்துள்ள [3] கடவுளர்க் கெல்லாம் ஆற்றிடைக்குறையாகிய அவ்விடத்து அகன்றபொழிலின் கட் சாரணர்கூறியமொழியைக் கவுந்தியடிகளும் இனிமையுறமொழிந்தென்க.

[4] நிக்கந்தனைக் கந்தனென்றார். அந்தில், அசையுமாம்.
கூறிய ஆற்றுவீயரங்கள்; திருவரங்கமுமாம். அக்ன்பொழில்

அரங்கம் - மூற்
- அம் மரம்பயி
லடுக்கம். சாரணர் - [5] பெரும்பெயரையரிட்ட சிலாதலத்துத் தருமஞ்சாற்றுஞ் சாரணர்; அவர்கூறியமொழி - [6] "ஒளியுறி னலலது, போதார் பிறவிப் பொதி யறையோர்" என்றமொழி; அதனைக் கவுந்தியடிகளும் மொழிந்தென்க.

**அ - க. ஆங்கு...................................அடங்கி**

(இ - ள்.) அன்று [7] சாவகருறைவிடத்து விட்டுத் தங்கியென்க.

---

[1] மூன்றுவன:—சந்திரன், சூரியன், அக்கினி.

[2] இவ்வசோகு மாலையாகப் பூக்குமென்பதை, "மூழாத்திரண் மொய்ம்மலர்த் தாமந் தாழ்ந்துமேல், வழாத்திரு மலரெலா மலர்ந்து வண்டினங், குழாத்தொடு மிறை கொளக் குனிந்து கூங்குயில், விழாக்கொள விரிந்தது வீரன் பிண்டியே" என்னும் சீவகசிந்தாமணி, ௩0௧௨ - ஆம் செய்யுளானுணர்க.

[3] கடவுளர் - ஈண்டு முனிவர்; "தொன்முது கடவுட் பின்னர் மேய" என மதுரைக்காஞ்சியுள்ளும், "இப்போழ்து போழ்தென் றதுவாய்ப்பக் கூறிய, கடவுள்" எனக் (கூக) கலித்தொகையுள்ளுங்கூறினர்.

(சக)
வெக்

[4] நிக்கந்தன் - அருகன்.

[5] சிலப்பதிகாரம், ௧0: ௧௬0.

[7] சாவகர் - சைனர்களில் இல்லறத்தார்;
இவர்களை ஶ்ராவகரென்பர்.
௧0: ௧௬0 - ௬௧.

என்றது காலைப்பொழுதில் வாய்மொழிகேட்டு மாடப்புணைபோகித் தென் கரையெய்திப் பூம்பொழிலிருந்தழிச் சாபவிடைசெயது மாலைப்பொழுதின் கட் புறஞ்சிறைவாரணம் புரிந்துபுக்கனரெனவே அற்றைஞான்றுதங்குதல் கூற வேண்டாதுமுடியும்; முடியவே வழிநாட்சாவகருறைவின்றவிடத்தே தங்கினு ராய் ஒடுங்கியென்க. அவரெனக் கடவுளரைச்சுட்டின், அவருறைவிடம் கந்தன் பள்ளியாமாகலானும், ஆண்டு அடங்காமை சொல்லவேண்டாவாகலானும் அவ ரென்றது சாவகரையென்க. கடவுளர்க்கெல்லாம் மாதவத்தாட்டி மாண்புற மொழிந்தெனவே கவுந்தியடிகள் கந்தன்பள்ளியுட் புக்கமையுணர்க. இங்ஙனங் கூறியது, [1] "ஆறைங்காதம்" என்றமையானும் [2] "காவத மல்லது கடவா ராகிப், பன்னாட் டங்கிச் சென்று ளொருநாள்" என்றமையானும், ஈண்டும் "அன்றவருறைவிடத் தல்கின ரடங்கி" என்றமையானும் சிலநாட்சென்றவழிச் செலவொழிந்தொழிந்து ஆண்டாண்டிருந்து னக்கொள்க.

ஆறிச்சென்றமை உணர்த்தற்கெ

௧0 - ௧௪. தென்றிசை மருங்கிற்..........புக்குழி

(இ - ள்.) தென்றிசைக்கண்ணேசெல் லுதலை விருப்பமுறுதலானே கோழி யூரை வைகறையாமத்தே கழிந்து செல்லாநின் றுழி வெயயோன்வந்து முன்னர்க் குணதிசையை விளக்கிப் பின்னர்த் தான் தோன்றினுகை, வளவிய நீர் நிறைந்த மருதநிலமும் வாவியுஞ்சிறந்ததோர் இளமரக்காவின்மண்டபத்தே சென்று புக்கவிடத்தென்க.

வாரணம் - கோழியூர். வணங்கி மொழிந்து அல்கின ரடங்கி விருப்புற்று வாரணங்கழிந்து தோன்றினவளவிலே

இருக்கைபுக்குழியென்க. விளங்கிவிளக்கி; விகாரம்.

கஞ - சு. வாழ்க வெங்கோ.........உலகங் காக்க

(இ - ள்.) மன்னர்யாவரினும் மிக்க பெரியதலைமையினையுடைய எங்கோ வாழ்வானாக; ஊழிதோறும் ஊழிதோறும் இவ்வுலகை அவனே காப்பானாக வென்க.

கஎ - உஉ. அடியிற் றன்னளவு.........தென்னவன் வாழி

(இ - ள்.) முன்னொருகாலத்துத் தனது பெருமையினளவை அரசர்க்குக் காலான்மிதித்துணர்த்தி வேலாலெறிந்த அந்தப் பழம்பகையினைக் கடல் பொறாது பின்னொருகாலத்து அவனது தென்றிசைக்கண்ணதாகிய [1] பஃறுளி யாற்றுடனே பலவாகிய பக்கமலைகளையுடைய குமரிக்கோட்டையும் கொண்டதனால் வடதிசைக் கண்ணதாகிய கங்கையாற்றினையும் இமயமலையினையும் கைக்கொண்டு வென்க.

ஆண்டு மீண்டும் தென்றிசையையாண்ட தென்னவன் வாழ்வானாக

---

[1] சிலப்பதிகாரம், கo: சஉ. [2] சிலப்பதிகாரம், கo: கஙச - இ.

[3] "எங்கோ வாழிய... ... ...முந்நீர் விழவி னெடியோ, னன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே" எனப் பஃறுளியாற்றைப் பாராட்டிக்கூறினர் புறப்பாட்டினும்; கூ.

## கக.—காடுகாண் காதை.

கூறு

அடியில் - அடியால் தன்னளவென்றதனைக் கடன்மேலேற்றலுமொன்று.

அரசர்க்கு - உலகிலரசரெல்லார்க்குமென்க.
பகைமை. பஃறுளியென்னும் ஆற்றின் றன்மை

வான்பகை - முன்புசெயத
[1] வேனிற்காதையிற்கூறிப்
போந்தாம். கோடு - மலை. கொடுங்கடல் - இவ்வளவெல்லாந்தந்தகடல்.
கடல்
எதிர்துகொண்ட எல்லையளவும் வடபால தனை தாக்கி மீண்டும்
தென்றிசையை யாண்டவென ஒப்பாக்கலுமொன்று. அடியா லுணர்த்தி
எதிரந்த பகைபொறு து
கொள்ளத் தானுங்கொண்டு ஆண்ட தென்னவனென்க.
என்றது : அங்ஙனமாகிய நிலக்குறைக்குச்
சோழநாட்டெல்லையிலே முத்
தூர்க்கூற்றமும் சோமானாட்டுக் குண்டூர்க்கூற்றமுமென்னுமிவற்றை
இழந்த
நாட்டிற்காகவாண்ட தென்னவன வாழ்வானாகவென்றவாறு.

உஉ - இ. திங்கட் செல்வன்..........பூண்டோன் வாழி

(இ - ள்.) திங்களாகிய செல்வனுடைய மரபு மேம்படுதற்கு இந்திரன் பூட்டிய வலிவிளங்கிய ஆரத்தை ஒளிபொங்கிய தனதுமார்பத்தே பூண்ட பாண்டியன் வாழ்வானாகவென்க.

விளங்கவென்பதனை விகாரவகையான வியங்கோளாக்குவாருமுளர். விளங்கப்பூண்டோனென இயைக்க. [2]திங்கட்செல்வனென்பதற்கு வேனிற்காதையில் உரைத்ததுரைக்க.

உகூ - ௩ க. முடிவளை யுடைததோன்.......வந்திருந்தோனை

(இ - ள்.) இவன் நம்முடைய முதல்வனது சென்னிமுடியிலே

வளையை யுடைத்தோனென்று இடியையுடைய பருவமழை தனதுநாட்டிற் பெய்தற்றொழிலெய்தாது ஏகிற்றுகத் தப்பாத விளையுளாகிய மிக்க வளஞ்சுரக்கும்படி அதனை [3] விலங்கிட்டாண்ட மன்னவன் வாழ்வானாகவெனக் குற்றந்தீர்ந்த சிறப்பினை யுடைய தென்னவனை இங்ஙனம் வாழ்த்திவந்திருந்த முதுமறையோனையென்க.

௩௨ - ௩. யாது நும்மூர்.......... கோவலன் கேட்ப

(இ - ள்.) அம்மறையோனை நோக்கி, ஆண்டு, நும்மூர்யாது ? ஈண்டு நும் வரவு என்னையெனக் கோவலன் வினவவென்க.

௩௩ - ௪. குன்றுசூ சிறப்பின்..............

உரைப்போன்

(இ - ள்.) மிக்க சிறப்பினையுடைய அம்மறையோன் தான் ருளை உரைக்கின்றவனென்க.

வருகின்றபொ

வருபொருளென்ற பொதுமையான் வருதற்குக் காரணமும் ஊரின்பெயரு மென்பதாயிற்று.

---

[1] சிலப்பதிகாரம், பக். உ௯0. [2] சிலப்பதிகாரம், பக். உ௯௬.

[3] வேலையெறிந்து கடலை வற்றச்செய்ததும், இந்திரன் பூட்டிய ஆரத்தைப்பூண்டதும், இந்திரன்முடிமேல வளையைச்செலுத்தியதும், மேகத்தைச் சிறைப்படுத்தியதும் பாண்டியன் உக்கிரவன்மன் செயலென்று திருவிளையாடற்புராணமுதலியன கூறும்.



௩௫ - ௪0. நீல மேகம்........கிடந்த வண்ணமும்

(இ - ள்.) நீலமேகம் ஓங்கிய பொன்மலைமீதே பக்கங்களில்

விரிந்து மிகா
மல் ஒக்கப் படிந்ததுண்டாகில் அதனையொப்பத் தனது படம்விரித்தெழுந்த ஆயிரந்தலையையும் கிட்டுதற்கரிய திறலையுமுடைய பாம்பணைப்பள்ளிமீதே தேவர்கள் பலரும் தொழுதேத்தத் திரைவிரியும் காவிரியாற்றிடைக்குறையிலே திருமகள்பொருந்திய திருமார்பையுடையோன் கிடந்தகோலமுமென்க

மேகம் படிந்ததுபோலக்கிடந்தவென்க.

சக - நக. வீங்குநீரருவி........நின்ற வண்ணமும்

(இ - ள்) கொடிவழித்தீர்த்தமுதலிய மிக்க அருவிநீரையுடைய வேங்கட
மென்று பெயர்கூறப்படும் மலையினுச்சிமீதே ஞாயிறும் திங்களும் இருமருங்கும் ஓங்கிவிளங்கிய இடைப்பட்டவிடத்தே நல்ல நீலநிறத்தையுடையமேகம் தன் மின்னாகிய புதுப்புடைவையையுடுத்துத் தன்வில்லாகிய பணியைப்பூண்டுநின் றாற்போலப் பகையைவருத்தும் ஆழியையும் சங்கையும் அழகிய தாமரைக்கையகத்தே வலனுமிடனுமேந்தி அழகுகிளருமாரத்தைத் திருமார்பிறபூண்டு பொற பூவாடையையுடுத்து வெளிப்பட்ட சிவந்த திருக்கண்மலரையுடைய நெடியோன் நின்ற கோலமுமென்க.

மேகம் இடைநிலத்தானந்து உடுத்துப் பூண்டு நின்றதுபோல ஏந்திப் பூண்டு பொலிந்து உச்சிமீமிசைந்தோன்றிய நெடியோன் நின்றவண்ணமு மென்க. இது மயக்கநிரனிறை உச்சிமீமிசையென்ற ஒருபொருட்பன்மொழி சிறப்பின்கண்வந்தன.

நஉ - ரு. என்கண் காட்டென்று..............உள்ளோன்

(இ - ள்.) இங்ஙனமாகிய இரண்டுவண்ணத்தையும் காட்டுவாயாகவென்று என்கண் என்னுள்ளத்தைக் கவலைசெய்தலாலே ஈண்டுவந்தேன்; ஆண்டுக் குடக மலைப்பக்கத்து மாங்காடென்னுமூரின்கண் உள்ளவன் நானென்றானென்க.

என்கண், எழுவாய. [1] "கண்ணுங் கோளும்" என்பதனாற் க

உள்ளேன் - உள்ளவன் நான்.

ணென்றா.

**இச - எ. தென்னவ னாட்டு..........செப்பக் கேட்டு**

(இ - ள்.) அத்தென்னவனுடைய நாட்டிலுள்ளசிறப்பும், அவன் கொடை

அளிமுதலிய செயகைகளும் கேட்டலன்றிக் கண்கள்குளிரக் கண்டேனாகலான், அவன் புகழை நாவால்வாழத்திவந்திருந்தேன்; எனவரவு இதுவென்றுகொண்டு முதநீயின்றிறத்து மனம்புரிந்தோன் சொல்லக்கேட்டெனக.

**இஅ - க. மாமறை முதல்வ........கோவலற் குரைக்கும்**

(இ - ள்.) கோவலன் பெரிய மறைமுதல்வனே! அதுநிற்க; மதுரைக்குச் செல்லும் செவ்வியநெறியை எங்கட்குக் கூறுவாயாகவென, அவற்கு இதனைக் கூறுமெனக.

அவன்

---

[1] தொல்காப்பியம், சொல்லியாக்கம், சூ. கூஉ.

---

## கக.—காடுகாண் காதை.

கூபரு

அது மேற்கூறுவார் :—

கூ() - கூஎ. கோத்தொழி லாளரொடு.....காரிகை தன்னுடன்

(இ - ள்.) வன்கண்மையன்றிக் குடியோம்பாத அமைச்சரோடே நாடோ

றும் நாடி முறைசெய்யாது அரசனும் கோல்கோடலானே, அ
ரசியலிழந்த
அகன்றநிலம்போல முதிர்ந்த வேனிலாகிய உரிய அமைச்சனோடே
வெவ்விய விளக்கங்கோடேயமைந்த [1] வேந்தன்றானும்
வெம்மைமிகுதலானே தமது இயற்கை கெட்டு முல்லை குறிஞ்சியென்னும்
இருதிணையும் முறைமைதிரிந்து தமது நல்லியல்பையிழந்து தம்மைச்
சேர்ந்தோரை நடுங்குந்துயரையுறுவித்துப் பாலையென்பதோர்
வடிவைக்கொள்ளும் இந்தக்காலத்து இக்காரிகையோடு
வந்தீர்நீரென்றுனென்க.

பாலைக்கு நிலமின்மையும் முல்லையும் குறிஞ்சியும் பின்பு
பாலையாதலும் முன்னர்ப் [2] பதிகச்செய்யுளுரையிற் கூறப்பட்டன.
அன்றியும், [3] 'வான மூர்ந்த வயங்கொளி மண்டில, நெருப்பெனச்
சிவந்த வுருப்பவி ரங்காட், டிலையில மலர்ந்த முகையி லிலவம்'' என
முல்லை முறைமைதிரிந்து பாலையாயினவாறும், [4] 'சீறருங் கணிச்சியோன்...
... ...வரைபிளந் தியங்குந, ராறுகெட விலங்கிய வழலவி ராரிடை''எனக்
குறிஞ்சி முறைமைதிரிந்து பாலையாயினவாறும்காண்க.

கோடி இழந்த நிலம்போலக் கிழவனொடு வேந்தன்றிருகக் குன்றித்
திரிந்து இழந்து உறுத்துக் கொள்ளுங்காலையெனக் கூட்டுக. காரிகைதன்
னுடன் காலை யெய்தினிரென மாறுக. காலை - காலம்.

கூஅ - ௪௩. அறையும்...... .....................கவர்க்கும்

(இ - ள்.) பாறையும் ஆறுகளும் அருவழியில் நெறிமயக்கமும்

பெயர்ந்
தேருமென்னுமிவை அடைவுபடக்கிடந்த இந்தத் தொலையாத பெரிய சுரத்து
நெறியைத் தொலைத்துப்போய்க் கொடும்பாளூர் நெடுங்குளமென்னும் இரண்
டேர்க்கும் பொதுவாகிய புரியினது கரையைக் கழித்துச்சென்றால் முடிக்குப் பிறை
யைக் கண்ணியாகச்சூடிய இறைவனேந்திய கண்ணமைந்தியாகிய வாயைபுடைய
சூலவேலைப்போல முன்றுவழி அறிதற்கரியவாம்படி.

கவர்க்குமென்றுரைக்க.

பொறையைப் பொத்தையென்பாருமுளர்; ஆவது மட்சிறுமலை ஆரிடை - அரியவழி; ஆவது ஆறலைப்போரும் ஊறுசெய்விலங்குமுடைத்தாய் ஏற்றிழிவும் கவலைச்சின்னெறியுமாயிருப்பது. நிறைநீர்வேலியென்றார், பேய்த்தேரை; நீர்போலத் தோன்றுதலின்; உடைகுளங்களுமாம். இவை இணைப்பெயர்பெற்ற ஊர். இனிக் கொடும்பைக்கோட்டகநெடுங்குளமெனவுமாம். கோட்டகம் - கரை; பள்ளமுமாம். நீந்திப் புகவரிதென்பதுதோன்றப் புக்காலென்றார். சூலத்து - சூலம்போல; சாரியை நிற்க உருபும் உவமவுருபும் தொக்கன.

நெறியருமைகூறினான்.

எச. வலம்படக் கிடந்த வழிநீர் துணியின்—(இ - ள்.) அங்ஙனம் கவலைப்படுநெறியினுள் வலப்பக்கத்தாய்க் கிடந்த வழியில் நீர் போகத் துணிவீராயினென்றுரைக்க.

---

[1] வேந்தன் - சூரியன், [2] சிலப், பக். கஎ. [3] அகநா, கக.

[4] கலித், உ.





எ௫ - அசு. அலறுதலை மராமும்......பதிச் செல்லுமின்

(இ-ள்.) விரிந்த தலைகளையுடைய வெண்கடம்பும், உலறிய தலைகளையுடைய இலவமும் பொரிந்த தாளையுடைய வாகையும், தண்டுமுளிந்த புறக்காழாகிய மூங்கிலும், வரியையுடையமரல் நீர்வற்றித் திரங்கிய சுரிந்துகிடக்கின்ற இடங்களும், அவ்விடத்தே நீருண்டலைவிரும்பி அவ்விருப்பத்தாலே உழைமான் நின்று உளைக்குங்காடும், எயினருரையடுத்தவழியுமாகியவவை கடத்தற்கரிய; அவற்

றைக்கடந்து போனால், அவ்விடத்து மலைச்சாரலில்விளையும் நெற்பயிரும் முறிக்கும்பருவத்தைத் தன்னிடத்துடைய கரும்பும் கொயயும்பருவத்தையுடைய தினையும் வளவிய புனத்தில்விளைந்த வரகும் வெள்ளுள்ளியும் மஞ்சளும் அழகிய கொடியையுடைய கவலையும் தலைதாழ்ந்த குலையையுடைய வாழையும் கமுகும் தெங்கும் மாவும் பலாவுமெனனுமிவை தனக்குச் சுற்றெங்கும் சூழப்பட்டு ஓங்கிய தென்னனுடைய சிறுமலையென்னும் பெயரையுடைய மலை விளங்கித் தோன்றும்; அம்மலையை வலப்பக்கத்துக்கொண்டு இடப்பக்கத்து நெறியிற சென்று மதுரையிற்புகுமினென்றானென்க.

உலறுதல் - தலைமுளிதல். உழிஞ்சில - உன்னமுமாம். புல் - புறக்காழ். திரங்கியவென்பதற்கு விலங்கு சுவைத்தலால் திரங்கியவென்றுமாம்; [1] 'மரையா மரல்கவர" என்றாராகலின். எயினர் - மறவர்.

அறைக்கண் -

வரைந்தகண்ணுமாம் பூந்தினை - பொலிவினையுடையதினை. காயம்

- வெள்

ளுள்ளி. சிறுமலை, பெயர். அகன்பதி - மதுரை.

அஎ - கூஉ. அவ்வழி...... ....................பிலமுண்டு

(இ - ள்.) அங்ஙனமாகிய வலப்பக்கத்துநெறியைப் போகீராயின் இடப்பக்கத்துச் சிறையையுடையவண்டுகள் செவ்வழியாழ்ப்பண்ணினைப்பாடும் தாழ்ந்த தடத்தோடும் தாழ்ந்தவயலோடும் குளிர்ந்தபூங்காவினோடும் அருஞ்சுரங்கள் பலவும் இடைகிடந்த காட்டுநெறியையுங்கழிந்து திருமால்குன்றத்துச்

செல

லக்கடவீராயின், அவ்விடத்தே மிக்க மயக்கத்தைத்தெடுக்கும்

யுண்டென்றானென்க.

பிலத்துநெறி

திருமால்குன்றம் - அழகர்திருமலை.

'கூஉ. ஆங்கு—(இ - ள்.) அப்பிலத்துக்குள்ளே,

கூங - எ. விண்ணோ ரேத்தும்...........மூன்றுள

'(இ - ள்.) தேவர்களாலேத்தப்படுதலின் யாவரும் வியக்கத்தகும

மரபினை
யுடைய புண்ணியசரவணம் பவகாரணி இட்டசித்தியென்னும்பெயர் எங்கும் பரக்கப்பட்டு இடையறாத சிறப்பினையுடையவாய்த் தம்மிற்சேர்ந்திருக்கின்ற மூன்றுபொய்கைகளுளவென்றானென்க.

௯எ. ஆங்கு—(இ - ள்.) அவற்றுள்,

௯அ - ௯. புண்ணிய சரவணம்..........ய்துவிர்

[1] கலித்தொகை, ௬.

## ௧௧.—காடுகாண் காதை.

டுறவ

(இ - ள்.) புண்ணியசரவணமென்னுகின்ற பொய்கையில்
ஆடுவிராயின்
இந்திரனாற்செய்யப்பட்ட ஐந்திரவியாகரணமென்னும் இலக்கணத்தை
உணர்
வீரென்றானென்க.

இது வினைவின்றிப் பெறும்பேறு.
பொருந்துதல் - ஆடுதல். எய்துதல் -உணர்தல்.
௯௦ - ௯௧.

பவகாரணி...............................எய்துவிர்
(இ - ள்.) அதுவன்றிப் பவகாரணியென்னும் பொய்கைக்கண்
ஆடுவீரா
யின் இப்பிறப்பிற்குக் காரணமாகிய பழம்பிறப்பை
யுணர்வீரென்றானென்க.
முன்னும்பின்னுமாகிய இருபிறப்பையும்

உயத்துணர்தற்குக் காரணமாகிய
இப்பிறப்பிலே எப்பிறப்பையும் எயதவுணர்வீரெனருனெனினுமமையும்.
இனிப்
பவமென்பதனை விகாரமாக்கிப்
பாவத்தான்வரும்பிறப்புக்களையென லுமாம்.

கϭ௨ - ௬. இட்டசித்தி.................................நீரே

(இ - ள்.) அதுவன்றி இட்டசித்தியென்னும் பொய்கையில்
ஆடுவீராயின்
நீர் நினைத்தவெல்லாம் எய்துதலையுடையீரென்ருனென்க.

இனி எண்வகைச்சித்திகளையும் தவஞ்செயது வருந்திப்பெருமல்
அழிப் பெறுவீரென்ருனெனினுமமையும்

நினைத்

கϭ௪. ஆங்குப் பிலம்புக வேண்டுதி ராயின்—(இ - ள்.)
அங்ஙன மாகிய அப்பிலத்துக்கட்புகுதலை விரும்புவீராயினென்ருனென்க

கϭ௫ - எ. ஓங்குயர் மலையத்து........மலைவலஞ்
செய்தால்

(இ - ள்.) மிகவுமுயர்ந்த அத்திருமலைக்கணுள்ள
பெரியோன்சேவடிகளைக் கையாற்றொழுது மனத்தானினைந்து
வாக்காறறுதித்தலுடனே அம்மலையை மும்முறை வலஞ்செயதாலென்க.

அத்து, சாரியை. வைத்தல் - நினைத்தல் = தியானம். வந்தனை -
ஈண்டுத் துதித்தல். தொழுது வைத்து வந்தனையோடு
வலஞ்செய்தாலென்க.

கϭஅ - கக. நிலம்பக வீழ்ந்த.....ஒருத்தி தோன்றி

(இ - ள்.) பாதாளகங்கைக்கு மேலுள்ள நிலம் கூறுபடும்படி
அறுத்துத் தாழ்ந்த [1] சிலம்பாறென்னும் அகற்சியையுடைய

ஆற்றின து. கரைக்கண்ண தாகிய விளக்கத்தையுடைய முகைகளவிழ்ந்த மலரையுடையதோர் கோங்கி னிழற்கண்ணே ஒரு பொற்கொடிபோலவும் மின்போலவும் புயல்போலும் ஐவகைக்கூந்தலையும் வளைந்த தொடிபுனைந்த தோளிணையுமுடையா தோன்றியென்க.

ளொருத்தி

சிலம்பாறு - அவ்வியாற்றின்பெயர். தலை - இடம் இன், கன்னிகாரம் – கோங்கு. தொடி –வளை. ஒருத்தி - ஓரியக்கி.

உவமவுருபு.

௧௧௨ - எ. இம்மைக் கின்பமும்.........கதிலெனும்

(இ-ள்.) அங்ஙனம் தோன்றினவள் இப்பிறப்பிற்கின்பமும் மறுபிறப்பிற்கு இன்பமும் இவையிரண்டுமொழிந்து எக்காலத்தும் ஒன்றாந்தன்மையாய்க் கோட்

[1] சிலம்பாற்றினை நூபுரகங்கையென்பர்.



டமின்றி அழிவற்றிற்குமின்பமுமாகியபொருள்கள் யாவை? அவற்றை நீயி ருரைமின்; யான் இந்[1] தாள்வரைக்கண்ணே வாழ்வேன்; வரோத்தமையென்று கூறப்படுவேன்; யான் வினவிய இவற்றை உரைத்தாருளராயின், அவர்க்கு எத்தொழிற்குமுரியேன்; ஆதலின், திருத்தக்கீர், உரைத்தீராயின், உமக்கு இப்பொழுதே இப்பிலவாயிற்கதவம் திறந்துதருவேனென்று சொல்லுமென்றனென்க.

இம்மைக்கின்பம் - புகழ்; மறு மைக்கின்பம் - புண்ணியம்; செம்மையினிற் பது - மோக்கம்; இனி, ஒருவர்க்கு இம்மைமறுமைகட்கு இன்பத்தைத்தந்து பூமியுள்ளளவும் நிற்பதுபுகழெனலுமாம்; [2] "ஒன்றா வுலகத்......தொன றில்"

மூற் கூறப்பட்ட பொய்கைமூ ன் றின் கரைக்கட் செலுத்தி. அவை இவையென் று காட்டி மீளுமென்றுனொ ன்க.

ஆங்கு, அசை

கஉஅ - ௩௨. அருமறை மருங்கின்............மற்றவை

(இ - ள்) ஓதவும் உணரவுமரிய மறையிடத்தனவாகிய ஐந்தானும் எட்டானும் வருமுறைமைப்பட்ட எழுத்தினையுடைய மந்திரமிரண்டையும் ஒருதன்

1 அடிமலையைப் பாதசைலமென்று வடநூலார் கூறுதலின்,
2 திருக்குறள், உகக. 3 புறநானூறு, ௫0.

தாள்வரையென்றார்.

## கக.—காடுகாண் காதை.

௩0க

மையாக மனத்தானினைந்து வாக்காற்றுதித்து அவற்றுள் வேண்டியதியா தொன்று அதனில் விரும்பினீராயாடின், அவற்றின்பயனுயவை, தவங்களைச் செய்தோர்க்கும் காணத்தகும் மரபினையுடையவல்லவென்றுனொ ன்க.

இனி, அங்ஙனமாகிய பொய்கைகளின்பயனை விரும்பினீராய் ஒன்றினுடின் அதன்பயனை நுகர்ந்தநெஞ்சம் பிறிதொன்றினையும் காதலியாதென்றுமாம். இன்னும் மற்றவை காண்டகுமரபினவல்லவென்பதற்கு

இவையொழிந்தவீர்த்

தங்கள் இவைபோலக் கைமேற் காணத்தகும்

மரபினையுடையவல்லவெனினு

மமையும்.

க௩ ௩ - அ. மற்றவை நினையாது........துயர் கெடுக்கும்

(இ - ள்.) அங்ஙனமாகிய பொய்கைகளின்பயனை விரும்பீராயின்,

அவற்
றை நினையாதே அம்மலைமீதுநின்றோனுடைய பொலிவுபொருந்திய
தாமரை
மலர்போலும் தாள்களை நினைமின்கள்; அங்ஙனநினைப்பீராயின்,
அப்பொழுதே
அவனது கருடப்புள்ளெழுதிய கொடித்தண்டு பொரு
ந்திநிற்குநிலையிடத்தைக்
காண்பீர்; கண்ட வளவிலே அவன் றிருவடிநிலை நும்மை
எடுத்துக்கொண்டு பிற
வித்துன்பத்தைக் கெடுக்குமென்றானென்க.

நீயிர் ஆண்டுச்சென்று அதுகாண்பீரென்பான்
தோன்றுமென்றான்.
கெடுக்கும், முற்று.

கஅ - க.
இன்ப மெய்தி........................ஏகுமின்

(இ - ள்.) அங்ஙனம் அதுகாண்டலிற் பின்னர்ப்
பரமபதத்திற்குச்சேறலு மெய்யென்று இன்பமெய்தி
மாட்சிமைபொருந்திய மாபினையுடைய மதுரைக்குச்
செல்மின்களென்றானென்க.

கசo. காண்டகு பிலத்தின் காட்சி யீது

(இ - ள்.) கண் கூடாகக் காணத்தகும் பிலத்தின் றன்மை
இத்தன்மையா யிருக்குமென்றானென்க.

கசo - சக. ஆங்கு...............................யானென

(இ - ள்.) அத்தன்மையவாகிய இரண்டு பக்கவழிகளிற்
போதீராயின், இடைப்பட்டநெறி செவ்வியநெறி; அதனிடத்து இனிய
பொழில்சூழ்ந்த ஊரும் ஊர்களை இடையிட்ட பலகாடுங்கடந்தாற்
கடத்தற்கரியதோர் மிக்க வழிக்கண் மிக்க துயரைத்தருவதோர்

தெய்வமுண்டு; அத்தெய்வந்தான் றி வழிப்போவாரை இடுக்கண்செய்யாது; செய்வதியாதெனின், நடுக்கஞ்சாலா நயத்தாலே போவார்போக்கைத் தடுக்கும்; அங்ஙனமாகிய அதனைத்தப்பின், அப் பெருவழி போவார்யாவர்க்கும் முகஞ்செய்துகிடக்கும்; ஆதலாஸ் நீயிருஞ்சென் மின்; யானும் நிலங்கடந்த நெடுமுடியண்ணலுள்களைத் தொழுதகையையுடையே னாகலிற் போகுவலென்னவெங்க.

தாங்கும் - தடுக்கும். மடுத்துடன்கிடக்கும் - இம்மூன்றுவழியும் படிப்பட முகஞ்செய்துகிடக்குமெனினுமமையும்.

ஒரு

கருo - ருக. மாமறை யோன்........கட்டுரை சொல்லும்



(இ - ள்.) அங்ஙனம் போகுவலென்ற முதுமறையோன்வாக்கால் வழியின் திறங்களைக்கேட்ட கவுந்தியடிகள் ஒருபொருள்பொதிந்தவுரையை உரைக்கும்; அஃதியாதெனின்:—

கருஉ - சுசுஎ. நலம்புரி கொள்கை...........அரும்பதித்தங்கி

(இ - ள்.) நல்லொழுக்கத்தைப்புரிந்த கோட்பாட்டையுடைய மறைவல்லவனே! தேவர்களினும்வைத்து ஆயுக்கற்பத்தினை மிகவுடைய இந்திரன்றோற்றுவித்த வியாகரணத்தினை எம்முடைய அருகக்குமரனருளிச்செய்த பரமாகமங்களிற் காண்கின்றிலேயோ? அஃதுளதாக, நின் புண்ணியசரவணம்பொருந்துதல் வேண்டா; அஃதன்றி முற்பிறப்பிற்செய்தவற்றை இப்பிறப்பிற் காண்கின்றிலேயோ? ஆகலான் நின்பவகாரணி படியவேண்டா; அஃதன்றி வாய்மையும் கொல்லாமையுமென்னும் இரண்டினையும் வழுவாதோம்புவார்க்குக் கடைகூடா

திருக்கும்பொருள் யாவதுமில்லை; ஆகலின், நின் இட்டசித்தியெய்துதல் வேண்டா; இவை இங்ஙனம்பெறுதலின், பிலம்புகவேண்டுமுறைமை எங்கட்கு இல்லைகாண்; நீ காமுற்றுவந்ததெய்வத்தைச் சென்று கண்டு அடிபணிதற்குப் போவாயாக; யாங்களும் எங்கட்கு ஏற்ற நெறியே செல்வோமென்று அந்தமறையோனுக்குப் பொருந்துவனவாகிய மொழிகளையுணர்த்திக் குன்றாத ஒழுக்கத்தினையுடைய கோவலனுடனே அற்றைநாள் தங்குதற்கரியதொரு பதியிற்றங்கியென்க.

நலம்புரிகொள்கை நான்மறையாள, இகழ்ச்சி.
கற்பமென்பதனைப் பிரா கிருதத்தாற் கப்பமென்றார்;
தேவர்களிடைச்சென்று கற்பிக்குமிந்திரனென்று மாம்.
மெய்ப்பாட்டியற்கை - பரமாகமம்; அதில் ஐந்திரவியாகரணம் காணலாம். நூலினையென்னுமுருபு தொக்கது. இந்தப்பிறப்பில் நுகர்வன பிற்புரிந்த வினைப்பயனென்பதுகருத்து.

முற்பிறப்

கருஅ - கூ. வாய்மை...பொருள்:—[1] "யாமெய்யா........பிற" எனவும், "கொல்லான் ..........தொழும்" எனவும் உட்கொண்டவாறெனக்கொள்க. இனிக் காமுறுதெய்வம் - காமமுறுந்தெய்வம்; எனவே காமக்குரோதாதிகளெல்லாமுடைய தெய்வமென்பதூஉமாயிற்று; கண்டு - கண்டுவைத்துமென்க.

கஙுடு - எ().
பின்னையும்.........................துறை சிற்ப

(இ - ள்.) முன்னாட்போலப் பின்பும் தங்கி அப்பதியினின்றும் பெயர்த்து செல்கின்றபின்னாட் கரிய பெரிய கண்ணையுடையாளும் கவுந்தியடிகளும் வழி நடை வருத்தத்தினாலே வழிப்பக்கத்தேயிராநிற்க, முற்கூறிய இடைநெறிக் கிடந்த செலவைக்கொண்ட பக்கநெறியைக் கடந்துபோய் ஒருபொய்கைக்கரை யிற்சென்று நீரையுண்ணவிரும்பிய

வேட்கையோடே கோவலன் ஒரு பெரிய துறையிடத்தே நின்றானென்க.

பின்றை - பின்னை. வழிநாள் - மற்றைநாள். வருந்து-வழி: இடைநெறி - நெறியிடையென்று மாறினுமமையும். இயவு - செலவு. நீர்நசைவேட்கை - நீர்மேல்மிக்கவிருப்பம். இது கூறவே பாலைத்திணையின் தன்மைச்சிறப்பு மாயிற்று.

---

[1] திருக்குறள், ௬00. [2] திருக்குறள், உ௬0.

௫௧௧ ௧௧.—காடு காண் காதை.

௧எ௧ - ௫. கானுறை தெய்வம்...........நீருகுத்து

(இ - ள்.) அம்மறையோன்கூறிய ஆரணர்த்தெய்வமாகிய வனதெய்வம் தனது காதன்மிகுதியாற் சென்று கூடக்கருதி மாதவிமேல் நயந்தகாதலாஸ் நம்மேல் இவன் அன்புறவனென்றெண்ணி அவடோழியாகிய வசந்தமாலையது வடிவைக்கொண்டு வந்து வெளிப்பட்டு ஒருகொடி காற்றால் நடுக்கமுற்றதென் னும்படி அவனுடைய தாளிணைக்கண்ணேவீழ்ந்து பொய்க்கண்ணீரையுகுத்தென்க.

அருங்கண்ணீர் - அன்பின்மையின் உகுத்தலை தோன்ற நின்றது. சென்று தோன்றி வீழ்ந்து உகுத்தென்க.

௧எ௬ - ௯. வாச மாலை.....................வான்றுய ருற்று

(இ - ள்.) இனி மாதவிகூற்றாகக் கொண்டுகூறுகின்றவள், வாசத்தை யுடைய மாலையிலெழுதிய ஓலைப்பாசுரத்தில் தவறுடையேனல்லேன்; நீகூறிய மாற்றங்களிற் சிலதவறுண்டுபோலும்; அதனானன்றே கோவலன் எனக்குக் கொடுமை செய்தானென்று என்முன்னே மாதவி மயங்கிவீழ்ந்து மிக்கதுயர முற்றென்க.

௧அ0 - ௧௧. மேலோராயினும்........பணிமொழி

யாதெண

இது

(இ - ள்.) முனிவரும் கற்றோரும் கல்லாது நன்மைத்தன்மையறிவோரும் நெஞ்சையொறுக்கும்பிணியென்று உட்கொண்டு முகம்பாராது விட்டு

நீங்கப்பட்ட இப்பொதுமகளிருடைய செய்தொழில் கடையானதொழிலென்று சொல்லித் தனது சிவந்த அரிபரந்த வளவியகடையையுடைய கண்களால் வெண்முத்தத்தைச்சொரிந்து விரும்பி, மூக்குப்பூட்டிய வெள்ளிய நிலா விளங்கும் குளிர்ந்த தனிமுத்துவடத்தையும்வெறுத்துப் பூட்டிய தன்கையாற் பரிந்து சிந்தித் துறவாவென்னையுந்துறந்தனள்; ஆதலான் நீங்கள் மதுரை யென்னும் மூதூராகிய நகரைநோக்கிப்போந்ததனை

வழியிலெதிர்ப்பட்டோர் எனக்குரைத்தலானே [1]

வாணிகச்சாத்தோடுபோந்து தனிமையால் யான்துயருழந்தேன்; பகுத்தலரிய பண்பையுடையோனே! அதற்கு நீயருளிச்செய்யு மாற்றம் யாதென்றுகேட்பவென்க.

பிறக்கிடுதல் - பின்னிடுதல்; ஆவது முகம்பாராமை. வாழ்க்கை - பொய்த் தொழில். ஏகாரம், தேற்றம். போன்ம் - போலும்; [2] "செய்யு ளிறுதிப் போலி மொழிவயி, னகார மகார மீரொற் றாகும்" என்பதனாற்கொள்க. மேலோர் - முனிவர். நூலோர் - கற்றோர். பால்வகை தெரிந்தபகுதியோர் - மதிநுட்ப முடையோர்.

கஙஉ - உ00. மயக்குந்தெய்வம்................

.ஏகென்றேக

(இ - ள்.) இங்ஙனம் இயக்கிநடிக்கக்கண்ட கோவலன் மதியை மயக்குவிக்குந் தெய்வம் இவ் வலிய காட்டிலுண்டென்று அம்மறையோன் கூறினனாத

[1] வாணிகச்சாத்து - வாணிகஞ்செய்வோர்திரள்; "சாத்தொடு வழங்கு முல்குடைப் பெருவழி" (அ0) எனப்பெரும்பாணாற்றுப்படையினும், "தாளி னூக்குபு சாத்தி னெழுந்தவே" (௧௨௬௩) எனச் சிந்தாமணியினும் கூறினர்.

³ தொல்காப்பியம், மொழிமரபு, சூ. கஅ.



லான் மந்திரத்தால் இந்த ஐவகைப்பட்ட சிலவாகிய ஓதியையுடையாளைத் தெய்வமகள் மானிடமகளென்பதறிவேனெனக்கருதி அவன் நாவிற்கூறியமந்திரம் அந்தரிமந்திரமாதலானே, அஞ்சி, யான் இவ்வனத்திற்றிரிகின்றவியக்கி; நின்றனை விரும்புதலான் மயக்கஞ்செய்யப் புக்கேன; யான்செய்த இப்பிழை யை நின்மனைவிகரும் கவுந்தியடிகட்குற் மொழியாது போவாயாகவென்று சொல்லித் தானும் தன்னிடமே போகவெ க.

தவத்தினும் கற்புச்சிறந்ததாகலின், முற்கூறினர். ஐயா சாயலும் அறுடி முடையாரே நூற நல்லுகண்டுழிக் கணத்திடை வெகுண்டு சவிப்பரெனவறஞ்சி அவர்க்கு உரையாதொழியென்று இரந்தாளெனக.

உ0க - உ. தாமரைப பாசடை...... ...துயர் தீர்த்து

(இ - ள்.) அங்ஙனம் அவள்போனபின்பு தாமரைப்பொதியுள் நான் அந்த

விடத்திற குளிர்நதநீரைக் கொண்டுசென்று நீர்வேட்கையான்வருத்தமுற்ற

மடந்தையது வருத்தத்தைத் தீர்த்தெனக.

உ0௫ - சு. பீதுசெல் வெங்கதிர்..........அழுவத்து

(இ - ள்.) எழுகின்றகதிர் வெம்மைசெய்தலைத் தொடங்குதலாலே பாலைத்

தன்மைநிகழ்கின்ற இக்கானம் இனி வழிச்சேறற்கு அரிதென்று கோவலனுட னும் விளங்கத் மகரக்குழையையுடைய மாதினுடனும் மாதவத்தாட்டியும் வழி

மயக்கத்தையுடைய பாலைநிலப்பரப்பினகண்ணெனக.

தீதியல்கானம் - தீங்காலியனறகானமுமாம்,
உ)எ - கக.

குரவமும்..............................ஆங்கென்.

(இ - ள்.) குராவும் வெண்கடம்புங் கோங்கும் வேங்கையும் தாம்மி ் ந்லே மணந்தபொழில் நிழ் ந்த இருப்பிடமாது அரியவழிகளின் இயங்குவார்கைப்பொருளாகிய வள ந்த விரும்பினவிதை மழுவராக்கதவிருப்பார் விறலுேழிலேயே உழவுத்தொழிலாகவுடைய மறவர் கூறற்ற தையொடுக வலியோடே வில்லேயேந்திப் பகைவர்முனையிடத்தேபுக, அவர்க்குவென்றியைக்கொடுத்து, அதற்கு விலையாகிய மிக்க ஆண்மைத்தன்மையையுடைய அவிப்பலியைத் தானபெறுதற்கு வழிபார்த்திருக்கும நெற்றிககண்ணையுடையகுமரி, விண்ணோர்பரவும்பாவை, குற்றமற்ற சிறப்பினையுடைய சுவர்க்கநாட்டையுடையாளாகிய ஐயைகோட்டத்தைச் சென்றடைந்தார் அப்பொழுதேயென்க.

போகி - போக. இனிப் போகவெனத்திரியாது ஏந்திப் போகி வெற்றங்கொடுத்துப் பார்த்திருக்குமென்பதூம் பொருள். அதற்கு உழவர்க்கென நான்கனுருபு விரிக்க. முன்பொடுவெற்றங்கொடுத்தென்க. மயங்கதாழுவத்து விளங்கிய இருக்கைக்கட் கோட்டமென்க; அஃது ஏந்திப் போகிக் கொடுத்து இருக்கும் குமரி பாவை நாடி ஆகிய ஐயைகோட்டமென்க. கழிபேராண்மைக்கடன் தன்னைத்தானிடும்பலிக்கடன். விழி நுதல் - நுதல்விழியென்க.

இஃது,

எல்லாவடியும் நேரடியாவருதலின், நிலைமண்டிலவாசிரியப்பா.

கக.—காடுகாண்காதை முற்றிற்று.

---

# பன்னிரண்டாவது

# வேட்டுவவரி.

கடுங்கதிர் திருகலி னடுங்கஞ ரெய்தி
டாறுசெல் * வருத்தத்துச சீறடி சிவப்ப
நறும்பல் கூந்தல் குறும்பல வுயிர்த்தாங்
கையை கோட்டத் தெய்யா வொருசிறை
வருந்துநோய் தணிய விருந்தன † ருப்பால்
வழங்குவிற் றடக்கை மறக்குடித் தாயத்துப்
‡ பழங்கட னுற்ற முழங்குவாய்ச சாலினி
§ தெய்வ முற்று மெய்ம்மயிர் நிறுததுக்
கையெடுத் தோசசிக் கானவர் வியப்ப
இடுமுள் வேலி யெயினர்கூட் டுண்ணு
நடுவூர் மன்றத் தடிபெயர்த் தாடிக்
கல்லென் பேரூர்க் கணநிரை சிறந்தன
வல்வி லெயினர் மன்றுபாழ் பட்டன
[1] மறக்குடித் தாயதது வழிவளஞ சுரவா

---

க. திருகலின் - முறுகலின்.

௪. எயயாவொருசிறை - பலரும் அறியாத ஒருபக்கம்.

ரு. உப்பால் - மேல்.

௬. வழங்குவிற்றடக்கை - வில்வழங்குதடக்கை; வழங்குவில் - அம்பை வழங்கும்வில்லென்றுமாம். தாயம் - உரிமை.

௭. பழங்கடன் - முன்புகொடுத்துப்போதுங்கடன்; அஃது போந்தாள். சாலினி - தேவராட்டி.

கொடுத் தூப்

கக. நடுவூர் மன்றம் - ஊர்நடுமன்றம்

கஉ. கல்லென்பேரூர் - கரந்தையரூர்கள்.

கங. நிரைகவர்ந்து வாராதபடியால் எயினர்மன்றுகள் பாழ்பட்டன.

கச. மறக்குடித் தாயமாகிய வழிவளஞ்சுரவாது; வழிவளம் - போவாரை அடித்துப்பறித்தல்.

¹ கச - ௫. கருத்து: கலி. கக: கஉ - ச.

(பி - ம்.) * 'வருத்தஞ்சீறடி' † 'இப்பால்' ‡ 'பழங்கணுற்ற', 'விறுத்த' § 'தெய்வமுற்றெழுந்து மெய்ம்மையினிறுத்துக்'

'பழங்கட





கரு. தறக்குடி போலவிற் றடங்கின ரெயினரும்
¹ கலையமர் செல்வி கடனுணி னல்லது
* சிலையமர் வென்றி கொடுப்போ ளல்லண்

மட்டுண் வாழ்க்கை † வேண்டுதி ராயிற்
கட்டுண் மாக்கள் கடந்தரு மெனவாங்
கிட்டுத் தலையெண் ணூஉ ‡ மெயின ரல்லது
சுட்டுத் தலைபோகாத் தொல்குடிக் குமரியைச்
* சிறுவெள் ளரவின் குருளைநாண் சுற்றிக்
§ குறுநெறிக் கூந்த னெடுமுடி கட்டி
யிளைசூழ் படப்பை யிழுக்கிய வேனத்து

---

௧௫. அறக்குடி - அறஞ்செய்யுங்குடிகள். அவிந்தடங்குதல் - நிரைகோடலும் ஆறலைத்தலுமொழிதல்; இது 'மறக்குடி அறஞ்செய்யக் கெடும்' என்னும் வழக்கு.

௧௮. மட்டுண்வாழ்க்கை - கள்ளுண்டுகளிக்கும்வாழ்க்கை.

௧௯. கட்டுண்மாக்கள் - களவேகட்டு உணவாகவுண்ணுமாக்கள். கடந்தருமென்றது சாவினிகூற்று; தாருமென்றது விகாரத்தால் தருமென்பதாயிற்று. ஆங்கு - அவ்விடத்தில்.

இனி, தம் குடியில் ஒருபெண்ணை ஒப்பிக்கிறபடி கூறுகின்றார்:—

௨0. தலையறுத்திட்டு எண்ணப்படும் எயினரல்லது.

௨௧. சுட்டுத்தலைபோகா - நோயாற்செத்துச் சுட்டுப்போகாத; என்றது மறங்கூறியதாம்.

௨0 - ௨௧ அன்றியும், மாற்றார்தலையைத் தாங்கள் வெட்டியிட்டு எண்ணுமதல்லது பிறராற் கருதலானவிடத்தைப்போகாதவென்றுமாம். அன்றியும், மறத்திற்கு முற்படவிட்டெண்ணுமெயினர், தாங்கொள்ளச்சுட்டினல்லது பிறர் கொள்ளச் சுட்டுமுடிவுபோகாத தொல்குடியிற் குமரியென்றுமாம்.

உஉ. அரவின் குருளை நாணென்றது - பொன்னாற்பண்ணின [''அராப்போத்து'' என்பதுபோல உருவமாதிரின்றது.]

பாம்பு ;

உஉ - ௩. சுற்றிக்கட்டி.

உச. இளைசூழ்படப்பை - காவல்சூழ்ந்த கொல்லைத்தோட்டம்.

இழுக்கிய-
பட்ட,

---

[1] கருத்து: சிலப்பதிகாரம், கக: உகக - ௬. [2] குறுந்தொகை, ககக.

(பி - ம்.) * 'சிலைதரு' † 'வேள்விசாயிற்' ‡ 'எயினர்க்கல்லது' § 'குளிருதி'



உரு. வளைவெண் கோடு பறித்து மற்றது
முளைவெண் டிங்க ளென்னச * சாத்தி
மறங்கொள் † வயப்புலி வாய்பிளந்து பெற்ற
மாலை வெண்பற் றாலிநிரை பூட்டி
வரியும் புள்ளியு ‡ மயங்கு வான்புறத்
துரிவை மேகலை § யுடீஇப் பரிவொடு
கருவில் வாங்கிக் ‖ கையகத்துக் கொடுத்துத
திரிதரு கோட்டுக் கலைமே லேற்றிய
பாவையுங் கிளியுந் தூவி யஞ்சிறைக்
கானக் கோழியு நீனிற மஞ்ஞையும
பந்துங் கழங்குந் தந்தனா ¶ பரசி

வண்ணமுஞ் சுண்ணமுந தண்ணறுஞ் ** சாந்தமும
[1] புழுக்கலு †† நோலேயும விழுக்குடை மடையும
பூவும் புகையு மேவிய விரையு
மேவ லெயிற்றிய ‡‡ ரேநதினா பின்வர [2]
௪௦. வாறெறி பறையுஞ் சூறைச சின்னமுங்
கோடுங் குழலும் பீடுகெழு மணியுங்
கணங்கொண்டு துவைபப வணங்கு முன்னிறீஇ

உ௮ மாலே - ஒழுங்கு.
உ௭ - ௮. நிரைபுலிப்பறழ்லி - நிரைநத புலிபபற்ழலி.
உ௯ - ௩௦. வானபுறத்தரிவை - தூயபுறததினையுடைய புலியுரிவை.
௩௨ திரிதருகோடு - புரிநதகொம்பு. ௩௩. தூவி - சிறகினமயிர.
௩௫. பந்தும் கழங்குங்கொண்டு சேவித்து.
[3] ௩௯ - ௪௰. (பா) பீடிகையிற செனறு நிலேபபலிசெயது.
௪௦. ஆறெறிபறை - வழிபறித்துக்கொட்டும்பறை
சூறைச்சின்னம் - சூறைகொள்ளுமிடத்தூதுஞ்சின்னம்.
௪௨. (பா) அணங்கு மெயநிறீஇ - அக்குமரிமேல் அணங்கையேற்றி.

[1] சிலப்பதிகாரம், இ: ௬௮.
[2] 'பின்வர' என்றதன்பின், " மலர்ப்பலிப் பீடிகை நிலேப்பலி செய்தாங்கு " என்று ஓரடி சிலபிரதிகளில் அதிகமாக எழுதப்பட்டுள்ளது.
[3] மிகுதியாகக்காணப்பட்ட ஓரடியின் பொருள் இது ; இக்கது அடியார்க்குநல்லா ருரையிற்காணப்படவில்லே.

(பி - ம்.) * 'சேர்த்தி' † 'இரும்புலி' ‡ 'மயங்கியவான்'

§ 'உடுத்தி' || 'கையிற் கொடுத்த'
¶ 'பின்வர' ** 'சாத்தும்' †† 'தொலையலும்' ‡‡ 'ஏந்தினர்சூழ்ந்து'



விலைப்பலி யுண்ணு மலர்பலி பீடிகைக்
கலைப்பரி யூர்தியைக் கைதொழு தேத்தி
யிணைமலர்ச் சீறடி * யிணைந்தனள் வருந்திக்
கணவனோ டிருந்த மணமலி கூந்தலை

† யிவளோ, கொங்கச் செல்வி குடமலை யாட்டி
தென்றமிழ்ப் பாவை ‡ செய்த தவக்கொழுந்
தொருமா மணியா யுலகிற் கோங்கிய
திருமா மணியெனத் தெய்வமுற் றுரைப்பப்
பேதுறவு மொழிந்தனண் மூதறி வாட்டியென்
றரும்பெறற் கணவன் பெரும்புறத் § தொடுங்கி
விருந்தின் மூர லரும்பின ணிற்ப
மதியின் வெண்டோடு சூடுஞ் சென்னி
நுதல்கிழித்து விழித்த விமையா நாட்டத்துப்
பவள வாய்ச்சி தவளவா ணகைச்சி
நஞ்சுண்டு கறுத்த கண்டி வெஞ்சினத்
தரவுநாண் பூட்டி || நெடுமலை வளைத்தோ
டுளையெயிற் றுரகக் கச்சுடை முலைச்சி
வளையுடைக் கையிற் சூல மேந்தி
¹ கரியி னுரிவை போர்த்தணங் காகிய

வரியி னுரிவை மேகலை யாட்டி

சஈ. விலைப்பலி - வெற்றிகொடுத்துண்ணும்பலி. (ப1) மலர்ப்பலிபீடிகை யென்றது - கோட்டத்தை.

சஈ - ச. உண்ணுமூர்தி.

பீடிகைக்கு அருகேநிறகிறகலைப்பரியூர்தியைக் கைதொழுதேத்தி; ஏத்தி - ஏத்த. கலைப்பரியூர்தியென்றது - தெய்வமேறப்பட்டாளை. கலைப்பரி - பரிக்கலை யென்க.

சஎ. 'கொங்கச் செல்வி குடமலை யாட்டி' என்றது - மேற்பட்டு இவளைத் தெய்வமாகக்கொண்டாடுமிடங் கூறினபடியாலே, இவள் துர்க்கையாகவே பிறந்தாளென்றவாறு.

(எ) சாலினிதானும் (சஉ) அணங்கு மெய்ந்நிறீஇ (சச) ஏத்தப் (ருப) தெய்வமுற்று.

பின்னும்

(சஎ) 'கொங்கச் செல்வி' என்றதுமுதலாக, (ருப) 'திருமாமணி' என்ப தீறுகக் கண்ணகிக்கு நிகழ்வது கூறினுள்

[1] இவ்வடி., தக்க. தாழிசை, கூகூ - உரை, மேற்கோள்.

(பி - ம்.) * 'இனைந்தடிவருந்த' † 'இவளோர்' ‡ 'செய்தவக்' § 'தெலேவரை'

'ஒதுங்கி'

# கஉ.—வேட்டுவவரி.

கூகள

சிலம்புங் கழலும் புலம்புஞ் சீறடி

வலம்படு கொற்றத்து வாய்வாட் கொற்றவை கூடு. யிரண்டுவே

றுருவிற் றிரண்டதோ ளவுணன்
றலைமிசை நின்ற தையல் பலர்தொழு
மமரி குமரி கவுரி சமரி
* சூலி நீலி மாலவற் கிளங்கிளை
யையை செய்யவள் வெய்யவாட் டடக்கைப் எ0. பாய்கலைப்
பாவை பைந்தொடிப் பாவை
யாய்கலைப் பாவை † யருங்கலப் பாவை
தமர்தொழ வந்த குமரிக் கோலத்
தமரிளங் குமரியு மருளினள்
வரியுறு செய்கை வாய்ந்ததா லெனவே
உரைப் ‡ பாட்டுமடை.

---

கூரு. இரண்டுவேறுரு - தலை கடாவானவடிவு. அவுணன் - மகிடாசுரன்.

கூஅ. சூலி - சூலத்தையுடையாள். மாலவற்கிளங்கிளை - மாலின தங்கை.

எக. ஆய்கலைப் பாவை - கலைக்கியானப்பெண். அருங்கலப் பாவை - இரத்தினப்பாவை.

எஉ. தமர்தொழ வந்த குமரி - எயினர் தொழவந்த குமரி.

எரு. அமரிளங் குமரி - குமரிமாதேவி

(எச) வாயந்ததென்று கண்டார்கூற (எரு) அருளினளென்க.

சாலினி சொல்லி ஒபபிததுப் பந்துமுதலாயின கொண்டு சிலர் பின்வாரா நிற்பப் பறைமுதலியன நின்று துவைப்பப் ப ரிசெய்து

அப்பலியிட்ட அப்படி மத்தாள் தெய்வத்தைத்தொழுதேத்த, அத்தெய்வம் இவண்மேற்பொருந்தி அங் கிருந்த கண்ணகியை ப்புகழ, அதுகண்டு கண்ணகி நாணி மயக்கத்தான்மொழிந் தாளென்று தன்கணவன்புறத்து ஒடுங்கி நகைத்துநிற்பத் தமர்தொழவந்த குமரிக்கோலத்தமர்ந்த இளங்குமரியும் கொண்ட வரிக்கோலம் வாய்ந்ததென்று கண்டார்சொல்ல அருளினளெனக்கூட்டுக

அன்றியும், மதியின் (ப 1) வெண்கோடுமுதலாயின இப்பொழுது பிரதி விம்பமானது தனக்கேயாக்கி, ஆய்கலைப்பாவை......வரியுறுசெய்கைவாய்ந்ததா லெனத் தமர்தொழவந்த குமரியும் அருளினளென்றுரைப்பாருமுளர்.

- பண்டு அருளாக்குமரியும் அருளினளென்க.

உரைப்பாட்டுமடை - உரைச்செய்யுளை இடையிலே மடுத்தல்

(பி - ம்.) * 'குரி' † 'அருங்கலைப்பாவை' ‡ 'பாட்டுமடையாக்காக' [illegible] அ

சிலப்பதிகாரம்

வேறு.

நாக நாறு நரந்தை நிரந்தன
* ஆவு மாரமு மோங்கின வெங்கணுஞ்
சேவு மாவுஞ் செறிந்தன கண்ணுதல்

பாக மாளுடை யாள்பலி முன்றிலே
செம்பொன் வேங்கை சொரிந்தன சேயிதழ்
கொம்பர் நல்லில வங்கள் குவிந்தன
பொங்கர் வெண்பொரி சிந்தின புன்கிளந்
திங்கள் வாழ்சடை யாடிரு முன்றிலே
மரவம் பாதிரி † புன்னை மணங்கமழ்
குரவங் கோங்க மலர்ந்தன கொம்பர்மே
லரவ வண்டின மார்த்துட னியாழ்செயுந்
திருவ மாற்கிளை யாடிரு முன்றிலே

வேறு

[1] கொற்றவை கொண்ட வணிகொண்டு நின்றவிப்
பொற்றொடி மாதர் தவமென்னை கொல்லோ
பொற்றொடி மாதர் பிறந்த குடிப்பிறந்த
விற்றொழில் வேடர் ‡ குலனே குலனும்
ஐயை திருவி னணிகொண்டு நின்றவிப்
பையர வல்கு றவமென்னை கொல்லோ
பையர வல்குல் பிறந்த குடிப்பிறந்த
§ வெய்வி லெயினர் குலனே குலனும்

---

"நாகநாறு"—நாகம - சுரபுன்னை. (பா) நாறுநரந்தம - நாரத்தை. ஆ - ஆச்சா. ஆரம் - சந்தனம்; ஆத்தியுமாம் சே என்பது ஒருமரம்; உழிஞ் சிலுமாம்; அழிஞ்சிலுமாம்

"செம்பொன்"—செம்பொன்னை வேங்கை சொரிந்தன. குவிந்தன - குவித்தன.

"மரவம்"—மரவம் - கடம்பு; குங்கும மரமுமாம

"கொற்றவை"—கொற்றவை - ஐயை.

[1] இச்செய்யுள் முதலியமூன்றும் ஆ தொர்புகழ்தலென்று சில மூலப்பிரதிகளில் எழுதப்பட்டுள்ளது.

'(பி - ம்.) * 'பாவும்' † 'வேங்கை' ‡ 'குலமேகுலமும்' § 'வெய்யவெயினர்'

## கஉ.—வேட்டுவவரி.

௩௯௯

பாய்கலைப் பாவை யணிகொண்டு நின்றவிவ்
வாய்தொடி நல்லா டவமென்னை கொல்லோ
வாய்தொடி நல்லாள் பிறந்த குடிப்பிறந்த
வேய்வி லெயினர் குலனே குலனும்

### வேறு.

ஆனைத்தோல் போர்த்துப் புலியி னுரியுடுத்துக்
கானத் தெருமைக் கருந்தலைமே னின்றாயால்
வானோர் வணங்க மறைமேன் மறையாகி
ஞானக் கொழுந்தாய் நடுக்கின்றி யேநிற்பாய்
வரிவளைக்கை வாளேந்தி மாமயிடற் செற்றுக்
கரியதிரி கோட்டுக் † கலைமிசைமே னின்றாயா
லரியரன்பூ மேலோ ‡ னகமலர்மேன் மன்னும்
விரிகதிரஞ் சோதி விளக்காகி யேநிற்பாய்
சங்கமுஞ் சக்கரமுந் § தாமரைக் கையேந்திச
செங்க ணரிமான் சினவிடைமே னின்றாயாற்
கங்கை முடிக்கணிந்த || கண்ணுதலோன் பாகத்து
மங்கை யுருவாய் ¶ மறையேத்த வேநிற்பாய்

வே று.

ஆங்குக்,
கொன்றையுந் துளவமுங் குழுமத் தொடுத்த
துன்று மலர்ப்பிணைய றோண்மே லிட்டாங்
கசுரர் வாட வமரர்க் காடிய
குமரிக் கோலத்துக் கூத்துள் படுமே

"பாய்கலை"—(பா) ஏவில் - ஏவையுடையவில்.

"ஆனைத்தோல்"--நடுக்கின்றியே நிற்பாய், நீ இப்பொழுது யென்க.

இங்ஙனே நின்று

"வரிவளை"—செற்றென்றது, இப்பொழுது மிதித்து நிற்கின்ற நிலையை. பூமேலோன்—பிரமன். அகமலர் - இதயகமலம்.

"கொன்றை"—கூத்துள்படும் - கூத்தாடுமென்கின்றது.

---

[1] இக்கவிமுதலிய மூன்றும், முன்னிலைப்பரவலாய் 'மூன்றடுக்கி நான்கடியான் வந்தனவென்பர்; தொல். செய். சூ. கசகூ - ந.

(பி - ம்.) * 'பானைத்தோல்' † 'கிலமிசை ‡ 'நான்மறைக்கிழமேனித்தி' || 'கன்றுந்தறன்' கொன்றையுமரவமுந்' நின்றுயால்' § 'அகன்மலர்' ¶ 'மறையோர்தேறமே நிற்பாய்' கூ உ0



வே று.

ஆய்பொன் னரிச்சிலம்புஞ் சூடகமு மேகலையு மார்ப்ப

வார்ப்ப

மாயஞ்செய் வாளவுணர் வீழ நங்கை மரக்கான்மேல் வாளமலை யாடும்
போலு

மாயஞ்செய் வாளவுணர் வீழ நங்கை மரக்கான்மேல் வாளமலை
யாடுமாயிற் [1] காயா மலர்மேனி யேத்தி வானோர் கைபெய மலர்மாரி
காட்டும் போலும்

[1] உட்குடைச் சீறூ * ரொருமகனு னிரைகொள்ள வுற்ற காலை
வெட்சி மலர்புனைய வெள்வா ளுழத்தியும் வேண்டும் போலும்
வெட்சி மலர்புனைய வெள்வா ளுழத்தியும் வேண்டின் வேற்றூர்க்
கட்சியுட் காரி கடிய குராலிசைத்துக் காட்டும் போலும்

[3] கள்விலை யாட்டி மறுப்பப் பொறுமறவன் † கைவி லேந்திப்
புள்ளும் வழிப்படரப் புல்லார் நிரைகருதிப் போகும் போலும்
[4] புள்ளும் வழிப்படரப் புல்லார் நிரைகருதிப் ‡ போகுங் காலைக்
கொள்ளுங் கொடியெடுத்துக்கொற்றவையுங் § கொடுமரமுன்செல்லும்போலும்.

## வே று.

[5] இளமா வெயிற்றி யிவைகாணின் னையர்
தலைநாளை வேட்டத்துத் தந்தநல் லானிரைகள்
கொல்லன் றுடியன் கொளைபுணர் சீர்வல்ல
நல்லியாழ்ப் பாணர்த முன்றி னிறைந்தன

---

"ஆய்பொன்"—[1] மரக்கால் - அசுரர் தன்மேல் பாம்பும் தேளும் மாயத்தி
னாலே வரவிடுகையாற் காலிலே மரத்தைக்கட்டி வாளையெடுத்து நின்றாடுங்
கூத்து. வானோர்கை மலர்பெயமாரியைக் காட்டும்

"உட்குடை"—வேண்டும் - விரும்பும். காரி - கருங்குருவி.
நிமித்தம்.

கடியகுரல் -

"கள்வில்"—கொள்ளுங்கொடி - தான் தெரிந்துகொள்ளும் ஆளிக்கொடி. கொடுமரம் - வில். கொற்றவையும் கொடியெடுத்துச்செல்லுமென்க அன்றியும் எடுதலென்றதனை எடுப்பவென்றுதிரித்து இவள் வில்லையெடுப்பச் செல்லு மென்பாருமுளர்.

இத்தாழிசைகளிற் போலுமென்றது ஒப்பில்போலி.

"இளமா"—இளமாவெயிற்றி - மாமை நிறத்தையுடைய இளவெயிற்றி.

---

[1] எல்லாப்பிரதிகளிலும் முதலடி அறுசீராயும் மற்றையடி எண்சீராயும் உள்ளன.
[2] புறப்பொருள் வெண்பாமாலை, வெட்சிப்படலம், க.
[3] " " " உ. [4] சிலப். கக: உ௬௦
[5] இச்செய்யுள் கொடைக்குமேற்கோள்; தொல். புறத்திணை சூ; க - ந; முதலிய மூன்றும் தாழிசையோசையின்றி அடுக்கிவந்தனவென்பர்; தொல். - கஉ. இது செய். சூ. கசக - ந.
[6] சிலப்பதிகாரம், கூ:
(பி - ம்.) * 'ஒருமகளுளென' † 'கைவேலேத்திப்புள்ளுவழிப்' மாபின்' § 'கொடுமரமுஞ்' ‡ 'போரு
இஅ - க.

## கஉ.—வேட்டுவவரி.

ந.ஃ.ந

முருந்தே ரிளநகை காணாய்நின் னையர்
கரந்தை யலறக் கவர்ந்த வினநிரைகள்

கள்ளில்லை யாட்டிநல் வேய்தெரி கானவன்
[1] * புள்வாய்ப்புச் சொன்னகணி முன்றி னிறைந்தன கயமல
ருண்கண்ணாய் காணாய்நின் னைய
ரயலூ ரலற † வெறிந்த நிரைக
ணயனின் மொழியி னரைமுது தாடி
யெயின ரெயிற்றியர் முன்றி னிறைந்தன
துறைப்பாட்டுமடை.

## வேறு.

[2] சுடரொடு திரிதரு முனிவரு மமரரு
மிடர்கெட வருளுநி னிணையடி தொழுதே
மடல்வலி யெயினர்நி னடிதொடு கடனிது
மிடறுகு குருதிகொள் விறறரு விலையே
அணிமுடி யமரர்த மரசொடு பணிதரு
மணியுரு வினைநின மலரடி தொழுதேங்
கணநிரை ‡ பெறுவிற லெயினிடு கடனிது
நிணனுகு குருதிகொ § ணிகரடு விலையே

---

"முருந்தேர்"—வேயதெரி கானவன் - ஒற்றன.

"கயமலர்"—நயனின்மொழி - நயப்பாடில்லாதமொழி (பா)
நரைமுதிர் தாடியையுடைய எயினர்.
துறைப்பாட்டு - வெட்சித்துறை சொன்னபாட்டு.
"சுடரொடு"— [3] சுடரொடுதிரிதருமுனிவர் - ஆதித்தன்வெப்பம்

தணி தில் காரணமாக அவனுடனே கூடித் திரியுமுனிவர். நின் அடிதொடு கடனிது - ஒளுற்றகடனிது. விறறருவில் - நீகொடுத்த வெற்றிதந்த வில்.

"அணிமுடி"— அமரர், எழுவாய்.

[1] புறப்பொருள் வெண்பாமாலை, வெட்சி, கச.

[2] "சுடரொடு", "அணிமுடி", "துடியொடு"—இவை மூன்றடுக்கி முடுகிலாய் வந்த தாழிசைக் கொச்சகவொருபோகென்பர்; தொல். செய். சூ. கசக. ந.

[3] புறநானூறு சக - ஆம் செய்யுளாலும், அதன் உரையாலும் திருமுருகாற்றுப் படை, சுஎ - ஆம் அடியாலும் அதன் விசேட உரையாலுமறியலாகும்.

(பி - ம்.) * 'புள்வாய்ப்புட்' † 'எறித்தநல்லாக்கள்' ‡ 'பெறும்' § 'திகர்தடு'





துடியொடு சிறுபறை வயிரொடு துவைசெய
வெடிபட * வருபவ ரெயினர்க ளரையிரு
ளடுபுலி யணையவர் குமரிநி [1] னடிதொடு
படுகட னிதுவுகு பலிமுக மடையே

வேறு.

வம்பலர் பல்கி வழியும் † வளம்பட
வம்புடை வல்வி லெயின்கட னுண்குவாய்
சங்கரி யந்தரி நீலி சடாமுடிச
செங்க ணரவு ‡ பிறையுடன் சேர்த்துவாய்

துண்ணென் றுடியொடு துஞ்சூ ரெறிதரு
கண்ணி லெயின ரிடுகட னுண்குவாய்
விண்ணோ ரமுதுண்டுஞ் சாவ வொருவரு
முண்ணாத நஞ்சுண் டிருந்தருள் செய்குவாய்
‡ பொருள்கொண்டு § புண்செயி னல்லதை
மருளி லெயின ரிடுகட னுண்குவாய்

யார்க்கு

மருதி னடந்துநின் மாமன்செய் வஞ்ச
வுருளுஞ் சகட முதைத்தருள் செய்குவாய்

வே று.

|| மறைமுது முதல்வன் பின்னர் மேய
பொறையுயர் பொதியிற் பொருப்பன் பிறநாட்டுக்
கட்சியுங் கரந்தையும் பாழ்பட
வெட்சி சூடுக விறல்வெய் யோனே.

---

"துடியொடு"—படுகட னிதுவென்றது - துடிமுதலாகிய வாச்சியங்க ளுடனே செயயும் பூசையை. பலிமுக...... மடை - சோறு.

"வம்பலர்"—(பா) உண்குவை - உண்பாயாக.

"பொருள்கொண்டு"-மருதினடந்து-மருதிடைநடந்து.

செயகுவாய,வினி.

இத்தாழிசைகள் கொற்றவையைப் பரவுவார் வார்த்தை.

"மறைமுது"—[3] மறைமுது முதல்வன் - மாதேவன். இவன்பின்னர் - அகத்தியனாகிய கடவுள். பொருப்பன் - பாண்டியன்; இவன் வெயயோன்; விறல்வெயயோன் - வெற்றியை விரும்புதலையுடையோன். கட்சி - காடு கரந்தை - அவர் மீட்குந்தொழில்.

---

[1] பரி. அ: ௪0; கலி. ௬௭; மணி. ௧அ: ௧௭௧.
[2] "பொருள்கொண்டு புண்செயி னல்லதை யன்போ, டருள்புற மாறிய" கலி. ௬௫.
[3] இக்கருத்தை மறுப்பர் நச்சினார்க்கினியர்; மதுரை. ௪0 - ௪௨ - உரை.
(பி - ம்.) * 'வருடைவரெயினர்கணையமிலர்' † 'வளஞ்சுரப்ப' ‡ 'பிறையொடு' § 'தோய்செயின்' || 'புறங்கெழு சிறப்பின் வாய்வாட் டென்னவன், புறங்காத் தோம்பு கழுங்கொடி பிறர்நாட்டு'

## ௧௨.—வேட்டுவவரி. ௩௨௫

க. கடுங்கதிர் திருகலின்—(இ - ள்) அங்ஙனமடைந்தவர்

வெங்கதிர்
முறுகுதலாலே,
தண்கதிருமுண்டாதலின்,
வெங்கதிரென்பதுதோன்றக்'கடுங்கதி'ரென்றார்.
க - ரு.
நடுங்கஞரெய்தி.............................இருந்தனர்

(இ - ள்.) நறிய பலவகைக்கூந்தலையுடையாள், கடுங்கதிர் அங்ஙனமுறுகுதலின் வெம்மைவிளக்கும் பாலைத்தன்மையையுடைய நெறியைச்செல்லுதலால் நடுங்குதற்குக்காரணமான அஞரெய்தி மெய்வருத்தத்தோடே

அடிகள்
கொப்புளங்கோடலின் வல்லாநடையோடும் பலகாலுயிர்த்தலின்,
மேற்செல்லாது
ராய் நோயதணிய அவ்விடத்துளதாகிய முற்கூறிய ஐயை
கோட்டத்துப்

பலரும்புகுந்தறியாததோர் பக்கத்தே புக்கிருந்தார்களாகவென்க.

ரு. உப்பால்—(இ - ள்.) மேலே,

கூ - எ. வழங்குவிற்றடக்கை.................... ..சாலினி

(இ - ள்.) அம்பைவழங்கும் வில்லைக் கையிலேயுடைய மறவர்குடியிற் பிறந்த உரிமையையுடைய சாலினியானவள்,

பழங்கடன் - முன்புநேர்ந்தகடன். முழங்குவாய் - கொக்கரிப்பையுடைய வாய். சாலினி - தேவராட்டி.

அ - கக. தெய்வமுற்று...

..................அடிபெயர்த்தாடி

(இ - ள்.) அச்சாலினி, தனதூர்நடுவாகிய மன்றின்கண்ணே தான் தெய்வத்தன்மையுற்று மெயம்மயிர்சிலிர்த்து மூரிநிமிர்த்த கைகளை ஒற்றையும் இரட்டையுமாக்கி அவிநயத்தோடேகூட்டித் தாளத்திற்கு ஒப்ப அடிபெயர்த்துக் கானவர்வியப்ப ஆடியென்க.

கூட்டுண்ணுமெயினரூர்; வேலியையுடைய ஊர்.

கஉ - ரு. கல்லென் பேரூர்... ........மன்றுபாழ் பட்டன

அங்ஙனம் ஆடியவள் கூறுவாள் :—

(இ - ள்.) முன்புசொல்லிய நுங்கடன்கொடாமையின், வலியவில்லையுடைய எயினர்மன்றுகள் இன்று பாழ்பட்டன; பகைவருடைய ஊர்களில் திரண்டநிரைகள் மிக்கன.

கல் - அநுகரணம். சிறத்தல் மிகுதி. பன்மைமயக்கமென்க.

பட்டது பாடமாயின், ஒருமை

கச - ௬. மறக்குடித் தாயத்து....................எயினரும்

(இ - ள்.) அங்ஙனம் அவட்குக் கடன்கொடாமையின், இம்மறக்குடியில் தாயம்பற்றிவருகின்ற எயினரும் தமக்கு முறைமையாகிவருகின்ற ஆறெறி சூறை ஆகோள் முதலியவற்றால்விளையும் வளங்குன்றி அறக்குடியைப்போலச் சினங்குறைந்து செருக்கு அடங்கிவிட்டார்கள்;

இது முன்னிலைப்புறமொழி.



கசு - எ. கலையமர் செல்வி.........கொடுப்போ ளல்லள்

(இ - ள்) கலையாகிய ஊர்தியைப்பொருந்திய செல்வி தான்கொடுத்த வென்றிக்கு விலையாகிய உயிர்ப்பலியை உண்ணக்கொடுப்பினல்லது நுஞ் சிலைக்குப்பொருந்திய வென்றியைக் கொடுப்பாளொருத்தியல்லள்;

கஅ - கூ. மட்டூண் வாழ்க்கை ........தரு மெனவாங்கு

(இ - ள்.) களவுகண்டுண்ணும் ஊணையுடையமாக்கள், நுஞ்சுற்றத்தி னுள்ளார் மதுவுண்டுசெருக்கும் இவ்வாழ்க்கையை நீர் விரும்புவீராயின், செல் விக்குநேர்ந்த கடனைக் கடிதிற் கொடுமின்களென்று சாலினி சொல்லவென்க.

தாருமென்றது தருமென விகாரமாகிக் கொடுமென்பதாயிற்று.

ஆங்கு, அசை

உ0 - உக. இட்டுத்

தலை.........................குமரியை

(இ - ள்.) தாஞ்சுட்டிய பகைஞர்தலையைத் தாமேயறுத்திட்டு எண்ணும தல்லது பகைஞர் சுட்டியெண்ணுதல அவரிடத்து முடிவுபோகாமைக்குக் காரண மாகிய எயினர் தொல்குடிக் குமரியையென்க.

இனித் தலைகள் அரிந்து வைக்கவைக்கப் பிறர்

எண்ணப்படுமதல்லது ஈமத திற்சுடப்பட்டு

அவமபோகாக்குடியென றுமாம். இன னும் அரசன்சுட்டியமாற் றரசா தலையைப் பிறிடத்துப்போகவிடாவென் றுமாம். சுட்டு - குறிப்புமாம்.

௨௨ - ௬. சிறுவெள் ளரவின் குருளை......என்னச சாத்தி

(இ - ள்.) அங்ஙனம் கேட்டவெயினர், தமது குடிப்பிறந்த குமரியுடைய குறிதாக நெறித்தகூந்தலைச் சடையாகக்கட்டி அம்முடியிலே சிறிய வெள்ளிய அரவினது குருளையாகப் பொன்ஞாணினை வளையக்கிடத்திக் காவற்காடுசூழ்ந்த தோட்டப்பயினை ரயழித்த எனத்தினது கோட்டைப்பறித்து அதனை இளைய வெள்ளிய பிறையென்னும்படிசாத்தி,

வெள்ளரவென்றார், சாதிபற்றி குருளையென்றார், அச்சடையிற்பிறந்தமை தோன்ற. சடைமுடி பாம்பாற்கட்டுதலான், நாண் பாம்பாயிற்றென் றுமாம். இளை - கட்டுவேலியுமாம்.

௨எ - ௩௦. மறங்கொள் வயப்புலி.........மேகலை யுடீஇ

(இ-ள்.) கடுங்கணமையையுடைய வலியபுலியை வாயைக்கிழித்து உதிர்த்த பல்லொழுங்கை வெள்ளிய நிரைத்தாலியாகக் கட்டி, அதனது வரியும்புள்ளியும் தம்முள் மயங்குதலையுடைய உரிவையை மேலே மேகலையாகவுடுத்தி,

வான் - பெருமை. புலி ஆக்கொள்ளுமுயற்சியான் வாயங்காந்தவருதலின், 'வாய்பிளந்' தென்றார்.

௩௦ - ௩௧.

பரிவொடு...............................கொடுத்து

(இ-ள்.)வயிரவில்லை வருதத்தோடுவளைத்து அவள் கையகத்துக்கொடுத்து,

பரிவு - அனபுமாட்

௧௨.—வேட்டுவவரி. ௩௨௹

௩௨. திரிதரு கோட்டுக் கலைமே லேற்றி—(இ - ள்.) கோட்டையுடைய கலையின்மீதேயிருத்தி,

முறுக்குண்ட

ஊரிற்றிரிதருமென் றுமாம்.

௩௩ - ரு. பாவையுங் கிளியும்.................. தந்தனர்

பரசி

(இ - ள்.) பாவைமுதலியவற்றைக்கொண்டு சேவித்துத்

துதித்தன ராய்,

பாவை - மதனப்பாவைமுதலியன. தூவி - சூட்டு. நீனிறம் -

நீலநிறம்.

௩௬ - ௯. வண்ணமுஞ் சுண்ணமும்......ஏந்தினர்

பின்வர

(இ - ள்.) வண்ணமுதல் விரையீறுயவற்றை

ஏவல்செயயுமெயிற்றியர்

ஏந்தின ராயப் பின்செல்ல,

வண்ணம் - தோள் முலைகளின் எழுதும்வண்ணம். புழுக்கல் -

அவரை

துவரைமுதலியன. நோலை - எட்கசி. விழுக்குடைமடை -

நிணச்சோறு.

௪௦ - ௪௨. ஆறெறி பறையும்......அணங்குமுன் னிறீஇ

(இ - ள்.) வழிபறிக்குங்காற் கொட்டும் பறையும்

சூறைகொள்ளுங்கால் ஊதுஞ்சின்னமும் துததரிக்கொம்பும்

குழிக்குழலும் எறிமணியுமாகியவிவை தம்மிற்கூடியொலிபப

இவ்வினை தத்தையும் அணங்கின் முன்னே நிறுத்தவென்க.

நிறீஇ - நிறுதத.

சஈ - ச. விலைப்பலி யுண் ணும்.........கைதொழு தேத்தி

(இ - ள்.) தான்கொடுதத வெனறிக்கு விலையாகிய உயிர்ப்பலியையுண்ணும் விரிந்த பலிபீடத்தை முருதுறத்தொழுது பின்னர்ச் செலவையுடைய கலையா கிய ஊர்தியையுடையாளைக் கையாற்றொழுதேத்தியென்க.

மலர்தல் - விரிதல்.

சடு - ரு(). இணைமலர்ச் சீறடி... ....தெய்வமுற் றுரைப்ப

(இ - ள்) இணையான மலர்போலும் சிறிய அடிகணொந்தனளாய வருந்தி அவ்வருத்தந்தீரக் கணவனுடனேயிருந்த கண்ணகியைநோக்கி, இங்கிருக்கின ற விவள் கொங்கநாட்டினையாளும் செல்வி; குடநாட்டினையாளுஞ்செல்வி; தென் றமிழ்நாட்டினையாளுமபாவை; இங்ஙன மாதற்கு முற்பவத்திற்செயத தவத்தின் கண்முளை தத கொழுந்துபோல்வாள்; இவ்வுலகிறகு முழுமாணிக்கம்போன் று உயர்ச்சிபெற்ற பெண்ணுருக்கொண் டதோர் திருமணியெனச் சாலினி தன்தெய் வத்தன்மையான் இங்ஙனம் இவளை யிருத்துரைப்பவென்க.

கண்ணகி அன்னளாதலை, [1] 'கொங்கிளங் கோசர்' என்றதுமுதலியவற்று னறிக.

இக - ரு. பேதுறவு மொழிந்தனள்......அரும்பின ணிற்ப

(இ - ள்.) இங்ஙனம் சாலினிபுகழ்ந்துகூறிய அதனைப் பொருதகண்ணகி இம்மூதறிவாட்டி தெய்வமயக்கத்தாற் கூறினளெனக்கருதி நாணினால் தன்

---

[1] சிலப். கO - ஆம் பக்கத்திற்காண்க.

கணவனது புறத்தே மறைந்து அவளறிவின்மையையிகழ்ந்த புதிய யோடு நிற்பவென்க.

சிறுநகை

௩௪ - ௫. மதியின்வெண் டோடு ..........இமையா நாட்ட

(இ - ள்.) மதியாகிய வெள்ளிய இதழைச்சூடும் சென்னியையும், [redacted] திறந்துவிழித்த இமையாதநாட்டத்தினையுமுடைய.

௩௬ - ௭. பவள வாய்ச்சி........................கறுத்த கண்டி

(இ - ள்.) பவளம்போற்சிவந்த வாயினையும் வெள்ளிய நகையினையும் கண்டத்தினையுமுடையாள்,

கரிய

௩௭ - ௮. வெஞ்சினத்து.................மலை வளைத்தோள்

(இ - ள்.) கடிய சினத்தையுடைய வாசுகியை நாணைப்பூட்டி யை வில்லாகவளைத்தோள்,

மேருவரை

இவள் கிரியாசத்தியானமையிற் கூறினர்.

௩௯. துளையெயிற் றுரகக் கச்சுடை முலைச்சி—(இ - ள்.) நஞ்சு ஊறும் துளையெயிற்றையுடைய பாப்புக்கச்சாற்பிணித்த முலையையுடையாள்,

௪௦. வளையுடைக் கையிற் சூல மேந்தி—(இ - ள்.) வளையணிந்த கையாலே சூலத்தையேந்தினள்,

௪௧ - ௨. கரியி னுரிவை............ .......மேகலை யாட்டி

(இ - ள்.) சிங்கத்தையுரித்து அதன்றோலை மேகலையாகவுடுத்துக் கரியை யுரித்து அதன்றோலை [1] ஏகாசமாகவிட்டோள்,

அணங்காகிய அரி கரியினுரிவையை உடுத்துப் போர்த்தோளென்க. அணங்கு - வருத்தமுமாம்.

௬௩ - ௪. சிலம்புங் கழலும்...................கொற்றவை

(இ - ள்.) இடப்புறத்துச் சிலம்பும் வலப்புறத்து வீரக்கழலுமொலிக்கும் சிறிய அடிகளையுடைய மேலானவெற்றியையுடைய வாட்டொழில் வாய்ப்புப் பெற்ற கொற்றவை,

௬௫ - ௬. இரண்டுவே றுருவின்.....................தையல்

(இ - ள்.) உடலுக்குத்தலைவேறான வடிவினையும் திரண்டதோளினையு முடைய [2] விக்கிரமாசுரன் றலையைத்துணித்து அதன்மீதே நின்ற தையல்,

௬௬ - அ. பலர்தொழும்.........................இளங்கிளை

(இ - ள்.) தேவரும் முனிவரும்வணங்கப்பெறும் அலங்கரித்தலில்லா தோள், அழியாதோள், கௌரநிறத்தையுடையோள், சமரைவல்லாள், சூலத்தை யுடையோள், நீலநிறத்தையுடையோள், மாலானவனுக்குத் தங்கையாயுள்ளாள்,

கிளை - கிளியையொப்பாளெனவுமாம்.

---

[1] ஏகாசம - உத்தரீயம்.
[2] 'மேதிச்சென்னி விக்கிரமன்' திருவாதவூரர், திருவம்பல, ௧௬.

## ௧௨.—வேட்டுவவரி.  ௩௨௭

௬௯ - ௭௧. ஐயை செய்யவள்......

....அருங்கலப் பாவை

(இ - ள்.) வெய்ய மழுவாளைக் கையிலேயுடைய சயமகள், திருமகள், பாயும் கலையையுடையபாவை, ஆயும் கலையையுடையபாவை, அழகிய தொடியையும் கலங்களையுமுடைய பாவைபோல்வாள்,

௭௨ - ௪. தமர்தொழ வந்த... ......வாய்ந்ததா லெனவே

(இ - ள்.) மாலும அயனும் தொழத்தோன்றிய
கன்னிக்கோலத்தினையுடை
யாளாய்ப் பொருந்திய அக்குமரியும்
தென்றருளினளென்க.
இச்சாலினிகொண்டகோலம்வாயப்புடைத்
சாலினி உறறு நிறுத்து ஓச்சி வியப்ப ஆடி, பட்டன; சிறந்தன;
அடங்கினர்; ஆதலிற் கடனுண்ணினல்லது கொடுப்போளல்லள்;
கடனுருமென, குமரியைக்கட்டிச் சுற்றிச் சாத்திப் பூட்டி உடீஇக்
கொடுத்து ஏறறிப் பரசிப் பின்
வரத் துவைப்ப நிறுத்த, தானேத்திப் பின்னர்க் கூந்தலே, செல்வி, ஆட்டி,
பாவை, கொழுந்து, மணியென த தெயவமுறறுரைப்ப, கணணை ஒடுங்கி நிற்ப,
சென்னியையும் நாட்டத்தையுமுடைய வாயச்சி, நகைச்சி, கண்டி, வளைத்
தோள், முலைச்சி, ஏந்தி, உடுத்துப் போர்த்தோள், கொற்றவை,
தையலாகிய குமரியும் அருளினளென வினைமுடிக்க
உரைப்பாட்டுமடை - உரைப்பாட்டை நடுவேமடுத்தல்.
நாக நாறு.......................................பலி
முன்றிலே
(இ - ள்.) கண்ணுதலுடைய பாகத்தை
ஆளுதலுடையாளுடைய பலி கொள்ளுமுன்றிலில் எவ்விடத்தும்
மணநாறும சுரபுன்னையும் நரநதையும் நிரல்படப் பூததன; ஆச்சாவும்
சந்தமும் உயர்ந்துபூத்தன: சேமரமும் மாமரமும் செறிந்து
பூத்தனவென்க.
செம்பொன் வேங்கை .. ........ .........திரு
முன்றிலே
(இ - ள்.) பிறை நீங்காதுவாழும்
சடைமுடியினையுடையாளுடைய திருமுன்றிலில், வேங்கைகள்
செம்பொன்னைப்பூத்துச் சொரிந்தன; நல்லிலவங்களின் கொம்புகள்

செவ்விதழைப்பூத்துச் சொரிந்துகுவித்தன; புன்கு பொங்க ராகிய வெள்ளியபொரிகளைச் சிந்தினவென க.

குவித்தன, விகாரம். பொங்கர் - கொம்புமாம்; பொதுளுமாம்.

மரவம் பாதிரி............ ..................திரு

முன்றிலே

(இ - ள்.) திருமாறகு இளையாளது திருமுன்றிலில், மணங்கமழும் வெண் கடம்பும் பாதிரியும் புன்னையும் குராவும் கோங்குமாகியவிவை மலர்ந்தன ; இக்கொம்பரின் மீதே வண்டினம் தேனினத்தோடே

பாடுமென்க.

யாழினதரவம்போலப்

அ, இடைச்சொல். இவைமூன்றும் முன்றிற்சிறப்பு.

## ௨௪ ஞு சிலப்பதிகாரம்

கொற்றவை கொண்ட............ ........குலனே குலனும்.

(இ - ள்.) இறைவி அணியாகக்கொண்டனவற்றைக் கொண்டுநின்ற இச் சாலினி முன்செய்த தவம் எத்தவங்கொல்லோ, இவள்பிறந்த குடியின்கட் பிறந்த விற்றொழிலைவல்ல மறவர்குலமே குலமென்பதூஉமென்க.

ஐயை திருவின்.............................குலனே குலனும்

(இ - ள்.) இந்த

வரவின்படம்போலும்

ஐயையுடைய அழகிய கோலத்தைக் கொண்டுநின்ற இவ் அல்குலையுடையாள் முன்செய்த தவம் எத்தவங்கொல்

லோ, இவள்பிறந்த குடியின்கட்பிறந்த அம்பைச்செலுத்தும் எயினர் குலமே குலமென்பதூஉமென்க.

வில்லையுடைய

திரு - அழகு.

பாய்கலைப் பாவை.........................குலனே குலனும்

(இ - ள்.) கலைப்பாவையின் கோலத்தைக் கொண்டுநின்ற அழகியதொடி யையுடைய இச்சாலினி முன்செய்த தவம் ஏதவங்கொல்லோ, இவள்பிறந்த குடியின்கட்பிறந்த மூங்கில்வில்லையுடைய எயினர்குலனே குலமென்பதூஉ மென்க.

இவைமூன் றும், [1] "வாடா வள்ளி வயவ ரேத்திய" என்பதனுன், வள்ளிக் கூத்து; என்னை ? [2] "மண்டம ரட்ட மறவர் குழாத்திடைக், கண்ட முருகனுங் கண்களித்தான் — பண்டே, குறமகள் வள்ளிதன் கோலங்கொண் டாடப், பிறமக ணேற்றாள் பெரிது" எனவரும்.

ஆனைத்தோல்

போர்த்து..............நடுக்கின் றியேநிற்பாய்

(இ - ள்.) தேவர்கள்வணங்க நான்மறைக்கும் மறைப்பொருளாய்த் நன்னை வழிபடுவோர் ஞானத்தின்கண் எழுங்கொழுந்தாயச் சலிப்பின்றிநிற்கின் றநீ புலித்தோலையுடுத்தி யானைத்தோலைபோர்த்துக் கானத்தின்மீதே எருமையின பசுந்தலைமேல் நின்றுய; இஃது எனனமாயந்தானென்க.

கானவெருமையெனினுமமையும் எருமை, சாதிப்பெயர்

வரிவளைக்கை வாளேந்தி.........விளக்காகி யேநிற்பாய்

(இ - ள்.) அரியும் அரனும் அயனுமாகிய இவர்களிதயகமலத்தே நிலைபெற நின்றுவிளங்கும் விரிந்த கதிர்களையுடைய விளக்காகிநிற்கின றநீ

வளையணிந்த
கையாலே வாளையேந்திப் பெரிய மயிடாசுரனைச்செற்றுக் கரிய முறுக்குண்ட கொம்பையுடைய கலையின்மீதே நிலைபெற்றாய்; ஆகையால் இஃது என்னமாயமோவென்க.

சங்கமுஞ் சக்கரமும்.................மறையேத்த வேநிற்பாய்

(இ - ள்.) கங்கையைச் சடைமுடியின்மீதணிந்த இறைவனது இடப்பக்கத்திற்குரிய இறைவிகொண்டவுருவாய் மறைகள்போற்ற அவற்றிற்குந்தோன் றாமல் நிற்கின்றநீ சங்குசக்கரங்களைக் கையிலேந்திச் சிவந்தகண்ணையுடைய

[1] தொல்காப்பியம், புறத்திணையியல், சூ. ௫.

[2] " " " சூ. மேற்.

## ௧௨.—வேட்டுவவரி.

௩௨௯

அரிமானாகிய சினவிடையின்மீதேநின்றாய் ; ஆகையால், இஃது என்னமாயமோ வென்க.

இவைமூன்றும் முன்னிலைப்பரவல்.

ஆங்கு—(இ - ள்.) அவ்விடத்து,

கொன்றையுந் துளவமும்................கூத்துள் படுமே

(இ - ள்.) கொன்றைமலரையும் துளபத்தையும் கலந்துதொடுத்த மலர் செறிந்த மாலையை உத்தரீயமாகவிட்டு அசுரர் போரின்கண்ணேவாடும்படி அமரர்போரின்கண் ஆடிய கூத்து ஆடுதற்கு ஈண்டு உள்படுமென்க.

இது வென்றிக்கூத்து.

ஆய்பொன்னரிச்சிலம்பும்...... ...மலர்மாரிகாட்டும்போலும்

(இ - ள்.) அழகிய பொனனறசெயத அரிபொருந்தியசிலம்பும் சூடகமும் மேகலேயும் ஆர்ப்ப ஆர்ப்ப வஞ்சித்துப்பொரும் போரைவல்ல வாளவுணர் போர் சாயும்படி நங்கை மரக்கால்மேனின்று வாட்கூத்தை ஆடாநிற்கும்; அங்ஙன மாடுமிடத்து வானோர் இவளுடைய காயாமலர்போலுமேனியை ஏத்துகையாற் பொழியும் மலர்மழையை அக்கூத்துக் காட்டாதிராதெனக.

இது கூத்துள்படுதல்.

உட்குடைச் சீறூர்......

................காட்டும் போலும்

(இ - ள்.) மாறுநர்க்கு உட்குதலேக்கொடுக்கும் சீறூரிடத்துத் தனக்கிணை யில்லாதவீரன் நிரைகொள்ளத் தலேப்பட்டவிடத்து அவற்குப் போர்ப்பூவாகிய வெட்சி மலரைச்சூட்டுதற்கு வெள்ளிய வாளுழத்தியும் வேண்டும்; அங்ஙனம் அவளும் உடன் செல்லக்கருதியவழிப் பகைவரூர்சூழ்ந்த காட்டிடத்துள்ள காரி யென்னும்புள் தனது கடியகுரலாலே நிற்குமன்றேவென்க.

அவர்க்குவருங்கேட்டினை முன்னறிவித்து

வாளுழத்தி - கொற்றவை. இது கொற்றவைநிலே. அஃதாவது [1]

"ஆளி மணிக்கொடிப் பைங்கிளிப் பாயகலேக், கூளி மலிபடைக் கொற்றவை - மீளி, யரண்முருங்க வாகோள் கருதி னடையார், முரண்முருங்கத் தான்முந் துறும்" எனவரும். இது வெட்சி.

கள்விலே யாட்டி....................செல்லும் போலும்

(இ - ள்.) கள்விற்குமவள் இவன பழங்கடன்கொடாமையிற் பின் கட் கொடாது மறுப்ப, அதுபொறாதவீரன் அந்நிலேயே வில்லேக்கையிலேந்திப் புண்ணிமித்தமும் தன்கருத்திற்கேற்பச்சேறலிற் பகைவர்நிரைகொள்ளுதலேக்கருதிப் போகுதலேச்செய்யும்; அங்ஙனம் போங்கால் தான்கைக்கொண்ட ஆளிக்கொடியையுயர்த்துக்

கொற்றவையும் வில்லின்முன்னே செல்லுமன்றேவென்க.

என்பது, [1] "அறாஅ நிலைச்சாடி யாடுறு தேறன், மறாஅன் மழைத்தடங் கண்ணி - பொறாஅன், கடுங்கண் மறவன் கழல்புனைந்தான் காலை, நெடுங்கடைய நேரார் நிரை" எனவரும். இது தன்னுறுதொழில். இதுவும் கொற்றவை

[1] புறப்பொருள் வெண்பாமாலை, வெட்சிப்படலம், ௨0.
[2] " " " ௨.





நிலைப்பாற்படும்; என்னை? [1] "மறங்கடைக் கூட்டிய துடிநிலை சிறந்த, கொற்றவை நிலையு மத்திணைப் புறனே" என்பதனானென்க. இது வெட்சிப்புறநடை.

இளமாவெயிற்றி..........................முன்றினிறைந்தன

மார்

(இ - ள்.) ஏமத்தையுடைய இளையவேட்டுவமகளே! முன்னாளில் நின்னையன் கவர்ந்துகொணர்ந்த நல்லஆனிரைகள், [2]வேல்வடிக்குங்கொல்லனும் துடி கொட்டும்புலையனும் பாடவும் புணர்க்கவும் அடைக்கவும்வல்ல யாழ்ப்பாணரும் என்னுமிவரது முன்றிலின்கணிறைந்தன; நீ இவற்றைக் காண்பாயாகவென்க.

முருந்தேரிளநகை.................கணிமுன்றினிறைந்தன

(இ - ள்.) முருந்துபோலும் முற்றாதநகையையுடையாய்! நின் ஐயன்மார் முன்னாட் கரந்தையாரலறும்படி கைக்கொண்டுவந்த இனநிரைகள், கள்விற்குமவளும் நல்ல வேய்த்தொழிலை ஆராயுமவனும் புண்ணிமித்தங்கூறுமவனும் என்று சொல்லப்பட்ட இவர்கள்

முன்றிலின்கணிறைந்தன; நீஇவற்றைக் காணுயென்க.

கயமலருண் கண்ணாய்..................முன்றி னிறைந்தன

(இ - ள்.) பெரிய மலர்போலும் கண்ணையுடையாய்! நின் ஐயன்மார் அயலவரூர் அலறும்படி நல்நாளிற் கைக்கொண்டுபோந்த நல்ல ஆனிரைகள்,

நயமில்லாதமொழியையும் நரைத்து நீண்டதாடியையுமுடைய எயினரும் அங்ஙனமூத்த எயிற்றியருமாகிய இவர்கள் முன்றிலின்கண் நிறைந்தன ; இவற்றைக் காணுயென்க.

இவைமூன்றும் * கொடையென்னுந்துறை. கண்டார்கூற்று.

துறைப்பாட்டுமடை - துறைப்பாட்டுக்களை நடுவேமடுத்தல்.

சுடரொடு திருதரும்..............................விலையே

(இ - ள்.) கதிரவனுடையவெம்மை உயிர்களை வருத்தாமல் அதனைத்தாங்கி

அவனுடனே சுழன்றுதிரிதருதலைச்செய்யும் தெய்வவிருடிகளும் தேவர்களும் ஆகிய இவர்கள் இடர்கெடும்படி அருள்செய்யும் நினதடியிணையைத் தொழுதேம்; கொலையையும் வலியையுமுடைய எயினர்பெறும் வெற்றிக்கு விலையாக நின்னடியைத்தொட்டுச் சூளுற்ற கடனாகிய மிடற்றினின்றுமிழும் குருதியாகியவிதனைக் கொள்ளுவாயாகவென்க.

அணிமுடி

யமரர்தம்..............................அடுவிலையே

(இ - ள்.) அழகிய முடியையுடைய அமரர் தம்மரசனோடுவந்து பணிதலைச்செய்யும் நீலமணிபோலும் உருவினையுடையாய்! நின் மலரடியைத்தொழுதேம்; நிரைத்திரளைப்பெறும் விறலையுடைய எயினர்கள் பகையையடுதற்குக் காரணமான விலையாக இடுங்கடனாகிய நிணத்தோடுகலந்து உகாநின்ற பலியாகிய இதனைக் கொள்ளுவாயாகவென்க.

குருதிப்

துடியொடு சிறுபறை......................பலிமுக மடையே

(இ-ள்.) துடியுடனே சிறுபறையும் கொம்பும் வெடித்தலுண்டாகமுழங்க அரையிருளில் எயினர் இருப்பிடத்தினின் றுவருகின்றவர் கொல்லும்புலியன்ன

[1] தொல்காப்பியம், புறத்திணையியல், சூ. ச.
[2] "வேல்வடித்துக்கொடுத்தல் கொல்லற்குக்கடனே" புறநா. கசஉ.
[3] கொடையென்னுந்துறையாவது:—தாம் கொண்டநிரையை இரவலர்க்கு வரையாதுகொடுத்து மனமகிழ்தல்.

## கஉ.—வேட்டுவவரி.

ககக

யவர் முன்னுளில் நின்னடியைத்தொட்டுச் சூளுற்ற கடனுகிய றுஞ்சொரிகின்ற குருதியாகியபலியைக் கொள்ளுவாயாகவென்க.

மிடற்றினின்

இவைமூன்றும் அவிப்பலி ; துருகிப்பலியென்பாருமுளர்; என்னை ? "நச்
சிலவேற் காளைக்கு நாளையே கொற்றவை, கைச்சிலையு நல்கும்யாங் காணேங்
கொன்—மிச்சில்கூர், வாளின்வாயத் தீண்டாத வார்குருதி மெயசாய்ப்பத்,
தாளின்வாய வீழ்த்தான் றலை" என வருமாதலின்.

வம்பலர் பல்கி.......... ..........பிறையுடன் சேர்த்துவாய்

(இ - ள்) சங்கரி, அந்தரி, நீலி. சடையாகிய முடிமீதே பாம்பைப் பிறையோடேமுடித்தோய்! வழிப்போவார்மிக்கு அவரை நலிந்துகொள்ளும் பொருளாகியவளம் வழிதோறுமுண்டாவதாக; அதற்கு

விலையாக இப்பலிக்கடனை உண்பாயாவென்க.

துண்ணென் றுடியொடு.........

...இருந்தருள் செய்குவாய்

(இ - ள்.) தேவர்கள் அமுதத்தையுண்டும் சாவ ஒருவருமுண்ணாத நஞ்சை யுண்டும் சாவாதிருந்தருள்கின்ற நீ கேட்டார் துட்கென்றிடத் துடிகொட்டு

தலோடே பகைவர் தஞ்சுதலுற்றபொழுதில் ஊர்க்கொலைசெயயும் கண்ணோட்ட மில்லாதமறவர் நினக்கிடும் கடனாகிய இதனை உண்பாயாகவென்க.

பொருள்கொண்டு.........................

.....செய்குவாய்

(இ - ள்.) நின்மாமன்செயத வஞ்சமாகிய மருதின்மீதேநடந்து அதனைச் சாயத்து உருளுதலையுடைய சகடத்தையும்

உதைத்தலைச்செயயுநீ வழிப்போவார்பொருளைக்கொண்டு அவர்க்குப் புண்ணைக்கொடுப்பினல்லது அவர்மாட்டு அருளுதல் சிறிதுமில்லாத எயினரிடும் கடனாகிய இதனை உண்பாயாகவென்க.

இவைமூன்றும் பலிக்கோள்.

மறைமுது முதல்வன்..............

..விறல்வெய் யோனே.

(இ - ள்.) முதியமறையையுண்டாக்கிய பிரமன்பின்னேனாகிய குறுமுனி பொருந்திய சந்தனம் அகில்முதலிய மரங்களாற சுமைமிக்குயர்ந்த பொதியிற் பொருப்பனாகிய

வெற்றியைவிரும்பும்பாண்டியன் பகைவருடைய முனையிடமும் அவர்மீட்குந்தொழிலும் பாழ்படும்படி வெட்சியைச் சூடுவானாக வென்க.

[1]'துறை'என முற்கூறியவதனால், கொற்றவைக்குப் பரவுக்கடம்பூண்டலும் கொள்ளப்படும்; என்னை? [2] "வந்த நிரையி னிருப்பு மணியுட, னெந்தலை நின்றலை யாந்தருது—முந்துநீ, மற்றவை பெற்று வயவேந்தன் கோலோங்கக், கொற்றவை கொற்றங் கொடு."

இது, கூத்தாற்பெற்றபெயர்.
இது, பஃறாழிசைக் கொச்சகக்கலிப்பா.

### கஉ.—வேட்டுவவரி முற்றிற்று.

[1] இதனை ௧௧௦-ஆம் பக்கத்திற்காண்க.
[2]. பெரும்பொருள் விளக்கம்; இது புறத்திரட்டிற்கண்டது.

## பதின்மூன்றாவது

# புறஞ்சேரியிறுத்தகாதை.



பெண்ணணி கோலம் பெயர்ந்தயிற் பாடு
புண்ணிய முதல்வி திருந்தடி பொருந்திக்
கடுங்கதிர் வேனிலிக் காரிகை பொறாஅள்
படிந்தில சீறடி பரல்வெங் கானத்துக்
கோள்வ லுளியமுங் * கொடும்புற் றகழா
[1] வாள்வரி வேங்கையு மான்கண மறலா
வரவுஞ் சூரு மிரைதேர் முதலையு
முருமுஞ் சார்ந்தவர்க் குறுகண் செய்யா
செங்கோற் † றென்னவர் காக்கு நாடென
வெங்கணும் போகிய விசையோ பெரிதே
பகலொளி தன்னினும் பல்லுயி ரோம்பு

நிலவொளி ‡ விளக்கி னீளிடை மருங்கி
னிரவிடைக் கழிதற் கேத மில்லெனக்
குரவரு நேர்ந்த § கொள்கையி னமர்ந்து
கொடுங்கோல் வேந்தன் குடிகள் போலப்
படுங்கதி ரமையம் பார்த்திருந் தோர்க்குப்
பன்மீன் றானையொடு பாற்கதிர் பரப்பித்
தென்னவன் குலமுதற் செல்வன் றோன்றித்
தாரகைக் கோவையுஞ் சந்தின் குழம்புஞ்

---

ரு. உளியம் - கரடி.  க௨. நீளிடை - காடு.

க௪. குரவர் - கவுந்தியடிகள்.

க௬. படுங்கதிரமையம் பார்த்திருந்தாராக.

க௯. தாரகைக்கோவை - தாரகைபோலுங்கோவை; என்றது ஏகாவலி வடம்.

---

[1] "உருமு முரறு தரவுத் தப்பா, காட்டு மாவு முறுகண் செய்யா" பெரும்பாண். ௪௨ - ௩.

(பி - ம்.) * 'கொம்புற்' † 'தென்னவன்காக்கு நாடென்றெங்கணும் நீளிடை' ‡ 'விளக்கு' § 'கொள்கையிருந்தழி'

## ௧௩.—புறஞ்சேரியிறுத்தகாதை.

† மேழ்வகை நிலத்திலு மெய்திய விரிக்கு
மலைப்பருஞ் சிறப்பிற் றலைக்கோ லரிவையும்
கசுரு. [1] வாரம் பாடுந் தோரிய மடந்தையுந்
தலைப்பாட்டுக் கூத்தியு மிடைப்பாட்டுக் கூத்தியு
நால்வேறு வகையி ‡ னயத்தகு மரபி
னெட்டுக் கடைநிறுத்த § வாயிரத் தெண்கழஞ்சு
முட்டா ‖ வைகன் முறைமையின் வழாஅத்
கசுo. தாக்கணங் கனையார் நோக்குவலைப் ¶ பட்டாங்
கரும்பெற ** லறிவும் பெரும்பிறி தாகத்
தவத்தோ ராயினுந் தகைமலர் வண்டி
னகைப்பதம் பார்க்கு மிளையோ ராயினுங்
காம விருந்தின் மடவோ ராயினு
கசுரு. மேம வைகு லின்றுயில் வதியும்

கஙo. ஆடல் - இப்படிப்பட்டகூத்து. வரி - வரிப்பாட்டு. பாணி - தாளம். அக்கு - வாச்சியம்.

கஙஉ. அவினயம்: "நிற்றலியங்கலிருத்தல் கிடத்தலென், யவினயக் களனே." களன் - அரங்குமாம்.

றத்தகுநான்கே

கஙகூ. எழுவகை நிலத்திலுமெய்தியவரியாவது - ஆற்றுவரி, திணைநிலைவரி, மயங்குதிணைநிலைவரி, முகமுடைவரி, முகமில்வரி, யென்பனவாம்; அன்றிக் குரன்முதலான எழுநரம்பென்றுமாம்.

சார்த்துவரி,

கநிச. தலைக்கோ லரிவை - கூத்தாடுமவள்...... ..

கருo. தாக்கணங்கு - தீண்ட வருத்தஞ்செய்யும் தெய்வம்; நோக்காகிய வலையிலேபட்டு.

சீதேவியுமாம்.

கருக. பெரும்பிறிதாகை - கையற்றுப்போகை.

(கருஉ) தவத்தோர்களாயினும் வண்டுபோல (கருங) இவர்கள் நகையின் செவ்விபார்க்கும் காமுகராயினும் (கருச) காமத்துக்குப் புதியமடவோராயினும், (கருரு) தங்கியேபோகவேண்டும் (கருஎ) வீதி.

(கருக) அரும்பெறலறிவும் பெரும்பிறிதாக (கருங) நோக்குவலைப்பட்டுத் (கருஉ) தவத்தோர்முதலாயினர் (கருரு) இன்றுயில்வதியும் (கருஎ) வீதியென்க.

---

[1] தொல். மரபு. ரு. கஎ - பேர். மேற். டி (பா) 'தோரிய மகளிருந்' (பி - ம்.) * 'கூடிமைக்குயிறுவ' † 'எழுவகை நிலத்திறுமெய்தியது' ‡ 'நலத்திரு' § 'ஆயிரக்கழஞ்சு' ‖ 'வைகலின்' ¶ 'பட்டங்கு' ** 'அறிவுபெறும்'



பண்ணுங் * கிளையும் பழித்த தீஞ்சொ
[1] லெண்ணெண் கலையோ ரிருபெரு வீதியும்
வையமும் பாண்டிலு மணித்தேர்க் கொடிஞ்சியு
மெய்புகு கவசமும் வீழ்மணித் தோட்டியு

கஎ௰. மதள்புனை யரணமு மரியா யோகமும்
வளைதரு குழியமும் வால்வெண் கவரியு
மேனப் படமுங் கிடுகின் படமுங்
கானப் படமுங் † காழூன் று கடிகையுஞ்
செம்பிற் செய்நவுங் கஞ்சத் தொழிலவும்
கஎரு. வம்பின் முடிநவு மாலையிற் புனைநவும்
‡ வேதினத் துப்பவுங் கோடுகடை தொழிலவும்

கசுசு. கிளை - கிள்ளை; கிள்ளையைக் கிளையென
இடைக்குறைத்தார். கிளை -
பண்ணின் திறமுமாம்
கசுஎ. எண்ணெண்கலையோர் - தளியிலார். இருபெருவீதி -
சிறுதனம்
பெருந்தனம்பெறுவார்வீதி.
கசுஅ. ² பாண்டில் - இரண்டுருளையையுடைய சகடம்;
கொல்லாப்பாண்
டில்; பாண்டியென்றுபாடமோதிக் கூடாரப்பண்டியெனபாருமுளர்.
கொடிஞ்சி-
தேர்மொட்டு
கசுக. கவசம் - கைத்தளம். விரும்பப்பட்ட அழகிய தோட்டி.
கஎ௦. அதள்புனை யரணம் - தோற் கைத்தளம் அரியாயோகம் -
விசாதி
கட்குக் கொடுக்குமருந்து; சன்னுகமுமென்ப; அரிந்தல்-கெடுத்தல்;
பிணியைக்
கெடுத்தலையுடைய ஆராயப்பட்ட ஔடதமென்றுமாம்.
கஎக. குழியம் - வாசிவுண்டை: கட்டுக்குழியமுமென்ப.
கஎஉ. ஏனப்படம் - பன்றிமுகக்கடகு; பன்றிவலையுமாம்
கிடுகினபடம் -

சிறுகடகு

களசு. கானப்படம் - காடெழுதினகடகு; யானை சிங்கமுதலிய சித்திர மெழுதினகடகுமாம்; இடத்துநிகழ்பொருளின்றொழிலை இடத்திற்கேற்றினர்; பெருவாரஸ்வலையுமாம். காழூன்று கடிகை - காழூற்பிணித்த கடகு; படங்குமாம்.

இவை நான்கும் ஙிடுகின்விசேடம்.

களரு. மாலையிற்புனை - இடேச்சுமாலை.

களசு. வேதினத் துப்பவும் - ஈர்வாளால் வலியப்பெற்றனவும்; என்றது ஈருங்கருவியாற் பண்ணப்பட்டன. கோடு - தந்தம்.

[1] சிலப்பதிகாரம், உஉ: கஉஅ - க; மணி. உ: உக; பெருங். க. கஇ: அச - இ.
[2] பிரபுலிங்கலீலை, மாயையுற்பத்திகதி, கள.
(பி - ம்.) * 'இளவியும்' † 'காழூன்ற' ‡ 'வேதினத்திர்ப்பவுங்கோடு கடைத் தொழிலவும்'

## கச.—ஊர் காண் காதை.

ரு.ன்எ

புகையவுஞ் சாந்தவும் பூவிற் புனைநவும்
வகைதெரி வறியா வளந்தலை மயங்கிய

அரசுவிழை திருவி னங்காடி வீதியுங்
காக பாதமுங் களங்கமும் * விந்துவு
மேகையு நீங்கி † யியல்பிற் குன்றா
நூலவர் நொடிந்த நுழைநுண் கோடி
நால்வகை வருணத்து நலங்கே ழொளியவு

மேகையு மாலேயு மிருளொடு துறந்த
கஅரு. பாசார் மேனிப் பசுங்கதி ரொளியவும்
பதுமமு நீலமும் விந்தமும் படிதமும்
விதிமுறை பிழையா விளங்கிய சாதியும்
பூச வுருவிற் பொலங்தெளித் தனையவுந்
தீதறு கதிரொளித் தெண்மட் டுருவவு

கஎஎ. புகையவுமென்றது, புகைக்குறுப்பான நேர்கட்டிமுதலான ஐந்தும். சாந்தவும் - சாந்துக்குறுப்பான முப்பத்திரண்டுறுப்பும். (பா) மாலேவிகற்பங்கள்.

பூவிற்புனைஞ -

கஎசு - எ. தந்தத்தாற் கடைந்தவை - இரதத்திற்குச் செய்தவை சந்தனத் தாற்செய்தவை - கலவைகூட்டின. பூவிற்புனைந்தவை - மாலே.

•

கஎஅ. வேறுபாடுதெரியாவளமென்றூர், முன் எண்ணியவற்றை. மயங்கி - மயங்கப்பட்டு.
(பா)

கஅ0 - அகூ. காகபாதம், களங்கம், விந்து, இரேகையென்னும் குற்றமுமின்றிக் கோடியும் பலகையுமுள்ளன நல்லவயிரம்.

இந்நான்கு

க.அச - ரு. ஏகையும் மாலேயும் இருளும் மரகதத்துக்குக் குற்றம்; மற்றுப் பசுங்கதிரொளியையுடையன மரகதம்.'

இக்குற்ற

௧௮௬ - ௭. பதுமமும் நீலமும் விந்தமும் படிதமுமாகிய சொல்லுகிற குற்றமின்றி விளங்குகின்றவை சாதிமாணிக்கம்.

விதிமுறையிற்

௧௮௮. (பா) பூனைக்கண்போன்று பொன்னைத் புருடராகம்; பூசை - பூனை.
தேய்த்தாற்போன்றவை

௧௮௯. ஒளியினையுடைய மட்டுநிறமாயிருப்பன கோமேதகம்.

(பி - ம்.) * 'விந்துது' † 'இயற்பிற்'



௧௯௦. யிருடெனித் தினையவு மிருவே றுருவவு
மொருமைத் தோற்றத் தைவேறு வனப்பி
னிலங்குகதிர் விடூஉ * நலங்கெழு மணிகளுங்
காற்றினு மண்ணினுங் கல்லினு நீரினுந்
தோற்றிய குற்றந் துகளறத் துணிந்தவுஞ்
௧௯௫. சந்திர குருவே யங்கா ரகனென
வந்த நீர்மைய வட்டத் தொகுதியுங்
கருப்பத் துளையவும் † கல்லிடை முடங்கலுந்
திருக்கு நீங்கிய ‡ செங்கொடி வல்லியும்

வகைதெரி மாக்க டொகைபெற் றோங்கிப்
உ00. பகைதெற லறியாப் பயங்கெழு வீதியுஞ்
சாத ரூபங் கிளிசிறை யாடகஞ்
சாம்பூ நதமென வோங்கிய கொள்கையிற்
பொலந்தெரி மாக்கள் கலங்களு ரொழித்தாங்
கிலங்குகொடி யெடுக்கு நலங்கிளர் வீதியு

ககா இருள் தெளித்தனைய நிறத்தினையுடையன நீலம். யுடையன வயிரேயம்.

இருவேறுருவின

ககக. ஒருமைமதத்தோற்றம் - ஓரிடத்தே தோற்றல்; ஓரிடமென்றது, பளிங்கை.

ககரு - ௬. காற்றுமுதலான இக்குற்றம் நீங்கினவும். குற்றமென்றது, முன்புசொன்ன குற்றங்களை.

ககடு. சந்திரகுரு - வெண்முத்து. அங்காரகன் - செந்நீர்முத்து. வட்டத்தொகுதி - ஆணிமுத்து.

ககஎ. கருப்பத் துளை - உள்ளே துளையாகை. (பா) கல்லுடை முடக்கல் - கல்லை உள்ளேயுடைய வளைவு.

ககஅ. திருக்கு - திருகல்; இவை மூன்றுகுற்றமுநீங்கிய செங்கொடி வல்லி - பவளம்.

உ0க - ௬. சாதரூபம கிளிச்சிறை ஆடகம் சாம்பூநதமென்னும் இவை நான்கும் பொன்னின்சாதி. பொலந்தெரி மாக்கள் - செட்டியர்.

உ0௭. கொடியெடுத்தல், பொருளெல்லைக்கு.

(பு - ம்.) * 'நலங்கேழ்மணிகளும்' † 'கல்லுடைமுடங்கருந்' ‡ 'கொடிவல்லியும்' § 'ஓங்கிய' || 'நலந்தருவீதி' 'செழுங்

## ௧௪.—ஊர் காண் காதை.

ரு.அ௬௪

நூலினு மயிரினு நுழைநூற் பட்டினும்
பால்வகை தெரியாப் பன்னூ றடுக்கத்து
நறுமடி செறிந்த வறுவை வீதியு
நிறைக்கோற் றுலாத்தர் * பறைக்கட் பராரைய
ரம்பண வளவைய ரெங்கணுந் திரிதரக்
கால மன்றியுங் கருங்கறி மூடையொடு
கூலங் குவித்த கூல வீதியும்
பால்வேறு தெரிந்த நால்வேறு தெருவு
[1] மந்தியுஞ் சதுக்கமு மாவண வீதியு
மன்றமுங் கவலையு மறுகுந் திரிந்து
விசும்பகடு † திருகிய வெங்கதிர் நுழையாப்
பசுங்கொடிப் ‡ படாகைப் பந்தர் நீழற்
காவலன் பேரூர் கண்டுமகிழ் வெய்திக்
கோவலன் பெயர்ந்தனன் கொடிமதிற் புறத்தென்.

உ0௫. நூற்பட்டு - பட்டுநூல். உ0௬ - எ. பலமடி.
உ0௮ - ௯. (பா ) பறைக்கட்பராரை டம்பணமெனற்று,

பட்டமணிந்த வானையயும் பரிய அரைமையுமுடைய: ஒம்பணவளாவை; ஆவது அளக்கும்

உக. கறிமூடை - மிளகுபொதி.
உகஉ. பால்வேறு தெரிந்த - பகுதி வேறு தெரிந்த. நான்காய் வேறுபடுந் தெரு.
உகங. அந்தி - முச்சந்தி. சதுக்கம் - நாறசந்தி
உகச. கவலை - பலவாய ஒன்றுன முடுக்கு. மறுகு - குறுந்தெரு.
உகரு. விசும்பகடு திருகிய - விசும்பிடத்து முறுகிய.
(உகசு) துகிற்கொடிநீழலிலே (உகச) திரிந்து.

(ச) மண்டிலம் (சு) துயிலெடுப்ப (சுஎ) யவனர்க்கு அயிராதுபுக்கு (உகஎ) நகரிகண்டு (உகச) திரிந்து (உகஎ) மகிழ்ந்து (உகஅ) மதிற்புறத்துப் பெயர்ந்தனனெனக் கூட்டுக.

[1] "சதுக்கமுஞ்சந்தியும்" முருகு. உஉஅ.
(பி-ம்.) * 'பலறக்கிளாட்டர' † 'திரிதர' ‡ 'பதாகை'
சஎ



க - உ. புறஞ்சிறைப் பொழிலும்........புள்ளொலிமூக்

தார்ப்ப

(இ - ள்.) முன்னர்ப் புரிந்துபுக்க மூதூர்ப் புறஞ்சேரியிடத்துளவாகிய பொழில்களிடத்தும் விளங்காநின்ற நீர்நிறைந்த பண்ணையிடத்தும் விளைந்த கதிரையுடைய கழனியிடத்தும் உளவாகிய புட்கள் துயிலெழுந்து ஆரவாரியா நிற்பவென்க.

பிறங்குதல் - மிகுதலுமாம்.

௬ - ௬. புலரி வைகறை....................துயி லெடுப்ப

(இ - ள்.) வைகறைக்காலக்கழிவும் புலருதன்முன்னுமாகிய அக்காலத்தே பொய்கைகளில் தாமரைப்பூவின்முகைகளைப் புரிநெகிழ்த்து மலர்வித்த [1] உலக மெல்லாந்தொழப்படும் ஆதித்தமண்டிலமானது பகைவேந்தர் தலைகள் நடுங்க விதிர்த்தேந்திய வாளையுடைய செழியனது புகழானோங்கி வண்மையானுயர்ந்த கூடலாகியவூரைத் துயிலெடுப்பாற்றபவென்க.

ஆர்ப்ப அவிழ்த்த மண்டிலம் எடுப்பவென்க.

எ. நுதல்விழி நாட்டத் திறையோன் கோயிலும்—

(இ - ள்.) இறைவி கண்புதைத்தபொழுது நெற்றியிற்புறப்படவிட்ட கண்ணையுடைய இறைவனதுகோயிலும், விழிநாட்டம், வினைத்தொகை; இனி நுதலில் இமையாநாட்டமென்று மாம்; காமனைவிழித்த நாட்டமெனவுமாம்.

அ. உவணச் சேவ லுயர்த்தோ னியமமும்—

(இ - ள்.) உவணப்புட் சேவலைப் பதாகையாகவுயர்த்த திருமால்கோயிலும்,

உவணம் - கருடன்.

௯. மேழி வலனுயர்த்த வெள்ளை நகரமும்—

(இ - ள்.) மேழியாகியபடையை வலமாகவேந்திய பலதேவர்கோயிலும்,

வலன் - வென்றியுமாம். மேழி - ஆகுபெயராற் கலப்பை. வெள்ளை - வெள்ளையோனெனப் பண்புகொள்பெயர்.

௧0. கோழிச் சேவற் கொடியோன் கோட்டமும்—

(இ ள்.) கோழிப்புள்ளாகிய சேவற்கொடியையுடைய முருகவேள்கோயிலும்,

சேவற் கொடியென்றார், பெடைக்கொடியைவிலக்குதற்கு.

கக. அறத்துறை விளங்கிய வறவோர் பள்ளியும்—

அறத்துறை - அறமும் அறத்தின் றுறையுமென உம்மைத்தொகை. அறமாவது இருவகைத்து; இல்லறமும் துறவறமுமென. அவற்றுள் இல்லறமென்பது கற்புடைமனைவியோடு இல்லின்கணிருந்துசெய்யுமறம்.

அதன் றுறையாவன: [1] தன்னையொழிந்த மூவர்க்கும் துறந்தார்க்கும் அல்லாதவர்க்கும் இறந்தார்க்கும் தேவர்க்கும் முனிவர்க்கும் விருந்தினர்க்கும்

[1] முருகு. ௯. [2] திருக்குறள், ௪௧-ஆம் செய்யுள்முதலியவற்றைப் பார்க்க.



சுற்றத்தார்க்கும் பிறர்க்கும் துணையாதலும், வேள்விசெய்தலும், சிலைகாத்தல் முதலியனவும், அருளுடைமையன்புமுடையனாதலும், பிறவும்.

இனித் துறவறமாவது, [1] நாகம் தோலுரித்தாற்போல அகப்பற்றும் புறப் பற்றுமற்று இந்திரியவசமறுத்து முற்றத்துறத்தல்.

அதன் றுறையாவன:— சரியை, கிரியை, யோகம், ஞானமென்பன.

அவற்றுள், சரியை அலகிடல்முதலியன.

கிரியை பூசைமுதலியன.

யோகம் எண்வகைய; அவை:—இயமம், நியமம், ஆசனம், வளிநிலை, தொகைநிலை, பொறைநிலை, நினைதல், சமாதியென்பன.

அவற்றுள், [2] "பொய்கொலை களவே காமம் பொருணசை, யிவ்வகை யைந்து மடக்கிய தியமம்" எனவும், "பெற்றதற் குவத்தல் [3] பிழம்புநனி வெறுத்தல், கற்பன கற்றல் கழிகடுந் தூய்மை, பூசனைப் பெரும்பய மாசாற்

கனித்தலொடு, பயனுடை மரபி னியம மைந்தே'' எனவும், ''நிற்ற லிருத்தல் கிடத்த னடத்தலென், றெத்த நான்கி னெஸ்கா நிலைமையொ, டின்பம் பயக் குஞ் சமய முதலிய, வந்தமில் சிறப்பி னாசன மாகும்'' எனவும், '

'உந்தியொடு
புணர்ந்த விருவகை வளியுந், தந்த மியக்கந் தடுப்பது வளிநிலை'' எனவும், ''பொறியுணர் வெல்லாம் புலத்தின் வழாமை, யொருவழிப் படுப்பது தொகை நிலை யாமே'' எனவும், ''மனத்தினை யொருவழி நிறுப்பது பொறைநிலை'' என

வும், ''நிறுத்திய வம்மன நிலைதிரி யாமற, குறித்த பொருளொடு கொளுத்த வதூ நினைவே'' எனவும், ''ஆங்ஙனங் குறித்த வம்முதற் பொருளொடு, தான்பிற னாகாத் தகையது சமாதி'' எனவும் வருவனவற்றாலறிக.

ஞானம் .........................................

(இ - ள்.) அறமும் அதன் றுறைகளும் விளங்குதற்குக் காரண மாகிய அறவோர்களுடைய இருப்பிடங்களும்,

ஈண்டுப் பள்ளியென்றது, அவ்விடங்களை.

**கஉ. மறத்துறை விளங்கிய மன்னவன் கோயிலும்—**

(இ - ள்.) மறமும் அதன் றுறைகளும் விளங்குதற்குக் காரணமாகிய மன்னவனது கோயிலும்,

இதுவும் உம்மைத்தொகை.

அதன் றுறையாவன எழுவகைய; அவை :—வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பையெனவிவை. இனி விரிப்பினகலும். ''தொகை மறவர் துறைகண்'' என்பதனுள் இவையும் இவற்றின் துறைகளும் வந்தவழிக் கண்டுகொள்க.

கோயில் நியமம் நகரம் கோட்டம் பள்ளியென்பனவற்றின்வந்த அலங்காரமுணர்க.

பரியாய

1 "படநாகந் தோலுரித்தாற் போற்றுறந்து கண்டவர்மெய் பனிப்ப தோற்றிட், டுடனுக வைம்பொறியும் வென்றார்க்கு" (கஙசக) என்றார் சிந்தாமணியிலும்.

2 இச்சூத்திரமுதலிய எட்டும், "நாலிருவழக்கிற்றாபதபக்கமும்" (தொல். புறத். சூ. உ0. ந.) என்பதன் உரையிலும் எடுத்துக்காட்டப்பெற்றுள்ளன. இவை பதஞ்சலியோகசூத்திரக்கருத்துக்களை ஒத்திருக்கின்றன. 3 பிழம்பு - கூட்டம்.



௧௩ - ௪. வால்வெண் சங்கொடு..............கணைகுரலியம்ப

(இ - ள்.) முற்கூறியவிடங்களிற் பலவகையாற்பொருந்திய சிறப்பினையுடைய காலைப்போதின்முழவம் சங்கத்தோடும் கொம்போடுமியம்பவென்க.

இயம்பவெனப் பொதுமரபாற்கூறினர். வால்வெண்சங்கு, இருபெயரொட்டுப் பண்புத்தொகை. ஒடு, எண்ணொடுவாய்க் 1 கொம்பினெழிலை உணர்த்திநின்றது.

௧௫ - ௬. கோவலன் சென்று...........கைதொழுதேத்தி

(இ - ள்.) அக்காலத்தே கோவலன்சென்று கவுந்தியடிகளைத் தொழுது நாவானேத்தியென்க.

கையாற்

சென்றென்பதனால், அவர் வேறிடத்திருந்தமையும் கொள்கையினென்பது

ளல் தியானத்தோடிருந்தமைபுங் கூறினர். கொள்கையினி நந்தவென்பதற்கு இவர்களுறும் துன்பமுறாதிருந்தவெனவுமாம்.

கஎ - உ0.

நெறியி னீங்கியோர்...........செய்தவத் தீர்யான்

(இ - ள்.) செயததவத்தினையுடையீர். தவஞ்செயயாதபான் ஒழுக்கத்தி னின்று நீங்கினோர் நீர்மையையுடையேனுகி மலர்போலும் மெல்லிய மேனியையுடைய இவள் நடுங்கித் துயாமுறும்படி முன்னம் கனவினும் நினைந்தறியாத தேயத்தே அருவழியிடை எங்குந்திரிந்து துன்பமுழந்து சிறுமை புற்றேனென்றனென்க.

ஒழுக்கமுடைய விழுக்குடிப்பிறந்தோர் சான்றுடைமகளிரொடு நீணெறிச் செல்லாரென்பதுகருதி, 'நெறியினீங்கியோர் நீர்மையேனுகி' என்றனென் றுணர்க அன்றி, நாடகா னாடகத்தைக்கண், "வம்பப்பரத்தை வறுமொழியாளனெடு, ............ ..சென்றோர், காமனுந் தேவியும் போலு மீங்கிவாரா"

எனவும், "உடன்வயிற் றோர்க ளொருங்குடன் வாழ்க்கை, கடவது மூண் டோ" எனவுங் கூறுதலும், அதனுல் அவர்க்குச் சாபம்வருதலும்போல்வன இவளை உடன்கொண்டு வருதலான்வந்தனவென்று தன் அறிவின்மையை வெறுத்து நொந்துகூறினனெனினுமாம். சிறுமை - ஈண்டு அறிவின்மை.

உக - ச. தொன்னகர் மருங்கின்......அடிகளீங் கென்றலும்

(இ - ள்.) [4] அடிகளே, இத்தொன்னகரிடத்துள்ள வணிகர்க்கு என் றன்மையுணர்த்திவருந் துணையும் இவட்கு ஏதமின்றாகக் காத்தருளவேண்டு மெனக்கூறக்கருதியவன் தெளிந்து, [5] "போதுவல் யானும் போதுமின்" என்ற வன்றே இவள் நம் பாதமாகிய காவலையுடையாளாதலின், இவட்கு இனி ஏதமுண்டோ; இல்லையென்று கையடுத்தக் கூறினளென்க.

---

[1] கொம்பென்னும் வாத்தியம் சங்குடன்சேர்த்துக் கூறப்படுமி; "சங்குங்கருங் கோடும்'' பு - வெ. கரந்தை. ௯.

[2] சிலப்பதிகாரம், ௧0: ௨௪௯ - ௨௨.  [3] சிலப்பதிகாரம், ௧0: ௨௨௭ - ௮.

[4] அடிகளென்பது பெண்பாலார்க்கும் வருதல், "அடிகளுமுளரோ'' (சீவக. ௧௮௮௪.) என்பதனுலும் அறிக.  [5] சிலப்பதிகாரம், ௧0: ௬0.

## ௧௪.—ஊர் காண் காதை.

௬௭௨

என்னிலை - மாசாத்துவாணிகன்மகனாகியும் இங்ஙனமாகிய தன்மை. காறு - அளவு. பைந்தொடி, அன்மொழித்தொகை. ஈங்கு ஏதமுண்டோவென் றான், முன்னர் இவர் வழித்துயர் நீக்கி இவ்விடம் தலைப்படுத்தமைதோன்ற.

௨-௫. கதிர் கூறும்........... துயருழந்தோய்

(இ - ள்) அங்ஙனங் கூறிய கோவலற்குக் கவுந்தியடிகள் கூறுவார்: முற்பிறப்பில் நல்வினையைமிகச்செய்ததீ அதனையொழிந்து பின்பு சிறிதுதீவினையுஞ் செய்த பக்கத்தானே பின்னுள்ளவையும் கந்தசெல்வத்தையும்விட்டு சின்காதலியோடும் தனித்துத் துயரமுற்றுழந்தோனே,

இனிப் பேரியபக்கைத்தரும் தவத்தினின்றோர் அதனைவிட்டு

தாதலின்

இன்பத்தையும் பொருளையும் ஆகுபெயராற் பெண்டிரும் உண்டியுமென்றாராகலிற் பிரிதலையும் புணர்தலையும் இரண்டற்குமேற்றுக.

இனி நிறுத்தமுறையானே கூறுவார்:—

---

[1] "தீர்தலுந் தீர்த்தலும் விடற்பொருட் டாகும்" தொல். உரி. சூ. ௨௨.

[2] அடி, ௧௪ பார்க்க.



(இ - ள்.) மகளிரைப் புணர்தற்பொருட்டு முயற்சியான்வருந் துன்பமும் அங்ஙனம் புணர்ந்தபின்னர்ப் பிரிதலான்வருந் துன்பமும் அவை நீட்டித்த விடத்து அரங்கனுறுத்தலான்வருந் துன்பமுமென முழுவதும் துன்பமேயாம்; இனிப் பொருள்புணர்தற்பொருட்டு முயற்சியான்வருந் துன்பங்களும் அங்ஙனம்புணர்ந்தபொருள் பிரிதலான வருந் துன்பமும் அவையிரண்டும் நீட்டித்த விடத்துக் கட்புலனாகாத வருமை உறுத்தலான்வருந் துன்பமுமென முழுவதும் துன்பமே; ஆகலின், இவ்விருதிறத்தினுந்தோன்றும் துன்பமனைத்தும் மகளிரைப் புணர்ந்து மயங்கினோர்க்குளதாவதல்லது பற்றற்ற தனிவாழ்க்கையையுடைய பெரியோரிடத்தில்லை; அங்ஙனமாகிய துன்பங்களை இன்பமெனக்கொண்டோர் உறக்கடவ இடல்கொள்ளாத் துன்பங்களை மனத்தானுணர்ந்தனராகி முனிவரால் நீக்கப்பட்ட இவ்விருவகைக்காமமே சார்பாகப் பற்றுள்ளத்தினின் றழுந்து துன்பக்கடலிலழுந்திக் கரைகாணப்படாத இடும்பையையெய்தினோர் இன்று நின்னைவினோரல்லர்; முன்னும் எண்ணிறந்தோராவர்; பழகிப்போந்த முறைமையதாதலானன்றேயென்றாரென்க

பிரிதற்றுன்பம் பெரிதாகலின் முன்வைத்தாரேனும்

புணர்தற்பின்னரது பிரிவாகலின், மாற்றிக்கொள்ளப்பட்டது உருவிலாளனென்பன தக் காமன் மேலும் கட்புலனுகா வறுமைமேலுமேற்றுக. இல்லை, முற்று இறந்தோர் - கழிந்தோருமாம். பலரென்றார், தேவரினுமுண்டென்பதுதோன்ற. ஆல், அசை.

இனி, அப்பலருள், தேவரிற்சிறந்தோனொருவனையும், னொருவனையும் எடுத்துக்காட்டுவார் :—

மக்களுட்சிறந்தோ

சசு - ஃ. தாதை யேவலின்...........நெடுமொழி யன்றோ

(இ - ள்.) தன் தந்தையேவலானே மனைவியோடும் வனத்திற்போய் அவள் தன்னைப்பிரிதலானே கடிய துன்பத்தையுழந்தவன் வேதத்திற்குமுதல்வனாகிய நான்முகனைப் பயந்தோனெனாபதனை உலகமெல்லாமறியவும் நீ யறிந்திலையோ? அஃது உலகினடக்கின்ற புராணகதையன்றோவென்றாரென்க.

அறிந்தனையாயின் இரங்காயென்பதுகருதி அறிந்திலையோவென்றார் நெடுமொழி - புகழுமாம். இதனுள், இராமன் சீதைபொருட்டாக வில்லேற்றல் முதலிய புணர்தற்றுன்பமும், பின்னர் அவள் பிரிதலான்வருந்துன்பமுமே, தசரதன் தனக்கு முடிசூட்டத்தொடங்கிய பொருள் புணர்தற்பொருட்டு வருந்துன்பமும். பின்னர் அதனைக் கைகேசிவிலக்க அப்பொருள் பிரிதலான்வருந்துன்பமும் ஈண்டுவேந்தவாறுணர்க இது தேவரிற் சிறந்தோனொருவனைக் காட்டியது.

சு௭ - ஞள். வல்லா டாயத்து..............சொல்லாயோநீ யும்

(இ-ள்.) நளன்றன் முன் புட்கரனெடுபொருத சூதினுயத்தான் மண்ணை அரசாட்சியையுமிழந்து தன்மனைவியொடு வெய்யகானகத்தேசென்றடைந் தவ ன் பிறிதொருபொருண்மேற்சென்ற காதலான் அவளைப் பிரிந்தானல்லன்;
அவளும் வீறின்மையொடு பொருந்தப்பட்டதனும் சிறுமையுறுவாளுமல்லள்;
ஆகவும் அடவியாகிய காட்டகத்து அரையிருள்யாமத்தே அவளை உறக்கிடை

# கச.—ஊர் காண் கா ல் த.

கஎஅ

நீத்து நீக்கியது முன் செய்ததீவினையன் றி .
அம்மடந்தையிலமுயானென்று சொல்லுதற்கு வேறுகாரணமுண்டாயின
நீ சொல்லென்றுரெனக.

இல்லையென்பது கருத்து. இனி, அவனும் காதலினீங்கிப் பிரிந்தானல் லன்; அவளும் காதலியே; அதனுற் பிரிவாற் சிறுமையுறவாளுமல்லளெனினு மமையும். ஆயம் - தாயம். மண்ணரசு, உம்மைத்தொகை அடவி - மலைசேர்ந்தகாடு ஆயிழை - தமயந்தி. இட்டுநீக்கியதெனவே துயிலிடைநீத்தல் பெற்றும் நீக்கியது, ஏவற்சொல். ஓகாரம், இடைச்சொல். இதனுன் நளன் தமயந்தியை வதுவைசெய்து புணர்தற்பொருட்டு வருந்துன்பமும் பிரிதற்பொருட்டுவருந்துன்பமும், சூதாடுகின்றுழி அச்சூதுவென்ற பொருள் புண தற்பொருட்டு வருந்துன்பமும் மண்ணும் அரசுமாகியபொருள்கள் பிரித லான்வருந்துன்பமும் ஈண்டுவ ந்தவாறு ணர்க . இது மக்களிற்சிறந்தோனொரு வனைக் காட்டியது

' "நெறியி னீங்கியோர் நீர்மையே னாகிச் சிறுமை யுற்றேன" என்றதற்கு ' வினைகடைக் கூட்ட வியங்கொண்டான்", ' "ஊழ்வினை கடைஇ யுள்ளந் துரப்ப" என்பவறுற்ற கோவலனை வினை ஏவுதல்பெறப்படலானும், இ ! மனைத் தாதையேவுதலானும், நலனைப் புடக் !மேனவுத்க ஏனும், இவர் மனைவியரோடு அறியாத்தேயத்தாரிடையுழத்தலும், சிறுமையுறுதலும் ஒத்தபண்பினராத லின் உவமைகூறி, இவரினும் உனக்கு ஒருறுதியுண்டென்றுகூறுவார்:—

இஅ - கூ. அனையையு மல்லை......... .. பெற்றனை யன்றே

(இ - ள்.) இங்ஙனம் பலவகைத்தாய துன்பமுறுதலின், அவரோடு ஒத்த தன் மையையா யினும் அவரின் நீ வேறுபட்ட பெரிய நல மையையுடையை;

அஃதிய 10 னின், நின்காதலி பிரியாதுவாழும் வாழ்க்கையைப் பெற்றனை யன்றோவாதலானென்று ஏதறிறோனக

உ ம்மை, சிறப்பு. வன்றே, அசையுமாம.

கூ0 - சூக வருந்தா தேகி. . ....... ...போதீங் கென்றலும்

(இ - ள்.) இனி நீ இங்ஙனம் வருந்தாதே

இம்மன்னவனகூடறசென்று சாவகநோன்பு நிகழ்த்தறகேற்ற இடமிதுவென்றறிந்து மீண்டுவருவாயாக வென்று சொல்லுமென்க

பொருந்துழியறிந்து - விருந்தெதிர்கொள்வாரிடத்தை யறிந்தென்றுமாம். ஏகிப்போதென இயையும்.

சுஉ - ரு.

இளைசூழ் மிளையொடு..............மருங்கிற் போகி

(இ - ள்.) கட்டுவேலிசூழ்ந்த காவற்காட்டோடு தானும் நகரைச்சூழ்தலை உடன்பட்டுக்கிடந்த வலத்திலேபொருந்திச்சுழலும் இலங்குநீர்ப்பரப்பை யுடைய அகழிக்குப் பெரிய கையையுடைய யானையினமாகிய பலநிரைகள் போக்குவரத்துச் செய்தற்குப்படுத்த சுருங்கையையுடைய வீதியைக் போகியென்க.

கழிந்து

[1] சிலப்பதிகாரம், கூ: எஅ. [2] சிலப்பதிகாரம், ௬௦: ச.



வலம் - வெற்றியுமாம். இனநிரை - நிரையினம். சுருங்கை - கரந்துபடை.

சுசு - எ. கடிமதில்
வாயில்.....................அயிராது புக்கு

(இ - ள்.) இங்ஙனமாகிய இவைமுதலியசூழ்ந்த உயர்ந்த மதில்வாயிலைக் காக்குந் தொழிலான்மிக்க கொல்லும்வாளையுடைய யவனரால் இவன் புதியனென்றயிர்க்கப்படாததன்மையாற்புக்கென்க.

கடி - மிகுதி. யவனர் - துருக்கர். போகிப் புக்கென்க

சுஎ. ஆங்கு—(இ - ள்.) அவ்விடத்து,

சுஅ - ௯. ஆயிரங் கண்ணோன்.............மதிலக வரைப்பின்

(இ - ள்.) ஆயிரங்கண்ணையுடைய இந்திரனது பெறுதற்கரிய மணிக்கலம் பெய்த பணிப்பெட்டகத்தைத் திறந்துவைத்தாலொத்த மதில்வட்டத்தை யுடைய அகநகர்வரைப்பின்கண்ணென்க.

முன்னர்ப் புறநகர்ச்சிறப்புக் கூறி அண்டு அகநகர்ச்சிறப்புக் கூறுவார், மதிலைக வரைப்பினென்றார்.

௭௦ - ௭௫. குடகாற் றெறிந்து..........புனலாட் டமர்ந்து

(இ - ள்.) மேற்றிசைக்காற்று விசைத்தெறிதலானே கொடிகளெழுந்து நுடங்குர் மறுகின்கண்ணுள்ளனவாகிய மாடங்களிலெடுத்த பொதுமகளிர் தாம் காதலிக்குஞ் செல்வத்தையுடைய காமுகரோடுகூடி இடையறுதுபெருகும் புனலையுடைய வையையாற்றுத் துறைமுன்றார்ப் பொலிந்துபரந்த இடைக்குறையில் வெளியமணலையுடைய அலைடக ரக்கண்ணே உயர்ந்தபள்ளியோடத் தோடு நாவாய் முதலியவற்றை நிச்செலுத்தியும் பொலிவையுடைய புனைகளைத்தழுவி நீந்தியும் இவ்வாறு புனல்விளையாட்டைவிரும்பியும்.

ஆடித்திங்களென்பது தோன்றக் குடகாற்றுக்கூறினார். நாணும் மடனும் பெண்மைபவாதலின் இவற்றைக்கழியாதே கடைகழியவேண்டுதலிற் கடைகழி மகளிரெனப் பொதுமகளிர்க்குப் பெயர்கூறினார் இவர்க்குக் காதல பொருளின் கண்ணதாகலிற் காதலஞ்செல்வரென்றார்; ஏம்மேற் காதலையுடைய செல்வரோடெனவுமாம்; அம், சாரியை. நாவாய் - தோணிமுதலாயுள்ள சலசாரங்கள்.

இது, சிறுகாலமாயினும் காலைப்பொழுதிற் பொழுதுபோக்குக் கூறிற்று.

௭௬ - ௮௨. தண்ணறு முல்லையும்............அமர்ந்தாங்கு

(இ - ள்.) குளிர்ந்த நறிய முல்லைமலரும் தாழ்ந்த நீரிற்பூத்த குவளை மலரும் தம் கண்போலமலர்ந்த நெய்தன்மலருமென்னுமிவற்றைத் தமது கொண்டைகளிலே மிகவைத்துப் புனைக்கச்செருகி மல்லிகையின் மலர்ந்த வெளியபூவோடே குளிர்ந்தசெங்கழுநீரிதழ்களையும் கால்நெருங்கக்கட்டுதலால் நல்லமலர்ந்தபிணையலைக் கொற்கைத்துறையிற்படும் பெருமுத்தாற்செய்த வடத்தோடேபூண்டு தென்றிசைக்கண்ணதாகிய மலையவரையிற்பிறந்த சந்தனக் குழம்பை மேனிமுழுதும் மட்டித்துப் பொன்னாற்செய்த கொடிகளையுடைய மூதூர்க்கு அயலதாகிய பொழிலிடத்து விளையாடும் விளையாட்டைவிரும்பி,

---

[1] "வையையன்ன வழக்குடைவாயில்" மதுரை, கஙசு.

## கசு.—ஓர் காண் காதை.

கூஎஎ

தாணீர்க்குவளை பாடமாயின், தாளையுடைய நீர்மைக்குவளையென்க. பிணையல் - மார்பிலிடுவன. உற - மிக. மல்லிகை விரியல்வெண்பூவென்க. தெக்கணம், வடசொற்றிரிபு. சேறுடியென்றார், மெய்ம்முழுதும்பூசினமைதோன்ற. மூதூர்ப்பொழில் - [1] இலவந்திகைச்சோலை. ஆங்கு, அசை. அடைச்சிப் பூண்டு ஆடி அமர்ந்தென்க. காரை எதிர்பருவமாதலின் முல்லைகூறினார்.

இது, நண்பகற்பொழுதிற் பொழுதுபோக்குக் கூறிற்று.

அங - ரு. எற்படு பொழுதின் ...மேனிதிருந்தாங்கு

(இ - ள்.) எற்பாடாகியகாலத்தே ஆண்டுநின்றும்போந்து இளநிலாமுன்றிற்கண்ணே முன்னர்ப் புனலினும் பொழிலினும் ஆடியிளைத்தகோலத்தைத் தம் கொழுநர் பாராட்டித்தீர்க்கக் கண்டோர்விரும்பப்படும் பூஞ்சேக்கையிடத்தே இனிமையோடிருந்து,

ஆங்கு, அசை புணர்ச்சிகூறுவார், இனிதிருந்தென்றார்.

தகை, ஆகு பெயராற கொழுநர். தம்தம் மனத்திற்றங்கிய வெளினுமமையும்.

கோலத்தைப்புனைந்து பாராட்ட்

இஃது எறபடும்பொழுதிற் பொழுதுபோக்குக் கூறிற்று.

அசா - கள். அரத்தப் பூம்பட்டு... ..........கால மன்றியும்

(இ - ள்.) அங்ஙனம் பாராட்டச் சேக்கைமேலிருந்து, பூத்தொழிலையு டைய செம்பட்டை மேகலைமீதேயுடுத்துப் பூங்கொத்தை இடத்தேயுடைய கூந்தலிலே செங்குடசப்பூவைமுடித்துத் [1] தென்னவனது சிறுமலையென்னுஞ் சிலம்பின்கட்பூத்த செந்நறுங்காளிப்பூவுடனே நறியமலரையுடைய குறிஞ்சி யினது நாட்பூவைச்சூடிக் குங்குமநிறத்தையுடைய செஞ்சந்தனத்தைக் கொங் கையினெழுதிச் சிவந்த சுண்ணமப்பிய ஆகத்தே செங்கொடுவேரியின் வன விய பூவாற்கட்டப்பட்ட பிணையலை அழகிய பவளக்கோவையோடுபூண்டு பறந்து திரியுமலைகளைச் சிறகையரிந்த வச்சிரத்தையுடைய இந்திரனுக்குக் கூடலைச் செவ்வணியணிந்துகாட்டுதற்குக் காரையாளுமரசன் வாரடைக்காற்றோடுவருங் காலமும, அக்காலமன்றியும்,

அரை, ஆகுபெயரான் மேகலை. குடசம் - வெட்பாலைவிசேடம். சிறுமலை, அதன் பெயர். மலர்க்குறிஞ்சி, முதற்கேற்றவடை; [2]"கனிவிளவின்காய்" போல. குங்குமநிறத்தையுடையவறறை யென் றுமாம். இழைத்து - வரித்து; எனவே எழுதியென்பதாயிற்று சுண்ணம், மேனிக்கடை. குடசமும், குறிஞ்சியும், கொடுவேரியுமென் னுமிவை கார்காலத்துப்பூவாய்த் தான்விளைந்தனவாதலாற் காரரசாளன காட்டவென்றார். கார் - ஈண்டு முகில்; அதனையாளுமரசு - காலம். காலமும் கடவுளாதலால் தலைவேந்தனுக்குக் கையுறைகாட்டுவான் கூடன்மகளிரான் ஏந்துவித்துக்காட்டினான்; அவற்கு மகளிர்மேல் மிக்க காத லுடைமையறிதலின். [3] "காலமுலகம்" என்பன உயர்திணைமேலனவாய்ப்

[1] இலவந்திகை - யந்திரவாவி; சிலப்பதிகாரம், கல:

கஃ மணி. க: சச - இ; "நிறைக் குறிஞிறைத்துப் போக்குமிற்போக்கும், பொறிப்படைபமைத்த பொங்கில்வந்திகை" (பெருங். க. சO: கசுக - உ.)
[3] முல்லைப்பாட்டின் இறுதிவெண்பா, க.
[4] சிலப்பதிகாரம்,கச: அஇ. [5] தொல்காப்பியம், கிளவி. சூ. இஅ.
சஅ



பால்பிரிந்திசையாவெனவும், [1]"நின்றுங் கிசைத்த லிவணியல் பின்று" எனவும் கூறிவழுவமைக்கின்றவர், [2] வேறிடத்து இசைத்தலுமுரிய வெகுபதனற் காரர சாளனென உயர்திணையாற்கூறினர். இவ்விதி மேல்வருவனவற்றிற்குங்கொள்க.

கஎ - கOக. நூலோர் சிறப்பின்.......... ...கூதிர்க் காலையும்

(இ - ள்.) சிற்பநூல்வலலோரானே சிறப்பித்துச்செய்யப்பட்ட முகிலுறைய உயர்ந்த மாடங்களிலே மரக்கலந்தந்த அகிலாகியவிறகாலே மடப்பம்வருதலை யுடைய மகளிர் தடாக்களிலிடப்பட்ட இந்தனம் காய்தலைவிரும்பி நறிய சாந்தணிந்தமார்பையுடைய மைந்தரோடுகூடிக் குறிய கண்களையுடைய சாளரங் களை அடைக்கும் கூதிராகியகாலமும்,

நூலோர் சிறப்பி னகிலெனவிரையத்து, நூலோர்

சிறப்பித்துக்கூறப்பட்ட

நேர்கட்டிமுதலாகிய அறுவகைக்கூட்டெனினுமமையும்; மடவரன்மகளிர்தரு மகிலெனவுமாம். அமர்ந்து அடைக்குமெனவினையும் நம்பியர் - காதலஞ்செல் வர். குறுங்கண், ஆகுபெயர் இதுவும் மேற்கூறிய அச்சிரக்காலமும் உயர் திணைச் சொல்லடுத்தோதாது அஃறிணையியல்பாற்கூறுவன.

கOஉ - டு. வளமனை மகளிரும்.........

....அச்சிரக் காலையும்

(இ - ள்.) மகளிரும் மைந்தரும் வளமணையில் இளநிலாமுன்றிற்கண்ணே யிருந்து இளவெயிலைநுகரும்படி விரிந்தகதிரையுடைய ஆதித்தமண்டிலம் மிதுன வீதியிலே எழுந்து இயங்குதலாலே வெண்முகில் அரிதாகத்தோன்றும் முன்பனிக்காலமும் எவ்விடத்துள்ளன ?

மகளிரை முற்கூறினர், இன்பத்திற்கு முதல்வராகலின். இளநிலா - மாலைப்பொழுதினிலா; அன்றிச் சுதைநிலாவெனா முன்றிற்கடையாக்கிலுமமை யும். நுகர்தல் - பயன்கோடல் ஏர்பு - எழுதலான. வெண்மழை - பனி மாசுமாம். எவ்விடத்துள்ளனவென்று ஒருசொல் வருவிக்க.

கoசு. ஆங்கதன்றியும்—(இ - ள்.) வந்த முன்பனிக்காலமன்றியும்,

கoசு - கஉ. ஓங்கிரும் பரப்பின்.........பனியரசியாண்டுளன்

(இ - ள்.) குணதிசைக்கண் தொண்டியென்னும் பதியிலுள்ள அரசரால் வங்கத்திரளோடு திறையிடப்பட்ட அகிலும் பட்டும் சந்தனமும் வாசமும் கருப்பூரமுமென்னுமிவற்றை அவ் வங்கத்திரளோடு சுமந்துவந்த கொண்டற்காற்றென்னு நண்பனோடு கோமகனது கூடற்கட்புகுந்து காமவேளுடைய வில்வெற்றி நிகழாநின்ற விழவுகாணும் பங்குனித்திங்களீருகப்பொருந்திய பின்பனிக்காலமாகிய அரசன் எவ்விடத்துளன் ?

ஓங்கிரு, இருபெயரொட்டு; பரப்பென்பதனை விசேடித்து வங்கத்திற்கு அடையாயிற்று. ஈட்டதது - ஈட்டத்தோடு. இனி 'தொகு' என்பதனை இறுதிவிளக்காகக்கொண்டு பொருளுரைக்க. உரைக்குமாறு :—

அகில்: * அருமணவன் தக்கோலி கிடாரவன் காரகிலென்றுசொல்லப் பட்ட பலவகைத்தாய தொகுதியும்,

[1] தொல்காப்பியம், ௐவி. சூ. ௧௬. [2] தொல்காப்பியம், ௐவி. சூ. ௬௦.
[3] இங்குக்கூறப்பட்டும் பெயர்கள் இக்காலத்து வழங்காமையால், புலப்படவில்லை.

## ௧௪.—ஊர்காண்காதை.

௬௭௬

**துகில்:** கோசிகம் பீதகம் பச்சிலை அரத்தம் நுண்டுகில் சுண்ணம் வடகம் பஞ்சு இரட்டு பாடகம் கோங்கலர் கோபம் சித்திரக்கம்மி குருதி கரியல் பேடகம் பரியட்டக்காசு வேதங்கம் புங்கர்க்காழகம் சில்லிகை தூரியம் பங்கம் தத்தியம் வண்ணடை கவறமுமடி நூல்யாப்பு திருக்கு தேவாங்கு பொன்னெ மூத்து குச்சரி தேவகிரி காத்தூலம் இறஞ்சி வெண்பொத்தி செம்பொத்தி பணிபொத்தியென்று சொல்லப்பட்ட பலவகைத்தாகிய தொகுதியும்,

**ஆரம்:** மலையாரம் தீமுரன்பச்சை கிழான்பச்சை பச்சைவெட்டை அரிசந்தனம் வேரச்சுக்கொடியென்றுசொல்லப்பட்ட பலவகைத்தாயதொகுதியும்,

**வாசம்:** அம்பர் எச்சம் கத்தூரி சவாது சாந்து குங்குமம் பனிநீர் புழுகு தக்கோலம் நாகப்பூ இலவங்கம் சாதிக்காய வசுவாசி கிரியாசம் தைலமென்று சொல்லப்பட்ட பலவகைத்தாகியதொகுதியும்,

**கருப்பூரம்:** மலைச்சரக்கு கலை அடைவுசரக்கு மார்பு இளமார்பு ஆருர்க்கால் கையொட்டுக்கால் மாரப்பற்று வராசான் குமடெறிவான உருக்குருக்கு வாரோசு சூடன் சீனச்சூடனென்று பெயர்கூறப்பட்ட பல வகைத்தாகிய தொகுதியுமெனத் தொகுத்தும் விரித்தும் பொருளுரைக்க.

கொண்டல்-கீழ் காற்று. இறுதியாகிய பின்பனியென்பார் வேனில்விழாக் காணும் பங்குனியென அதற்கு அடைகூறினர்; காணும் பனியரசெனவியைக்க; வேள்காணும் பங்குனியெனினுமமையும். [1]

தொண்டியோர் - சோழகுலத்தோர்.

கக௩'- ௭. கோதை மாதவி .......யாண்டுளன் கொல்லென்று

(இ - ள்.) மாதவி கொடியெடுப்பக் காவும் கானமும் மலரேந்தத் தென்னவனுடைய பொதியிற்றென்றலோடே அமமன்னவனுடைய கூடனகரின்கட் புகுந்து தாம் மகிழ்ந்துணைகளைத் தழுவுவிக்கும் இனிய இளவேனிலென்னு மரசனை எவ்விடத்துளானென்று,

கோதைமாதவி - மாலைபோலப் பூக்குங் குருக்கத்தி. கானம் - நந்தனவனம்; காடுமாம். தழூஉம் - தழுவுவிக்கும்

கக௮ - ௧. உருவக் கொடியோர்...... .......படர்தீர் காலை

(இ - ள்.) கொடியுருவினேர் இங்ஙனமாகிய இன்பங்களைக்கருதி அவற்றவற்ற இடபங்களை நுகர்தறகுவிரும்பித் தம்மையுடைய பெரியகொழுநரோ டிருந்து அப்பருவவரவை எண்ணும் வருத்தநீங்கியகாலத்தே,

தாமுருவிற் புறவீதிமகளிராய் கோலக்கொடியோரென்றுமாம். இவர் முற்கூறிய கடைகழிமகளிர். இவர் ஆண்டுக் கூறிய பருவமெண்ணுங்காலையென்க.

காதலஞ்செல்வரோடிருந்து

[1] இதனால், கீழ்கடற்கரைக்கணுள்ள தொண்டியென்னும் பட்டினம் பண்டைக் காலத்திற் சோழர்களுடைய ஆட்சிக்குட்பட்டிருந்ததென்று தெரிகின்றது; சேரர்க்கு உரித்தாய் மேல்கடற்கரைக்கணுள்ள தொண்டியென்பது வேறு; புறநா. கஙு, சஅ - பார்க்க.

## கஉ0 - உ௫. கன்றம ராயமொடு......உறுவெயிற் கடைநாள்

(இ-ள்.) கன்றுகண்மேவியபிடிக்கிரளோடே அவற்றைக்காக்கும் களிற்றினமும் கண்டுநடுங்கும்படி வெயில் நிலைபெற்ற மலைசார் நாட்டுக் காடெங்கும் தீப்பட்டெரியும்படி முழங்கும் முழைமூட்டிக் கோடைக்காற்றேடுவந்துபுகுந்து கூடலைத்தாளுண்ட வேனிலாசன் தனக்குப்புகலிடமாகிய வேற்றுப்புலத்தைக்களிற்சேறற்கு முயலாநின்ற வெயிலையுடைய கடைநாளிலென்க.

கடைநாள் - பருவத்தின்கடைநாள். என்றாழ்நின்றவென்றார், காலதொடங்கி மாலையளவும் ஒருதன்மையாகக்காய்தலின். செனித்தல் - போதற்கு ஒருப்பட்டு முயறல்; [1]"உடைதிரை முத்தஞ் சிந்த வோசனிக் கின்ற வனனம்" என்றார் சிந்தாமணியினும். [2] ஓரோர்தேயத்திற்கு ஒவ்வொருகாலம் மாறிநிகழ்தலின் வேற்றுப்புலம்படரவென்றார்.

## கஉசு - ௩௧. வையமுஞ் சிவிகையும......மணம் புணர்ந்து

(இ-ள்.) கூடாரப்பண்டியும் கடகதண்டும்
கைகள்பெற்றதேயனறி நீராவிச்சோலைக்கண்ணே

பல்லக்குமென்னும் இவ்வரி
தமக்கு உறறதுணைவருகிய
அரசனோடுமேவி மெய்தொட்டு விளையாடுமகிழ்ச்சியும் கவரியும்
அடைப்பையும்
உடைவாளுமெடுக்கும்வரிசையும் தம் கோமகன்கொடுப்ப அவை
எக்காலத்தும்
மாறுதவாழ்வையுடைய மடந்தையர் நாடோறும் புதியாரோடு
மணம்புணர்ந்து,

புதியவரிதயமறிந்து புணர்தலருமையிற் புணர்ந்தென்று அவர்வல்லபங் கூறினர். இன்னும், புணர்ந்தெல்வே இப்புணர்ச்சிமுன்னர் இன்பம் விளைத் தற்கு ஊடனிகழ்ந்தமைபுணர்க. உயயானம் - அரசர் விளையாடும் காவறசோலை. சாமரைக்கவரி, இருபெயரொட்டு. பதுமணம்புணர்தல் - கரணவிசேடமுமாம.

கரு௨ - ரு. செம்பொன் வள்ளத்து..........மாந்தினர்

மயங்கி

(இ - ள்.) அங்ஙனம்புணர்ந்த புணர்ச்சியானுண்டாய வருத்தமகற்றிச் செருக்கு விளைத்தற்குச் சிலதியா பொன்வள்ளத்தேந்திய அழுங்க இனிய கட் டேறலைப் பருகினராகிப் பின்னுமயங்கி,

சிலதியர் - ஏவன்மகளிர்.

கரு௪ - சுரு. பொறிவரி

வண்டினம்..................வீதியும்

(இ - ள்.) அங்ஙனமாகிய காவியங்கண்ணர் மதுமயக்கத்தான் இதழின் மறைகின்றவிழிகளைப் பூவினிதழின்மறைகின்ற தமதினமெனக்கருதிச் சேர்ந்த பொறியையுடைய வரிவண்டினத்தைப் பரிந்தமாலையாற் கடியக்கருதியவர் அவசத்தாற் கைசேர்தலின் அவைமொயயாத இடங்களைக் கடிந்து முன்னர்ப் புலவிக்காலத்தே இலவிதழ்போலும் செவ்வாயின்மீதே இளமுத்துப்போலும் எயிறுகள் அரும்பும்படி தம் கேள்வரைக் கவவுக்கொண்டு நெருக்கிய புலவிக்

[1] சீவகசிந்தாமணி, உகூ௦௨.

[2] ஓரோர்தேயத்திற்குக் காலம் ஓரொரு காலம் மாறிநிகழுமென்பது, "ஊடல் நிலைப்பொடித்தாங்கு" (சீவக. உ௯௦௯) என்பதன் விசேடவுரையால் உணரப்படும்.

௯௪.—ஊர் காண் காதை.

ரு௲அக

அவையாவன:—கண்கூடுவரி, காண்வரி, உள்வரி, புறவரி, கிளர்வரி, தேர்ச்சி வரி, காட்சிவரி, எடுத்துக்கோள்வரியெனவிவை ; என்னை? "கண்கூடு காண் வரி... .......... .எண்வகை நெறித்தே" என்றாராகலின். இனி, இவ்வரி யென்பதனை, சிலனும் சொரிலும் தோன்ற நடிக்கும் விளைக்கூத்தென்பாரு முளர் ; என்னை? "வரியெனப் படுவது.............. ...வழங்கல்" என்றாராகலின். இவற்றின்பகுதி விரிப்பிற் பெருகும்; வந்தவழிக் காண்க.

பாணியும்—(இ - ள்.) தாளங்களும்.

அவை, கொட்டும் அசையுந் தூக்கும் அளவுமெனவிவை ; என்னை ? "கொட்டுமசையும்.......................பாணி யாகும்" என்றாராகலின். அவற்றுள், கொட்டென்பது அரைமாத்திரை, வடிவு க ; அசையென்பது ஒருமாத் திரை, வடிவு எ ; தூக்கென்பது இரண்டுமாத்திரை, வடிவு உ ; அளவென்பது மூன்றுமாத்திரை, வடிவு ஃ ; என்னை ? "ககரங் கொட்டே.........ஆய்தம்" என்றாராகலின். இனி இவற்றின்றொழில் :—கொட்டாவது அமுக்குதல் ; அசையாவது தாக்கியெழு கல் ; தூக்காவது தாக்கித்தூக்குதல்; அளவாவது தாக்கினவோசை நேரே மூன்றுமாத்திரைபெறுமளவும் வருதலெனக் கொள்க.

தூக்கும்—(இ - ள்.) தூக்குக்களும்,

அவையாவன :—இத்தாளங்களின்வழிவரும் செந்தூக்கு, மதலைத்தூக்கு, துணிபுத்தூக்கு, கோயிற்றூக்கு, நிவப்புத்தூக்கு, கழாற்றூக்கு, நெடுந்தூக் கெனப்பட்ட எழுதூக்குக்களும் ; என்னை ? "ஒருசீர் செந்தூக்கு............ . என்மனார் புலவர்" என்றாராகலின்.

கஙக. கூடிய குயிலுவக் கருவியு முணர்ந்து—
(இ - ள்) முற்கூறிய ஆடல்முதலியவற்றோடுங் கூடியிசைக்கும்

நால்வகை உத்தமத் தோற்பெருங்கருவிக் கூறுபாடுகளையுமுணர்ந்து,

நால்வகை உத்தமத் தோற்பெருங்கருவிகளாவன :—மத்தளம், தண்ணுமை, இடக்கை, சல்லிகையென்பன ; என்னை ? "மத்தளந் தண்ணுமை யிடக்கை சல்லிகையென , வைத்த நான்கு முத்தமக் கருவி" என்றாராகலின். தண்ணுமை - குடமுழா.

கசு - ௬. நால்வகை மரபின்..........தலைக்கோலரிவையும்

(இ - ள்.) அங்ஙனம் பிழையாமலுணர்ந்து நால்வகைப்பட்ட மரபினை யுடைய அவினயநிலத்தினும் எழுவகைப்பட்டநிலத்தினும் சென்றெய்தும்படி கோப்புக்களைவிரிக்கும் மலைத்தற்கரிய மெய்திய அரிவையும், சிறப்பினையுடைய [1] தலைக்கோற்பட்ட

---

[1] சிலப்பதிகாரம், க: கதக.

கச.—ஊர் காண் காதை.

க.அரு

அவற்றுள், அவினயநிலம் நான்காவன:—நிற்றலும், இயங்கலும், இருத்தலும், கிடத்தலுமென்பன ; என்னை ? "நிற்றலியங்கல்........................அவினயக் களனே" என்றாராகலின். எழுவகைநிலமாவன :—ச ரி க ம ப த நி என்னுமெழுவகைப்பட்ட எழுத்தடியாகப்பிறக்கும் குரன்முதலாகிய ஏழும்

கரு௫. வாரம் பாடுந் தோரிய மடந்தையும்—

(இ - ள்) வாரப்பாட்டினைப்பாடும் தோரியமடந்தையும்,

இவள் ஆடிமுதிர்ந்தபின்பு பாடன்மகளாய் ஆடன்மகளிர்காலுக்கு ஒத்த நிறுத்துப்பாடுங்கால் இடந்தூண்சேர்ந்தியலுமவள் ; என்னை ? "இந்நெறி

வகையால்..............மரபிற் றேரிய மகளே", "தலைக்கோ லரிவை............ ... . ......தோரிய மகளே" என்பனவற்றான றிக

வாரமாவது - பற்று அஃது இருவகைப்படும்; ஓரொற்றுவாரம், ஈரொற்றுவாரமென. அளவு நாளத்து ஒரு மாத்திரையும், இரண்டுமாத்திரையும் பெறறு வருமெனக்கொள்க.

கஉ௬. தலைப்பாட்டுக் கூத்தியும்—

(இ - ள்.) தலைப்பாட்டைப்பாடுங்கூத்தியும்,

இடைப்பாட்டுக் கூத்தியும்—

(இ - ள்.) இடைப்பாட்டைப்பாடுங்கூத்தியும்,

தலைப்பாட்டாவது உகம்; இடைப்பாட்டாவது ஔகம். இவர் கூட்டக் கூத்தியர். இவையெல்லாம் முன்னம் அரங்கேற்றுகாதை முதலியவற்றான் விரித்துரைத்தனவாதலின், ஈண்டும் விரித்துக்கூறுதல் 'கூறியது கூறல்' என ஆங்குற்றமாமெனின், ஒக்கும்; ஆண்டுக் கூறிய அடிகளே ஈண்டும் கூறுதலானும், இக்காதை ஒன்றனையுமே கற்றுணர்வார்க்குப் புலப்படவேண்டுதலானும் ஈண்டும் விரித்துரைக்கப்பட்டன.

கஉ௭ - கூ.

நால்வேறு வகையின்.........முறைமையின் வழா

(இ - ள்.) மேற்கூறிய தலைக்கோலரிவைமுதலான நால்வேறுவகையோடுங் கூடி யாவரும் விரும்பத்தகும் முறைமையினால் ஒன்றுமுதல் ஆயிரத்தெண் கழஞ்சிறுக நாடோறும்பெறும் முறைமையினின்றும் வழுவாத,

என்றது தந்தம் ஆடல் பாடல் அழகென்னுமிவற்றாற்பெற்ற சீரின்வழித்தாகிய ஒன்றுமுதல் ஆயிரத்தெண்கழஞ்சிறுக நிச்சயிக்கப்பட்ட முறைமை; [1] "ஒப்ப வொன்றாகி யாக வாயிரத் தோரெட் டுறுச், செப்பி" என்றார்பிறரும்.

[1] சீவகசிந்தாமணி, கஎள - பார்க்க; "ஒன்று முதலாக வோரெட்டுஅத்த, வாயிரங் காசுமாத்த பரிசத்து...ஏரிள மகளிர்" (பெருங் க. கஞ: அஉ - ௯.)

(பி - ம்.) * "தலைக்கோ லரிவை தானத்தொடு பொருந்த, மலைத்தரு பாடலு மாடலு மிக்கோ, யெதிற்படு கோதைத் தோரிய மகளே"



கசு() - கூஎ. [1] தாக்கணங் கனையார்......இருபெரு வீதியும்

(இ - ள்.) தீண்டவருத்தும் அணங்குபோல்வாருடைய கண்ணாகிய வலையி

லகப்பட்ட அப்பொழுதே பெறுதற்கரிய தமது அறிவுமுதலியன கெடத்

தவத்

தோராயினும் நல்ல அவிழ்ந்த மலர்தோறுஞ்சென்று

அவற்றின்றேனைப்பருகிப்

பின்பாராதுசெல்லும் வண்டுபோல ஒருவழித்தங்காது

புதுவோர்ப்புணர்ந்து

செல்லும் காமுகராயினும் காமவின்பத்திற்குப்புதியோராய்

முன்புநுகர்ந்தறி

யாத பேதையோராயினும் நாடோறும் புணர்ச்சிமயக்கத்தோடுகூடிய

இனிய

துயிலோடே சங்குவிக்கப்படும் பண்களையும் அவற்றின்

திறங்களையும்பழித்த

இனியசொல்லையுடைய அறுபத்துநான்கென்றுதொகுத்த

கலைகளைவல்லோரா

கிய பதியிலாருடைய இருவகைப்பட்டவீதிகளும்,

அணங்கு - தெய்வமகள் ஆங்கு, அசையுமாம். நகை,

ஆகுபெயராகிய

இடக்கர்; அன்றி அவர் காமக்குறிப்புநிகழாமைக்கும் சுகையுமாம் பண்
நான் காவன:—பாலை குறிஞ்சி மருதம் செவ்வழியென்பன.
அவற்றின் திறங்களா
வன:—பாலைக்குப் புறம் - தேவாளி ; அருகு - சீர்கோடிகம் ; பெருகு -
நாகராகம்
குறிஞ்சிக்குப் புறம் - செந்து; அருகு - மண்டிலம் ; பெருகு - .அரி
மருதத்திற்
குப் புறம் - அகரி ; அருகு - சாடவேளாகொல்லி ; பெருகு - இன்னராம்.
செவ்
வழிக்குப் புறம் - வேளாவளி ; அருகு - சீராகம் ; பெருகு - சாதி. பிறவும்
வந்த
வழிக் கண்டுகொள்க.

இருபெருவீதியாவன :—சிறுதனம் பெருந்தனம்
இத்துணையும் வீதிகளைச் சிறப்பித்துக்கூறி, இனி அங்காடிவீதி
கூறுவார்,
கம்மியர்முதலாயினர் பண்ணியிரப்பன கூறுகின்றார் :—

கசுஅ. வையமும்—(இ - ள்.) கொல்லாப்பண்டியும்,
பாண்டிலும்—(இ - ள்.) தேர்வட்டையும்,
மணித்தேர்க் கொடிஞ்சியும்-(இ-ள்.) அழகிய
தேர்மொட்டும்

கசுகூ. மெய்புகு கவசமும்—
(இ - ள்.) மெய்புகுதற்கிடமாகிய கவசமும்,
வீழ்மணித் தோட்டியும்—
(இ - ள்.) விரும்பப்படும் மணிகளழுத்தின
அங்குசங்களும்,

கஎ0. அதள்புனை யரணமும்—(இ - ள்.) தோற்கைத்தளமும்,
அரியா யோகமும்—
(இ - ள்.) கருவிவிலக்காகப் புனைந்த அரைப்பட்டிகையும்,

அரிதல்செய்யாத யோகமென்க; வியாதிகளைக்கெடுக்கும்

மருந்தென்று
மாம்.

[1] தாக்கணங்கு: குறள், ௬௦அடீ

## ௩௪.—ஊர் காண் காதை. ௯அரு

௧௭௧. வளைதரு குழியமும்—(இ-ள்.) கட்டுக்குழியமும்,
வால்வெண் கவரியும்—(இ-ள்.) மிகவும் வெள்ளிய
சாமரமும்,

௧௭௨. ஏனப் படமும்—(இ-ள்.) பன்றிமுகக்கடகும்,
கிடுகின் படமும்—(இ-ள்.) தோற்கடகும்,

௧௭௩. கானப் படமும்—(இ-ள்.) கானமாகியகடகும்,
கானத்துள்ளனவெல்லாம் எழுதுதலிற்கானமாயிற்று.
காழூன்று கடிகையும்—(இ-ள்.) குத்துக்கோல்களும்,

௧௭௪. செம்பிற் செய்நவும்—(இ-ள்)
செம்பாற்செய்தனவும்,
கஞ்சத் தொழிலவும்—(இ-ள்.)
கஞ்சத்தாற்செயதனவும்,

௧௭௫. வம்பின் முடிநவும்—(இ-ள்.) புதுமையாக
முடிவனவும்,
என்றது, அல்லிக்கயிறு குசைக்கயிறு முதலியன ; வம்பு-
கயிறுமாம்.

மாலையிற் புனைநவும்—(இ-ள்.) மாலையின்வர்க்கமாகப்
புனைவனவும்,

என்றது தூக்குவர்க்கம்; இடையான் மாலைவிசேடங்களாகப் புனைந்துவிற் பனவும் பூமாலைவர்க்கமுமென்ப

கஎசு. வேதினத் துப்பவும்—

(இ - ள்.) ஈர்வாட்டொடக்கத்தனவாகிய கருவிகளும்; துப்பு - கருவி.

கோடுகடை தொழிலவும்—

(இ - ள்.) ஆனைக்கொம்புமுதலியவற்றைக்கடையும் தொழிற்குரிய கருவிகளும்,

கஎஎ. புகையவும்—(இ - ள்.) அகிற்புகைக்குறுப்பாயுள்ளனவும்,

அவை "நேர்கட்டி செநதேன..............ஆறு" என்பன.

சாந்தவும்—

(இ-ள்.) மயிர்ச்சாந்துக்கு உறுப்பாயுள்ளனவும;

மெய்ச்சாநதுறுபபுமாம்.

பூவிற் புனைநவும்—

(இ - ள்.) பூவாற்புனையப்படும் மாலைவிசேடங்களாயுள்ளனவும்,

கஎஅ - கூ. வகைதெரி வறியா..........அங்காடி வீதியும்

(இ - ள்.) இச்சொல்லப்பட்ட வகைகள் இன்னதற்கு இவையெனத் தெரிதற்கரிய இவ்வளங்கள் தலைமயங்கியிருக்கின்ற அரசரும் காண்டற்குவிரும்பப் படும் செல்வத்தையுடைய அங்காடித்தெருவுமென்க.

இங்ஙனம் பெரியகடை ஒருவாற்றாற்கூறி, இரத்தினக்கடையும் கடையுங்கூறுவார்.

பொற்

கஅ0 - அக. காக பாதமும்..........நலங்கே

மொளியவும்
இனி அம்மணிகளொன்பதிலும் வயிரத்திற்குச்
சுக:
குற்றமும் குணமுங்கூறுவார். அது சிலப்பதி
காரம்

(இ - ள்.) நூலோரால் குன்றுதலையுடையவென்று வரைந்துசொல்லப்பட்ட குற்றம் பன்னிரண்டினுள், காகபாதமும் களங்கமும் விந்துவும் எகையுமென்னும் இக்குற்றங்கள்நான்கும் நீங்கிக் குன்றாவாகிய குணங்களெட்டையும் வருணநான்கினிறங்களையும் இந்திரசாபம்போலும் ஒளியையுமுடைய வயிரச்சாதியும்,

இவற்றுட் குற்றம் பன்னிரண்டாவன :—[1] சுரைமலம் கீற்று சப்படி பிளத்தல் துளை கரி விந்து காகபாதம் இருத்து கோடியில்லை கோடிமுரிந்தன தாரைமழுங்கலெனவிவை; [1] "சுரைமலங் கீறுசப் சப்படி பிளப்பு, துளைகரி விந்து காக பாத, மிருத்துக் கோடி கிலாதன முரிக, தாரை மழுங்க றன்னோடு, ஈராறும் வயிரத் திழிபெனமொழிப" என்றாராகலின் இனிக் குணங்களெட்டாவன: எட்டுப்பலகையும், அறுகோடியும், தாரையும், சுத்தியும், தராசமுமெனவிவை; [1] "பலகை யெட்டுங் கோண மாறு, மிலங்கிய தாரையுஞ் சுத்தியுந் தராசமு, மைந்துங் குணமென் றறைந்தனர் புலவ, ரிந்திர சாபத் திகலொளி பெறினே" என்றார். நால்வகைவருணத் தொளியாவன: [1] "அந்தணன் வெள்ளை யரசன் சிவப்பு, வந்த வசியன் பச்சை சூத்திர, னந் கயில் கருமையென்

றைந்தனர் புலவர் " இனி மிக்ககுற்றங்கள் நானகின் பயனுவன:
"காக பாத
நாகங் கொல்லும்." "மலைப்பிரி யாது நிலைந்தரு கிளைகெடும்" "விந்து
சிந்தை யிற் சந்தா பந்தரும்" "கீற்று வரலின யேறவர் மாய்வர்"
எனவரும். இனி வருணநான்கின்பயனுவன :—"மறையோ ரணியின்
மறையோ ராகிப், பிறவி யேழும் பிறந்துவாழ் குவரே" "மன்னவ
ரணியின் மன்னவர் சூழ, விந்தில வேந்த ராவ ரெழுபிறப்பும்" "வணிக
ரணியின் மணிபோன மலிநது, தணிவற வடைநத தரணியில்
வாழ்வர்" 'சூத்திர ரணியிற் றோகையா கனகநெல், வாயப்ப மன்னி
மகிழ்ந்துவாழ் குவரே" எனவரும் ரேகை - இரேகை இயல்
பெனவே பலகை எட்டெனபதூஉம், கோடி ஆறென்ப தூஉம் பெறுதும்.
குன்று வென் பதனை அருததாபத்தியாக்கிக குன்றுதலையுடைய வெம்க்
குற்ற நானகிறகு மேற்றுக. நுழைநுனிகோடி - இருபெயரொட்டாய
மிகவும் கூர்த்தகோடி யென்பதாயிற்ற . ஒளியவென வே குறிப்பெச்
சமாய வலனென்பாயிற்று

முன்னர் வலனென்பாங்கய வயிரச்சாதிகூறி, இனி அவனை *
வயிற்றிற்பித் தத்தைக் கொத்திவிழுங்கியகருடனை நகைத்தலாலுமிழ,
அஃது இமவான்முதலிய
பன்மலைகளினும் ஊறிப்பிறத்தலிற கருடோறகாரமென்று
பெயர்பெறற மரக
தச்சாதிகூறுவார்.

கருச - ரு.

ஏகையு மாலையும்...............கதிரொளியவும

(இ - ள்.) ஏகையும் மாலையுமென்னும் குற்றங்களை இருளென்னும்
குற்றத் தோடேநீக்கின பசுமைநிறைந்த மெய்யையுடைய பசிய
கதிரொளிபரந்த மரகதச் சாதியும்,

[1] திருவால. உகு: கஅ.
(பி - ம்.) * 'வயிற்றின்புறத்தைக்'

## கச.—ஊர் காண் காதை.

கூஅஎ

இதற்குக்குற்றமெட்டுள; அவை:—[1] கருகல் வெள்ளை கல் மணல் * கீற்று பொரிவு தராசம் இருகுதலெனவிவை; என்னை? "கருகுதல் வெள்ளை கன் மணல் கீற்றுப், பொரிவு தராச மிருகுதன மரகதத், தெண்ணிய குற்ற மிவை யென மொழிப" என்றாராகலின். இவற்றுள், மிக்க குற்றமுடையன இம் மூன்றுமென்றாரென்க ஏகை - இரேகை=கீற்று; மாலை - தார்; இருள் - கருகுதல். பாசார் மேனிப் பசுங்கதி ரொளியென்ற மிகையானே குணங்களும் எட்டென்பதுகொள்ளுதும்; "நெய்த்தல்கிளி மயிறகழுத் தொத்தல்பைம் பயிரிற், பசுத்தல் பொன்மை கனவுடன் பசுக்கல், † பகுதி பாயதல் பொன்வண் டின் வயி, றொத்துத் தெளிதலொ டெட்டுங் குணமே" எனறாராகலினெனக்கொள்க.

கஅசு - ஏ. பதுமமு நீலமும்........விளங்கிய சாதியும்

(இ - ள்.) நூல்களில்விதித்த முறைபிறழாவாய விளங்கிய பதுமமும் நீலமும் விந்தமும் படிகமுமென்னும் நால்வகைச்சாதி மாணிக்க வருக்கமும்.

விதிமுறைபிழையாவெனவே பிறப்பிடமும், வருணமும், பெயரும், குணமும், குற்றமும், நிறமும், விலையும், பத்திபுமென்னுமிவையும் பிறவுமடங்கின; என்னை? [2] "மாணிக் கந்தியா வருக்குங் காலைச், சமனொளி சூழ்ந்த வொருநான் கிடமு, நால்வகை வருணமு நவின்றவிப் பெயரும், பன்னிரு குணமும் பதினறு குற்றமு, மிருபத் தெண்வகை

பிலங்கிய நிறமு, மருவிய விலையும் பக்தி பாய ந லு, மி வையென மொழிப
வியல்புணர்ந் தோரே" என்றாராகலின். இவற்றுள், ப தும்ம் - பதுமராகம்
; சாதுர ங்கமென்பதுமது. நீலம் - நீலகந்தி ; சௌகந்தியென்ப துமது.
வி ந்தம் - குருவிந்தம் ; இரத்தவிந்துவென்பதுமது படிதம் - கோவாங்கு ;
என்னை? 'வன்னியிற கிடக்கும் வருணராற பெயரு,
முன்னிய
கும்மே"

சாதுரங்க மொளிர்கு ந விந்தகஞ், சௌகந்தி கோவாங்கு தாமு
எ-ம், [2] "தாமரை கழுநீர் சாதகப் புட்கண், கோப மின்மினி
கொடுங்கதிர் விளக்கு, மாதுளப் பூவிதை வன்னியீ ரைந்து, மோதுசா
தரங்க வொளியா கும்மே" எ ம் 'திலக முலோத்திரஞ் செம்பருத்
திப்பூக், கவிர் மலர் குன்றி முயலுதி
ரமோ, சித்தூரங் குக்கிற் கண்ணென வெட்டு, மெண் ணிய குருவிந்த
மன்னிய நிறமே" எ - ம், 'கோகிலக்கண் செம்பஞ்சு கொய்ம்
மலர்ப் பலாச, மசோக பல்லவ மணிமலர்க் குவளை. யிலவத் தலர்களென்று று
குணமுஞ், சௌகந்திக்குச் சாற்றிய நிறனே" எனவும், "கோவைநற் செங்கல்

[1] திருவால. உ௰: உ௰, உக - ஆம் பாடல்களைப் பார்க்க.

[2] திருவால. உ௰ : கக - ஆம் பாடல் முதலியவற்றைப் பார்க்க.
[3] "சாதகப் புட்கண் டாமரை கழுநீர், கோப மின்மினி கொடுங்கதிர் விளக்கு, வன்னி மாதுளம் பூவிதை யென்னப், பன்னுசா தரங்க வொளிக்குணம் பத்துஞ், செம்பஞ் சாத்தந் திலக முலோத்திர, முயலின் சோரி சிந்துரங் குன்றி, கவிரல ரென்னக் கவர்நிற மெட்டாங், குருவிந் தந்நற் குறித்தன நிறமு, மசோக பல்லவ மலரிசெம் பஞ்சு, கோகிலக் கண்ணி லிலவலர் செம்பொனந், தருசௌ கந்தி நன்னிற மாதுஞ், செங்கல் குராமலர் மஞ்சள் கோவை, குங்கும மஞ்சிற் கோவாங்கு நிறமும்,... .........இவையெனக் கூறிய நிறையருட் கடவுள்" என்றார் கல்லாடத்திலும்.
(பி - ம்.) * 'சாதரு' † 'வத்தி'

குராமலர் மஞ்சளெனக், கூறிய நான்குங் கோவாக்கு சிறவே"
எனவும் சொன்னார். ஒழிந்தனவும் விரிப்பின் உரைபெருகும் ;
வந்தவழிக்கண்டுகொள்க.

கஅஅ. பூச வுருவிற் பொலந்தெளித் தனையவும்;—

(இ - ள்.) பூசத்தினது உருவினையுடைய பொன்னை மாசறத் தெளிய
வைத்தாலொத்த புருடராகவருக்கமும்,

கஅக. தீதறு கதிரொளித் தெண்மட் டுருவவும்;—

(இ - ள்.) குற்றமற்ற ஞாயிற்றொளியெனத் தேன்துளியெனச் சொல்லப் பட்ட வயிரியவருக்கமும்,

கஅ௦. இருடெளித் தனையவும்—(இ - ள்) இருளைத் தெளியவைத்தா
லனைய நீலமணிவருக்கமும்,

இதற்குச் சாதிநான்கும், குணம் பதினொன்றும், குற்றம் எட்டுமெனக்
கொள்க ; என்னை? [1] "நீலத் தியல்பு நிறுக்குங் காலை, நால்வகை வருணமு
ண்ணுமா காமுவ, குணம்பதி னொன்றுங் குறைபிரு நான்கு, மணிவோர்
செயலு மறிந்திசி னோரே" என்றாராகலின்; "வெள்ளை சிவப்புப் பச்சை கருமை
யென், றெண்ணிய நாற்குலத் திலங்கிய நிறமே", "கோகுலக் கழுத்துக் குவளை
கரும்ப, ராகுலக் கண்க ளவிரிச் சாறு,............... காயா நெய்தல் கனத்தல்
பத்தி, பாயத லெனக்குணம் பதினொன் றாமே" என்பன. இனிக்
வழிக் கண்டுகொள்க.

குற்றம் வந்த

இருவே றுருவவும்—(இ - ள்.) மஞ்சளும் செப்பும் நிறத்தையுடைய கோமேதகவருக்கமும்,

கலந்தாலொத்த

கக - உ. ஒருமை... ..................மணிகளும்

(இ - ள்.) ஒருமுதலிற்றோன்றி வேறுபட்ட ஐந்துவனப்பினையுடைய மாணிக்கம் புருடராகம் நீலம் கோமேதகம் வயிரமென்னும் ஒளிவிடுமணிகளும்,

இவை ஒருவயிற பல்பிறப்பு

கரு - சு. காற்றினு

மண்ணினும............தொகுதியும்

(இ - ள்.) காற்றினும் மண்ணினும் கல்லினும் நீரினுமுண்டாயத் தோற்றிய மிக்குற்றங்கள் ஒருதுகளளவும் இல்லையாதலாலே தெளிந்த ஒளியையுடை யனவும் * வெள்ளி அங்காரகன் போல வெண்ணிர்மை செந்நீர்மையையுடைய வாய் உருண்டனவுமான முத்தவருக்கமும்,

காற்றேறு மணலேறு கல்லேறு நீர்நிலையென் பன மிக்குற்றங்கள்; பிறவும் குற்றங்கள்பலவுளவாயினுமென்க சந்திரகுரு - வெள்ளி; வெள்ளி, அங்காரக னெனபன மிக்க குணமுடையன ; பிறவும் குணங்களுளவாயினுமெனக்கொள்க. வட்டம் - † கவுவட்டம்.

---

[1] திருவால. உ௫: கக - ஆம் பாடலைப் பார்க்க.

பி - ம்.) * 'சந்திரன் வெள்ளி' † 'நவேட்டம்'

கச.—ஊர் காண் காதை.

க. அக

கஅஎ - அ. கருப்பத் துளையவும்......செங்கொடி வல்லியும்

(இ - ள்.) கருப்பத்தே துளைபட்டனவு ம் கல்லிடுக்கிற்புக்கு முடங்குபட்ட னவும் திருக்குமுறுக்குண்டெழுந்தனவுமென்னும் இக்குற்றங்கணீங்கிய செம் மைமிக்குக் கொழுவிதாகவளர்ந்த கொடிப்பவளவருக்கமும்,

இவை மிக்குற்றங்கள் ; பிறவும் குற்றங்களுளவாயினுமெள்க்கொள்க. இனிக் குணமிக்குக் குற்றங்கணீங்கியன, நிறமும் உருட்சியும் [1] சிந்தூரமும் ஈச்சங்காயும் முசுமுசுக்கைக்கனியும் தூதவழு துணம்பழமும் போல்வன வெனக்கொள்க.

கஅஅ - உ0()- வகைதெரி........ ..............வீதியும்

(இ - ள்.) இவ்வொன்பதுவகைப்பட்ட மணியின் பிறப்புமுதல் சிறப்பீறு கிய வகைகளைத் தெரியவல்ல வணிகர்தொகுதலாற் சிறப்புப்பெற்றோங்கிப் பகை வரால் தெறுதறறொழிலே எக்காலத்தும் கண்டறியாத பயன்மிக்க இரத்தினக் கடைத்தெருவும்,

பகைவர்தெறுதலைக் கனவிலுநினைந்தறியாதவெனவுமாம்.

உ ,க - உ0ச. சாதரூபங் கிளிச்சிறை............வீதியும

(இ - ள்.) சாதரூபமும் கிளிச்சிறையும் ஆடகமும் சாம்பூநதமுமென்னும் நால்வகைச்சாதிப் பெயர்பெற்றோங்கிய கோடபாட்டையுடைய பொறபேதத் தைப் பகு த்தறியும் பொன்வாணிகர் எவ்விடத்து எப்பொன் உளதென்று ஐயுறுந்துன்பமொழிக்கும்படி இவ்விடத்து இப்பொன்னுள்ளதெனவிளக்கக் கொடிகள் வயின்றோறுமெடுக்கும் நன்மைபொருந்திய பொறகடைகளும்,

ஒழித்து, ஒழிப்ப ஆங்கு - அந்தவிடங்களிலே.

உ0ரு - எ. நூலினு மயிரினும்.........அறுவை வீதியும

(இ - ள்.) நுண்ணிய பருத்திநூலினும் [2] எலிமயிரினும

பட்டுநூலி னும் தத்தம் பகுதிகளால் செயப்பட்டு முற்கூறிய துகில் வருக்கங்களில் ஒவ்வொன்றை நூறுகத் தெரி ந்தடுக்கப்பட்ட அடுக்குப் பலநூறுகிய மடிப் புடைவைகள் நெருங்கவைத்த புடைவைக்கடைகளும்,

புடைவைக்கடைகளுக்கு வாசங்கொளுத்துதலின், 'நறுமடி' என்றார்

உ0அ - கக. நிறைக்கோற்

றுலாத்தர்............கூலவீதியும்

(இ - ள்.) நிறுக்கும்துலாக்கோலையுடையராய் மறிக்கும் பறையையுடை யராய் அளக்கும் மரக்காலையுடையராய்த் தரகுசெய்வார் நின்றுழிநில்லாது எங்கணும் தடுமாறும்படி எக்காலமும் பெரிய மிளகுபொதியுடனே பாக்கும் நிறுக்கும் வேறு பண்டப்பொதிகளும் ஈரெண்வகைத்தாகிய கூலக்கடைத்தெருவும்,

கூலங்களுக்குவித்த

[1] திருவாச. உ௯: உ0 - ஆம் பாடலைப் பார்க்க.

[2] சீவகசிந்தாமணி, உகூஅகூ - ஆம் பாடலைப் பார்க்க.



பறைக்கட்பராரை - பராரைக்கட்பறையென்க. என்றது பரிய அரையையும் இரும்பால் வாயமட்டாகக்கட்டின கண்ணையுமுடைய பறையென்றபடி. அம்பணம் - தரகரளக்குமரக்கால். காலமன்றியுமென்றற்கு இரவும் பகலுமெனவுமாம். கருமை - பெருமை இக்கண் முடைக்கேற்றுக ; கறிக்கேற்றினுமமையும்; மூடை

நாலவேறுதெருவும் சந்தியும் சதுக்கமும் ஆவணவீதியும் மன்றமும் கவலையும் மறுகும் ஆகிய இவ்விடங்களில் பந்தர்கீழ் விற்றிரிந்த காவலனூரைக் [1]காவலன் கண்டு மகிழ்வெய்திப் பெயர்ந்தானென வினைமுடிக்க.

இது நிலைமண்டிலம்.

---

[1] அகநானூறு, அக.

## பதினைந்தாவது

# அடைக்கலக்காதை.

[1] நிலந்தரு திருவி னிழல்வாய் நேமி
[2] கடம்பூண் டுருட்டுங் கௌரியர் பெருஞ்சீர்க்
கோலின் செம்மையுங் குடையின் றண்மையும்
வேலின் கொற்றமும் விளங்கிய கொள்கைப்
[3] பதியெழு வறியாப் பண்புமேம் பட்ட
மதுரை மூதூர் மாநகர் கண்டாங்
[4] கறந்தரு நெஞ்சி னறவோர் பல்கிய

௬௯. மாநகர்மருங்கு - நம்மாநகர் மருங்கினின்றும். ஈண்டு - இவ்விடத்து; என்றது மதுரையை.

எ0. என்செய்தனையென்றது செய்தவருமை என்னென்று வியந்தது.

௬௯ - எ0. வழியிடை நினக்குவரும் தீங்கு ஒன்றும் கருதாது வென்றுயான்சொல்ல........................................

எழுக

எக. 'அறவோர்க்களித்தல்' என்பதுமுதற் கண்ணகிவார்த்தை.

எக. அறவோர் - துறவாது விரதங்காத்தோர்.

எஉ. துறவோர்க்கு - துறந்தோரை. எச. பெருமகன் - கோவலன்மாதா.

எச - ரு. பெரிய புகழையும் தலையான உற்சாகத்தையுமுடைய கிழவன் - கோவலன்பிதா; பெரிய பொருளைத் தன்னிடத்தேயுடைய கிழவனென்றுமாம்.

மாநிதிக்

மாநிதிக் எ௬ - ௬. கரந்தொழுகினவாறே அவர்களிருவரும் அற்புளஞ்சிறந்து.

இக்குணத்தைக்கண்டு

---

[1] எக - க: குறள். அ - ஆம் அதிகாரம், பரிமேலழகருரையின் அவதாரிகையில் இவ்வடிகள் மேற்கோளாக வந்துள்ளன.

[2] 'விருந்து' என்பது உயர்திணைபிருபாலையுமுணர்த்துவதற்கு இவ்வடிமேற்கோள்; தொல். சொல். ரு. ௭ - ந.

(பி - ம்.) * 'துறவோர்க்கேதலும்' † 'தலைத்தாள் வண்பெருஞ்'

வற்புளஞ் சிறந்தாங் * கருண்மொழி யளைஇ
யெற்பா ராட்ட யானகத் தொளித்த
நோயுந் துன்பமு நொடிவது போலுமென்
† வாயன் முறுவற்கவ ருள்ளகம் வருந்தப்
போற்றா வொழுக்கம் ‡ புரிந்தீர் யாவது
மாற்றா வுள்ள வாழ்க்கையே னாதலி
னேற்றெழுந் தனன்யா னென்றவள் கூறக்
குடிமுதற் சுற்றமுங் குற்றிளை யோரு
மடியோர் பாங்கு மாயமு நீங்கி
நாணமு மடனு நல்லோ ரேத்தும்
பேணிய கற்பும் பெருந்துணை யாக
வென்னொடு போந்தீங் கென்றுயர் களைந்த
பொன்னே கொடியே புனைபூங் கோதாய்
நாணின் பாவாய் நீணில விளக்கே
கற்பின் கொழுந்தே பொற்பின் செல்வி
சிறடிச் சிலம்பி னொன்றுகொண் டியான்போய்

௬௯. நோய் - உடம்பின் மெலிவு. துன்பம் - மனத்தளர்ச்சி.

௭௧-௨. (பா) நீர் போற்றாவொழுக்கத்தை மேவினீராயிருக்கவும் மாற்றாவுள்ள வாழ்க்கையையுடையேனாகலாலே.

௭௩. ஏற்று - உடன்பட்டு.

௬௯-௭௨. நீர் என்முன் புரிதில்லாமையாலுள்ள வெறுப்பைக் காட்டொழுகினேனாக, அதனை அறிந்து அவர்களுடைய உள்ளஞ்சிறந்து ஆங்கு அருண்மொழியளைஇ எற்பாராட்ட யான் நெஞ்சத்தடக்கிய

நம்பிரிவையும் அதனால்வந்த ஆற்றாமையையுஞ் சொல்லுவதுபோலும் என் மெய்யல்லாமுறுவல்காரணமாக அவர்வருந்தும்படி போற்றுவொழுக்கத்தை மேவினீர்; மாற்றாத உள்ளத்தேனுகை யாலே உடன்பட்டுப் போந்தேன்.

அச. குற்றிளையோர் - குற்றேவன் மகளிர்; எடுத்துக்கை நீடுவாருமாம்.

அரு. அடியோர்பாங்கு - அடியோர் பகுதி; சேவிக்கும் பெயர். தோழிமார்; சேவிக்குந்தோழிமாருமாம்.

ஆயம் -

அக. நல்லோரேத்து - நல்லோராலே புத்தப்படுந்தன்மை.
அச - எ. சுற்றமுதலான நான்குக்கும் நான்கும் துணையாக.
கூ0. நாணினையுடைய பாவாய்; சாரியைசிற்க உருபுதொக்கது.

---

[1] "வறிதகத் தெழுந்த வாயன் முறுவலள்" அகநா. ௫.
(பி - ம்.) * 'அருமொழி' † 'வாயின் முறுவற்கு' ‡ 'புரிந்தாராவது'



மாறி வருவன் மயங்கா தொழிகெனக்
கருங்கய னெடுங்கட் காதலி தன்னை
யொருங்குடன் றழீஇ யுழையோ ரில்லா
வொருதனி கண்டுதன் னுள்ளகம் வெதும்பி
வருபனி கரந்த கண்ண னாகிப்

பல்லான் கோவல ரில்ல நீங்கி
வல்லா நடையின் மறுகிற் செல்வோ
௧௦ா. னிமிலே றெதிர்ந்த திழுக்கென வறியான்
றன்குல மறியுந் தகுதியன் றாதலிற்
[1] றூதெரு மன்றந் தானுடன் கழிந்து
மாதர் வீதி மறுகிடை நடந்து
பீடிகைத் தெருவிற் பெயர்வோ னங்கட்
௧௦௫. கண்ணுள் வினைஞர் கைவினை முற்றிய
நுண்வினைக் கொல்லர் நூற்றுவர் பின்வர
[2] மெய்ப்பை புக்கு விலங்குநடைச் செலவிற்
கைக்கோற் கொல்லனைக் கண்டன னாகித்
தென்னவன் பெயரொடு சிறப்புப் பெற்ற
௧௧௦. பொன்வினைக் கொல்ல னிவனெனப் பொருந்திக்
காவலன் றேவிக் காவதோர் காற்கணி
* நீவிலை யிடுதற் காதி யோவென
வடியே னறியே னாயினும் † வேந்தர்
முடிமுதற் கலன்கள் ‡ சமைப்பேன் யானெனக்

௧௫. ஒருங்குடன் றழீஇ - மேனிமுழுதும் தழுவி.

௧௫ - ௬. துணையில்லாத தனிமையைக்கண்டு விட்டுநீங்கமாட்டாமையால் மனம்வெதும்பி.

௧௧. வல்லாநடை - மாட்டாநடை.

௧00 - ௧0௧. ஏறு எதிர்தல் இடையாறியும் நிமித்தமாதலின் அறிந்திலன்.

௧0௩. மாதர்வீதி - தளிப்பெண்டுகள்தெரு.

கഠ௫ - ரு. சிற்பத்தொழிலெல்லாம் துறைபோகியகொல்லர் ; கம்
வினையாவது - சிற்பம்.
:மாளரது

கഠஎ. மெய்ப்பை - சட்டை. விலங்குநடைச்செலவு
வின், உயர்ந்தோர்வந்தவிடமெங்கும் விலங்கிநடத்தல்.

- இழிகுலத்தோனாத

கഠஅ. கைக்கோல் - பற்றுக்கோடிறு. கഠகூ. சிறப்பு - வரிசை.
ககഠ. ஆதியோ - ஆவையோ.

¹ தாதெருமன்றம்: சிலப். கஎ ; கலி. கഠக.

² "மெய்ப்பை புக்க வெருவருந் தோற்றத்து" முல்லை. ருഠ.
(பி - ம்.) * 'தீவில தெரிதற்கு' † 'வேந்தற்கு' ‡ 'அமைப்பேன்'

கசு—கொலைக்களக்காதை.

ருஉரு

ககடு. கூற்றத் தூதன் கைதொழு தேத்தப்
* போற்றருஞ் சிலம்பின் பொதிவா யவிழ்த்தனன்
மத்தக மணியொடு வயிரங் கட்டிய
பத்திக் கேவணப் † பசும்பொற் குடைச்சூற்
சித்திரச் சிலம்பின் செய்வினை யெல்லாம்

கஉഠ. ‡ பொய்த்தொழிற் கொல்லன் புரிந்துட னோக்கிக்
கோப்பெருந் தேவிக் கல்லதை யிச்சிலம்
பியாப்புற வில்லை யெனமுன் போந்து
விறன்மிகு வேந்தற்கு விளம்பியான் § வரவென்

சிறுகுடி லங்க ணிருமி னீரெனக்
கோவலன் சென்றக் குறுமக னிருக்கையோர்
தேவ கோட்டச் சிறையகம் புக்கபின்
கரந்தியான் கொண்ட காலணி யீங்குப்
பரந்து வெளிப்படா || முன்ன மன்னற்குப்
புலம்பெயர் புதுவனிற் போக்குவ னியானெனக்
கலங்கா வுள்ளங் கரந்தனன் செல்வோன்
கூடன் மகளி ராடற் றோற்றமும்
பாடற் பகுதியும் பண்ணின் பயங்களுங்
காவல னுள்ளங் கவர்ந்தன வென்றுத
னூட னுள்ள முள்கரந் தொளித்துத்

---

கககூ. பொதிவாய் - கட்டினவாய். ககஎ. மத்தகமணி - தலையான மணி.

ககஅ. பத்தியாகவகுத்த கேவணம்; கேவணம்-கல்லழுத்துங்குழி. குடைச்சூல் - புடைதாழ்த்தல்; உள்ளுட்டாழ்த்தலுமாம்.

கஉ௦. கொல்லன் புரிந்துடனோக்கி - கொல்லன் தான்மறைத்த சிலம்போடு ஒக்கும்படியைப் பார்த்து.

கஉஉ. போந்து - போய்.

கஉச. சிறுகுடிலங்கண் - சிறுகுடிலுக்கு அருகான அவ்விடம்; அவனிருக்கையருகான தேவகோட்டம்.

ஆவது

கஉரு - கூ. ..... ...அக்கசாலை..............................

௧௨௮. மன்னற்கு வெளிப்படாமுன்னென்க.

௧௨௯. புலம்பெயர் புதுவன் - வேறொரு பரதேசி. தேசத்தினின் றும்வந்தவன் ;

(பி - ம்.) * 'பொற்றஞ் சிறப்பிற் பொறிவாயவிழ்த்து' † 'பசும்பொற்குடைச் சித்திரச்' ‡ 'பொற்றொழிற்கொல்லன் புரிந்துநோக்கி' § 'வருவேன் சிறுகுடி லாங்கண்' || 'முன்னமன்னவற்கு'



தலைநோய் வருத்தந் தன்மே லிட்டுக்
குலமுதற் றேவி கூடா தேக
மந்திர சுற்ற நீங்கி மன்னவன்
சிந்தரி நெடுங்கட் சிலதியர் தம்மொடு
கோப்பெருந் தேவி கோயி * னோக்கிக்
காப்புடை வாயிற் கடைகா † ணகவையின்
வீழ்ந்தனன் கிடந்து தாழ்ந்துபல வேதிக்
‡ கன்னக மின்றியுங் கவைக்கோ லின்றியுந்
துன்னிய மந்திரந் துணையெனக் கொண்டு
வாயி லாளரை மயக்குதுயி லுறுத்துக்
கோயிற் சிலம்பு கொண்ட கள்வன்
கல்லென் பேரூர்க் காவலர்க் கரந்தென்
சில்லைச் சிறுகுடி லகத்திருந் தோனென
[1] வினைவிளை கால மாதலின் யாவதுஞ்

மேவ னுள்ளத் தெண்ணியது முடித்தெனத்
* 1 தீவினை முதிர்வலைச் சென்றுபட் டிருந்த
கோவலன் றன்னைக் குறுகின னாகி
வலம்படு தானை மன்னவ னேவச்
சிலம்பு காணிய வந்தோ ரிவரெனச்
செய்வினைச் சிலம்பின் செய்தி யெல்லாம்
பொய்வினைக் கொல்லன் புரிந்துடன் காட்ட
இலக்கண முறைமையி னிருந்தோ னீங்கிவன்
கொலைப்படு மகனல னென்று † கூறு

மருந்திறன் மாக்களை யகநகைத் துரைத்துக்
கருந்தொழிற் கொல்லன் காட்டின னுரைப்போன்
மந்திரந் தெய்வ மருந்தே நிமித்தந்
தந்திர மிடனே காலங் கருவியென்
றெட்டுட னன்றே யிழுக்குடை மரபிற்
கட்டுண் மாக்கள் துணையெனத் ‡ திரிவது

கஎ0. மருந்திற் பட்டீ ராயின் யாவரும்
பெரும்பெயர் மன்னனிற் பெருநவைப் பட்டீர்
மந்திர நாவிடை வழுத்துவ ராயி
§ னிந்திர குமரரின் யாங்காண் குவமோ
தெய்வத் தோற்றந் தெளிகுவ ராயிற்

கருரு. ஏவலுள்ளத்து - ஏவப்பட்ட
தென - எண்ணியது முடித்தேனென்று;

உள்ளத்தோடே. எண்ணியது முடித்
முடித்து, தன்மைவினை.

கருசு. தீவினையாகி வந்து நிற்கிற வலே. கருஎ. குறுகினனாகி -
குறுகி.

கசுச. (பா) அருந்திறன் மாக்கட்கு அகாகவுரைத்து - இவனிருந்தபடியாற் கள்வனல்லனென்றுரைத்தவர்கள் மனம் பிரியமாக உடம்படும்படி வார்த்தைகள் சொல்லி.

கசுரு. காட்டினன் - ஏதுக்களைக்காட்டி.

கஎ0. மருந்திற் பட்டீராயின் - இவன் மருந்தினால் தப்பினவிடத்து.

கஎங. இந்திரகுமரர் அகப்படாததுபோல......நாமும்
காணமாட்டோம்.

கஎச - ரு. கள்ளர் தங்கள் தெய்வத்தோற்றத்தினை
நினைப்பாராயின். கையிலகப்பட்ட பொருளைக் காட்டியுந்தப்புவர்;
யும் பெயர்குவரென்றுமாம்.

அகங்கையை அவர்க்குக்காட்டி

¹ கடுகை - எ : குறைகுதல், அறுகுதலென்னும் பொருளில் வருமென்பதற்கு இவ் வடிகள் மேற்கோள்; தொல். மூதற்குத்திரவிருத்தி.

(பி - ம்.) * 'நிலினைவிலையிற்' † 'கூறனு மருந்திரன் மாக்க ளகலை வுரைத்து' ‡ 'நிர்வைத்திரதாவிலை வழுத்துவர்' § 'இந்திர திருவின் யாங்காண் குவமோ'

இச



* கையகத் துறுபொருள் காட்டியும் பெயர்குவர்
மருந்தி னங்கண் மயக்குவ ராயி
னிருந்தோம் பெயரு மிடனுமா ருண்டோ
நிமித்தம் வாய்த்திடி னல்ல தியாவதும்
† புகற்கில ரரும்பொருள் வந்துகைப் புகுதினுந்
தந்திர கரண மெண்ணுவ ராயி
னிந்திரன் ‡ மார்பத் தாரமு மெய்துவ
§ ரிவ்விட மிப்பொருள் கோடற் கிடமெனி
னவ்விடத் தவரை யார்காண் கிற்பார்
காலங் கருதி யவர்பொருள் கையுறின்
|| மேலோ ராயினும் விலக்கலு முண்டோ
கருவி கொண்டவ ரரும்பொருள் கையுறி
னிருவில மருங்கி னியார்காண் கிற்பா
ரிரவே பகலே யென்றிரண் டில்லை
கரவிடங் கேட்பினோர் புகலிட மில்லை

** ஆதர்கோ லத்து வாயிலி னிருந்து
†† மாதர் கோலத்து வல்லிருட் புக்கு
விளக்கு நிழலிற் றுளக்கிலன் ‡‡ சென்றாங்
கிளங்கோ வேந்தன் றுளங்கொளி §§ யாரம்
வெயிலிடு வயிரத்து மின்னின் வாங்கத்

---

கஎசு - எ. நம்மிடத்து மயக்குவரென்றால். இருந்தநாம் எழுந்திருந்து போகலாமிடமுமுண்டோ; இருந்தநாம் பெயர்ந்து போகவுமாட்டோமென்று மாம்.

கஎக. புகற்கிலர் - புகார்கள்; பொருள்வந்து கைப்புகுதினும் அதனை பாரென்றுமாம்.

விரும்

கஅ௦. தந்திரகரணம்-களவுநூல்; களவுநூலிற்சொல்லுகிற கிரியையுமாம்.

கஅ௫. மேலோர் - தேவர்.

கஅக. கரவிடம் - களவின்பகுதி. புகலிடம் - ஒளிக்கும்பரப்பு; புகலிடமில்லை - சொல்லின்முடிவில்லையென்றுமாம். (பா) பரவிடமில்லை - பகழ்ந்து முடியவொண்ணாதென்க.

கஅங. இளங்கோவேந்தன் - தென்னவன் தம்பி.

கஅச. வெயிலிடுவயிரவாரத்தை வாங்கவென்க; ஆரத்தைவயிரத்தொளியே ஒளியாகச் சென்று வாங்கவென்றுமாம்.

---

(பி - ம்.) * 'கைபுகத்துட்பொருள்' † 'புகற்கிலரும்பொருள் வந்தகைபுகப' ‡ 'மாக்கேலசுழியெய்துவர்' § 'இவ்விடத்திற் பொருள்' || 'மேலோராகும்' ** 'ஆதர்க்கோலத்து' †† 'மாதர்க்கோலத்து' ‡‡ 'சென்றீங்கு' §§ 'ஆரம்வில்விடு'

துயில்கண் விழித்தோன் றோளிற் காணா
னுடைவா ளுருவ வுறைகை வாங்கி
யெறிதொறுஞ் செறித்த வியல்பிற் காற்றான்
மல்லிற் காண மணித்தூண் காட்டிக்
கல்வியிற் பெயர்ந்த கள்வன் றன்னைக்
கண்டோ ருளரெனிற் காட்டு மீங்கிவர்க்
குண்டோ வுலகத் தொப்போ ரென்றக்
கருந்தொழிற் கொல்லன் சொல்ல வாங்கோர்
திருந்துவேற் றடக்கை * யிளையோன் கூறு
நிலனக ழுளிய னீலத் தானையன்
கலனசை வேட்கையிற் கடும்புலி போன்று
மாரி நடுநாள் வல்லிருண் மயக்கத்
தூர்மடி கங்கு லொருவன் றோன்றக்
கைவா ளுருவவென் கைவாள் வாங்க
வெவ்வாய் மருங்கினும் யானவற் கண்டிலே
னரிதிவர் செய்தி யலைக்கும் வேந்தனு
முரியதொன் றுரைமி னுறுபடை யீங்கெனக்
கல்லாக் களிமக னொருவன் கையில்
வெள்வா ளெறிந்தனன் விலங்கூ டறுத்தது
புண்ணுமிழ் குருதி பொழிந்துடன் பரப்ப
மண்ணக மடந்தை வான்றுயர் கூரக்

காவலன் செங்கோல் வளைஇய வீழ்ந்தனன்
கோவலன் பண்டை யூழ்வினை

யுருத்தெனன்.

கககூ - கூ. அவன் உடைவாளுருவ உறையைத் தன் கையிலேவாங்கி அவ்வாளெறியவாங்குந்தோறும் உறையைச் செறித்தான்; அதிலே அலசிப் பின்பு மல்லாலே காணகினைத்தவனை நின்ற தூணைக்காட்டித் தான்மறைந்தான்.

உ00. இவர்க்கென்றான், இவனையுங் கள்ளனாக்கி.

உ0உ - ரு. அங்குவந்து இவர்களுடனின்றானொருவன்

சொல்லுவான்:—

உகக. உரியது - இனிச்செய்வது.

உகஉ. கல்லாக்களிமகன் - கல்வியின்மையின் மயங்கினமகன்.

உகரு. வாளெறிந்தனன்..................விலங்கூடறுத்தது - ஊடறுத்தது அந்தவாளெங்க; அறுத்தது, மூற்று.

குறுக்காக

உகசு. அதனாலே விழுந்தான்.

உ0எ - கசு. ஒருகள்ளனை யான்கண்டேன்; கைவாளை உறைவிட்டு நீக்க அவனை ஓரிடத்திலுங்கண்டிலேன்; ஆதலின் இவர்செய்தி தெரியாது; இவனை நாம் கொல்லாதே தப்பவிடில் அரசன் நம்மை வருத்தும்; இனி உரியது செய்க வென, ஒருவன் வாளாலெறிந்தான்; அது விலங்க ஊடறுத்தது; விழுந்தான்.

உகஎ. உருத்து - உருப்ப.

(பி - ம்.) * 'இங்ஙபோல்சொல்லும்'

உகஅ சிலப்பதிகாரம்

நேரிசை வெண்பா.

நண்ணும் இருவினையு நண்ணுமின்க ணல்லறமே கண்ணி

தன்கேள்வன் * காரணத்தான் - மண்ணில் வளையாத செங்கோல் வளைந்ததே பண்டை விளைவாகி வந்த வினை.

---

"நண்ணும்"-கண்ணகிதன் கேள்வன்காரணமாக வளைந்தது; இது பண்டை வினை; இருவினையும் நண்ணும்; ஆதலால் உலகத்தீர், அறஞ்செய்மினென்று இளங்கோவடிகள் அருளிச்செய்தது.

---

க - உ. அரும்பெறற் பாவையை..............மடந்தை
(இ-ள்.) தனக்குப் பெறுதற்கரிய பாவைபோல்வாளைக்

கவுந்தியடிகளால்
அடைக்கலங்கொடுக்கப்பெற்ற மிகவும்பெரியதாகிய உவகையையுடைய யர்குலத்திற்பிறந்த மாதரியாகியமடந்தை,

இடை

மடந்தை, பருவமன்று; பெண்பாற்பெயர்.

௩ - சு. அளைவிலை யுணவின்..........மனைப்படுத்து

(இ-ள்.) மோர்விலையை உணவாகவுடைய ஆய்ச்சியரோடு இடையர் குடியிருந்த இல்லினன்றிக் கட்டுவேலிசூழ்ந்த காவலையும் அழகுபெறவிட்ட குளிர்ந்த காவணத்தையுமுடைய செம்மண்பூசப்பட்ட சிறிய இல்லாகிய புதிய மனையிலேயிருத்தியென்க.

அளை - மோர். புரிசை - கட்டுவேலி.
கூவற் றூண்டிய" என்றார் புறத்தினும்.

பூவல் - செம்மண் ; [1] "பூவற் படுவிற்

எ - அ. செறிவளை யாய்ச்சியர்..........நாணி ராட்டி

(இ - ள்.) தன்சுற்றத்திலுள்ள செறிந்த வளையையுடைய ளொருடனே தான் நின்று நறிய மலர்க்கோதையினையுடையாளைப் மஞ்சனஞ்செய்வித்தென்க.

ஆய்ச்சியர்
புதரீரான்

க - கஎ. கூடன் மகளிர்..................தொழுது

(இ - ள்.) இக்கூடல்நகரிடத்து மகளிர்கொள்ளும் அருவிலை ஆடகப்பைம் பூணும்செய்த கோலமழித்தற்குச் செய்யாக்கோலமொடுவந்த உமக்கு அடித் தொழிலாட்டி இல்லையென்று கருதற்பாலீரல்லீர்; என்மகள் ஐயைக்னும் அடித்தொழிலாட்டி; யான் உம்மைப் பொன்போலப் பொதிந்துகொள்வேன்; பூங்கோதையையுடைய நங்காய், இன்னமாதலான், இனி ஒன்றற்குங்கவலாது இருப்பீராகவென்றுசொல்லித் தொழுவதுஞ்செய்தென்க.

---

[1] புறநானூறு, ககக. (பி - ம்.) * 'காரணமாமன்னவில்'

கக.—கொலைக்களக்காதை.

கூடன்

கூடன்மகளிரென்றுள், தானறியுமூர் அதுவாகலின். இனிக் கூடன் மகளிர்க்கு அழகைக்கொடுக்கும் ஆடகப்பைம்பூணினது அருவிலையையழித்தற் குச் செய்யாக்கோலமொடு வந்தீர்க்கெனினுமமையும். செய்யாக்கோலம் - புனை யாதவழகு; அவது [1] இயற்கையழகு. வந்தீர்க்கென்றும், காணீரென்றும் உயர் சொல்லால் ஒருவரைக்கூறும் பன்மையாற் கூறினவள் ஈண்டு

நங்கையென்றது ஒருமைபன்மை மயக்கமெனின்,— அற்றன்று; நம்பியெனப் [3] பல்லோர்க் குறித்த முறைநிலைப்பெயர் நங்கையென்று புதல்வர்மனைவியரைக்கூறும் முறைப்பெயராதலின், நங்கையென்றாளென்க; [4] "நாத்தூ ணங்கையொடு" என்ப மேலும். இஃது கருதி இங்ஙனங் கூறினாள்.

அக்காலவழக்கு. கோவலனைத் தனக்கு மகனாகக் இனி வந்தாய்க்கெனவும், காணினெனவும் பாடங் கூறுவாருமுளர்.

கஅ - எ. மாதவத்தாட்டி..............மகனார்க்கினி

(இ - ள்.) மாதவத்தாட்டி நீங்குள்ளநெறியில் ஒருநீங்குமுறுமற் காத்து வருத்தம் சிறிதுமில்லாவிடத்தே கூட்டினளாதலான், இனி நின்கொழுநற்கு இவ்விடத்தில் மனக்கவலையுறுதலுண்டோவென்றாளென்க

இடந்தலைப்படுத்தல் - கூட்டுதல். [5] புறனடைவிதியான் ணோவுதகவு, [6] ணோதகவாயிற்று. நும்மகனார்க்கு - மகனென்பது ஆண்பாற்பெயர்; நும்முடையபுருடனுக்கென்பதாயிற்று; [7] "நினக்கிவன் மகனாய்த் தோன்றிய தூஉம், மனக்கினி யாற்குநீ மகளாய தூஉம், பண்டும் பண்டும் பலபிறப் புளவாற், கண்ட பிறவியே யல்ல காரிகை" என்றார் மணிமேகலையிலும். [7] "கண்போன்ற மாமன் மகள்" என்றார் சிந்தாமணியிலும். ஓகாரம், எதிர்மறை.

கஅ - உக. சாவக நோன்பிகள்...........நீரெனக் கூற

(இ - ள்.) அடிகள் சாவகநோன்பிகளாதலின், நங்கையார் நாத்தூணாருடனே நீங்களும் பகற்பொழுதே யுண்ணும் அடிசில்சமைத்தற்குப் பொருந்தின நல்ல புதுக்கலங்களை விரையக்கொண்டுவந்து கொடுப்பீராகவென்று சொன்னாளாகவென்க.

இயல்
பீற் குன்று மடைக்கலத்துடனே [1]
மாட்சிமையுடையோர்கொடுக்கும் மரபு
போலப் பூவாதுகாய்க்கும் பாகலினுடைய கொழுவிய
திரண்டகனிக்காயும்
வளைந்த வரியையுடைய வெள்ளரிக்காயும் கொம்மட்டிமாதுளங்காயும்
இனிய
மாங்கனியும் வாழைக்கனியும் செந்நெலரிசியும் தம்மிடத்துள்ள பாலும்
நெய்யு
மென்னுமிவற்றைக் கொண்டுசென்று நேரிய வளையையுடையமாதே,
இவற்றைக் கொள்வாயாகவென்று கொடுக்கவென்க.

கோளிப்பாகல், வெளிப்படை; கோளி - பூவாதுகாய்க்கும் மரம். என்னை ? [2] "கோளி யாலத்து" என்றார்; பாகல் - பலா; "முளிதயிர் மிசைபாகன் மென் பழம்" எனவும், [3] "பைம்பாகற பழந்துணரிய, செஞ்சுளைய கனிமாந்தி" என வுஞ்சொன்னார் பாட்டினும். கனிக்காய் - [4]* முதாரிக்காய். வால்வரிக்கொடுங்கா யென்று பாடமோதி, வெள்ளரிக்காயென் பாருமுளர் ; [5] ''அணில்வரிக் கொடுங் காய்" எனப்புறத்தினுங் காட்டினராதலின், கொடுங்காயென்பது பெயர். வரி, அடை. மாதுளங்காய் கூறினர், புளித்தகறி பண்ணுதற்கு. பாற்பயன் - பாலும் பயனும் ; எண்ணும்மை தொக்கு ஒடுவிரிந்து உடனிகழ்பொருளாயிற்று.

உக - ௩.௬. மெல்விரல் சிவப்ப..........காதலற் காக்கி

(இ - ள்.) அங்ஙனம் அவர்கொடுத்த பலவேறுவகைப்பட்ட
பசுங்காய்களைக்
கொடுவாய்க்குயத்தின் மெல்விரல்சிவப்ப விடுவாய்செய்யத் திருமுகம்வியர்த்தது ; செங்கண் சேந்தன ; கரிய இடத்தேயுடைய அட்டிலைக் கண்டனளாய் முகமாறிப் பெயரும்வகை வைக்கோலால் எரிமூட்டிய ஐயையுடனே

தன் கை வல்ல மாத்திரத்தாலே காதலனுக்கு ஆக்கியென்க.

கொடுவாய்க்குயம் - கோடின் வாயையுடைய அரிவாள்; [2] "கூனிக் குயத் தின் வாய்நெல் லரிந்து" என்றார் பொருநராற்றுப்படையினும். விடுவாய் செய்தல் - அரிதல். திரு - அழகு; பெயருமாம். சேந்தன - சிவந்தன. கரி புறவட்டில் - புறம் கரிதான அட்டில்; புறம் - இடம். வையெரிமூட்டிய - வைக் கோலால் எரியைமூட்டிய. கையறிமடமை பாடமாயின், கை அறிந்ததும் அறியாததுமாகவென்க; முன்பு ஆக்கிக் கைதேறினாற்போலவெனவுமமையும்.

[1] மாட்சிமை புடையோர் கொடுக்குமரபு, சொல்லாமலே கொடுத்தல்; "சொல் லாம லேபெரியர் சொல்விச் சிறியர்செய்வர், சொல்லியுஞ் செய்யார் கயவரே - நல்ல, குலாமாலை வேற்கண்ணாய் கூறுவமை நாடிற், பலாமாவைப் பாதிரியைப் பார்" (ஔவையார் பாடல்.)

[2] புறநானூறு, ௩௮; [3] பொருநராற்றுப்படை, ௧௧௧ - ௨.

[4] முதாரி - முதுமை; "முதாரிப்பாண" புறநா. ௧௩௮; இது

[5] புறநானூறு, ௨௪௬. [6] பொருந. ௨௪௨.

(பி - ம்.) * 'உதாயக்காய்'

வழக்கிலுமுள்ளது

## ௧௬.—கொலைக்களக் காதை.

௫௩௧

௩-௫ - ௫௩., தாலப் புல்லின்...........அடிகளிக்கென

(இ - ள்.) புற்களில் தாலப்புல்லினது மிகவும் வெள்ளியதோட்டாலே கைவன்மையையுடையமகள் அழகுபெறப் புனைந்துசெய்த தொழிலையுடைய தவிசிலே தனது செல்வன் வந்திருந்தபின் பு கடிமலரங்கையாற் சுடுமண்மண் டையாற்

காதலனடிமலர் கழீஇயநீரைத் தான்தொழுதனளாபமாற்றி மண்ணக மடந்தையுற்ற மயக்கத்தைத்தான் ஒழிக்கின்றாள்போலத் தன்கையாற் குளிர்ந்த நீரைத்தெளித்துத் தடவி மண்டலமிட்டு ஈனுவாழையினது குருத்தைவிரித்து அதனகத்தே அமுதைப்பெய்து, அடிகள், ஈங்கு சொல்லவென்க

அமுதுசெயதருளுகவென்று

[1] "புறக்கா ழனவே புல்லென மொழிப" என்றாராகலின், தாலப்புல் லென்றார். வால்வெண்டோடு - இளைய வெள்ளிய தோடெனினுமமையும்; [2] "ஊர்திவால்வெள ளேறே" என்றாராகலின். மகடூஉ - பெண்பாறபொதுச் சொல். தவிசு - தடுக்கு. அங்கை - அகங்கை; [3] "அகமென் கிளவிக்குக் கை முன் வரினே, முதனிலை யொழிய முன்னவை கெடுதலும், வரைநிலை யின்றே யாசிரியற்க, மெல்லெழுத்து மிகுத லாவயி னான" என்பதனான்முடிக்க. கழீஇய வென்பதூஉம், அமுதைப்பெயதென்பதூஉம் "முன்னத்தினுணருங்கிளவி"யாற் குறிப்பாற்கொள்ளப்பட்டன. மண்டையென்றது சுடுமண்மண்டையென்றார், புதுக்கலமாதலின். இதனை மண்டையென இழித்துக்கூறினார், முன்னர்ப் பொன் வெள்ளிமுதலியன வழங்குதலின். வழிபாடுதோன்றத் தொழுதனள் மாற்றியென்றார். மண்ணகம், ஒருசொல். மயக்கொழிப்பனள்போல் - மண் மடந்தை தங்கட்கு எதிர்வதுணர்ந்து மயங்கினுளை மயக்கொழிப்பாள் போல. மயக்கம் - அனந்தரென்பாருமுளர். குமரிவாழை - இது பெயரின்வந்த [4] சமாதி யென் னுமலங்காரம். உண்க - இரந்துகோடற்குறிப்பின்கண்வந்த ககரவீற்று வியங்கோள். ஈங்கமுதமுண்கவென்றது, இவையும் பொறுக்கவற்றேயென் னு மிரக்கம் ஆக்கி இருந்தபின் மாற்றித் தெளித்துத் தடவி விரித்து அமுதமுண்க வென்றாளென்க.

சஅ - நூ.

அரசர் பின்னோர்க்கும்............காட்சி யீங்கென

(இ - ள்.) ஓதவும் உணரவுமரிய மறையிடத்து அரசர்பின்னோர்க்குரியவாக விதித்த வாய்ப்பூச்சப் பலியிடுதல் முதலியவெல்லாம் ஒருமுறையாற் கழித்தபின்பு புறத்துநின்ற ஐயையும் மாதரியும் இந்தமதுரையில் இவ்வாயர் பாடியில் யாம்பெற்ற இந்நல்லமுதமுண்கின்ற இந்நம்பி அந்தமதுரையில் ஆயர்பாடியில் அசோதைபெற்ற அந்த நல்லமுதமுண்ணும் புதிய காயாம்பூப் போலும் வண்ணத்தையுடைய கண்ணனேதான் ; இவன் துயர்தீர்த்த இப் பல் வளைத்தோளியும் காளிந்தியாற்றின்கண் தூய நீலமணிவண்ணனைத் துயர்தீர்த்த

---

[1] தொல். மரபு. சூ. அ௫. [2] புறநா. கடவுள்.

[3] தொல்காப்பியம், புள்ளிமயங்கியல், ௨௦.

[4] "உரியபொருளன்றி யொட்புடைப் பொருள்மேற், றரும்வினை சமாதியாகும்" தண்டியலங்காரம்.



பின்னையென்னும் விளக்கோதானென்று உவகைபொங்கி இவரழகு நம் கண்களி னடங்காவென்று புகழ்ந்துகூறவென்க.

அரசர்பின்னோர் - வணிகர். தவ்வை - தாய். விம்மிதம் - அதிசயமுமாம்.

௪௪ - ௯. உண்டினிதிருந்த..........வருகெனப் பொருந்தி

(இ - ள்.) அன்னம் அவர்புகழ இனிது
கோவலனுக்கு அழகிய மெல்லிய சுருளோடே

உண்டிருந்த மிக்கபுகழையுடைய
பிளவையுங்கொடுத்துநின்ற கரிய
பெரிய ஒளியையுடையானை வருகவென்று அருகணைத்தென்க

ஓதி, ஆகுபெயர்.

௫எ - ௬௨. கல்லத ரத்தம்...............யாவது மறியேன்

(இ - ள்.) எம்முடைய முதகுரவர், பருக்கைபொருந்திய சின்னெறியை புடைய அருநெறியைக்கடத்தற்குச் சிறிதும் வன்மைமையயுடையனவோ மடந் தையுடைய அடியென்ற இவ்வெம்மையயுடைய எயினர். ஆறலைக்குஞ்சுரத்தி னெறியிற் போந்ததற்கு இரங்கி என்ன இடும்பையுற்றார்களோ ! யாம் இன்னை மூற்றது கனவோ ! நனவாமாயின் முன்செய்த தீவினைப்பயனோ! யான் இப்பொ ழுது உள்ளங்கலங்குதலான் இவற்றினொன்றையும் அறிகின்றிலேன் ;

என்னுற்றனர்கொல் - இறந்துபட்டார்களோ. மாயம் - கனவு. யாதும் ; பகுதிப்பொருள்விகுதி.

யாவதும் -

௬௩ - எ௦. வறுமொழியாளரொடு.........என்செய்தனையென

(இ - ள்.) வீணரோடும் பரத்தரோடுங்கூடிப் பிறரைப்புறங்கூறும் அவை யின்கண் வெடிசிரிப்புக்குட்பட்டு மறவியிற்பொருந்தி அமைச்சே ·ர விரும்பப் படும் பொருளாகிய நல்ல ஒழுக்கத்தைக்கெடுத்தவெனக்கு இனித் தீக்கதியன்றி நற்கதியுண்டாமோ ; அதுவேயுமன்றி இருமுதுகுரவர்க்குஞ்செய்யும் ஏவலையும் பிழைத்தேன் ; நினக்கும் சிறுமைசெய்தேன் ; இவ்வழுவொழுக்கம் இழுக்கமென் பது சிறிதும்பார்த்திலேன் ; யான் இங்ஙனமாயும் நம்முடையநகரிடத்துநின் றும் இந்நகரிடத்துவருதற்கு எழுகவென் றேனாக, அது முறைமையன்றென மறுத்து என்னோடு ஒருப்பட்டெழுந்தாயே ; நீ என்னகருமஞ்செய்தாயெனக் கோவலன் இரங்கிக்கூறவென்க.

வறுமொழியாளர் - பயனிலகூறுவோர். வம்பப்பரத்தர் - புதிய காமநுகர்ச் சியைவிரும்புங்காமுகர் ; பரத்தையை நுகர்வானும் ¹

பரத்தன். குறமொழி - சிறுசொல்; அஃது பிறரையிகழ்ந்து கூறுதல். நெடுநகைபுக்கு - வெடிசிரிப்புக் குட்பட்டு. பொச்சாப்புண்டு - மறவியிற்பொருந்தி. நச்சு - நச்சப்படும்பொருள். இருமுதுகுரவர் - தந்தைதாயர். ஏவல்பிழைத்தல் - மூதவிருட்பை அவரொழிக்க ஒழியாமை. சிறுமுதுக்குறைவி - சிறியபிராயத்தே பெரிய அறிவை யுடையாள். வழு - பழிப்புரை. எனும் - சிறிதுமென்றபடி. நகர் - தன்மனையு

[1] "பரத்தனென்பதற்கு இப்பொருள்கொண்டே, "பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர், நண்ணேன் பரத்தநின் மார்பு" என்றார்; குறள், ககக; "பண்பில் காதலன் பரத்தமை" மணி. எ: இ௦.

## கசு.—கொலைக்களக் காதை.

[illegible]

மாம். ஈண்டு எழுகவென்பதற்கு நாம் போதற்குவிரையென்றானெனினுமமை யும். இத்துணையும் தனது ஒழுக்கத்தைவெறுத்து இவ்வரவிற்கு நீயுமுடன்பட் டாயெனத் தனது அறிவின்மையை அவளொடுபடுத்துக்கூறினான்.

இனிக் கண்ணகிகூறுவாள் :

எக - அ௬. அறவோர்க் களித்தலும்........,என்றவள் கூற

(இ - ள்.) அறவோர் அந்தணர் துறவோர் விருந்தினரென்னுமிவர்கட்கு அளித்தலும் ஓம்பலும் எதிர்தலும் கோடலுமென்னுமிவற்றை இழந்தவென்னை நும் பெருமகளுடனே இருந்திக்கிழவன்கண்டு, நீர் என்முன்புகில்லாமையான் வந்தவெறுப்பைக் கரந்தொழுகினேனாக, அவர்கள் அதுதெரிந்து தம்முள்ளத் தின்மிக்க அன்போடே அருள்கலந்தமொழியால் என்பொறையைப்பாராட்ட, யான் இதயத்தே மறைத்த மெய்வருத்தமும் மனக்கவலையும்வெளிப்பட்டு

வாய் திறந்தசொல்லுவதபோலேயிருந்ததென் று என்
பொய்ம்முறுவல்கண்டு அவர் வருந்த நீர்
போற்றுவொழுக்கமேவினீராகவும் உம்முடைய வார்த்தையைச் சிறிதும்
மாற்றாத உள்ளவாழ்க்கையையுடையேனுதலாலே யான் அதற்கு உடன்
பட்டெழுந்தேனென்று அவன் கூறவென்க.

அறவோர் - [1] சாவகநோன்பிகள். பெருமகள் - கோவலன்மாதா.
பெயர் - புகழ் தலைத்தான் - தலைமையுடையமுயற்சி. மன் - மன்னரால்.
நீரென வரு சொல்வருவிக்க. இகந்தனு - இகந்தேனுக; தன்மை.
அற்பு - அன்பு; [2]"மெல்
லொற்று..............கிளையொற்றாகும்" என்பதனுன் முடிந்தது. சிறத்தல் -
மிகுதல். கொடித்தல் - சொல்லுதல் வாயன்முறுவல் - பொய்ந்நகை. 'ஆற்று
வுள்ள வாழ்க்கையீராதலின்' என்பதூஉம் பாடம்.

அச - அரு. குடிமுதற் சுற்றமும்........
.மயங்காதொழிகென

(இ - ள்.) சுற்றமுதலியநா ன்கினையுநீங்கி
நாணமுதலியநான்குந்துணையாக
அறிவற்ற என்னுேடுபோந்து என் தனிமையைத்தீர்த்த பொன்னே! கொடியே!
கோதாய்! பாவாய்! விளக்கே! கொழுந்தே! செல்வி! யான் நின்சீறடிக்கு
அணியாகிய சிலம்பில் ஒன்றைக்கொண்டுபோய் விற்றுவருவேன்; வருந்துணை
யும் நீ தனிமையான் வருந்தாதொழிகவென்றானுகவென்க.

குடிமுதற்சுற்றம் - தாய்தந்தைமுதலியோர். குற்றிளையோர் -
குற்றேவன்
மகளிர். அடியோர்பாங்கு - அடியார்பகுதித்திரள்; என்பார்
செவிலித்தாய்
முதலிய ஐவர்; [3]"ஐவர் நலனேம்ப" என்றார் பிறரும். ஆயம் -
சேவிக்குந்தோழி
மார். மடன் - கொளுத்தக் கொண்டு கொண்டதுவிடாமை.
நல்லோரேத்து - மகளிரால் ஏத்தப்படுமழகு. பேணியகற்பு ..........

பொன்முதலியவற்றிற் கெல்லாம் உவமம் விரித்துரைக்க.

---

[1] சாவகநோன்பிகள் - சைனரில் இல்லறத்தார்.

[2] தொல்காப்பியம், குற்றியலுகர. ரு. க.

[3] சீவக. கசுக; ஐவராவார்: ஆட்டுவோர், ஊட்டுவோர், ஓதுவித்தவர், பயிற்றுவார், கைத்தாயென்பார்.

தொடி



குச - க. கருங்கய னெடுங்கண்.........மறுகிற் செல்வோன்

(இ - ள்.) கரிய கயல்போலும் நெடிய கண்ணிணையுடைய தன துகாதலியை மெய்ம்முழுதூர்ந்தழுவி அவள் அருகில் யாவருமின்றித் தனியிருக்கின்ற அதனைக் கண்டு உள்ளகம்வெதும்புதலாலே மல்கிய கண்ணினீரை அவள்காணின் வருந்துமென்று அதனைக்கரந்த கண்ணிணையுடையனாய்ப் பலபசுக்களையும் பல எருமைகளையுமுடைய கோவலரில்லத்தைவிட்டுநீங்கி மாட்டாநடையோடே அத்தெருவிற்செல்கின்றவனென்க.

இதில், 'உழையோரில்லா' எனவும், 'ஒருதனிகண்டு' எனவுங்கூறினார் ஆய்ச்சியரெல்லாம் குரவையாடப்போனமைதோன்ற.

க00 - க0க.

இமிலேறெதிர்ந்தது............தகுதியன்றாதலின்

(இ - ள்.) அங்ஙனஞ்செல்கின்றவன் முரிப்பையுடைய கொல்லேறு எதிர்த்துப் பாயவந்ததனை நிமித்தவிரோதமென்று அறிந்திலன்; அஃது இடையர் குலத்தாரன்றித் தன்குலத்துள்ளாரறியும்

முறைமையன்மையாளென்க.

இமில் - முரிப்பு.

க௱௨ - ச.

தாதெரு மன்றம்..............பெயர்வோ னுங்கண்

(இ - ள்.) அம்மறுகில் தாதெருவையுடைய மன்றத்தையெல்லாங்கழிந்து [1]தளிப்பெண்டுகள் தெருவினூடேபோய்க் கடைத்தெருவிற் பெயர்கின்றவன் அவ்விடத்தே,

க௱௩ - க௨.

கண்ணுள் வினைஞர்...........ஆதியோவென

(இ - ள்.) உருக்குத்தட்டாரும் கைவினைமுற்றிய பணித்தட்டாருமாகிய நூற்றவர்பின்வர அரசவரிசையாகிய சட்டையுடனே ஒதுங்கிநடந்து செல்லுஞ்செலவினையும் கையிற்பிடித்த கொடிற்றையுமுடைய பொற்கொல்லனைக் கண்டனனாகிப் பாண்டியன்பெயரோடு வரிசைபெற்ற பொற்கொல்லனிவனென க்கருதி அணுகச்சென்று, அரசன்றேவிக்குப் பூணலாவதொருசிலம்பினை விலை மதித்தற்கு நீ வல்லையோவென்று கேட்பவென்க.

மெய்ப்பை-சட்டை. விலங்குநடைச்செலவு-மேன்மக்களைக்கண்டு ஒதுங்கி நடத்தல். கைக்கோல் - கொடிறு. ஆதியோ - ஆவையோ ; கருத்தனோவென்று மாம். ஆதியோவென்றான், தன்சிலம்பினது அருவிலைகருதி. இவனைக்கண்டா லும் தக்கமித்தமென்பார் பின்வர முன் கண்டனனாகியென்றார்.

இனிப் பொற்கொல்லன் கூறுவான் :—

க௱௫ - சு.

அடியேனறியேன்..............அவிழ்த்தனன்

(இ - ள்.) மன்னிருடைய அடிக்கலம் விலைமதித்தற்கறியேனாயினும் வேந்தர் முடிக்கலமுதலியன சமைப்பேன்யானெனக் காலது தனுக்கவந்த பொற்கொல்லன் கையாற்றொழுது புகழ்தலானே யாவர்க்கும்புகழுவரிய

சிலம்பிணைப் பொ திந்த பொதிவாயை அவிழ்த்தன ளுகவென்க.

கசள - உ௦. மத்தக மணியொடு............புரிந்துட ஞேக்கி

[1] தளிப்பெண்கேள்தெரு - கோயிலிற்பணிசெய்யும் மகளிர்தெரு; தளித்தெரு வெனவும் வழங்கும்.

## கரு—கொலைக்களக்காதை.

சாங்ரு

(இ - ள்.) தலையான மாணிக்கத்தோடு வயிரமும் பத்திபடவழுத்திய கேவணத்தையுடைய கிளிச்சிறையென்னும் பசும்பொன்னாற்செய்த புடைபட்டு உட்கருவையுடைய சித்திரத்தொழிலையுடைத்தாகிய சிலம்பின் தொழிலருமையையெல்லாம்......பொய்ச்செய்திசார்ந்த தொழிலையுடைய பொற்கொல்லன் நெஞ்சம் [1] இடுவந்திகூறுதலைப் புரிந்துநோக்கக் கண்கள் சிலம்பைநோக்க இவ்விருநோக்கும் கண்டார்க்கு ஒருநோக்கம்போலநோக்கியென்க.

மத்தகமணி - சூடிகைமணியுமாம்.

சிலம்பின் மத்தகத்தின் மணியெனினு மமையும். கேவணம் - மணியழுத்துங்குழி. சூடைச்சூல் - சூடைபடுதலென் பாருமுளர். செய்வினை - கைத்தொழில்.

தொழிலாகவுடையவெனினுமாம்.

பொய்த்தொழில - பொய்சொல்லுதலே

புரிந்துட ஞேக்கியென்பதற்குப் பணியும்விலையும்நோக்காது அவனை இடு வந்தியிடுவதற்கு இசைந்து தான் வஞ்சித்துக்கொண்டயைப் பார்த்தென்பாருமுளர்.

சிலம்போடொக்கும்படி

கஉக - கூ.

கோப்பெருந் தேவிக்கு.......சிறையகம் புக்கபின்

(இ - ள்.) அரசனுடைய பெருந்தேவிக்கல்லது இப்பெருவிலைச்சிலம்பு வேறொருவர்க்கும் விலையில்லையென்றுசொல்லி, முன்னின்றும்போய் வெற்றி மிக்க வேந்தனுக்கு இதனையுணர்த்தி யான்வருந்துணையும் என் புன்குடிலுக்கு அருகாகிய அவ்விடத்தே நீரிருமெனக் கோவலனுஞ்சென்று அக்கீழ்மகனிருப்பிடத்திற்கு அயலதோர் அக்கசாலைப்பள்ளியின் மதிலுக்குள்ளே புக்கபினென்க.

ஐ, இடைச்சொல். யாப்புறவு - வினை ; பொருத்தமுமாம். என - என்று சொல்லி. முன்போந்து - முன்னினறும்போய.

இனி, அவனுட்கோள்கூறுவார் :—

கஉஎ - ௬௦. கரந்தியான் கொண்ட............செல்வோன்

(இ - ள்.) யான் முன்பு வஞ்சித்துக்கொண்டசிலம்பு என்னிடத்ததேயென்பது பலருமறிய மன்னற்கு வெளிப்படுவதன முன்னே வேறொருதேயத்தினின் றும்வந்த புதியவனொடே போக்குவேன்யானென்று துணிந்தவுளத்தைக்கரந்து செல்கின்றவன்,

யாங்கொண்டவென்றும், போக்குவமென்றுங்கூறற்பாலவற்றை இவன் கீழ்மகனாதலால், தனித்தன்மைகூறினர்.

கக - சக.

கூடன்மகளிராடல்...........தாழ்ந்துபல வேத்தி

(இ - ள்.) கூடலில் நாடகமகளிருடைய ஆடலிடத்துத்தோன்றும் முகத் தோற்றமும் அவர் ஆடல்விகற்பமும் அவ்வாடல்விகற்பத்துக்கேற்ற பாடலின் வேறுபாடும் யாழிசையின்பயன்களும் காவலனுடைய உள்ளத்தை விரும்புவித்தனவென்றுகருதி ஊடியவுள்ளத்தைத் தன்னுள்ளேகரந்தொடுக்கி வருத்தத்தைச்செய்யும் தலைநோயென்பதனைத் தன்மேலேயிட்டுக்கொண்டு குலப்பிறப்

பையுடைய பெருந்தேவி தன்னோடு மேவாதே தனதுகோயிற்கண்ணே அந்தப்

[1] இவேற்றி - குற்றமில்லாதவன்மேற் குற்றத்தையேற்றுதல். இது இத்தமிழ் நாட்டின் வடபாகத்தே வழங்குகின்றது.
[2] பெருந்தேவி - பட்டத்துத்தேவி.



புரத்திற்சென்று புகுந்துவிடுதலானே அரசன் காமபரவசனாய் அமைச்சர்திரளினின்றுநீங்கி தேவியுடைய

அரிசிந்திய கண்ணையுடைய சிலதியர்திரளுடனே கோப்பெருங்கோயிலைநோக்கிச் செல்வோனைக் காவலையுடைய வாயிற்கடையிடத்தே கண்டவளவிலே வீழ்ந்து தாழ்ந்து பலகால் ஏத்திச் சொல்லுகின்றவனென்க.

கலங்கா வுள்ளக் கரந்தனன் செல்வோன், தாழ்ந்து பலவேத்தியென்க.

கசஉ - எ. கன்னக மின்றியும்............இருந்தோனென

(இ - ள்.) கன்னக்கோலும் கலைக்கோலுமின்றாகவும் கன்மனத்தின்கட் பயின்ற துயின்மந்திரமே களவுக்குத்துணையெனக்கொண்டு வாயில்காவலரை மயக்குறுத்தும் துயிலெய்துவித்துக் கோயிற்கணிருந்த சிலம்பினை அபகரித்துக்கொண்ட கள்வன் இந்த ஒலியையுடைய பெரிய ஊர்காவலருடைய கண்ணை மறைத்து அடியேனுடைய புன்குடிலகத்தே வந்திருக்கின்றானென்று

அவ்வர
சற்குச்சொல்லவென்க.
கல்

கன்னகம் - அகழ்கருவி. கவைக்கோல் - கொடிற்றுக்கோல்; ஆவது படைக் இட்டிகைமுதலியவற்றைப் பறிக்குங்கருவி; குத்துக்கோலென்பாருமுளர்.

[1] சில்லை - இழிவு. இன்றியுமென்னுமும்மை சிறப்பு. துணை - உசா. முன்னுள் தன்னிடத்தில்லையென்று நிலைநின்றதற்கேற்பக் கோயிற்சிலம்புகொண்ட கள்வ னென்முன். விற்கவந்து அகப்பட்டானென்பதுதோன்ற, என் னிருந்தானென்முன்.

சிறுகுடிகைக்

கசஅ - ருடு. வினைவிளை காலம்.....கொணர்கவீங்கென

(இ - ள்.) சினையலர்வேம்பன் ஊர்காக்கும் காவலாளரையழைத்து இங் ஙனமாகிய எனது தாழ்பூங்கோதையையுடையாடன்னுடைய காலணியாகிய சிலம்பு இவன்சொன்ன களவிற்றழும்பிய கள்வனுடைய கையகத்ததாயின், அவனைக்கொல்லை அச்சிலம்போடு ஈங்குக்கொணர்கவெனக்கருதியவன் வினைவிளை கின்ற காலமாதலானே இதனைச் சிறிதும்தோரானாய்த் தேவிகூடாதேகச் சுற்ற நீங்கிச் சிலதியரோடு கோயிலுள்புக்குக் காமபரவசனாய் அவள் கடையிடத்தோ னாகலானே அவனைக்கொன்று அச்சிலம்பை இவளூடதீர்த்தற்கு உதவியாக இவ் விடத்தே கொணர்வீராகவென்று சொல்லவென்க.

யாவதும் - சிறிதும். சினை - கொம்பு. அலர்வேம்பு - வேம்பலரென்க; ஆகுபெயரான் மாலையாயிற்று. வேம்பன், [2] "கொன்றையன்" என்பதுபோல நின்றது. கன்றிய - அழிப்பட்டவென்றபடி. கொன்று - கொல்லவெனத் திரிப்பினுமமையும். இனி என்கோதைதன் காற்சிலம்பு

அடிப்பட்டகள்வன் கையதாயிற் கொன்று கொண்ர்கவெனினும் தன்கட் கொடுங்கோன்மையின்மை
புணர்க.

கஙச - எ. காவலனேவ...........குறுகினனுகி'

(இ- ள்.) அங்ஙனங்கூறியகாவலன், வேற்காரரைத் தன்னோடு
ஏவுதலாலே
கருந்தொழிற்கொல்லனும், ஏவப்பட்டவுள்ளத்தோடே நாம்
எண்ணியவெண்

[1] "இலிலக்கணச்சியே" நாலடி. கஎஎ.

[2] திருச்சிற்றம்பலக்கோவையார், ௬00; கொன்றைய னென்பதற்குக் கொன்றைப் பூவின் தன்மையனென்பது பொருள்.

## கசு.—கொலைக்களக்காதை

...ணம் முடிந்ததன்றேவெனக்கருதித் தீவினையாகிய சூழ்ந்த
சென்று அகப்பட்டிருந்த கோவலனைக் குறுகச்சென்றானென்க.

வலைக்குள்ளே

கருந்தொழில் - கொலைத்தொழில். முடிந்ததென்பது விகாரம்.
இனி, எதிர்
காலத்தன்மைவினையை விரைபொருட்கண் இறந்தகாலத்தாற் கூறினனெனினு மமையும். முதிர்தல் - சூழ்தல். முதிர்வினையெனமாறித் தீய பழவினையாகிய வலைக்குள்ளேயெனினுமமையும்.

கஙஅ - கூக. வலம்படு தானை...............புரிந்துடன் காட்ட

(இ - ள்.) வெற்றிபொருந்திய தானை மன்னவனேவுதலாற் சிலம்புகாணிய இவர் வந்தார்; அதனைக் காட்டுமினெனச்சொல்லி அத்தொழில்பொருந்திய சிலம்பினருமையெல்லாம் கூறுவான்போலப் பொய்ம்மையைத் தொழிலாக வுடைய கொல்லன் அவரை வேறாக அழைத்துக் கோயிலிலிருக்கின்ற தனிச் சிலம்போடே பொருந்தச்சொல்லிக்காட்டவென்க.

காட்டுமினென்பது சொல்லெச்சம். காணிய, வினையெச்சம். புரிந்தெனவே அவனினீங்கியென்பதும், உடன்காட்டவெனவே அச்சிலம்போடு ஒரு தன்மையாக ஒப்புக்கூறியென்பதும் கொள்ளப்பட்டன.

கசுஉ - ரு.

இலக்கண முறைமையின்.........உரைப்போன்

(இ - ள்.) இவன், மெய்ப்பொறியானும் இருக்கின்றமுறைமையானும் கள்வனென்று நீ சொல்லப்படுவானுமல்லன்; கொல்லப்படுவானுமல்லனென்று சொல்லும் அரியதிறலையுடைய வேற்காரரை நகைத்து இகழ்ந்துகூறிக் கொலைத் தொழில் புரிந்த பொற்கொல்லன் [1] களவுநூலிலுள்ள ஏதுக்களைக் காட்டினனாய் உரைக்கின்றவனென்க .

இலக்கணமுறைமை - இலக்கணத்தானும் இருந்தமுறைமையானுமென உம்மைத்தொகை. கொலைப்படுமகன் - கள்வன். அகநகை - இகழ்ச்சிநகை.

அகநகைவென்றுபாடமாயின், நகவுரைத்தென்க.

கசுகூ - கூ. மந்திரந் தெய்வம்...........துணையெனத் திரிவது

(இ - ள்.) பொல்லாவொழுக்கத்தினாற் களவுகண்டுண்ணுமாக்கள் மந்திர முதலிய எட்டையுமன்றோ படையாகக்கொண்டு திரிவதென்றானென்க.

மருந்தே இடனேயென்ற ஏகாரமிரண்டும் எண். அன்றேயென்பது தேற்றம். கட்டுண்மாக்கள் எட்டுடனன்றே துணையெனத்திரிவதென்க.

களO - எக. மருந்திற் பட்டீ ராயின்........பெருகலைவப் பட்டீர்

(இ - ள்.) இவன் வலியையழித்துத் தப்புவதன்றி இவன்மருந்திற்பட்டீ ராயின், நும் பெரிய புகழையுடைய வேந்தனுல்வருந்தண்டம் இப்பொழுதே பட்டீரன்றேவென்றுனென்க.

---

[1] களவுநூல் ஸ்தேயசாஸ்திரமென்ற வழங்கப்படுகின்றதென்றும் அந்நூலைச் செய்தவர், கசரென்பவரின் ஆசிரியராகிய கர்ணியாளர்கூறுவர்.

ஸ்தரென்பவரென்னும் வடமொழி [illegible] சிலப்ப

திகாரம்

பட்டீர், வினைப்பொருள்; சொன்னோம் சொன்னோமென்னும்வழக்கு.

இது மூற்கூறினுன், அவர் அஞ்சிக் கடுகக் கோறற்கு. இனி மந்திரமுதலிய

எட்டின் விளைவு கூறுவான் :—

களஉ - ௬.

மந்திர நாவிடை..............யாங்காண்குவமோ

(இ - ள்.) தாம் சாதித்தமந்திரத்தை நாவிடத்தே வழுத்துவாராயின், தேவ

குமாரரைப்போல நாம் காணமாட்டோமென்றுனென்க.

வழுத்தல் - அபிமந்திரித்தல். இந்திரகுமரர் காணப்படார்;

அவரைப்போல
இவருங்காணப்படார். இந்திரர் - தேவர்; [1] "இந்திரர்க்கும் புகழ்வரிதே" என
வும், [2] "இந்திர ரமுத மியைவ தாயினும்" எனவுஞ்சொனனூர் பிறரும்; இனி
அந்தா குமரரென்பாருமுளர்.

களச - இ. தெய்வத் தோற்றம்..............பெயர்குவர்

(இ - ள்.) தாங்கள் ஆதரிக்குந்தெய்வம் எப்பொழுதும் தங்களுக்குமுன் விற்கும்படி மனந்தெளிந்து நினைப்பாராயிற் கையிலேயகப்பட்ட மிக்கபொருளை நமக்குக்காட்டியும் தப்புவரென்றானென்க.

களசு - எ.

மருந்தி னங்கண்...........இடனுமா ருண்டோ

(இ - ள்.) இவர் மருந்தினாலே நம்மிடத்து மயக்கஞ்செய்வாராயின், இருந்த நாம் புடைபெயருமிடமு முண்டாமோவென்றானென்க.

மார், இடைச்சொல்,

களஅ - அ. நிமித்தம் வாய்த்திடின்.....வந்துகைப் புகுதினும்

(இ - ள்.) தாம் ஆண்டநிமித்தம் வாய்ப்புப்பெற்றாலல்லது பெறுதற்கரிய பொருள் தானேவந்து கைப்புகுதினும் புகார்களென்றானென்க.

யாவதும் - எளியவிடத்திலும்.

களூ - அக. தந்திரகரணம்................எய்துவர்

(இ - ள்.) களவுநூலிற்சொல்லிப்போதகின்ற

தொழில்களையறிந்து என்
ணிச்செய்வாராயின், தாம்
இந்திரனது மார்பிலணிந்த

மண்ணுலகத்திருப்பினும் விண்ணுலகத்திருக்கும்
ஆரத்தை எயதவேண்டின் அதனையும் எய்துவ
ரென்றுனென்க.

தந்திரகரணம் - நூலிற்சொல்லுங்கிரியை. எண்ணுதல் - எண்ணிச்செயல்.

கஅ௨ - ௩. இவ்விட மிப்பொருள்.........யார்காண்கிற்பார்

(இ - ள்.) இப்பொருள் நாம் கோடற்கு இவ்விடமேயிடமென இவர் துணி வாராயின் அவ்விடத்து அவரை யார் கண்ணுற் காணவல்லாரென்றுனென்க.

கிறல் - செய்தல்.

கஅ௪ - ௫. காலங் கருதி.........விலக்கலு முண்டோ

(இ - ள்.) அவர்கள் களவுகொள்ளுங்காலம் இதுவென் றுகருதிப் பொரு ளைக் கைப்பற்றுவாராயின், மேலோராயிருப்பினும் விலக்குதலுண்டாகுமோ வென்றுனென்க.

---

[1] சீவகசிந்தாமணி, ௩௯௧.

---

[2] புறநானூறு, ௧அ௨.

கரு.—கொலைக்களக்காதை

கஅ௬ - எ. கருவிகொண்டவர்...........காண்கிற்பார்

(இ - ள்.) கருவிகளைக்கொண்டு பெறுதற்கரியபொருளைக் கைப்பற்றுவராயின், இப்பூமியிடத்து யாவர் கண்கொண்டு காணவல்லாரென்றுனென்க.

இங்ஙனமாதலாலெனை ஒருசொல்வருவிக்க.

கஅஅ - ௯. இரவே பகலே..............புகலிடமில்லை

(இ - ள்.) இவர்க்கு இரவுபகலென்று இரண்டில்லை; நாம் கேட்பிற் புகன்றுமுடியாது;

இக்கரவின்பகுதியை:

இக்களவுநூலை நாம் கேட்பின்,

ஓடியொளிக்கலாமிடமில்லையென்றுமாம்.

கஅ௱ - உ0உ. நூதர்கோலத்து.........கொல்லன் சொல்ல

இங்ஙனம் களவுநூற்றுறைகூறி, முன்னாள் இத்தென்னவன் தம்பியிடத்து நிகழ்ந்ததொன்றென்று ஒரு பொய்க்கரிகூறுகின்றான்;

(இ - ள்.) முன்னாளிலே ஒருகள்வன் நாதருருக்கொண்டுவந்து கொற்றவன் வாயிற்கட் பகற்பொழுதிருந்து இராப்பொழுது மாதருருக்கொண்டு உள்புகுந்து

விளக்குநிழலிலே பள்ளியறையினுள் அஞ்சாதுபுக்கு அடங்கி இந்நெடுஞ்செழியந்து இளங்கோவாகிய வேந்தன் துயில்கின்றவனுடைய மார்பில் வெயிலிடுகின்ற வயிரத்தையுடைய ஆரத்தை விரைய வாங்கினனாக, துயிலுணர்ந்தவன் தோளிற் காணாஉடைவாளையுருவினனாக, அதனுறையைக் கள்வன் கையிலே

வாங்கி அவன்

செறித்தலின்,

குத்துந்தோறும் வாளிலேயுறையைச்செறித்தான்; அங்ஙனஞ் அதற்கு அரற்றுனுப் மற்போராலே அவன்வலியினெல்லையைக்

காண, ஆண்டுநின்றதோர் தூணைத் தானாகக்காட்டிக் கழிந்து தன்களவுநூற்கல்வி யால் தப்பியகள்வனைக் கண்டாருண்டாயின் அவர்களைக் காட்டிக்காணீர்; ஆதலான், இவர்க்கு இவரே ஒப்பாதலன்றி இவ்வுலகத்துப் பிறரை ஒப்பாகக் கூறுதலுண்டோவென்று அக்கொலைத்தொழிற்கஞ்சாத பொற்கொல்லன்சொன்னானாகவென்க.

வேந்தன் விழித்தோன் காணான். உருவ வாங்கிச் செறித்த இயல்பிற்கு அரற்றான் காணக் காட்டிப் பெயர்ந்த கள்வனென்க.

இதனால் அரசனெஞ்சுணர்ந்தும் சாவெழாமை கூறினான். இவர்க்கென்றான், கள்வரென்றசாதிபற்றி. அ, முன்னறிசுட்டு.

௨௦௮ - ௯. ஆங்கோர்.........................கூறும்

(இ - ள்.) அவ்விடத்து அவர்களில் வேலைக் யவன் சொல்லும்; அஃதியாதெனின்,—

கையிலேயுடையானொருவ

௨௦௪ - ௧௧. நிலனக ழுளியன்............உறுபடையீரென

(இ - ள்.) முன்னாளிலே, நிலத்தையகழும் உளியையுடையனாய் நீலநிறத் தானையையுடையனாய்ப் பலகலன்களையும் நச்சியவேட்கையாற் பற்றியபொருளை விடாமையிற் கொடும்பசியால் யானைக்கவ்விவிடாத புலிபோன்று சரற்காலத்து இடையாமமாகிய, இருளாற் கண்கள் மயங்கச்செய்தலையுடைய ஊரெல்லாம் துயிலா மடிவித்தலைச்செய்யும் இராக்காலத்து ஒருகள்வன்வந்துதோன்ற,

யான் என்கையில் வாளை உறைகழித்தேனாக, அவ்வாளை அவன்வாங்க, அவனையும் என்வாளையும் எவ்விடத்தும் கண்டிலேன் ; ஆதலால் இவர்செய்கை யாவர்க்கும் அரியவரிது ; இவனை நாம் நெகிழவிடின், அரசன் நம்மைவருத்தும் ; ஆதலான், இனி இதற்குச் செய்தற்குரியதொன்றைத் துணிந்துகூறுமின் ; மிக்க படைக்கலத்தையுடையீரென்றானென்க.

"நிறங்கவர்பு புனைந்த நீலக் கச்சினர், மென்னூ லேணிப் பன்மாண் சுற்றினர், நிலனக ழுளியர் கலனசைஇக் கொட்கும், கண்மா றாடவ ரொடுக்க மொற்றி" என்றார் மதுரைக்காஞ்சியினும்.

இனி, உளியத்தென்று பாடமோதி, நின்று வந்த தொகைப்பின்னின்ற போன்றென்பதனை இதனோடுகூட்டி முடிப்பினுமமையும். இதற்கு நீலத்தானையன் நிலனகழ்தலால் உளியம்போன்றும், கலனசை வேட்கையாற் புலிபோன்றுமென்க.

உளியன் தானையன் புலிபோன்று ஒருவன்தோன்றவென்க.

உகஉ-எ. கல்லாக் களிமகன்........

.ஊழ்வினையுருத்தென்.

(இ - ள்.) இங்ஙனம் இவர்கூறலின், அறிவின்மையாற் கொலையஞ்சான் ஒரு களிமகன் தன்கையில் வெள்வாளாலே வெட்டினனாக, அது குறுக்கே துணித்தது ; துணிந்த குருதி எங்கும்பரக்க

உடற்குறைப் புண்வழியே கொப்புளிக்கின்றகுருதி நிலமடந்தை தனக்கு ஆவதுணர்ந்து மிக்கதுயரமுற அக்காவலனுடைய செங்கோல் வளைய முன்னைத் தீவினைமுதிர்தலாலே

கோவலன் வெட்டுண்டுவிழுந்தானென்க.

வெள்வாள் - மாற்றாரையெறிந்து குருதிக்கறை தட்டாதவாளெனவுமாம்; போர்மாலை சூழ்ந்து புகர்புகாதவாள். விலங்கூடறுத்தது - அவ்வாள் குறுக்கே அணித்தது; முற்று உமிழ்தல் - கொப்புளித்தல். வானும் கூர்ப்பும் மிகுதி.

இஃது எல்லாவடியும் அளவடியாய் வந்தமுடிதலின், ஆசிரியப்பா.

நிலைமண்டில

நண்ணும்.................வந்தவினை.

(இ - ள்.) பாண்டியன் முன்செய்த தீங்கின்விளைவாகிவந்த வினையாலே, மண்ணில் வளையாத செங்கோல கண்ணகிதன் கேள்வன்முன்னிலையாக வளைந்தது; ஆதலால், செய்தானொருவனை இருவினையும் நண்ணுமென்பதனை உலகத்தீர்! நல்வினையேசெய்யுமின்களென்று அடிகள்கூறினாரென்க.

யறிந்து,

ஆதலாலென ஒருசொல்வருவிக்க.

## கசு,—கொலைக்களக்காதை முற்றிற்று.

---

[1] மதுரைக்காஞ்சி, கசுக - சஉ

## பதினேழாவது

# ஆய்ச்சியர் குரவை.



' கயலெழுதிய விமய நெற்றியி
னயலெழுதிய புலியும் வில்லு
நாவலந் தண்பொழின் * மன்ன
ரேவல் கேட்பப் பாரர சாண்ட
மாலை வெண்குடைப் பாண்டியன் † கோயிலிற்
' காலை முரசங் கனைகுர லியம்புமாகலி
னெய்ம்முறைநமக் ‡ கின்றாமென்
றையைதன் மகளைக்கூஉய்க்
கடைகயிறு மத்துங்கொண்
டிடைமுதுமகள் வந்துதோன்றுமன்

**உரைப்பாட்டுமடை**

குடப்பா லுறையா குவியிமி லேற்றின்
மடக்கணீர் சோரும் வருவதொன் றுண்டு

---

உ. அயலெழுதிய புலியும் வில்லுமென்றது, அவற்றையுடைய அரசரை; சோழன் சேரன்.

ங. மன்னர் - மற்றுள்ள குறுநிலமன்னர் சு. இயம்பும், முற்று.

அ. ஐயையாகிய தன்மகளை. க0. முதுமகள் - மாதரி.

மகளோக்கி மனமயங்காதே

வருவதோர் துன்பமுண்டென
மண்ணின்மாதர்க்கணியாகிய கண்
ணகியுந் தான்காண வாயா ‡ பாடியி லெருமன்றத்து
மாயவனுடன்
றம்முனுடிய வாலசரிதை நாடகங்களில் வேனெடுங்கட்
டாடிய குரவையாடுதும் யாமென்றாள் கறவைகன்று
வெனவே.
பிஞ்ஞையோ
துயர்நீங்குக

## கொளு

க. [1] § காரி கதனஞ்சான் பாய்ந்தானைக் காமுறுமிவ்
வேரி மலர்க்கோதை யாள், சுட்டு
உ. நெற்றிச செகிலே யடர்த்தாற் குரியவிப்
பொற்றொடி மாதரா டோள்

---

"உறிநறு"—(பா) உருகி - மெலிநது. உருகி ஆடா-
குழைந்துகிடக்கும்; உருகியென்பது ஆடாமையென்னும்
மறையொடுமுடிந்தது.

"நான்முலை"— நான்முலையாயம் - பசு; ஆயம் மணிவீழும்; இடத்துநிகழ்
பொருளின்றொழில் இடத்திலே முடிநதது. மான் மணி - பெரியமணி; கழுத்
தின் மணி.

கருப்பம் - கேட்டுக்குக்கருப்பம்.

"குடத்துப்பால்"—'உறையாமை' முதலாக எண்ணிய உ

ம்மைகளுக்கு உறையாமையாலுமென்ற மூன்றும்வேற்றுமை விரிக்க.

மயங்காதே-வருந்தாதே. குரவை - பலர்கூடியாடும்......யைக்கூத்து.

வாலசரிதைநாடகம் - பிள்ளைச் சரிதநாடகம். மாயவன் தொழுனையாற்றிற பிள்ளைப்பருவத்துப் பலதேவரோடும் பின்னையோடுமாடின குரவைக்கூத்தைக் கூறுகின்றான்:—

"குரவையென்பது ........ ..இயல்பிற்றென்ப"

கொளு - குரவைக்குக்கருத்து.

உ. செகில் - சிவந்தகட்டி.

---

[1] "காரிகதனஞ்சான் கொள்டவன்', "காரிகதனஞ்சான்

கலி. ௧0௪.

---

டாய்த்தபொதுவத்தே'

(பி - ம்.) * "மழவி' † 'ஆங்கு குடத்த' ‡ 'பாடியினொரு' § 'ஆங்கு காரி' || 'மலர்க்குழலாளொத்திச் செறிவயடர்த்தாற்குரிய நிட்பொற்றொடிமாதர்தகை'

## ௧௭.—ஆய்ச்சியர் குரவை.

௩௪௫.

௩௩ மல்லன் மழவிடை யூர்ந்தாற் குரியளிம்
முல்லையம் * பூங்குழ றான்

௪. [1] நுண்பொறி வெள்ளை † யடர்த்தாற்கே யாகுமிப்
பெண்கொடி மாதர்தன் றோள்

௫. [2] பொற்பொறி வெள்ளை ‡ யடர்த்தாற்கே யாகுமிந்
நற்கொடி மென்முலை தான்

௬. வென்றி மழவிடை யூர்ந்தாற் குரியளிக்

மகானறையம பூஙகுழ லாள

எ. *§ துாிற வெள்ளை யடர்த்தாற் குரியளிப்
பூவைப் புது || மல ரான்

## எடுத்துக்காட்டு

ஆங்கு,
தொழுவிடை யேறு குறித்து வளர்த்தா
ரொழுவ ரிளங் ¶ கோதை யார்
என்று தன் மகளைநோக்கித்
தொன்றுபடு முறையானிறுத்தி
யிடைமுது மகளிவர்க்குப்
படைத்துக்கோட் ** பெயரிடுவாள்
குடமுத †† லிடமுறை யாக்குரா றுத்தங்
கைக்கிளை யுழையிளி விளரி தாரமென
விரிதரு பூங்குழல் வேண்டிய பெயரே

---

௩.\ மல்லல் - வலி. தான், அசை.

[ளென்றல்.

எடுத்துக்காட்டென்பது - இவ்வேறுகொண்டானுக்கு

இன்னாள் உரிய

''குடமுதல்''—குடமுதல் - மேற்றிசைமுதலாக.

வட்டப்பாலைவருமாறு:-

* ''ஆழியு மாரும்போற் கீறிச் சிறுகிகைக்க, னூழி ஞொோவொன் றுடன் கீறிச்—சூழ, வெருதாதி கீழ்த்திசைக்கொண் டோராறு மெண்ணிக், கருதி நிலைக் கயிற்றைக் காண்'', ''இளியிடபங் கற்கடக மாம்விளரி சிங்கம், தளராத தார மதுவாங்— தளராக், குரல்கோற் றனுத்துத்தங் கும்பங் கிளையாம், வரலா றுழை மீன மாம்'', ''குரா றுலை விற்றுத்தங் கைக்கிளையே கும்பம், பரிய

வுழைமீனம்

[1] "துன்பொறி வெள்ளைக், கதனஞ்சான் பாய்ந்த பொதுவன்" கலி. ௧0௧.

[2] "செம்மறு வெள்ளையும்" கலி. ௧0௫.

[3] "பாலிற வண்ணன்போற் பழிதீர்ந்த வெள்ளை" கலி. ௧0௪.

[4] சினேந்திரமாலை, ஆருடசக்கரம், ௧.

(பி - ம்.) * 'பூங்குழலாள்' † 'அடர்த்தாளுக்காகும்' ‡ 'அடர்த்தாற் குரித்தா மித்தத்கொடிமென்முலைதான்' § 'தாவுற வெள்ளை' || 'மலரா, வாங்கு' ¶ 'கோதை யார், எடுத்துக்காட்டு' ** 'பேரிவோள்' †† 'இடைமுறை யாகக்குரல்'

# சிலப்பதிகாரம்

மாயவ னென்றாள் குரலை விறல்வெள்ளை
யாயவ னென்றா ளிளிதன்னை - யாய்மகள்
பின்னையா மென்றாளோர் துத்தத்தை மற்றையார்
முன்னையா மென்றாண் * முறை
மாயவன் சீருளார் பிஞ்ஞையுந் தாரமும்
வால்வெள்ளை சீரா ருழையும் விளரியுங்
கைக்கிளை பிஞ்ஞை யிடத்தாள் வலத்துளாண்
† முத்தைக்கு நல்விளரி தான்
அவருள், வண்டுழாய் மாலையை மாயவன் மேலிட்டுத்
தண்டாக் குரவைதா னுள்படுவாள் - கொண்டசீர்
வைய மளந்தான்றன் மார்பிற் றிரு ‡ நோக்காப்
பெய்வளைக் கையாணம் பின்னைதா னென்றே
யையென்றா ளாயாமகள

"வண்டுறாய்"—மாயவன் - மாயவனாக நிறுத்தினவள். நோக்காத வளைக் கையாள். ஐயென்றாள் - வியந்தாள்.

---

(பி - ம்.) * 'முறையவருள் மாயவன் சீருள்ளார் பின்னையுந்' † 'முந்தைக்கு நல்விளரிதான் வண்டு' ‡ 'நோக்காள் மெய்வளைக் கையாளைப் பின்னை தானு'

## கஎ.—ஆய்ச்சியர் குரவை.

உசசு

### கூத்துள்படுதல்

அவர்தாம், செந்நிலை மண்டிலத்தாற் கற்கடகக் கைகோஒத்
* தந்நிலையே யாடற்சீ ராய்ந்துளார் - முன்னைக்
குரற்கொடி தன்கிளையை நோக்கிப் பரப்புற்ற
கொல்லைப் புனத்துக் குருந்தொசித்தாற் † பாடுதும்
முல்லைத்தீம் பாணியென் றாள்
எனாக்,

குரன்மந்த மாக விளிசம னாக
வரன்முறையே துத்தம் வலியா - வுரனிலா
மந்தம் விளரி பிடிப்பா ‡ ளவணட்பின்
பின்றையைப் பாட்டெடுப் பாள்

பாட்டு

௧. [1] கன்று குணிலாக் § கனியுதிர்த்த மாயவ
னின்றுநம் மானுள் வருமே லவன்வாயிற்
[2] கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழீ

௨. பாம்பு கயிறாக் கடல்கடைந்த மாயவ
னீங்குநம் மானுள் வருமே லவன்வாயி
[3] லாம்பலந் தீங்குழல் கேளாமோ தோழீ

---

கூத்துள்படுதல் - தான்கூத்துக்குள் ஒத்தாடுதல்.

"செங்கிலமண்டிலம்"—செங்கிலயாவது - சமநிலை. மண்டிலத்தான் - மண்டிலத்தோடே. கற்கடகக்கை - நடுவிரலும் அணிவிரலும் முன்னேநின்று மடித்து மற்றை இரண்டுவிரல்களும் கோத்தல்.

"இருவிரல் கடம்மையுர் தம்முள்ளே கோத்துப், பெருவிரல்க ணிக்கரண்டாம்"

௧. குணில் - குறுந்தடி. கொன்றையந் தீங்குழலென்றமையான் முன்பி னவையும் பண்ணின்மேற்செலுத்தாது கருவிமேற் செலுத்துக; பண்களுமாம்.

௨. ஆம்பன்முதலானவை லைகருவி ; ஆம்பல் - பண்ணுமாம். பல் வாயாம்பல் முத்தாம்பல்" என்றுசொல்லுவர் பண்ணுக்கு.

"மொழியாம்

[1] “கன்றுகுணிலா”, “பாம்புயிறு”, “கொல்லையஞ்சாரல்” என்பவை பின் குறிப்பிட்டுள்ள இடங்களில் மேற்கோள்களாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளன; தொல். செய். சூ. ௧௪௪ - இளம்; ௸ ௸ சூ. ௧௪௧ - பேர். ந; யா - வி. செய். சூ. ௨௨; யா - கா. செய். சூ. ௧; இ - வி. சூ. ௭௧௫.

[2] கொன்றைத்தீங்குழல்: கலித்தொகை, ௧௦௬.

[3] “தீங்குழலாம்பலின்” (ஐங்குறு. ௨௧௫); “ஆம்பற்குழலால்” கலித்தொகை, ௧௦௮.

(பி - ம்.) * ‘அந்திலயா ராடியசீ ராய்ந்தவன்’ † ‘பாடுகோ முல்லைப்பூம் பாணியென்றுரைக்க’ ‡ ‘இவண்டப்பிந் பின்னைபோர் பாட்டு’ § ‘களிபுகுந்த’



௩. கொல்லையஞ் சாரற் குருந்தொசித்த மாயவ
* னெல்லைநம் மானுள் வருமே லவன்வாயின்
முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழீ [1]
[2] தொழுனைத் துறைவனோ டாடிய பின்னை
யணிநிறம் பாடுகேம் யாம்

௧. இறுமென் சாய னுடங்க நுடங்கி
யறுவை யொளித்தான் வடிவென் கோயா
மறுவை யொளித்தா னயர வயரு
நறுமென் சாயன் முகமென் கோயாம்

௨. வஞ்சஞ் செய்தான் றொழுனைப் புனலு
ணெஞ்சங் கவர்ந்தா ணிறையென் கோயா
நெஞ்சங் கவர்ந்தா ணிறையும் வளையும்
வஞ்சஞ் செய்தான் வடிவென் கோயாம்

௩. தையல் கலையும் வளையு மிழந்தே

கையி லொளித்தாண் முகமென் கோயாங்
கையி லொளித்தாண் முகங்கண் டழுங்கி
மைய † ஆழுந்தான் வடிவென் கோயாம்

## ஒன்றன்பகுதி

கதிர்திகிரி யான்மறைத்த கடல்வண்ண னிடத்துளாள்
மதிபுரையு நறுமேனித் தன்முன்னோன் வலத்துளாள்
பொதியவிழ் மலர்க்கூந்தற் ‡ பிஞ்சைசீர் புறங்காப்பார்
முதுமறைதேர் நாரதனார் முந்தைமுறை நரம்புளர்வார்
மயிலெருத் துறழ்மேனி மாயவன் வலத்துளாள்
§ பயிலிதழ் மலர்மேனித் தன்முன்னோ னிடத்துளாள்
கயிலெருத்தன் கோட்டியகம் பின்னைசீர் புறங்காப்பார்
|| குயிலுவரு ணாரதனார் கொளைபுணர்சீர் ¶ நரம்புளர்வார்.

---

"தொழுனை" (பா) "தொழுனைக் கரைவனோ டாடிய பின்னை, பாடுகம் யாம்" என்று ஒரு குறள்வெண்பா இட்டோதுவாருமுளர்.

யணிவிறம்

ஒன்றன்பகுதி - ஒற்றைத்தாளத்தின் கூறு.

* "கன்று குணிலா" என்பதுமுதலியமூன்றும்,
இரண்டாமடிகளிரட்டிக்கப் பெற்று
நந்நான்கடியினவாக பிரிக்கப்பட்டிப்பிரதியிற் காணப்படுகின்றன.

* சிலப்பதிகாரம், கஎ: ௨௦.

(பி-ம்.) * 'எல்லி' † 'உழந்தாள் மனமென்கோ' ‡ 'பின்னைசீர்' § 'பயிலிழந் பூமேனித் தம்முன்னோன்' || 'குயிலுவ நாரதனுர்' ¶ 'நாம்புளர்வார் மாயவன்'

## கஎ.—ஆய்ச்சியர் குரவை.

சசஎ

### ஆனேர்ப்புகழ்தல்

மாயவன்றன் முன்னிஞெடும் வரிவளைக்கைப்
பின்னையொடும்
கோவலர்தஞ் சிறுமியர்கள் குழற்கோதை புறஞ் * சோர
வாய்வளைசீர்க் கடிபெயர்த்திட் டசோதையார்
தொழுதேத்தத்
* தாதெருமன் றத்தாடுங் † குரவையோ தகவுடைத்தே
எல்லாநாம்,
புள்ளூர் கடவுளைப் போற்றுதும் போற்றுது
முள்வரிப் பாணியொன் றுற்று

### உள்வரிவாழ்த்து

க. * கோவா மலையாரங் கோத்த கடலாரந்
தேவர்கோன் பூணாரந் தென்னர்கோன் மார்பினவே
தேவர்கோன் பூணாரம் ‡ பூண்டான் செழுந்துவரைக்
கோகுல மேய்த்துக் § குருந்தொசித்தா னென்பரால்

உ. பொன்னிமயக் கோட்டுப் புலிபொறித்து

௩ மூன்றீரி னுள்புக்கு மூவாக் கடம்பெறிந்தான்
* மன்னர்கோச் சேரன் வளவஞ்சி வாழ்வேந்தன்

மன்னர்கோச் சேரன் வளவஞ்சி வாழ்வேந்தன்
கன்னவிறூ ளோச்சிக் கடல்தடைந்தா னென்பரால் ;

## முன்னிலைப்பரவல்

௧. வடவரையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கிக்
'கடல்வண்ணன் பண்டொருநாட் கடல்வயிறு
கலக்கினையே
கலக்கியகை யசோதையார் கடைகயிற்றாற் கட்டுண்கை
மலர்க்கமல வுந்தியாய் மாயமோ மருட்கைத்தே

௨.

+ அறுபொரு ளிவனென்றே யமரர்கணந் தொழுதேத்த
வுறுபசியொன் றின்றியே யுலகடைய வுண்டனையே
யுண்டவாய் களவினா லுறிவெண்ணெ யுண்டவாய்
வண்டுழாய் மாலையாய் மாயமோ மருட்கைத்தே
௩. திரண்டமரர் ‡ தொழுதேத்துந் திருமாலின் செங்கமல
விரண்டடியான் மூவுலகு மிருளீர நடந்தனையே
நடந்தவடி பஞ்சவர்க்குத் தூதாக நடந்தவடி
மடங்கலாய் மாறட்டாய் மாயமோ மருட்கைத்தே

க. 'மூவுலகு மீரடியான் § முறைநிரம்பா வகைமுடியத்
தாவியசே வடிசேப்பத் தம்பியொடுங் கான்போந்து

---

க. மூவாக் கடம்பு - வஞ்சத்தால் நின்றதாகலின், மூப்பின்றி போல நின்றகடம்பு.

ஒருநாளைப்

இம்மூன்றும் பூவைநிலை.

க. சோவரணம் - அசுரர் நகரம்.

---

[1] வயிறென்பதற்கு நடுவென்று பொருளெழுதி, இவ்வடியை மேற்கோள் காட்டினர்; கல்லாடம், "இருளொரு தாரகை"—மயிலேறும் பெருமாள்.

[2] இச்செய்யுள்முதலிய மூன்றையும் படர்க்கைப் பரவலாய் ஒருபொருள்மேல் மூன்றடுக்கி நான்கடி இற்றபின் ஓரடிமிக்குவந்த கொச்சகவொருபோகிற்கு மேற்கோளாக்கி காட்டினர்; தொல். செய். சூ. கசக - ந.

(பி - ம்.) * 'மன்னர்கோச்சேரன்' † 'அதிபொருள்' ‡ 'தொழுதேத்தத் திருமால்' § 'முறைநிரம்பாவகையன்று தாவியசேவடி சேப்பத்'

## கஎ.—ஆய்ச்சியர் குரவை.

ளெழுதவோர் கற்கே யாதவின்" சிலப். உடு: கசு-அ-கூ. ² "வீங்குநீர் ஞால மான்வோன்" களக.

³. "யாகாவா ராயினு நாகாக்க காவாக்கால், சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு" (குறள், கஉள); "ஆக்கப் படுக்கு மருந்தளவாய்ப் பெய்விக்கும், போக்கப் படுக்கும் புலநரகத் துய்ப்பிக்குங், காக்கப் படுவன விந்திய மைந்தினு, நாக்கல தில்லை நனி வெல்லு மாறே" வளையாபதி.

(பி - ம்.) * 'முதல்வ ரைஞ்ஞூற் றுவரும்' † 'கூடிய குயிலுவக்' ‡ 'புகுத்த வைம்பதி......னைரமான்வினை' § 'கோத்தொழில்' ‖ 'மருங்குவான்பேரிமை யத்துக்' ¶ 'ஆயிலோங்கியர்'

## உசு.—கால்கோட் காதை.

ருசுஞ விருந்தின் மன்னர் தம்மொடுங் கூடி
யருந்தமி ழாற்ற லறிந்தில ராங்கெனக்
* கூற்றக் கொண்டிச் சேனை செல்வது
நூற்றுவர் கன்னர்க்குச் சாற்றி யாங்குக்
கங்கைப் பேர்யாறு கடத்தற் காவன
வங்கப் பெருநிரை செய்க தாமெனச்
சஞ்சயன் போனபின் கஞ்சுக மாக்க
ளெஞ்சா நாவின ரீரைஞ் ஞூற்றுவர்
¹ சந்தின் குப்பையுந் தாழ்நீர் முத்துந்
தென்ன ரிட்ட திறையொடு கொணர்ந்து
† கண்ணெழுத் தாளர் காவல் வேந்தன்
² மண்ணுடை ‡ முடங்கலம மன்னவர்க் களித்தாங்
காங்கவ ரேகிய பின்னர் மன்னிய

கசுo. விருந்தின் மன்னர் - தமிழ்வேந்தர் ஆற்றலறியாத புதிய அரசர்.

கசுo - சுக. இவருடன்கூடித் தமிழ்வேந்தரை இகழ்ந்து உரைத்தார்.

கசுஉ. கூற்றம்போலும் கொடிச்சேனை 'கூற்றங் கொண்டிச் சேனை செல்வது' என்று பாடமாயின், கூற்றம் பின்செல்ல இப்படையையென்க.

செல்லுகிறபடி

கசுக-உ. அருந்தமிழ் ஆற்றல அறிந்திலரென்று சேனை செல்வதெனச் சேனைமேலிட்டுக் கூறினன ; தனக்கு அவர் நிகரன்மையின்.

கசுசு. கஞ்சுகமாக்கள் - தன் றூதர்

கசுஎ. எஞ்சா நாவினர் - வார்த்தை தப்பாத நாவினர் ; அரசன் தப்பாத நாவினரென்றுமாம்.

நினைவு.

கசுஅ. தாழ்நீர் - ஆழ்ந்தநீர்மை.

கசுஅ-கூ. சந்தும் முத்துமாகிய கொணர்ந்திட்ட திறை

கசுகூ. கொணர்ந்து - கொணர.

களo. கண்ணெழுத்தாளர் - திருமுகமெழுதுவார்.

களo - எஉ. இவர்வரைந்த இலச்சினையிட்டு அவர் முகங்கொண்டு அவர்போயபின்.

கைக்கொடுப்பத் திரு

களக. அளித்து - அளிப்ப.

---

¹. சந்தனமும் முத்தும் தென்னர்க்கு உரியனவென்பதை, "
கோவாமலையாரம்
......தென்னர்கோன் மார்பினவே' (சிலப். ௧௭: உள்வரிவாழ்த்து,௧)
அதன் மேற்குறிப்பாலும் அறிக; ப. ௪௪௭.

என்பதனாலும்

². "மண்ணுடை முடங்கல் மாதவி யீத்ததூஉம்" சிலப். ௧௩: ௭௧.

(பி - ம்.) * 'சித்தரங்கொண்டு' † 'கண்ணெழுத்தாளரொடுகோவல்' ‡ 'கன்மன்னவற்கு'
முடங்



வீங்குநீர் ஞால மாள்வோ னோங்கிய
நாடாள் செல்வர் நல்வல னேத்தப்
பாடி யிருக்கை நீங்கிப் பெயர்ந்து
கங்கைப்பே ரியாற்றுக் கன்னரிற் பெற்ற
வங்கப் பரப்பின் வடமருங் * கெய்தி
யாங்கவ ரெதிர்கொள வந்நாடு கழிந்தாங்
கோங்குநீர் வேலி யுத்தர மரீஇப்
பகைப்புலம் புக்குப் பாசறை † யிருந்த
தகைப்பருந் தானை மறவோன் றன்மு
னுத்தரன் விசித்திர னுருத்திரன் பைரவன்
சித்திரன் சிங்கன் ‡ றனுத்தரன் சிவேதன்
வடதிசை மருங்கின் மன்னவ ரெல்லாந்

தென் றமி ழாற்றல் § காண்குதும் யாமெனக்
கலந்த கேண்மையிற் கனக விசயர்
[1] நிலந்திரைத் தானையொடு நிகர்த்து மேல்வர
விரைதேர் வேட்டத் தெழுந்த வரிமாக்
கரிமாப் பெருநிரை கண்டுளஞ் சிறந்து
பாய்ந்த பண்பிற் பல்வேன் மன்னா
காஞ்சித் தானையொடு காவலன் மலைப்ப
|| வெயிற்கதிர் விழுங்கிய துகிற்கொடிப் பந்தர்
வடித்தோற் கொடும்பறை வால்வளை நெடுவயி

---

கஎக. உத்தரம் - வடபூமி.

கஅஉ-ச. உத்தரன் விசித்திரன்முதலான மன்னவர்கள், துணையான அரசர்.

களகவிசயர்க்குத்

கஅரு - எ. தமிழாற்றலைக் காண்டுமெனக் கனகவிசயர் தானையுடனே ஒத்துவர.

ககO. பாய்ந்த பண்புபோல.

ககக. காஞ்சித்தானை எதிரூன்றியதானை.

---

[1]. "நிலத்திரைக்குங் கடற்றானை" புறநா. கஎ.

(பி - ம்.) * 'எறியாங்கவரெதிர்கொளவவரநாடுகெழீந்தேர்க்குநீர்' † 'இராஅத் தலைப்பெருத்தானை' ‡ 'தநுத்திரன்' § காண்குவதாமென' || 'வெயிற்கொடி'

[1] ரிடிக்குரன் முரச மிழுமென் பாண்டி
[2] லுயிர்ப்பலி யுண்ணு முருமுக்குரன் முழக்கத்து
மயிர்க்கண் முரசமொடு மாதிர மதிரச்
† சிலைத்தோ ளாடவர் செருவேற் றடக்கையர்
கறைத்தோன் மறவர் கடுந்தே ரூருநர்
வெண்கோட் டியானையர் ‡ விரைபரிக் குதிரையர்
மண்கண் கெடுத்தவிம் மாநிலப் பெருந்துகள்
களங்கொள் யானைக் கவிழ்மணி நாவும்
§ விளங்குகொடி நந்தின் வீங்கிசை நாவு
நடுங்குதொழி லொழிந்தாங் கொடுங்கியுள் செறியத்
தாருந் தாருந் || தாமிடை மயங்கத்
தோளுந் தலையுந் துணிந்துவே றாகிய
சிலைத்தோண் மறவ ருடற் ¶ பொறை யடுக்கத்
தெறிபிண மிடறிய குறையுடற் கவந்தம்
[2] ** பறைக்கட் பேய்மகள் பாணிக் காடப்
[3] பிணஞ்சுமந் தொழுகிய நிணம்படு குருதியிற்
கணங்கொள் பேய்மகள் கதுப்பிகுத் தாட
†† வடுந்தேர்த் தானை யாரிய வரசர்

---

ககூச. பாண்டில் - கஞ்சதாளம்.

கககூ. மாதிரமதிர்தல் - இவை அதிரத் தானுமதிர்தல்.

கககா-கூ. முரசமுதலிய இவையிற்றேடு. ககஅ

கறைத்தோல்-கருங்கடகு.

உ0ட. கொடிநந்து - கொடியும் சங்கும் முகத்துக்கட்டுவர்போலும்

; 'சங் கின் நா' என்றார், பேசுதலாஸ் ; ஒலிபற்றி.

உ0ரூ. ஒழிந்து - ஒழிய. உள்ளே' துகள்செறிய.

உ0கூ. உடற்பொறை- உடற்பாரம். உ0எ.

எறிபிணம்-வெட்டுண்டபிணம்.

உ0அ. பேய்மகள் தாளத்துக்கு ஆட.

---

[1] ககூ-கூ. "உயிர்ப்பலியுண்ணு முருமுக்குரான்முழக்கத்து, மயிர்க்கண்முரசு" (சிலப். இ: அஎ - அ); "கொல்லேற்றுப் பைந்தோல் சீவாதுபோர்த்த, மயிர்க்கண் முரச மோவில கறங்க" (மதுரை. எகஉ-க.); "உருமிடி முரசமொடு" (முருகு. கஉக;) "ஏற்றுரி போர்த்த......முரசு" (மணி. க ; உகூ - கக, "சாற்றிடங்கொண்ட வேற்றுரி முரசம்", "ஏற்றுரி முரசி னிறைவன் மூதூர்க்கு" (பெருங். க. கஅ: க00; டை டை சக: ககூ:): "ஏற்றுரிமுரசநாண" சீவக. உகசஉ.

[2] "பேய்க்க ணன்ன பிளிறுகடி முரசம்" பட்டினப். உககூ.

[3] "கணங்கொள் கூளியொடு கதுப்பிகுத் தசைஇப், பிணந்தின் மகள்" பட்டினப். உஙக - கூ0.

யாக்கைப் பேய்

(பி - ம்.) * 'இடிக்கண்' † 'சிலைக்கோளாடவர்' ‡ 'விடுபரி' § 'விளங்கொளி தந்தின்' || 'தம்மிடை' ¶ 'பொறியமேக்கத்' ** 'தேர்த்தாலை'

பறைக்குரற்பேய்' †† 'தேடுத் இசைசு

சிலப்

பதிகாரம்

கடும்படை மாக்களைக் கொன்று களங் * குவித்து
நெடுந்தேர்க் கொடிஞ்சியுங் கடுங்களிற் றெருத்தமும்
விடும்பரிக் குதிரையின் வெரிநும் பாழ்பட
[1] வெருமைக் கடும்பரி யூர்வோ னுயிர்த்தொகை
பொருபக லெல்லையி னுண்ணு மென்ப
[2] தாரிய வரச ரமர்க்களத் தறிய
னூழி லாட்டிய சூழ்கழல் வேந்தன்
போந்தையொடு தொடுத்த பருவத் தும்பை
[3] யோங்கிருஞ் சென்னி மேம்பட † மலைய
வாய்வா ளாண்மையின் வண்டமி ழிகழ்ந்த
காய்வேற் றடக்கைக் கனகனும் விசய னு
மைம்பத் திருவர் கடுந்தே ராளரொடு
செங்குட் டுவன்றன் சினவலைப் ‡ படுதலுஞ்
சடையின ருடையினர் சாம்பற் பூசினர்
பிடிகைப் பீலிப் பெரு § நோன் பாளர்
பாடு பாணியர் பல்லியத் தோளின
ராடு கூத்த ராகி யெங்கணு
மேந்துவா ளொழியத் தாந்துறை போகிய
விச்சைக் கோலத்து வேண்டுவயிற் படர்தரக்
கச்சை யானைக் காவலர் நடுங்கக்

---

உகரு; எருமையாகிய பரியூர்வோன் - கூற்றுவன்.
உகஅ. [2] னூழிலாட்டுவதாக.
உஉக. வாயவாளாண்மை - வாய வறிது இராமை.
உஉரு. உடையினர் - காஷாயமுதலிய உடையினர் = சந்நியாசிகள்.

[1]. உகஇ - அ. "மன்னுயிர்ப் பன்மையுங் கூற்றத் தொருமையு, நின்னொடு தூக்கிய வெல்வேற் செழிய" புறநா. கக.

[2]. உகஎ - அ. "ஆரிய ரலறத் தாக்கிப் பேரிசைத், தொன்முதிர் வடவரை வணங்குவிற் பொறித்து, வெஞ்சின வேந்தரைப் பணித்தோன் வஞ்சி" அகநா. கசுசு.

[3]. "ஓங்கிருஞ் சென்னி மேம்பட மிலைந்த" பொருந. கசஇ.

[4]. உஉஇ - அ. "மீளுய் வேலையை யுற்றார் சிலர்சிலர் பசுவாய் வழிதொறு மேய் வுற்று, றுர் பறவையின் வடிவுற் றார்சிலர் சிலர்நான் மறையவ•ருருவானார், மானார் கன்னியர் மடவா ராயினர் முன்னே தங்குழல் வகிர்வுற்று, ரானார் சிலர்சில ரையா நின்சர ணென்றார் நின்றவ ரரியென்றார்" (கம்ப. அக்க. ௫0) என்னுஞ் செய்யுளுடன் ஒப்புநோக்கற்பாலது.

இவ்வடிக

[5]. நாழிலாட்டு - கொன்று குவித்தல்; மலைபடு. அஎ - ந.

(பி - ம்.) * 'குவித்து நாழிலாட்டிய' † 'மலைந்துவாய் வாளாண்மையின் ‡ 'பழித்தலும்' § 'தோன்புரளரிற்பாடு' ‖ 'படர்ந்தகச்சை'

## உகு.—கால்கோட்காதை.

ருசுரு * [1] கோட்டுமாப் பூட்டி வாட்கோ லாக

† வாளுழி வாங்கி யதரி திரித்த

வாளே ருழவன் மறக்களம் வாழ்த்தித்

உகூ. தொடியுடை நெடுங்கை தூங்கத் தூக்கி

முடியுடைக் கருந்தலை ‡ முந்துற வேந்திக்

[2] கடல்வயிறு கலக்கிய ஞாட்புங் கடலக

ழிலங்கையி லெழுந்த சமரமுங் கடல்வண்ணன் றேரூர் செருவும

பாடிப் பேரிசை

உ௪0. முன்றேர்க் குரவை முதல்வனை வாழ்த்திப்
பின்றேர்க் குரவைப் பேயாடு பறந்தலை
முடிதலை யடுப்பிற் பிடர்த்தலைத் தாழித்
தொடித்தோட் டுடுப்பிற் றுழைஇய வூன்சோறு மறப்பேய்
வாலுவன் வயினறிந் தூட்டச

உ௩உ. யானை எருதாக வாள் பிடிக்குங் கோலாக.

உ௩௩. ஆளழிவாங்கி - ஆளாகிய போரை இறங்கவிட்டு. அதரிதிரித்தகடாவிட்ட.

உ௩௫. தொடிக்கை - பேய்க்கை. தூங்க அசைய.

உ௩௬. முந்துற - முனனுக.

உ௩௭-௯. கடல்வயிறு கலக்கிய போர்முதல் மூனறும் மாயவன் செய்தன. இவை மேலேறிப் பூவைநிலையாறபாடுதல்.

உ௪0 - ௪௧. முனறேர்க்குரவையிலே முதல்வனை வாழ்தஇப் பின்றேர்க்குரவையிலே ஆடுதலிற பேய்க்குரவையாயிறறு.

உ௪௨. பிடர்தலையாகிய தாழி

உ௪௪. பேயவாலுவன் - பேய்க்குச்சோறிடு மடையன்.

[1]. "யானையெருத்தின் வாண்மட லோச்சி, யதரி திரித்த" புறநா. ௩௭௩.

[2]. உ௩௭-௯. இ௪௭-ம் பக்கத்து, அ-௭0-அடிகளின் கீழ்க்குறிப்பைப்பார்க்க.

[3]. "ஆண்டலை யணங்கடுப்பின், வயவேந்த ரொண்குருதி, சினத்தீயிற் பெயர்பு பொங்கத், தெறலருங் கடுந்துப்பின், விறல்வினங்கிய விழுச்சூர்ப்பிற், றொடித்தோட் கை துடுப்பாக, வாடுற்ற வூன்சோறு, நெறியறிந்த கடிவாலுவ, னடியொதுங்கிப் பிற் பெயராப், படையோர்க்கு முருகயர" (மதுரை. உ௯-௩௮); "முடித்தலை யடுப்பாகப் புனற்குருதி யுலைக்கொளீஇத், தொடித்தோட் டுடுப்பிற் றுழந்த வல்சி" புறநா. உ௬. (பி - ம்.) * 'கோட்டுமாபூட்டி' † 'வேந்தி' 'வாளரிவாங்கியதரிதிரித்த' ‡ 'முன்னுற

சிறப்பூண் கடியினஞ் செங்கோற் கொற்றத்
தறக்களஞ் செய்தோ னூழி வாழ்கென
மறக்கள முடித்த வாய்வாட் குட்டுவன்
வடதிசை மருங்கின் மறைகாத் தோம்புநர்
தடவுத்தீ யவியாத் தண்பெரு வாழ்க்கை
காற்றா தாளரைப் போற்றிக் காமினென
வில்லவன் கோதையொடு வென்றுவினை முடித்த
பல்வேற் றானைப் படைபல வேவிப்
பொற்கோட் டிமயத்துப் * பொருவறு பத்தினிக்
கற்கால் கொண்டனன் காவல னாங்கென்.



௨௪௯. வாழ்க்கையென்றது, முன்புவந்த ஆகாசசாரிகள் சொன்ன வார்த்தையை நினைந்து.

௨௫௦. காற்றா தாளரை நீர் போற்றிக் காமினெனச் சொல்லி.

௨௫௪. கால்கொள்கையாவது - கடவுள் வடிவெழுதத்தொடங்குதல்.

(௨௫௧) வில்லவன் கோதையோடே (௨௫௨) படையையேவிக் (௨௫௪) கற்செய்தலை அடிக்கொண்டான்.

௨௯.— † கால்கோட்காதை முற்றிற்று.



[1]. ௨௪௮ - ௯. "அருமறை யந்தண ராங்குளர் வாழ்வோர், பெருநில மன்னர் பேணினின் கடனென்று" சிலப். ௨௧: ௧௦௨-௩.

(பி - ம்.) * 'பொருவறு' † 'கற்கால்கொள்கர்தை!'

# இருபத்தேழாவது
# நீர்ப்படைக்காதை.



வடபே ரிமயத்து வான்றரு சிறப்பிற்
கடவுட் பத்தினிக் கற்கால கொண்டபின்
சினவேன் முன்பிற் செருவெங் கோலத்துக்
கனக விசயர்தங் கதிர்முடி யேற்றிச
செறிகழல் வேந்தன் றென்றமி ழாற்ற
லறியாது மலைந்த வாரிய மன்னரைச
செயிர்த்தொழின் முதியோன் செய்தொழில் பெருக
வுயிர்த்தொகை * யுண்ட வொன்பதிற் றிரட்டியென்
றியாண்டு மதியு நாளுங் கடிகையு
மீண்டுநீர் ஞாலங் கூட்டி யெண்கொள
வருபெருந் தானை மறக்கள மருங்கி
னொருபக லெல்லை யுயிர்த்தொகை யுண்ட
செங்குட் டுவன்றன் † சினவேற் றானையொடு
கங்கைப் பேர்யாற்றுக் கரையகம் புகுந்து
பாற்படு மரபிற் பத்தினிக் கடவுளை
நாற் ‡ றிறன் மாக்களி னீர்ப்படை செய்து

உ. கடவுட்பத்தினி - பத்தினியாகிய கடவுள்.

எ. செயிர்த்தொழின் முதியோன் - கூற்றுவன்.

அ - கo. [1] உயிர்த்தொகை உண்டனவாகிய ஆண்டும் மதியும் நாளும் கடிகையும் ஒன்பதிற்றிரட்டியென்று அவறரேடே கூட்டியெண்ண=தேவாசுர யுத்தம் பதினெட்டாண்டிலும், இராமராவண யுத்தம பதினெட்டுமாதத்திலும், பாண்டவ துரியோதன யுத்தம் பதினெட்டு நாளிலும், செங்குட்டுவனும் கனகவிசயரும் செய்த யுத்தம் பதினெட்டு நாழிகையிலும் முடிந்தவென்றெண்ண.

(சு) மன்னரை (கஉ) உயிர்த்தொகையுண்ட (கங) செங்குட்டுவன்.

---

1. 'இவ்வுரைக்குறிப்பு' "எண்கொண்டனாட்டு" (சீவக. உகடுக) என்னும் மூலத் தாலும், அதற்கு, 'தேவாசுரம் இராமாயணம் மாபாரதம் என்கின்றபோர்' என்றெழு திய உரையாலும், "தேவாசுர ராமாயண மாபாரத முளவென், றேவாவுரை யோயும் படி யுளதப்பொருகளமே" (கலிங்க. களம். க) என்பதனுலும் அழகுந்தொடர்புபெற்று விளங்குதல் காண்க.

பொருட்

(பி - ம்.) * 'உண்டனனென்பதிற்' † 'செருவேல்', ‡ 'திறமாக்கள்'

மன்பெருங் கோயிலு மணிமண் டபங்களும்
பொன்புனை யரங்கமும் புனைபூம் பந்தரு
முரிமைப் பள்ளியும் விரிபூஞ் சோலையுந்
திருமலர்ப் பொய்கையும் வரிகா ணரங்கமும்
பேரிசை * மன்னர்க் கேற்பவை பிறவு
மாரிய மன்ன ரழகுற வமைத்த
தெள்ளுநீர்க் கங்கைத் தென்கரை யாங்கண்
வெள்ளிடைப் பாடி வேந்தன் புக்கு
நீணில † மன்னர் நெஞ்சுபுக லழித்து
‡ வானவ மகளிரின் வதுவைசூட் டயர்ந்தோ
ருலையா வெஞ்சம மூர்ந்தம ருழக்கித்
தலையுந் தோளும் விலைபெறக் கிடந்தோர்
நாள்விலைக் கிளையு ணல்லம ரழுவத்து
வாள்வினை முடித்து மறத்தொடு § முடிந்தோர்
குழிகட் பேய்மகள் குரவையிற் றொடுத்து
வழிமருங் கேத்த வாளொடு மடிந்தோர்
கிளைக டம்மொடு கிளர்பூ ணகத்து
வளையோர் மடிய மடிந்தோர் மைந்தர்
மலைத்துத் தலைவந்தோர் வாளொடு மடியத்
தலைத்தார் வாகை தம்முடிக் கணிந்தோர்
திண்டேர்க் கொடுஞ்சியொடு தேரோர் வீழப்
புண்டோய் குருதியிற் பொலிந்த மைந்தர்
மாற்றருஞ் சிறப்பின் மணிமுடிக் கருந்தலைக்

---

உச. வெள்ளிடைப்பாடி - வெளியான நிலத்துப் பாசறை.

[டவர்.

உசு. தெய்வமகளிரால் மாலைசூட்டப் பட்டோராவார் - வீரஞ்செய்துபட்

உஎ. வேர்ந்து - அடர்ந்து.

உஅ. விலைபெற - அரசர் கண்டு நேயத்தோராம்படி.

உகூ. அமரழுவம் - சமரபூமிப்பரப்பு.

௩௦. வாளாற்செய்யும் வினைகளெல்லாவற்றையுஞ் செய்துமுடித்து.

௩௧. வழிமருங்கேத்த - வழியிலுள்ளாரையேத்த.

௩௨. கிளைகள் - போரில் உடனின்று பட்டவர்கள்.

௩௩-௪. உறவான வீரர் தம்மொடு மடிந்தோர்; ஸ்திரீகள்மடிய மடிந்தோர்.

௩௫. தலைத்தார் - தூசி. வாகையணிந்தோர் - மாற்றார் புறத்தைத் தாங் கள் பெற்றவளவிலே மீண்டோர்.

---

(பி - ம்.) * 'மன்னர்கொட்பவை' † 'மறவர்நெஞ்சு' ‡ 'வாளவர்மகளிரின்' § 'மடிந்தோர்'

## உஎ.—நீர்ப்படைக்காதை.

நிசகூ

[1] கூற்றுக்கண் ணோட வரிந்துகளங் கொண்டோர்
நிறஞ்சிதை கவயமொடு நிறப்புண் கூர்ந்து
புறம்பெற வந்த போர்வாண் மறவர்
வருக தாமென [2] வாகைப் பொலந்தோடு
பெருநா ளமயம் பிறக்கிடக் கொடுத்துத்
தோடார் போந்தை தும்பையொடு முடித்துப
[3] பாடுதுறை முற்றிய கொற்ற வேந்த
னாடுகொண் * மார்போ டரசுவிளங் கிருக்கையின்
மாடல மறையோன் வந்து தோன்றி
வாழ்க வெங்கோ மாதவி மடந்தை
கானற் பாணி கனக விசயர்தம்
முடித்தலை † நெரித்தது முதுநீர் ஞால
மடிப்படுத் தாண்ட வரசே வாழ்கெனப்
பகைப்புலத் தரசர் ‡ பலரீங் கறியா
நகைத்திறங் கூறினை நான்மறை யாள
யாதுநீ கூறிய § வுரைப்பொரு ளீங்கென
மாடல மறையோன் மன்னவற் குரைக்குங்
கானல் தண்டுறைக் கடல்விளை யாட்டினுண்
மாதவி மடந்தை வரிநவில் பாணியோ
டூடற் காலத் தூழ்வினை யுருத்தெழக்

---

௪௪. பெரியநாளிற் கொடுக்கும் பொழுது ஒழிய நெடும்பொழுதிருந்து கொடுத்து; 'பெருநாள்' என்றார், கொடுக்கிறநாளாதலால்

(௨௬) 'வதுவை சூட்டயாந்தோர்' முதல் (௬௪) 'வினையோர

மடியமடிந் தோர்' இறுதி பட்டவாகளையெணணி இவர்கள்
மைந்தரென ஒரெண்ணுக்கி, மேல் படாதுபொருது வெனறவாகளையுங்கூ
ட்டியெண்ணி இவர்களுக்கு(௬௩-௬) வாகைகொடுத்தெனறா.

௬௬. வீரரைப்பாடுமே புறத்துறையெல்லா முடித்துப் பாட்டுண்டவேர்

௬௭. வெறறிகொண்ட மார்போடே.

[தன்.

௫௩ - ௬. மாறறரசர் பலரும் அறியாத சிரிப்பினகூறென்றது, (௫௪) செரித்ததென்றதனை. 'நான றியாத நகை' என்றது 'மன்னர் பலருமறியாத' என்றான், இராசபாவத்தாலே

1. 'கூற்றுக்கண்ணோடிய வெருவருபறந்தலை" புறநா. ௧௯.

2. சிலப். ௨௬: ௭௦-௭௧ - ஆம் அடிகளையும் அவற்றின் அடிக்குறிப்பையும் பார்க்க.

3. "பாடுதுறை முற்றிய பயன்றெரி கேள்வி சிறுபாண். ௨௨௮.

(பி - ம்.) * 'மகளிரோடரசு' † 'ஏற்றி' ‡ 'பரிசிங்கறியாது' § 'உரைபிக் கெவ்வொள'



௬௦. கூடாது * பிரிந்து குலக்கொடி தன்னுடன்
மாட மூதூர் மதுரை புக்காங்
கிலைத்தார் வேந்த † னெழில்வா னெய்தக்
1 கொலைக்களப் பட்ட கோவலன் மனைவி
குடவர் கோவே நின்னாடு புகுந்து
௬௫. வடதிசை மன்னர் மணிமுடி ‡ யேறின
ளின்னுங் கேட்டரு ளிகல்வேற் றடக்கை

மன்னர் கோவே யான் § வருங் காரண
மாமுனி பொதியின் மலைவலங் கொண்டு
குமரியம் பெருந்துறை யாடி மீள்வே
னூழ்வினைப் பயன்கொ லுரைசால் சிறப்பின்
வாய்வாட் டென்னவன் மதுரையிற் சென்றேன்
வலம்படு தானை மன்னவன் றன்னைச்
சிலம்பின் வென்றனள் சேயிழை யென்றலுந்
தாதெரு மன்றத்து மாதரி யெழுந்து
கோவலன் றீதிலன் கோமகன் பிழைத்தா
னடைக்கல மிழந்தே னிடைக்குல மாக்காள்
குடையுங் கோலும் பிழைத்த வோவென
விடையிரு ளியாமத் தெரியகம் புக்கதுந்
தவந்தரு சிறப்பிற் கவுந்தி சீற்ற
நிவந்தோங்கு செங்கோ னீணில வேந்தன்
போகுயிர் ¶ தாங்கப் பொறைசா லாட்டி
** யென்னோ டிவர்வினை யுருத்த தோவென
வுண்ணா நோன்போ ++ டுயிர்பதிப் பெயர்த்தலும்
பொற்றேர்ச் செழியன் மதுரை மாநகர்க்
குற்றது மெல்லா மொழிவின் றுணர்ந்தாங்

எஎ. 'பிழைத்தவோ' என்றாள், முன் பிழையாமைபற்றி.
எகூ. சீற்றம் - சீற்றத்தை.
அக. சபியாதபடி தணித்தது அவன் மரணம்.
அ௩. ஊணும் மாற்றிப்போய்.

¹. சிலப்பதி. கக. ². "குடக்கோச் சேரலன் குட்டுவர் பெருந்தகை" மணி.
³. தாதெருமன்றம்: சிலப். ப. சசஎ.
உஅ: ௬௦க.
⁴. "உயிர்பதிப் பெயர்த்தமை யுறுக" (சிலப். உ௫: கஎ); "உன்று
யிர்பதிப் பெயர்ப்புழி" மணி. கச: க௫

தோன்போ

(பி - ம்.) * 'பிரிந்த' † 'உயர்வானெய்த' ‡ 'எற்றின' § 'வருகாரணமபரமுனி வரைமில, || 'கவுந்தியடிகளிவத்து' ¶ 'தாங்காப்பொறை' ** 'என்றெவெர்வினை, †† 'உயர்பதிப் பெயர்த்ததும்'

## உஎ.—நீர்ப்படைக்காதை.



கென்பதிப் பெயர்ந்தே னென்றுயர் * போற்றிச்
செம்பியன் மூதூர்ச் சிறந்தோர்க் † குரைக்க
மைந்தற் குற்றது மடந்தைக் குற்றதுஞ்
செங்கோல் வேந்தற் குற்றதுங் கேட்டுக்
கோவலன் றாதை கொடுந்துய ரெய்தி
‡ மாபெருந் தானமா வான்பொரு ளீத்தாங்
¹ கிந்திர விகார மேழுடன் புக்காங்
கந்தர சாரிக ளாறைம் § பதின்மர்
பிறந்த யாக்கைப் பிறப்பற முயன்று
துறந்தோர் தம்முன் றுறவி யெய்தவுந்
துறந்தோன் மனைவி மகன்றுயர் பொறாஅ
ளிறந்ததுய ரெய்தி யிரங்கிமெய் விடவுங்

கண்ணகி தாதை கடவுளர் கோலத்
தண்ணலம் பெருந்தவத் [2] தாசீ வகர்முன்
புண்ணிய தானம் புரிந்தறங் கொள்ளவுந்
தானம் புரிந்தோன் றன்மனைக் கிழத்தி
** நாள்விடூஉ நல்லுயிர் நீத்துமெய் விடவு
மற்றது கேட்டு [3] மாதவி மடந்தை

௯௨. இந்திரவிகாரம் - இந்திரனால் நிருமிக்கப்பட்ட அரங்கு. யது

௯௯ - ௱. ஆறைம்பதின்மர், அவர் தாம் முன்பு பிறந்து வருகிற பிறப்பறமுயன்று துறந்தாரென்று விசேடணம்.

யாக்கை

௱௨. நாள்விடூஉ - நாளைவிட்டு; வினையெச்சம்.

---

[1]. ௯௨-௩: "அந்தர சாரிக ளறைந்தனர் சாற்று,மிந்திர விகார மேழுடன் போகி" (சிலப். ௧௦: ௧௩ - ௪): "இந்திர விகார மேழுமேத் துதலின்", "அந்தர சாரிக ளமர்ந்தினி துறையு, மிந்திர விகார மெனவெழில் பெற்று" மணி. ௨௬: ௫௫; ௨௮: ௬௯-௭௦.

[2]. ஆசீவகம் - சமணமதத்தின் பாகுபாடுகளுள் ஒன்று; இம்மதத்தினர்க்குத்தெய்வம் 'மற்கலி' என்றும், நூல் 'நவகதிர்' என்றும் கூறுவர்; "என்றநு மற்கலிதானே பிறைபிலி, யொன்பது வாய்கதிர் நூல்யா முடையன, மன்பெரு நுண்பொரு ளோத்தியல் பாயவை, யின்ப நிகழ்ச்சியுங் காழ்ப்பா டெனச்சொல" நீலகேசி. ஆசீவக. ௧௩.

[3]. ௱௩ - ௮, கோவலன் இறந்தமை கேட்டு மாதவி

பௌத்தப்பள்ளியை யடைந்து அறவு பூண்டமை, "போதியின்கீழ் மாதவர்முன் புண்ணியத்தா னம் புரிந்த, மாதவி தன்றுறவுங் கேட்டாயோ தோழி" (சிலப். உகூ. "காதலன்றன்"); "ஈங்கிம் மாதவ ருறைவிடம் புகுந்தேன், மறவணம் நீத்த மாசறு கேள்வி, யறவண வடிகள் அடிமிசை வீழ்ந்து, மாபெருந் துன்பங் கொண்டுளே மயங்கிக், காதலனுற்ற கடுந் துயர்கூற......உரவோ னருளினன்", "கோவல னிறந்தபின் கொடுந்துய ரெய்தி, மாதவி மாதவர்பள்ளியு ளடைந்ததும்" (மணி. உ: ருகூ - சுசு; கஅ: எ - அ.) என்று மிடங்களிலும் கூறப்பட்டுள்ளது.

(பி - ம்.) * 'போலச்' † 'உரைப்ப' ‡ 'மாபெருந்தான மாண்பொருளீத் தாங்கு' § 'பதின்மர்முன்பிறந்த' || 'இறந்துயிர்நீங்கி' ** 'தாள்வீழ்'

* நற்றாய் தனக்கு நற்றிறம் படர்கேன்
மணிமே கலையை வான்றுய ருறுக்குங்
கணிகையர் கோலங் † காணு தொழிகெனக்
கோதைத் தாமங் குழலொடு களைந்து
போதித் தானம் புரிந்தறங் கொள்ளவு
மென்வாய்க் கேட்டோ ரிறந்தோ ருண்மையி
னன்னீர்க் கங்கை ‡ யாடப் போந்தேன்
மன்னர் கோவே வாழ்க வீங்கெனத்
தோடார் போந்தை தும்பையொடு முடித்த
வாடா வஞ்சி வானவர் பெருந்தகை
மன்னவ னிறந்தபின் வளங்கெழு சிறப்பிற்
§ றென்னவ னாடு செய்ததீங் குறையென
நீடு வாழியரோ நீணில || வேந்தென
மாடல மறையோன் மன்னவற் குரைக்குழின்

மைததுன வளவன் கிளளியொடு பொருநதா
வொத்த ¶ பண்பின ரொன்பது மன்ன
கஉ0. ரிளவரசு பொறூஅ ரேவல் ** கேளாா
வளநா டழிக்கு மாண்பின ராதலி
[2] னொன்பது குடையு மொருபக லொழித்தவன்

---

க0ச. நறதிறமபடாகேன நற்திறம் படாக்கடவேன.

க0ரு - சு. மணிமேகலையைக் கணிகையர்கோலங்
காணுதொழிகவென று நற்றாயக்குச் சொல்லி துன்பத்தைச் செயயும
கணிகையர் கோலமென்றான், அக்கோலத்தால் தான் துனபமுறுதலால

கூ0 - ககO. அவர்கள் இப்படிச் செயயா திறக
கையாற், கங்கையாடபபோநதேனென்றான்.

அவரின் இறநதோருண்டா

ககக. ஈங்கு - இப்பூமியின்.    ககச. மனனவன - பாண்டியன.

ககரு. தவற்றுல ஒத்தபண்பினையுடையர்

---

[1]. க0௬ - அ. "மணிமேகலை, அருந்தவப் படுத்த லல்ல தியாவதுந், செய்கைத் தீத்தொழிற் படாஅள்" மணி. உ: ருரு - எ.

திருத்தாச்

[2]. "ஆர்புனை தெரிய லொன்பது மன்னரை, நேரி வாயி னிலைச்செரு வென்று" (சிலப். உஅ: ககரு-எ): "ஆராச் செருவிற் சோழர்குடிக் குரியோ, ரொன்பதின்மர் வீழ வாயிற்புறத் திறுத்து, நிலைச்செருவி னாற்றலை யறுத்து" பதிற். ரு-ஆம்பத்துப்பதிகம்.

(பி - ம்) * 'தற்றவர் தமக்கு நற்றவம்
‡ 'ஆடியபோர்ந்தேன்' § 'தென்னவநன்குடு'
ளென்பது' ** 'கொள்ளார்'
படாகென' † 'காளுயதேர்கென'
|| 'வேத்தென்அமாடல' ¶ 'பண்பி

## உஎ.—நீர்ப்படைக்காதை.

(நிலை)

பொன்புனை திகிரி யொருவழிப் படுத்தோய்
¹ பழையன் காக்குங் குழைபயி னெடுங்கோட்டு
கஉடு. வேம்புமுத றடிந்த வேந்துவா ளவலத்துப்
போந்தைக் கண்ணிப் பொறைய கேட்டருள

² கொற்கையி லிருந்த * வெற்றிவேற் செழியன்
பொற்றொழிற் கொல்லர் † ஈரைஞ் ஞூற்றுவ
ரொருமுலை குறைத்த திருமா பத்தினிக்
கரு(). கொருபக லெல்லை யுயிர்ப்பலி யூட்டி
யுரை ‡ செல வெறுத்த மதுரை மூதூ
³ ரரைசுகெடுத் தலமவரு மல்லற் காலைத்
தென்புல மருங்கிற் றீதுதீர் சிறப்பின்
மன்பதை காக்கு முறைமுதற் கட்டிலி
கரு. னிரைமணிப் புரவி யோரேழ் பூண்ட
வொருதனி யாழிக் கடவுட் டேர்மிசைக்
காலைச் செங்கதிர்க் கடவுளே றினனென
மாலைத் திங்கள் வழியோ னேறின

* ஊழிதொ றூழி யுலகங் காத்து
கசo. வாழ்க வெங்கோ வாழிய பெரிதென
மறையோன் கூறிய மாற்ற மெல்லா
மிறையோன் கேட்டாங் கிருந்த வெல்லையு
ளகல்வாய் ஞால மாரிருள் விழுங்கப்

---

கடுச - ழ பழையன - குறுநிலமன்னன், அவன வேமபு.

கடுஅ ஈரைஞ் ஞூற்றுவர் - ஆயிரவரை

கருக புகழ் வகும் பரக்குமபடி மிக்க மதுரை

¹. "பழையன்காக்குங் கருஞ்சினைவேம்பின், முரரை முழுமுத லுமியப் பண்ணி" (பதிற். இ-ஆம் பத்துப் பதிகம்); "மோகூர்ப், பணியா மையிற் பகைதலை வந்த, மாகெழு தானை வம்ப மோரியர், புனைதேர் நேமி யுருளிய குறைத்த" (அகநா. உருக,) 'பழையன்மோகூர்' மதுரை. இ௦அ.

². "கொற்கையிலிருந்த வெற்றிவேற்செழியன் நங்கைக்குப் பொற்கொல்லராயிர வரைக்கொன்று களவேள்வியால் விழவொடு சாந்திசெய்ய நாடுமலிய மழைபெய்து நோயுந்துன்பமுநீங்கியது" சிலப். உரைபெறுகட்டுரை, க.

³. மு: சிலப்பதிகாரம், ௬: அ. ⁴. சிலப்பதிகாரம், க௦: கஅடு.

(பி - ம்.) * 'இளங்கோச்செழியன்' † 'ஈரைந்நூற்றுவரை' ‡ 'செலவுறுத்த'.

எப



பகல்செல * முதிர்ந்த படர்கூர் மாலைச்
கஅடு. செந்தீப் பரந்த திசைமுகம் விளங்க
வந்திசெக்கர் வெண்பிறை தோன்றப்
பிறையேர் வண்ணம் பெருந்தகை நோக்க

விறையோன் செவ்வியிற் கணியெழுந் துரைப்போ
னெண்ணான்கு மதியம் வஞ்சி நீங்கியது
மண்ணாள் வேந்தே வாழ்கென் றேத்த
[1] நெடுங்காழ்க் கண்ட நிரல்பட நிரைத்த
கொடும்பட நெடுமதிற் † கொடித்தேர் வீதியுட்
[2] குறியவு நெடியவுங் குன்றுகண் டன்ன
வுறையுண் முடுக்க ரொருதிறம் போகி
‡ வித்தகர் கைவினை விளங்கிய கொள்கைச்
சித்திர விதானத்துச் செம்பொற் பீடிகைக்
கோயி லிருக்கைக் கோமகனேறி
வாயி லாளரின் மாடலற் § கூஉ
யிளங்கோ வேந்த || றிறந்ததற் பின்னர்
வளங்கெழு நன்னாட்டு மன்னவன் கொற்றமொடு
செங்கோற் றன்மை தீதின் றோவென
வெங்கோ வேந்தே வாழ்கென் றேத்தி
மங்கல மறையோன் மாடல னுரைக்கும்
வெயில்விளங்கு மணிப்பூண் விண்ணவர் வியப்ப

---

கசச - கூ. தன்னியல்பு முதிர்ந்த மாலையாகிய செந்தீப்பரந்த திசை விளங்கப் பிறைதோன்ற.

மேலைத்

கசஎ. பிறையெழுந்தபடியை.    கஉக. நிரல் - ஒழுங்கு.

கஉஉ. படம் - படங்கு. படங்கை மதிலாகவுடைய வீதி.

கநு௪. உறையுள் - உறையுமிடம். கநு௫. பீடிகை - சிங்காதனம்.

கநு௬. இளங்கோவேந்தர் - பட்ட ஒன்பதின்மர்.

---

1. "நெடுங்காழ்க் கண்டங் கோலி" (முல்லை. ௪௪); "கண்டப் பூதர் கொளீஇ" பெரும். உ. ச: ககச.

பூந்திரை காழ

2. "குறியவு நெடியவுங் குன்றுகண் டன்ன" மணி. கூ: இ அ.

(பி - ம்) * 'முரஞ்சிய' † 'கொடிதங்கோர்வீநியித்' ‡ 'வித்தகன்'
‖ 'நரர்நயில்வர்'
§ 'கவி'

## உஎ.—நீர்ப்படைக் காதை.

நுநுரு ¹ வெயில்முன் * றெறிந்த விகல்வேற் கொற்றமும்
² குறுநடைப் புறவி னெடுந்துயர் தீர
வெறிதரு பருந்தி னிடும்பை நீக்க
வரிந்துடம் பிட்டோ னறந்தரு கோலுந்
திரிந்துவே றாகுங் காலமு முண்டோ
தீதோ வில்லைச் செல்லற் காலையுங்
³ காவிரி புரக்கு நாடுகிழ வோற் † கென்
றருமறை முதல்வன் சொல்லக் கேட்டே
பெருமகன் மறையோற் பேணி யாங்கவற்
காடகப் ‡ பெருநிறை யையைந் திரட்டித

தோடார் போந்தை வேலோன் றன்னிறை
மாடல மறையோன் கொள்கென் § றளித்தாங்
* காரிய மன்ன ரையிரு பதின்மரைச
சீர்கெழு நன்னாட்டுச செல்கவென் || றேவித்
* தாபத வேடத் துயிருய்ந் துபிழைத்த
மாபெருந் தானை மன்ன குமர

கஎச. ஐம்பது துலாப்பாரம பொன.
கஎஎ ஐயிருபதின மர் - முடிசொன்னன்னகா ...

1. "தூங்கெயின் மூன்றெறிந்த சோழன்" (சிலப். உக: "வீங்குநீர்")— 'ஒன்னாருட்குந் துன்னருங் கடுந்திறற், றூங்கெயி லெறிந்தநின் னூங்கணோர்" (புறநா. ஙகூ.); "வீங்குதோட் செம்பியன் சீற்றம் விறல்விசும்பிற், றூங்குமெயிலுந் தொலைத்தலால்," (பழ. சகூ); "ஒன்னா, ரோங்கெயிற் கதவ முருமுச்சுவல் சொறியுந், தூங்கெயி லெறிந்த தொடிவிளங்கு தடக்கை, நாடா நல்லிசை நற்றேர்ச் செம்பியன்" (சிறுபாண். எகூ-அஉ); "தூங்கெயி லெறிந்த தொடித்தோட் செம்பியன்" (மணி. க. ச); "தேங்கு தூங்கெயி லெறிந்த வவனும்" (கலிங்கத்து. இராச. கஎ); "வாங்குந் திருக்கொற்ற வானொன்றின் வாய்வாய்ப்பத், தூங்கும் புரிசை துணித்த கோன்" (இராசராசசோழ னுலா, கக); "தூங்கு மெயிலெறிந்த சோழனும்" விக்கிரமசோழனுலா, கூ

2. புறவின் துயர்தீர்த்த குறிப்பின்விரிவை, இப்புத்தகம் சஅரு-ஆம் பக்கத்திலுள்ள கூ-ஆம் அடிக்குறிப்பிற்காண்க.

3. "காவிரி புரக்கு நாடுகிழ வோனே" பொருந. உசஅ.

4. சிலப்பதிகாரம், உக: சகக. 5. சிலப்பதிகாரம், உக: உஉ-கூ.

(பி - ம்.) * 'எறிந்தவியறேர்க்கொற்றக்' † 'எனவருமறை' ‡ '

பகுதிகை'
' அளித்தாங்கு ' || ' ஏவிக், கருங்கயனெடுங்கட் கவின்பெறுகாதில் விரிவெண்'



# சிலப்பதிகாரம்

சுருளிடு தாடி மருள்படு பூங்குழ
லரிபரந் தொழுகிய செழுங்கய னெடுங்கண்
விரிவெண் டோட்டு வெண்ணகைத் துவர்வாய்ச்
சூடக வரிவளை யாடமைப் பணைத்தோள்
கஎரு. வளரிள வனமுலைத் * தளரியன் மின்னிடைப்
பாடகச் சீறடி யாரியப் பேடியோ
டெஞ்சா † மன்ன ரிறைமொழி மறுக்குங்
கஞ்சுக முதல்வ ரீரைஞ் ஞூற்றுவ
ரரியிற் போந்தை பருந்தமி ழாற்ற
கஅ௦. றெரியாது மலைந்த கனக விசயரை
யிருபெரு வேந்தர்க்குக் ‡ காட்டிட வேவித்
திருந்து துயில் கொள்ளா வளவை யாங்கணும்
பரம்புநீர்க் கங்கைப் பழனப் பாசடைப்
பயிலிளந் தாமரைப் பல்வண் டியாழ்செய
கஅரு. வெயிலிளஞ் செல்வன் விரிகதிர் பரப்பிக்
குணதிசைக் குன்றத் துயர்மிசைத் தோன்றக்
குடதிசை யாளுங் கொற்ற வேந்தன்
வடதிசைத் தும்பை வாகையொடு § முடித்துத்
தென்றிசைப் || பெயர்ந்த வென்றித் தானையொடு

உ௰. கிதிஞ்சு வியனகர் கீடுகிலை கிவந்து

கஅக. தாடி - மோவாய.

கஅ௬ வெண்டோடு - சங்கினாற் செய்த காதாபரணம்

கஅஎ. எஞ்சாமன்னர் மறத்திறலொழியாத மன்னர்

கஅஎ - அ இறைமொழிமறுக்குங் கஞ்சுகமுதல்வா பொருது மறுசதுரைக்கு ந் தூதர்

- மேலான வார்த்தை

கஅக. அரியில்-அரிதரலில் ஆற்றல-இவர்களை வென்று கைக்கொண்டவலி.

கஅஅ - கூக தூகா காட்டிட வேவி.

கக௨. கொள்ளாவளவை, கடுமைகூறி ற று

கக௩. கங்கையைச்சூழ்நத பழனம் உ௰. நகர் - கோயில்

[1]. கஅசு-கூ பேடி; "சுரியற் குடி மருள்படு பூங்குழற், பவளச் செவ்வாய்த் தவள வாணகை, பொள்ளரி நெடுங்கண் வெள்ளிவெண் டோட்டுக், கருங்கொடிப் புருவத்து மருங்குவளை பிறைநுதற், காந்தளஞ் செங்கை யேந்திள வனமுலை, யகன்ற வல்குலந் நுண் மருங்கு, லிகந்த வட்டுடை யெழுதுவரிக் கோலத்து, வாணன்பேரூர் மறுகிடைத் தோன்றி, நீணில மளந்தோன் மகன்முன் னாடிய, பேடிக் கோலத்துப் பேடு" மணி. க: ககக - உ௯.

(பி - ம்.) * 'தவிரினபின்னிடை' † 'மன்னர்க்கிறைமொழிபிறக்கும்' வேவி' § 'முடித்தோன்' || 'பெயர்த்தனன்'

‡ ' காட்டி

உஎ.—நீர்ப்படைக்காதை.

நிலை

கதிர்செல வொழித்த * கனக மாளிகை
முத்து + நிரைக் கொடித்தொடர் முழுவதும் வளைஇய
சித்திர விதானத்துச் செய்பூங் கைவினை உ௦௫.

யிலங்கொளி மணிநிரை யிடையிடை வகுத்த
‡ விலங்கொளி வயிரமொடு பொலந்தகடு போகிய
மடையமை செறிவின் வான்பொற் கட்டிற்
புடைதிரண் டமைந்த பொற்கால் § லமளிமிசை [1] யிணைபுணர்
ந்தினைந்த திளமயிர் செறித்த
துணையணைப் பள்ளிக் துயிலாற்றுப் படுத்தாங் உக௦.
செறிந்துகளங் கொண்ட வியர்நோர்க் கொற்ற மறிந்துரை பயின்ற
வாயச செவிலியர்
தோட்டுணை துறந்த துயர்கூர் கொழிகெனப
பாட்டொடு தொடுத்துப் பல்பாண்டு வாழ்த்த [*] சிறுகுறுங்
கூனுங் குறளுஞ் சென்று
உகரு. பெறுகவின் செவ்வி பெருமகன் வந்தா
னறுமலர்க் கூந்த லொளணி பெறுகென
வமைவிளை ந்தறன் மரந்திய கானவன்
கவண்விடு புடையூஉக் ** காவல் கைவிட
வீங்குபுன முணீஇய வேண்டி வந்த
உஉ௦. †† வோங்கியல் யானை தூங்குதுயி லெய்த
வாகை துமபை வடதிசைச சூடிய
வேக யானையின் வழியோ நீங்கெனத்

உ யக. மாளிகை - அந்தப்புரம். கதிர்செலவொழித்தல் - உயர்தல், உ யஉ. கொடித்தொடர் - சல்லியும தூக்கும்.

உ பரு. விலங்கொளி - பக்கமோடுகிற ஒளி. பொலங்கடு - போகிய - ஒழுகிய.

பொற்றகடு, உ0க. துயிலைப்போக்கி.

உகசு கூந்தல் நாளொப்பணைபெறுக. என - என்று சொல்ல.

[1]. சிலப். ச: சுக; நெடுநல். ககஉ; கலி. எஉ.

[2]. "கூனுங் குறளு மூமுங் கூடிய குறுந்தொழி லிளைஞர்". "கூனுங் குறளுங் கொண்டன" (சிலப். உ0: கஎ, உஅ: இஅ) பெருங். ப கoக: உகூ - கக.

(பி - ம்.) * 'தமனியமாளிகை' † 'திரைத்தொடர் முழுவதும் விளைநிச் ‡ 'விளங்கொளி..........தகடுபோக்கி மடையமை செறிவளைவான பொற்றகட்டித்' § 'அமளியிலை' ‖ 'இனமயிர்' ** 'காவலன்' †† 'வாங்குதிலையாளை தாங்குதுயில்' நிறுதி



திறத்திறம் பகர்ந்து சேணோங் கிதணத்துக்
குறத்தியர் பாடிய குறிஞ்சிப் பாணியும்
வடதிசை மன்னர் மன்னெயின் முருக்கிக்
கவடி வித்திய கழுதைபே ருழவன்
குடவர் கோமான் வந்தா னாளைப்
படுநுகம் பூணுப் பகடே மன்ன
ரடித்தளை நீக்கும் வெள்ளணி யாமெனுந்
[3] தொடுபே ருழவ ரோதைப் பாணியுந்

* தண்ணான் பொருநை யாடுந ரிட்ட
வண்ணமுஞ் சுண்ணமு மலருமம பரந்து
விண்ணுறை விற்போல் விளங்கிய பெருந்துறை
வண்டுண மலர்ந்த மணித்தோட்டுக் குவளை உ௩௫.
முண்டகக் கோதையொடு முடித்த † குஞ்சியின்
முருகுவிரி தாமரை முழுமலர் ‡ தோயக்
குருகலர் தாழைக் கோட்டுமிசை யிருந்து
வில்லவன் வந்தான் வியன்பே ரிமயத்துப
பல்லா னிரையொடு படர்குவிர் நீரெனக்
உ௪0. காவல னானிரை நீர்த்துறை § படீஇக்
கோவல ரூதுங் குழலின் பாணியும்
வெண்டிரை பொருத வேலை வாலுகத்துக்
குண்டுநீ ரடைகரைக் குவையிரும் புன்னை
வலம்புரி யீன்ற நலம்புரி முத்தங்

(உ௧அ) காவலனைகவிடுதலாற் (உ௧௧) புனமுண்ணவந்த (உ௨0) யானை தயிலெய்தப் (உ௨௪) பாடிய குறிஞ்சிப்பாடலும்

உ௨அ. பூணுய - பூண்டல் செயவாய். பகட்டே. விளி.

உ௨௯. வெள்ளணி - பிறந்தநாளொப்பனை.

சொல்.

உ௩0. தொடுப்பே ருழவர் - விளாக்கொண்டு உழுமுழவர்; ஏருழவர், ஒரு

உ௩௯. பல்லானிரை - வடக்கு நின்றும் கொண்டு போந்த நிரை; அவற் றோடு நீருஞ்சேர்வீர்.

உ௪0. படீஇ - படுத்தி உ௪௩. புன்னை - புன்னையிடத்தே.

[1]. பதிற். எஉ; புறநா. கஉ, ககஉ; பு-வெ. உழிஞை. உக.

[2]. தொடுப்பு - விதைப்புமாம்; 'தொடுப்பினாயிரம் வித்தியதுவிளைய' (மதுரை கக); "தந்துநீரடைகரைச் சங்குழுதொடுப்பின் முத்துவிளைகழனி" மணி. அ; - க. (பி - ம்.) * 'தன்னம்பொருதை' † 'குஞ்சியன்' ‡ 'கோவலர்'
'தேய' § 'படியாக்

# உஎ.—நீர்ப்படைக் காதை.

ருருக

கழங்காடு மகளி ரோதை யாயத்து
வழங்குதொடி முன்கை மலர வேந்தி
வானவன் வந்தான் வளரிள வனமுலை
தோணல * முணீஇய தும்பை போந்தையொடு
வஞ்சி பாடுது மடவீர் யாமெனு
மஞ்சொற் † கிளவிய ரந்தீம் பாணியு
மோர்த்துட னிருந்த கோப்பெருந் தேவி
வால்வளை செறிய வலம்புரி வலனெழ
மாலைவெண் குடைக்கீழ் வாகைச் சென்னியன்
வேக யானையின் மீமிசைப் பொலிந்து
[1] குஞ்சர வொழுகையிற் கோநகர் எதிர்கொள
‡ வஞ்சியுட் புகுந்தனன் செங்குட் டுவனென்

(உசக) 'ஏந்தி' என்னும் வினையெச்சம் (உசக) 'எனும்'

என்னும் பெயரெச்ச வினையோடு முடிந்தது.

உசஅ. உணீஇய - உண்ணும்படி.

(உசஅ) உண்ணும்படி (உசக) பாடுதலெனக

பாட்டால் தம்மிடத்து வருவானென்றூ. (உஉச - ருo) குறிஞ்சி முதலாக நாலுநிலத்துப் பாணியும் (உருக) ஓர்த்து

உறங்காததேவியென்றது நாலுநில அணிமையுங் கூறிற்று.

(கக௯அ) வடதிசைக்கண் தும்பைத்துறையையும் வாகைத்துறையையும் முடிவு செய்து (உருக) தன்தேவி (உருஉ) கைவளைசெறிய வலம்புரிமுழங்க (உருங) வாகைச்சென்னியனாய (உருச) யானைமிசைப்பொலிந்து (உருரு) திருநகரெதிர் கொள்ளத் (கக௯) தானையொடு (உரு௬) வஞ்சியிற் புகுந்தனனெனக் கூட்டுக.

## உஎ.—நீர்ப்படைக்காதை முற்றிற்று.



1. "களிறுபல பூட்டி யொழுகை யுய்த்த" பதிற். சச.

(பி - ம்.) * 'உன்னியதும்பை' † 'லெவ்யத்திம்' ‡ 'வஞ்சியித்'

# இருபத்தெட்டாவது

# நடுகற்காதை.



தண்மதி யன்ன தமனிய நெடுங்குடை

மண்ணக * நிழற்செய மறவா ளேந்திய
[1] நிலந்தரு திருவி னெடியோன் † றனது
வலம்படு சிறப்பின் வஞ்சி மூதூர்
[2] ரொண்டொடித் தடக்கையி னொண்மலர்ப் பலிதூஉய்
[3] வெண்டிரி விளக்க மேந்திய மகளி
ருலக மன்னவன் வாழ்கென் றேத்திப்
பலர்தொழ வந்த மலரவிழ் மாலை
[4] போந்தைக் கண்ணிப் பொலம்பூந் தெரியல்
‡ வேந்துவினை முடித்த வேந்துவாள் வலத்தா
யானை வெண்கோ டழுத்திய மார்பு
நீள்வேல் கிழித்த நெடும்புண் § ணுகமு
மெய்கணை கிழித்த பூகட்டெழி லகலமு
மைவாள் கிழித்த மணிப்பூண் || மார்பமு
மைம்மல ருண்கண் மடந்தைய ரடங்காக்

---

க. தமனிய நெடுங்குடை யென்றது காம்பும் முகப்பும் பொன்னாதலால்.

௨. மறம் - வீரம்.

---

[1]. "நிலந்தரு திருவி னெடியோய்" (பதிற். அ௨);

யோன்" மதுரை. எகூக.

" நிலந்தரு திருவி னெடி

². @ - அ. "அகநக ரெல்லா மரும்பவிழ் முல்லை, நிகர்மலர் நெல்லொடு தூஉய்ப், பகன் மாய்த்த மாலை" (சிலப். கூ: க-க) என்பதையும் அதன் கீழ்க் குறிப்பையும் பார்க்க.

³. " கன்னியர் கைவிளக் கேந்தக் காவலன், பொன்னியல் வளநகர் தோன்றினுர்" சூளா. சீய. உசச.

⁴. கூ-கo.

பொலியத் தூங்கேனுர் "

" வேந்துவினை முடித்த வேந்துவாள் வலத்துப், போந்தைக் கண்ணித் சிலப். உஅ: கஙூ - ச.

(பி - ம்.) * 'திழற்ற மறவான்' † 'முறுது' ‡ 'வெய்ந்துவினை' § 'அகழும் முளைமயிமலர்'

|| 'புய உஅ.—நடுகற் காதை. ருசுக

¹ கொம்மை வரிமுலை வெம்மை * வேதுநீஇ
+ ² யகிலுண விரித்த வம்மென் கூந்தன்
முகிலுழை மதியத்து ‡ முரிகருஞ் சிலைக்கீழ்
மகரக் கொடியோன் மலர்க்கணை துரந்து
சிதரரி பரந்த § செழுங்கடைத் தூது
மருந்து மாயதிம் மாலையென் || றேத்த
விருங்கனித் துவர்வா யிளநிலா விரிப்பக்
கருங்கயல் பிறழுங் காமர் செவ்வியிற்
திருந்தெயி றரும்பிய விருந்தின் மூரலு
மாந்தளிர் மேனி ¶ மடவோர் தம்மா
லேந்துபூண் ** மார்பி னிளையோர்க் களித்துக்
காசறைத் திலகக் கருங்கறை கிடந்த

மாசில்வாண் முகத்து வண்டொடு சுருண்ட
[2] குழலுங் கோதையுங் கோலமுங் காண்மார்
௩0. [3] நிழல்கான் மண்டிலந் தம்மெதிர் நிறுத்தி
வணர்கோட்டுச் சீறியாழ் [++] வாங்குபு தழீஇப்
புணர்புரி நரம்பிற் பொருள்படு பத்தர்க்
குரல்குர லாக வருமுறைப் [‡‡] பாலையிற்

---

(௧௬) உறீஇ (௨௧) யுத்தவென்னுமெச்சம், (௨௪) அரும்பியவென்னும் பெயரெச்சத் தொழிலோடு முடிந்தன.

(௩) நெடியோன் (௪) மூதூரில் (௮) வந்த மாலை, (௯) தெரியல் (௧0) வேந்து வாள்வலத்தர் (௧௧ - ௪) மார்பை (௧௫) மடந்தையர்தம் (௧௬) முலையால் வேதுகொண்டு இவருடைய (௨0) கட்கடையாகிய,தூது (௨௧) முன் பாசறைக்கண் நமக்கு வருத்தஞ் செயததேயன்றி இம்மாலைக்கண் அதற்கு மருந்தாகியதென்று (௨௬) இளையர் (௨௧) ஏத்த (௨௪) அரும்பியமூரலையும் (௨௬) அவ்விளையோர்க்கு (௨௫) அம்மடவோராலே (௨௬) அளிப்பதுஞ் செய்தென்க.

[1]. "கொம்மை வருமுலை வெம்மைபிற்றடைஇ" (நெடுநல். ௬௬); "தங்குகண் வேல்செய்த புண்களைத் தடமுலை வேதுகொண் டொற்றியுஞ், செங்களி வாய்மருந் தட்டியேர் செம்பொனெடுங்கடை திறமினோ" கலிங்க. கடை. ௩௫.

[2]. "அகிலுண விரித்த வம்மென் கூந்தலின்" சிறுபாண். ௨௬௬.

[3]. ௨௯ - ௩0. "மாசறக் கண்ணடி வயக்கி வண்ணமுந், தேசு நோக்கி" பரி. ௧௨.

மொளியுந் திகழ

[4]. "நிழல்கான் மண்டில நோக்கி யழல்புனை, யவிரிழை திருத்து வாள்" (பரி-௨௧); "நிழல்கான்மண்டிலத்து" அகநா. ஏ௧.

(பி - ம்) * 'வெய்துறீஇ' † 'அகிலுணவிருந்த' ‡ 'மூரிவெஞ்சிலை' § 'செங்கடைத்தாது' ‖ 'எத்தி' ¶ 'மடவோர்தத்தமேந்து' ** 'மார்பினியோர்க்கு' †† 'வாங்குபுடைத்தமீஇப்புரிபுரி' ‡‡ 'பாலதுத்தங்குரலாற்றொன்முறையியக்கியத்தில்'





றுத்தங் குரலாத் தொன்முறை யியற்கையி
னந்தீங் குறிஞ்சி யகவன் * மகளிரின்
மைந்தர்க் கோங்கிய வருவிருந் தயர்ந்து
முடிபுற முரிஞ்சுங் கழற்கால் ' குட்டுவன்
குடிபுறந் தருங்காற் றிருமுகம் போல
வுலகுதொழத் தோன்றிய மலர்கதிர் மதியம்
பலர்புகழ் + மூதூர்க்குக் காட்டி நீங்க
மைந்தரு மகளிரும் வழிமொழி கேட்ப
வைங்கணை நெடுவே ளரசுவீற் றிருந்த
வெண்ணிலா முன்றிலும் வீழ்பூஞ் சேக்கையு
மண்ணீட் டரங்கமு மலர்ப்பூம் பந்தரும்
[1] வெண்கா லமளியும் விதானவே திகைகளுந்
தண்கதிர் மதியந் தான்கடி கொள்ளப
படுதிரை சூழ்ந்த பயங்கெழு மாநிலத்
திடைநின் றோங்கிய நெடுநிலை மேருவிற்
கொடிமதின் மூதூர் நடுநின் றோங்கிய
[2] தமனிய மாளிகைப் புனைமணி யரங்கின்

வதுவை வேண்மாண் மங்கல மடந்தை
மதியேர் வண்ணங் காணிய வருவழி

(௩௦) சிறுத்திக் (௩௧) தந்தீஇயெனவு முமெச்சங்கள், (௩௫) அகவன்மகளி ரென்னும் பெயரில் அகவுதற்றொழிலோடு முடிந்தன.

(உ௧) போகத்தாற குலைந்த குழல் முதலியன திருத்திக் காணவேண்டிக் (௩௦) கண்ணுடிபார்த்து (௩௧) யாழைத்தழீஇக் (௩௫) குறிஞ்சியை அகவுதலைச் செய்யும் மகளிராலே (௩௬) மைந்தர்க்கு விருந்தயர்ந்தென்க

(அ) பலர்தொழ வந்த மலரவிழ் மாலே, (உ௬) இளையோர்க்கு (உ௫) மடவோராலே (உ௪) மூரலையும் (உ௩) அளித்து (௩௩) மைந்தர்க்கு (௩௫) அகவன் மகளிராலே (௩௬) விருந்துமயர்ந்து (௪௦) முதுரிடத்து (௩௯) மதியத்தைக் (௪௦) காட்டி நீங்க, அந்தமதியம் (௪௩) வெண்ணிலாமுனறில் முதலானவற்றை (௪௬) விளக்கா நிறக (௫௨) அம்மதியத்தெழுச்சியை (௫௧) வேண்மாள்(௫௨) காண்டற்கு வருவழி (௫௦) அரங்கின்...... பெற்றன ஒருபக்கமெனக.

---

¹. "விதானித்துப் படுத்த வெண்கா லமளி" பெருங். க ௩௩: ௩௯.

². ௫௦ - ௫௧. "விளங்கில வந்தி வெள்ளி மாடத், திளங்கோ வேண்மா ளருளி" சிலப். உ௫: ௪ - ௫.

ருடனிருந்

(பி - ம்.) * 'மகளிர், மைந்தர்க் கோக்கிய வருவிருந்தயரமுடி' † 'குடவன்'

‡ 'முதூர்காட்டியாங்கு'

## உஅ.—நடுகற் காதை.

ரின்௩

யெல்வளை மகளி ரேந்திய * விளக்கம்
பல்லாண் டேத்தப் பரந்தன வொருசார்
௫௫. மண்கணை முழவும் வணர்கோட் டியாழும்
பண் † கனி பாடலும் பரந்தன வொருசார்
மான்மதச் சாந்தும் வரிவெண் ‡ சாந்தும்
[1] கூனுங் குறளுங் கொண்டன வொருசார்
வண்ணமுஞ் சுண்ணமு § மலர்ப்பூம் பிணையலும்
௬0. [2] பெண்ணணிப் பேடிய ரேந்தின ரொருசார்
[3] பூவும் புகையு மேவிய விரையுந்
தூவியஞ் சேக்கை சூழ்ந்தன வொருசார்
ராடியு மாடையு மணிதரு கலன்களுஞ்
சேடியர் ¶ செவ்வியி னேந்தின ரொருசார்
௬௫. ராங்கவ டன்னுட னணிமணி யாங்கம்
[5] வீங்குநீர் ஞால மாள்வோ னேறித்
[6] திருநிலைச் சேவடிச் சிலம்புவாய் புலம்பவும்
[7] பரிதரு செங்கையிற் படுபறை யார்ப்பவுஞ்
செங்க ணூபிரந் திருக்குறிப் பருளவுஞ்

௬௫ மணியாங்கம் - நிலாமுற்றம்.

---

1. "பஞ்சிலங்கு மல்குலார் பலாண்டுகூற" "தழைமலர்க்கோதைநல்லார் பலாண்

டிசை நதும்பவாழ்த்த", "பங்கயமுகத்தவர்பலாண்டிசைபராவ" சூளா. அரசு. கூ;

கல்யாண. ௭௪௬, ௨௬ள.

[2]. சிலப். உள: உகச - ஆம் அடியையும் அதன் கீழ்க் குறிப்பையும் பார்க்க.

[3]. "பெண்ணவா யாணிழந்த பேடி யணியாளோ" நாலடி. உகிக.

[4]. மு. "பூவும் புகையு மேவிய விரையும்" சிலப். ஓ: கச; கஉ: கஅ; கo: கஓக.

[5]. "வீங்குநீர் ஞால மாள்வோன்" (சிலப். உக: கoஓ, களக); மாள்வோய்" சிலப். உகூ. கஓரு; மணி. ஞ: கக.

"வீங்குநீர்ஞால

[1]. கள - எஓ. "திரிபுர மெரியத் தேவர் வேண்ட, வெரிமுகப் பேரம் பேவல் கேட்ப, வுமையவ ளொருதிற னாக வோங்கிய, விமையவ னாடிய கொடுகொட்டி யாட

லும்" (சிலப். சு: சo-சக);

நர்க்கா மெனல்" (கு. க:

"கொட்டி கொடுவிடையோ னாடிநற் றதற்குமப், பொட்டிய கச-மேற்): "படுபறை பலவியம்பப் பல்லுருவம் பெயர்த்

துநீ, கொடுகொட்டி யாடுங்கால்.........கொண்டசீர் தருவாளோ" (கலி. "கொட்டி யாடற் கேற்ற மொட்டிய, வுமையவ ளொருபா லாக வொருபா,

கடவுள்);

விமையவா

நாட்டத் திறைவ னாகி, யமையா வுட்கும் வியப்பும் விழைவும், பொலிவும் பொருந்த நோக்கிந் தொக்க, வவுண ரின்னுயி ரிழப்ப வக்கலம், பொலிய வாடின னென்ப" கு. கு - மேற்.

(பி - ம்.) * 'விளக்கமொடு பல்யாண் டெத்தப் பரந்தனர்' † 'கனிப்பாடலும்' ‡ 'கலவையுங்' § 'மலர்ப்பூம்' ‖ 'சேக்கைத்தந்தனர்' ¶ 'செல்வியின்' ** 'புரிதரு' [illegible]

# சி ல ப் ப தி கா ர ம்

எ0. செஞ்சடை சென்று திசைமுக மலம்பவும் பாடகம்
பதையாது சூடகந் துளங்காது
மேகலை யொலியாது மென்முலை * யசையாது வார்குழை
யாடாது மணிக்குழ லவிழா
துமையவ ளொருதிற னாக வோங்கிய
எ௧. விமையவ னாடிய † கொட்டிச சேதம்
பாத்தரு நால்வகை மறையோர் பறையூர்க் ‡ கூத்தச சாக்கைய
னாடலின் மகிழ்ந்தவ னேத்தி நீங்க விருநில மாளவோன்
§ வேத்தியன் மண்டப மேவிய பின்னர்
அ0. நீலன் முதலிய கஞ்சுக மாக்கண்
மாடல மறையோன் றன்னொடுந் தோன்றி வாயி லாளரின்
மன்னவற கிசைததபின்
கோயின் மாக்களிற் கொற்றவற் றொழுது தும்பை வெம் ||
போர்ச் சூழ்கழல் வேந்தே அ௧. செம்பியன் மூதூர்ச் சென்றுபுக்
காங்கு
வச்சிர மவந்தி மகதமொடு ¶ குழீஇய
சித்திர மண்டபத் திருக்க வேந்த
னமரகத் துடைந்த வாரிய மன்னரொடு
தமரிற் சென்று தகையடி வணங்க

எ௧. கொட்டிச்சேதம் - கொடுகொட்டிக் கூத்து.

எ௧ - எ. இதனை, பருத்தலரிய நான்மறையோரது பறையூரிற் சாக்கையன் ஆடுதலின் மகிழ்ந்தென்க

கூத்தச்

எகூ. வேத்தியன் மண்டபம் - அரசிருப்பாய பேரோலக்கமண்டபம்.

அகூ - எ. வச்சிரம் அவந்தி மகதமொடுதிரண்ட மண்டபம் - இந்நாடு மூன்றுமுடையோர் திறையிட்ட பந்தர் தோரணவாயில் பட்டிமண்டபம், இவைகூடியமண்டபம்;......ஆகலான், ஆகுபெயர்; பிறந்தவழிக்கூறல்.

அகூ தமரிற்சென்று - சங்கோசபரிவாரத்துக்குக் கடவாருடன் சென்று. [1] "எண்டிக்களந்துகொண்டனவென்னப், புரிந்த செஞ்சடை கல், உழைநின்றீரும்"—

திமிர்ந்து சுழல்''

[2]. சாக்கையரென்று மொருவகைச்சாதியார் இப்பொழுதும் தொழிலையுடையராய் மலைநாட்டிலுள்ளாரென்று தெரிகின்றது.

கூத்துநிகழ்த்தும்

[3]. அகூ - எ. "வச்சிரநன்னாட்டுக், கோனிறை கொடுத்த கொற்றப் பந்தரு, மகதநன்னாட்டு வாள்வாய் வேந்தன், பகைபுறத்துக் கொடுத்த பட்டி மண்டபமு, மவந்தி வேந்தனுவந்தனன் கொடுத்த, நிவந்தோங்கு மரபிற் றோரண வாயிலும்" சிலப். இ: கூகூ-கoச

(பி - ம்.) * 'இயங்காது' † கொடுகொட்டிச்சேதம்' ‡ 'கூத்தைச்சைசையோ ருடனின்' § 'வேத்தியன் மண்டபமேறிய' ‖ 'போர்க்கும்' ¶ 'குழிஇச்சித்திர'

## உஅ.—நடுகற்காதை.

ருகூரு

கo. நீளமரமுவத்து நெடும்பேராண்மையொடு
வாளுங் குடையு மறக்களத் * தொழித்துக்
[1] கொல்லாக் கோலத் துயிருய்ந் தோரை
வெல்போர்க் கோடல் வெற்ற மன்றெனத்

தலைத்தேர்த் தானைத் தலைவற் குரைத்தனன்
கூ௫. சிலைத்தா ரகலத்துச் செம்பியர் பெருந்தகை
யாங்குநின் றகன்றபி னறக்கோல் வேந்தே
யோங்குசீர் மதுரை மன்னவற் காண
† வாரிய மன்ன ரமர்க்களத் தெடுத்த
¹ சீரியல் வெண்குடைக் ‡ காம்புநனி சிறந்த
௬00. ¹ சயந்தன் வடிவிற் றலைக்கோ லாங்குக்
கயந்தலை யானையிற் § கவிகையிற் காட்டி
யிமையச் சிமையத் திருங் ‖ ¹ குயி லாலுவத்
துமையொரு பாகத் தொருவனை வணங்கி
¹ யமர்க்கள ¶ மரசன தாகத் துறந்து
௬0௫. ¹ தவப்பெருங் கோலங் கொண்டோர் தம்மேற்

கூ௬. போரிடத்துப் பிடித்துக்கோடல். கூ௭. காண - கண்டவளவிலே.

௬0௨. குயிலாலுவம் - இமவான்பக்கத்து ஒருபகுதி.

(கூ௮) ஆரியமன்னரென்னுந் தொகுதி யொற்றுமைபற்றிக் (௬0௧)காட்டி (௬0௩) வணங்கிக் (௬0௫) கொண்டோரெனச் சிலர்வினை வேறுசிலர்வினையொடு முடிந்தது.

¹. "சடையினருடையினர் சாம்பற் பூச்சினர், பிடிகைப்பீலிப் பெருநோன்பாளர்", "தாபத வேடத் துயிருய்ந்து பிழைத்த, மாபெருந் தானை மன்னகுமரர்", "தவப் பெருங்கோலங்கொண்டோர்" சிலப். உ௬: உ௨௫ - ௬; உ௭: ௧௭௬-௮0; உ௮: ௬0௫.

². கூ௮ - ௯. "பேரிசைமன்னர் பெயர்புறத் தெடுத்த, சீரியல் காம்புதனிகொண்டு" சிலப். ௯: ௧௧௪ - ௫.

வெண்குடைக்

[illegible]. "தெய்வ மால்வரைத் திருமுனியருள, வெய்திய சாபத் திந்திர சிறுவனொடு, தலைக்கோற் றானத்துச்சாபம்", "மன்னவன் கோயி, லிந்திர சிறுவன் சயந்தனுகென" சிலப். க: க-க; கககூ.

[illegible]. நீலகேசி. மொக்கலவாதச்சருக்கம் கஉ0 - ஆம் பாட்டுரையில், என்று ஓரிடப்பெயர் காணப்படுகின்றது.

'குயிலாலபுரம்'

[illegible]. "தேன்மிடைந்த தாரினன் செங்களஞ் சிறந்தது" (சீவக. உஎக) என்பதை யும், "இத்துணையும் இவன் வெற்றியாதலின் இவன் களம் என்றார்" என்னும் அதன் விசேடவுரையையும், "ஒன்றி விரண்டாய்த்து மூன்றடக்கி நான்கினால், வென்று களங்கொண்ட வேல்வேந்தே" பு—வெ. கூ: கஎ.) என்பதையும்பார்க்க.

[illegible]. இக்காதையின் கூஉ - ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

(பி - ம்.) * 'ஒளித்து' † 'ஆரியமாக்களமர்' ‡ 'காம்பினித்சிறந்த' § 'விளை காட்ட' || 'கயிலாயத்து' ¶ 'அரசரணுகத்தரத்து'



# சிலப்பதிகாரம்

கொடியழற் சீற்றங் கொண்டோன் கொற்றம்
புதுவ தென்றனன் போர்வேற் செழியனென்
றேனை மன்ன ரிருவருங் கூறிய
நீண்மொழி யெல்லா நீலன் கூறத்
தாமரை + செங்கண் டழனிறங் கொள்ளக்
கோமக னகுதலுங் குறையாக் கேள்வி
மாடல னெழுந்து மன்னவ மன்னே
வாழ்கநின் கொற்றம் வாழ்கவென் றேத்திக்

கறிவளர் சிலம்பிற் றுஞ்சும் யானையிற்

௧௧௫. சிறுகுர னெய்தல் * வியலூ ரெறிந்தபி

[1] ன்ர்புனை தெரிய லொன்பது மன்னரை

நேரி வாயி னிலைச்செரு வென்று

நெடுந்தேர்த் தானையொ † டிடும்பிற்புறத் திறுத்துக்

கொடும்போர் கடந்து ‡ நெடுங்கட லோட்டி ௧௨0.

யுடன்றுமேல் வந்த வாரிய மன்னரைக்

கடும்புனற் கங்கைப் பேர்யாற்று வென்றோய்

நெடுந்தார் வேய்ந்த பெரும்படை வேந்தே

௧௪ - ௧௮. ஆரியமன்னர் அமர்க்களத்தில் தங்களுக்கெடுத்த குடையிற் காம்பைக் கையிலே பிடித்து ஆனைக்கழுத்திலிருத்திய ஆசிரியன் கையில் தலைக்கோலாகக் காட்டியும், குயிலாலுவமென்னும்.............. அமர்க்களம் அரசனதாகத் துறந்தும், தவப்பெருங்கோலங் கொண்டாராயினா சீற்றங்கொண்டோன் கொற்றம் புதிதென்றுமை

தம்மேற்

௧௧௪ - இ யானையினையுடைய வியலூர்.

௧௧௭. நேரிவாயில் - உறையூர்த் தெற்கிலவாயிலதோரூர்.

௧௨0

ஆரியமன்னரொன்றாகத்-முன னொருகால் இவனுக்குத் தோற்றார்சிலர்.

¹. ககசு - எ. "நின் மைத்துன வளவன் கிள்ளியொடு பொருந்தா, வொத்த பண்பின ரொன்பது மன்னர், கினவரசு பொருஅ ரேவல் கேளார், வளநா டழிக்கு மாண்பின ராதலி, னொன்பது குடையு மொருபக லொழித்தவன், படுத்தோய்" சிலப். உள: ககஎ - உக.

பொன்புனை திகிரி யொருவழிப்

². ககக - உக. "மறத்துறை முடித்த வாய்வாட் டானையொடு, பொங்கிரும்பரப் பிற் கடல்பிறக் கோட்டிக், கங்கைப் பேர்யாற் றுக்கரை போகிய, செங்குட்டுவன் , (சிலப். கo. கட்டுரை, கக - ௫); " கோடுநரல் பௌவங் கலங்க வேலிட், டுடைதிரைப்

பரப்பிற் படுகட லோட்டிய, வெல்புகழ்க் குட்டுவற் கண்டோர்","கெடலரும் பல்புகழ் நிலைஇ நீர்புக்குக், கடலொ டுழந்த பனித்துறைப் பரதவ" (பதிற். சசு, சஅ); "மட் டவிழ்தெரியன் மறப்போர்க் குட்டுவன்......செருச்செய் முன்பொடு முந்நீர் முற்றி

யோங்குதிரைப்

(அகநா. உகஉ);

பௌவ நீங்க வோட்டிய, நீர்மா ணெஃக நிறத்துச் சென்றழுந்த" புறநா: ககக - ஆம்பாட்டிலும் இக்கருத்து வந்துள்ளது.

(பி - ம்.) * 'வியனார்' † 'இமயம்பியாற்றிலத்துக்கடம்போர்'

## உஅ—நடுகற் காதை.

இங்ஙன

புரையோர் * தம்மொடு பொருந்த வுணர்ந்த
வரைச ரேறே யமைகவின் சிற்ற
கஉ௫. மன்னன் வேந்தே † நின் ¹ வா ணாட்க
² டன்னன் பொருநை மணலினுஞ் சிறக்க
வகழ்கடன் ஞால மாள்வோய் வாழி
யிகழா தென்சொற் கேட்டல் வேண்டும்

வையங் காவல் பூண்டநின் னல்யாண்
டையைந் திரட்டி சென்றதற் பின்னு
மறக்கள வேள்வி செய்யா தியாங்கனு
மறக்கள வேள்வி செய்வோ யாயினை
[1] வேந்துவினை முடித்த வேந்துவாள் வலத்துப்
போந்தைக் கண்ணிநி ‡ னூங்கணோர் மருங்கிற்
[2] கடற்கடம் பெறிந்த காவல னாயினும்
விடர்ச்சிலை பொறித்த விறலோ னாயினு
[3] நான்மறை யாளன் செய்யுட் கொண்டு
மேனிலை யுலகம் § விடுத்தோ னாயினும்
போற்றி மன்னுயிர் ‖ முறையிற் கொள்கெனக்
கூற்றுவரை நிறுத்த கொற்றவ னாயினும்
[4] வன்சொல் யவனர் வளநா டாண்டு
பொன்படு நெடுவரை புகுந்தோ னாயினு

கடுரு. புரையோர் - உயர்ந்தோர்.

[1]. "நீ, நீடு வாழிய நெடுந்தகை தாழ்நீர், வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தி, நெடுவே ணிலைஇய காமர் வியன்றுறைக், கடுவளி தொகுப்ப வீண்டிய, வடுவா ழெக்கர் மணலினும் பலவே" புறநா. ௧௯.

[1]. ஆன்பொருநை—சேரநாட்டிலுள்ள தொருநதி; இஃது ஆன்பொருந்தமெனவும் வழங்கும்; "வாழிவருபுனலிரான்பொருநை சூழ்தரும் வஞ்சியார் கோமான்" சிலப். உக: "மலையரையன்"—பதிற்றுப்பத்தில் ௫0 - ஆம் செய்யுளின் உரையைப் பார்க்க; "தண்ணான்பொருநை மணலினும் பலவே" (அகநா. கூக.); "தண்பொருநைப் புனல்பாயும், விண்பொருபுகழ் விறல்வஞ்சி", "தண்ணான் பொருநை வெண்மணல்", "வஞ்சிப் புறமதி லலைக்குங் கல்லென் பொருநை" (புறநா. கக. கூ, நஅஎ) பொருநையும் வையையும் போலும் யாற்றினும்" தொல் - கற்பு. சூ. ௫0 - ந.

[2]. கஙரு - ச. சிலப்பதிகாரம், உஅ: க - கo.

"ஆன்

[4]. சிலப்பதிகாரம் உங: அக - உ; உ௫: க - உ ஆம் அடிகளையும் அவற்றின் அடிக்குறிப்பையும் பார்க்க; "குடக்கோச் சேரலன் குட்டுவர் பெருந்தகை, விடர்ச்சிலை பொறித்த வேந்தன்" மணி. உஅ: கoரு - ச.

[5].

[6].

சிலப்பதிகாரம், உக: கூக - ஆம் அடியின் கீழ்க்குறிப்பைப்பார்க்க.
"வன்சொல் யவனர்வள நாடு வன்பெருங்கற், றென்குமரியாண்ட" சிலப்.

(பி - ம்.)
உக. பொருநை'

* 'தம்மொழி பொருந்தா துணர்ந்த' † 'நீநின்வாழ்நாடன்னூர்
‡ 'ஊைக்களூர் மருங்கும்' § 'கொடுத்தோன்' || 'முறைமையிற்'

* மிகப்பெருந் தானையோ டிருஞ்செரு வோட்டி
[1] யகப்பா வெறிந்த வருந்திற லாயினு
முருகெழு மரபி * னயிரை மண்ணி
யிருகட னீரு மாடினோ னாயினுஞ்
சதுக்கப் பூதரை வஞ்சியுட் டந்து
மதுக்கொள் வேள்வி வேட்டோ னாயினு
மீக்கூற் றாளர் யாவரு மின்மையின்
யாக்கை நில்லா தென்பதை யுணர்ந்தோய்
மல்லன்மா ஞாலத்து வாழ்வோர் † மருங்கிற்
செல்வ நில்லா தென்பதை வெல்போர்த்
தண்டமி ழிகழ்ந்த வாரிய மன்னரிற்
கண்டனை யல்லையோ காவல் வேந்தே
யிளமை நில்லா தென்பதை யெடுத்தீங்
‡ குணர்வுடை மாக்க ளுரைக்கல் வேண்டா
திருஞெமி ரகலத்துச் செங்கோல் வேந்தே
நரைமுதிர் யாக்கை நீயுங் கண்டனை
விண்ணோ ருருவி னெய்திய நல்லுயிர்
மண்ணோ ருருவின் § மறிக்கினு மறிக்கு
மக்கள் யாக்கை பூண்ட மன்னுயிர்
மிக்கோய் விலங்கி னெய்தினு மெய்தும்
விலங்கின் யாக்கை ¶ விலங்கிய வின்னுயிர்
கலங்கஞர் நரகரைக் காணினுங் கானு
* மாடுங் கூத்தர்போ லாருயி ரொருவழிக்
கூடிய கோலத் தொருங்குநின் றியலாது

கசு௬. அயிரை - ஓர்யாறு. அதிலே குளித்து.

கசுஎ. சதுக்கப்பூதர் - அமராபதியிற் பூதங்கள்.

கசுஅ. மீக்கூற்றாளர் - மேற்பட்ட வார்த்தையையுடையவர்கள்.

1. "அண்ணலம் பெருங்கோட் டகப்பா வெறிந்த, பொன்புனை யுழிஞை வெல்போர்க் குட்டுவ" (பதிற். உஉ); "அகப்பா வெறிந்து பகற்றீவேட்டு" டி ௩-ஆம்பத்துப்பதிகம்.

2. அயிரையை ஒருமலையென்றுங் கூறுவர்; "இருகட னீரு மொருபகலாடி, யயிரை பரைஇ" (பதிற். ௩-ஆம் பத்துப் பதிகம்); "கடவு ளயிரையி னிலைஇ" "உருகெழு மரபி னயிரை பரைஇ," "உருகெழு மரபி னயிரை பரவி" டி. ௭௯, ௮௮, ௯௦.

3. ௬௬௯ - ௯. "ஆடுகூத்த ரணியே போல், வேற்றோ ரணியொடு வந்தீரோவென' மணி. ௨௮: ௫௬ - ௨.

§ '

(பி - ம்.) * 'மிகற்பெரும்' † 'மருங்கு' ‡ 'உரனுடைமாக்களுரைக்கவேண்டா' மதிக்குமதிக்கும்', 'இவ்வுயிர்மிக்கோர்' ¶ 'எய்துமிவ்வுயிர்'

## உஅ.—நடுகற்காதை.

[illegible] 1 செய்வினை * வழித்தா யுயிர்செலு மென்பது 2
பொய்யில் காட்சியோர் பொருளுரை யாதலி 3 னெழுமுடி
மார்பனீ யேந்திய திகிரி
௧௭௦. வழிவழிச் சிறக்க வயவாள் வேந்தே
யரும்பொருட் † பரிசிலே னல்லே னியானும பெரும்பே
ரியாக்கை பெற்ற நல்லுயிர்
மலர்தலை யுலகத் 4 துயிர்போகு பொதுநெறி

புலவரை யிறந்தோய் போகுதல் ; பொறேஎன் கஎரு
வானவா போற்றும் வழிநினைக் களிக்கு
நான்மறை § மருங்கின் வேள்விப் பார்ப்பா
னருமறை மருங்கி னரசர்க் கோங்கிய
பெருநல் வேள்வி நீசெயல் வேண்டு

கசுஅ. பொருளுரை - மெய்யுரை
கசுகூ. எழுமுடி - எழுமுடியாற் செய்த ஆரம்.
கஎக. பொருள் பரிசிலாக வருவேனல்லேன்; அதிகாரணமாகச் சொல்ல அற்றேனல்லேன.
கஎங. பொதுநெறி - பிறந்திறப்போரெல்லாரும் போம்வழி.
கஎச. [5] புலவரையிறந்தோய - அறிவெல்லை கடந்தோய.
கஎரு வானவர் போற்றும்வழி - மோட்சமார்க்கம்.
(கஎரு) அளிக்கும் (கஎசு) வேள்விப்பார்ப்பானென்க.
கஎஅ. வேள்வி - இராசசூயம்

[1]. கசுஎ - அ, "ஐய முண்டோ வாருயிர்
பிறப் பெய்துதல்" மணி. கூ: கஅ - கூ.

---

போனுத், செய்வினை மருங்கித் சென்று

[2]. "பொய்யில் புலவன் பொருளுரை" மணி. உஉ: கூக.

[3]. "எழுமுடி கெழீஇய திருஞெம ரகலத்து, 'நாண்புரித் தடக்கைச் சான்றோர் மெய்ம்மறை", "எழுமுடி கெழீஇய திருமஞெம ரகலத்துப், புரையோர்", "எழுமுடி மார்பி னெய்திய சேரல்" (பதிற். கச, கசு - சஉ.) என்பவற்றுலும், 'எழுமுடியென் பது, அரசரைவென்று அவர்கள் எழுமுடியானுஞ் செய்தகோராரமாம்' (பதிற். கச - உரை) என்பதனுலுமுணர்க.

[4]. "உயிர்வழங்கு பெருநெறி" மணி. கஉ: கூஉ.

[5]. "புலவரை யிறந்த புகார்" மணி. ௯: க0க.

(பி - ம்.) * 'வழியே, வழிவழிச்சிறக்கவாய்வாள்' † 'பரிசிலவ்லேன் யாதுங் பெரும் பெயர்' ‡ 'போற்றேன்' § 'மரபின் வேள்வி' || 'அருமறை மரபினரைச் சேர்க்கவே'

எஉ



¹ காலைச் செய்குவ * மறமெனி னின்றே
கேள்வி நல்லுயிர் நீங்கினு நீங்கு
மிதுவென வரைந்து வாழுநா ளுணர்ந்தோர்
முதுநீ ருலகின் முழுவது மில்லை
வேள்விக் கிழத்தி யிவளொடுங் கூடித்
² தாழ்கழன் மன்னா நின்னடி போற்ற
³ ஊழியோ டூழி யுலகங் காத்து
† நீடுவா ழியரோ நெடுந்தகை யென்று
மறையோன் மறைநா ‡ வுழுது வான்பொரு
ளிறையோன் செவிசெறு வாக வித்தலின்
வித்திய பெரும்பதம் விளைந்துபத மிகுத்துத்
துய்த்தல் வேட்கையிற் சூழ்கழல் வேந்த
னான்மறை மரபி னயந்தெரி நாவிற்
கேள்வி முடித்த வேள்வி மாக்களை
மாடல மறையோன் சொல்லிய முறைமையின்
§ வேள்விச் சாந்தியின் விழாக்கொள வேவி
யாரிய வரசரை யருஞ்சிறை நீக்கிப்
* பேரிசை வஞ்சி மூதூர்ப் புறத்துத்
தாழ் ¶ நீர் வேலித் தண்மலர்ப் பூம்பொழில்
** வேளா விக்கோ மாளிகை காட்டி

††கன்பெரு வேள்வி ‡‡ முடித்ததற் பின்னுட்

..........ஆரியமன்னராக்காட்டி விடுதலீறுய.......

கஅ0. கேள்வியளவேயான நலனுயிர்.

கஅ௨. உலகில் ஓரிடத்திலுமில்லே.

கஅ௩. வேள்விக்கிழத்தி - வேண்மாள். கஅக பதம் - உணவு.

ககஅ. வேளாவிக்கோமாளிகை - வேள்ஆவிக்கோமந்திரம்.

¹. 'காலச்செப் வோமென் றறத்தைக் கடைப்பிடித்துச்,சாலச்செய் வாரே தலைப் படுவார் - மாலைக், கிடந்தா னெழுத லரிதான்மற் றென்கொ, லறங்காலச் செய்யாத வாறு" அறநெறி. கஎ.

². "தாழ்கழன் மன்னர் தன்னடி போற்ற" சிலப், க0: ககக.

³. சிலப்பதிகாரம், க0: கசஞ - க.

⁴. ககக - அ. புறநானூறு, கக - அவதாரிகை

(பி - ம்.) * 'அறனென் றெண்ணற், கேள்வி யின்னுயிர் நீங்கென நீங்கும்' † 'நீவா ழியரோ' ‡ 'உழுதவான்' 'வேட்கைச சாந்தியின் விழாக்கோள் செய்கென' || 'அரச ருஞ்சிறை' ¶ 'நீக் கேணி' ** 'வேள்விக் கான மாளிகை கட்டி' †† 'நம்பெரு' ‡‡ 'முடித்தபின்னுட்'

## உஅ.—நடுகற்காதை.

நிகை

௨00. டம்பெரு நெடுநகர்ச் சார்வதுஞ் * சொல்லியம்
மன்னவர்க் கேற்பன செய்க நீயென
வில்லவன் கோதையை விருப்புட னேவிச
¹ சிறையோர் கோட்டஞ் ² சீமின் யாங்கணுங்

கறைகெழு நாடு கறைவீடு செய்ம்மென
உ0ரு. * வழும்பில் வேளா டாயத் தணக்கரை
முழங்குநீர் வேலி மூதூ ரேகி
* யருந்திற ‡ லரசர் முறைசெயி னல்லது
பெரும்பெயர்ப் பெண்டிர்க்குக் கற்புச் சிறவாதெனப்
பண்டையோ ருரைத்த § தண்டமிழ் நல்லுரை
உக0 பார்தொழு தேத்தும் பத்தினி யாகலி
னார்புனை சென்னி யரசற் களித்தச
* செங்கோல் வளைய வுயிர்வா ழாமை
தென்புலங் காவல் மன்னவற் களித்து
வஞ்சினம் வாய்த்தபி னல்லதை யாவதும்
உகரு. வெஞ்சினம் விளியார் வேந்த ‖ ரென்பதை
வடதிசை மருங்கின் மன்னவ ரறியக்
குடதிசை ¶ வாழுங் கொற்றவற் களித்து
மதுரை மூதூர் மாநகர் கேடுறக்
* கொதியழற் சீற்றங் கொங்கையின் ** விளைத்து
உஉ0. நன்னா டணைந்து †† நளிர்சினை வேங்கைப்
பொன்னணி புதுநிழற் பொருந்திய நங்கையை
யறக்களத் தந்தண ராசான் பெருங்கணி

(கஉ௬) விழாக்கொளவேவி (உ0உ)
வில்லவன்கோதையையேவியென்க.
உ0ரு - சு. அழும்பில்வேள்...... ..மூதூர்களிலே
ஏவியென்க. உஉஉ. ஆசான்- புரோகிதன்.

இப்படிச்செய்யுமென்று

[1]. "சிறைப்படு கோட்டஞ் சீமின் யாவதுங், கறைப்படு மாக்கள் கறைவீடு செய்ம்மின்" (சிலப். ௨௩; ௧௨௭ - எ); "கறையோ ரில்லாச சிறையோர் கோட்டம்" (மணி. ௧௯: ௧௬௩) "தம்பியை முகத்தம்முக்கி, பூர்பிணிக்கோட்டஞ் சீப்பித் தருதவ ஞண்ட நாட்டைப், பார்பிணிகறைபினீங்கப் படாமுரசறைவியென்றான்" சீவக. ௨௩௭௨.

[2]. சிலப். ௨௯: ௧௭௭; "விளங்குபெருந் திருவின் மான விறல்வே, ளழும்பில்" மதுரை. ௧௭௪-௫.

[3]. "மாதவர் நோன்பு மடவார் கற்புங், காவலன் காவ லின்றெனி லின்றால்" மணி. ௨௨: ௨௦௮ - ௯; குறள், ௫௬௧ - பரிமேல். விசேடவுரையைப்பார்க்க.

[4]. "செங்கோல் வளைய வுயிர்வாழார் பாண்டியர்" சிலப். ௨௯.

[5]. சிலப்பதிகாரம், பதிகம், ௪௪.

(பி - ம்.) * 'சொல்லி மன்னியற் கொட்பன செய்க நீரென' † 'சீமி னெங்கணும் கறைகெழு நல்லூர்க்' ‡ 'அரசன்' § 'தண்டா நல்லுரைப்' || 'என்பது' ¶ 'குறும்' ** 'வீழ்த்து' †† 'நனிஇனை'



சிறப்புடைக் கம்மியர் தம்மொடுஞ் சென்று மேலோர் விழையு நூனெறி மாக்கள்
பால்பெற வகுத்த பத்தினிக் கோட்டத்
திமையவ ருறையு மிமையச் செவ்வரைச் சிமையச் சென்னித * தெய்வம் பரசிக்
கைவினை முற்றிய [1] தெய்வப் படிமத்து
[2] வித்தக ரியற்றிய விளங்கிய கோலத்து
முற்றிழை † நன்கல முழுவதும் பூட்டிப்
[3] பூப்பலி செய்து காப்புக்கடை நிறுத்தி

[4] வேள்வியும் விழாவு நாடொறும் வகுத்துக் [5] கடவுண் மங்கலஞ் செய்கென வேவினன் [6] வடதிசை வணக்கிய மன்னவ ரேறென்.

## உ அ.—நடுகற்காதை முற்றிற்று.



---

உஉச. ஞானெறிமாக்கள் - தபதிகள்.

(உஉச) இவர் (உஉஉ - க) அந்தணர் முதலாயினாரோடு சென்று (உஉ௬) வகுத்த பத்தினிக்கோயிலில் (உஉஅ) கைத்தொழின் மிகுத்த படிமத்திலே (உ௩௦) ஆபரணங்கள் பூட்டி.

உ௩க. பூப்பலி - அருச்சனை. காப்பு - திக்கிற்றேவதைகள்; கடைநிறுத்தி - கடைவாயிலினிறுத்தி.

உ௩உ. வேள்வி - ஓமம். விழா - உற்சவம்.

உ௩௩. கடவுள் மங்கலம் - பிரதிட்டை.

......(உஉக) நங்கையைப் (உஉ௬) பத்தினிக்கோட்டத்த(உஉஅ) வப்படிமத்திலே (உ௩௩) கடவுள்மங்கலம் செயகெனவேவினனென்க.

தெய்

[1]. கடவு ளெழுதிய படிமங் காணிய, வேட்கை" மணி. உக: ச-ஞ.

[2]. வித்தக ரியற்றிய விளங்கிய கைவினைச், சித்திரம்" மணி. க: கசஎ-அ; கக:ஞ-சு.

[3]. சிலப்பதிகாரம், உச: கக-ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க; "கலம்பகர் பூப்பலி கடைகொள" மணி. எ: கஉஉ.

பீடிகைப்

[4]. "விழவொலியும் வேள்வொலியு மாகுன் கண்டாய்" "சாறும் வேள்வியுந் திலமயங்குமே" கம்ப. நாடு. இசு.

(தேவாரம், நா. மழபாடி.)

*. "கடவுள் மங்கலஞ் செய்த பின்னாள்" சிலப். உக. உரைப்பாட்டுமடை.

*. வடதிசை வணக்கிய வானவர் பெருந்தகை" சிலப், ௩0: ௧.

(பி - ம்.) * 'தெய்வம் பரச்சக், கைவினை......படிவத்து' † 'தன்கலன் ‡ 'அம்பத்தின்' முழுவதும்'

# இருபத்தொன்பதாவது

# வாழ்த்துக்காதை.



## உரைப்பாட்டுமடை.

குமரியொடு வடவிமயத் தொருமொழிவைத் துலகாண்ட சேரலாதற்குத் திகழொளிஞாயிற்றுச் சோழன்மக ளீன்றமைந்தன் கொங்கர்செங் களம்வேட்டுக் * கங்கைப்பேர்யாற்றுக் கரைபோகிய செங் குட்டுவன் சினஞ்செருக்கி வஞ்சியுள்வந் திருந்தகாலை வடவாரிய மன் னராங்கோர் மடவரலை மாலைசூட்டி யுடனுறைந்த விருக்கைதன்னி லொன்று †மொழிநகையின ராய்த் தென்றமிழ்நாடாளும்வேந்தர் செரு வேட்டுப் புகன்றெழுந்து

